**தமிழ்ப்பிரபா (பி. 1986)**

இயற்பெயர் பிரபாகரன். சொந்த ஊர் சிந்தாதிரிப்பேட்டை. தகவல் தொழில்நுட்பத் துறையில் கடந்த பத்தாண்டுகளாக இருந்தவர் தற்போது விகடனில் பத்திரிகையாளராகப் பணிபுரிகிறார். இது இவருடைய முதல் நாவல்.

மனைவி : திவ்யா, மகள்: சாரல்

மின்னஞ்சல்: prabha.prabakaran@gmail.com

அன்பார்ந்த வாசகருக்கு, வணக்கம். காலச்சுவடு நூலை வாங்கியமைக்கு நன்றி. நூலின் உள்ளடக்கம், உருவாக்கம், அட்டைப்படம் இன்ன பிற அம்சங்கள் பற்றிய உங்கள் கருத்துகளையும் ஆலோசனைகளையும் காலச்சுவடு வரவேற்கிறது. தகவல், எழுத்து, வாக்கியப் பிழைகள் தென்பட்டால் கட்டாயம் தெரிவித்து உதவுங்கள்.

மின்னஞ்சல்: publisher@kalachuvadu.com , காலச்சுவடு நாகர்கோவில் தலைமையகத்துக்கும் கடிதம் அனுப்பலாம்.

தங்கள்
**எஸ்.ஆர். சுந்தரம் (கண்ணன்)**
பதிப்பாளர் - நிர்வாக இயக்குனர்

பேட்டை | நாவல் | தமிழ்ப்பிரபா | © பிரபாகரன் | இரண்டாம் பதிப்பு: டிசம்பர் 2017 | வெளியீடு: காலச்சுவடு பப்ளிகேஷன்ஸ் (பி) லிட்., 669, கே. பி. சாலை, நாகர்கோவில் 629001

காலச்சுவடு பதிப்பக வெளியீடு: 809

Paettai | Novel | Tamilprabha | © Prabakaran | Language: Tamil | Second Edition: December 2017 | Kalachuvadu Publications Pvt Ltd, 669 , K B Salai, Nagercoil, 629001

Print ISBN: 9789386820334

eBook ISBN: 9789352441471

# நன்றி

திவ்யா

அறிவழகன் சேகர்

சித்திகா

ரீனா ஷாலினி

சுந்தர் ஸ்ரீனிவாஸ்

அரவிந்தன்

சைலேந்தர்

கிருஷ்ணபிரபு

சாம்நாதன்

கிருபாஷங்கர் மனோகரன்

செந்தில் குமார்

கார்ல் மார்க்ஸ்

களந்தை பீர்முகம்மது

ஜெயச்சந்திர ஹஸ்மி

சிந்தை தியாகு

சந்தோஷ் நாராயணன்

எர்ஷாத் முகம்மது

மஞ்சு

பேஸ்புக் நண்பர்கள்

# பேட்டை பிறந்த கதை

ஆயிரத்தி எழுநூற்று முப்பத்தைந்தாம் ஆண்டு ஜனவரிக் குளிரில் மாலை ஆறு மணிக்குப் புனித ஜார்ஜ் கோட்டையில் மதராஸ் ராஜதானியின் மாட்சிமை பொருந்திய பதினான்காவது ஆளுநர் மாடர்ன் பிட் தலைமையில் செல்வாக்கு மிகுந்த உள்ளூர் வணிகர்களுடனும் புலமை வாய்ந்த சில துபாஷிகளுடனும் கலந்தாலோசனைக் கூட்டம் நடைபெற்றது. இருபது பேருக்காக விரிக்கப்பட்ட நாற்காலிகளில் அழைக்கப்பட்டிருந்த எல்லோரும் வந்தமர்ந்திருந்தனர். நேர ஒழுக்கத்தில் மாடர்ன் பிட் முள் தவறாது நடப்பவர் என்பதால் அரைமணி நேரத்திற்கு முன்பாகவே சபை கூடியிருந்தது.

ஐந்து ஐம்பத்தைந்திற்கு மெய்க்காவலர்களுக்கு நடுவில் தடிமனான ஜெய்ப்பூர் மிதியடியில் 'பூட்' சத்தத்துடன் திம்திம்மென பிட் நடந்துவர பேச்சரவம் அடங்கி அவையோர் தலைக்கு மேல் கைகூப்பி எழுந்து நின்றனர். பொன்னிறக் கயிறுகளில் வகை வகையான வேலைப்பாடுகளுடன் தைக்கப்பட்ட கறுப்புச் சட்டை. சட்டைக்கு உறையாக அதே நிறத்தில் அங்கியும் வெல்வெட் ரகத் துணியில் கால்சட்டையும் அணிந்திருந்தார். அங்கியின் முனைகள் தரை தவழ ராஜ தோரணையில் நடந்தவாறு தன் ஆசனத்தில் அமர்ந்தார். அமர்ந்ததும் தோள்வரைக்கும் புரண்டு வைக்கோல் நிறத்தில் சுருள்சுருளாக வளர்ந்து தொங்கும் முடிகளைத் தனக்குச் சௌகரியமான இடத்தில் சொருகித் தலை அண்ணாந்து வந்திருந்தோரை அமரச் சொல்லிக் கையசைத்தார். இயந்திரத்தனமாக எல்லோரும் அமர்ந்தனர். ஒரு சிலர் பணிவின் உச்சமாக வயிற்றை ஒரு கையாலும் வாயை ஒரு கையாலும் பொத்தி உட்காராமல் வளைந்து நின்றிருந்தனர்.

பதினெட்டாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் கிழக்கிந்திய கம்பெனி தம் வாணிபத்தை இந்தியா முழுதும் விஸ்தாரமாக்கி அகலக் காலூன்றுவதற்கு உள்ளூர் வணிகர்களின் அபரிமிதமான ஆதரவு தேவைப்பட்டதால் பிரிட்டிஷார் அவர்களின் தாடை

யைப் பிடித்துக் கொஞ்சிப் பேசிக்கொண்டிருந்த காலகட்டம். தனவந்தர்கள் முதல் உள்ளூர் சிறுமுதல் வியாபாரிகள் வரை பிரிட்டிஷார்க்கு அடங்கிப்போகாமல் கித்தாப்பாகச் சரிக்கு சமம் வியாபாரம் பேசும் சூழல். அச்சமத்துவ காலத்திலும் ஆளுநர் பிட்டைக் கண்டால் பயம் கலந்த மரியாதையுடன் வணிகர்கள் நடந்து கொண்டனர். மனமுவந்து அவருக்கு உறுதுணையாக இருந்தனர். அவர்களின் ஒழுங்கு மரியாதைக்குப் பின்னணியாக இருந்தது பிட்டின் ஆட்சி முறை. அவருக்கு முன்பு புனித ஜார்ஜ் கோட்டையை ஆட்சி செய்த ஆளுநர் ஜேம்ஸ் மாக்ரே ஊழல் வழக்கில் சிக்கி மதராசப் பட்டினத்தின் வர்த்தகத்தைக் குலையச்செய்துவிட்டு நடையைக்கட்டினார். ஜேம்ஸ் தன்னுடைய ஆட்சியில் வெள்ளியை ஏற்றுமதி செய்வ தற்குத் தடை விதித்திருந்ததால் மதராஸ் மாகாணத்தின் வாணிபம் நிர்க்கதியானது. வெள்ளி ஏற்றுமதியை முன்வைத்து சங்கிலித் தொடர்ச்சியாக நடைபெற்ற வியாபாரங்கள் முடங்கின. வணிகர்கள் நடைபிணமாக ஊரை வலம் வந்தனர். அவர்களுள், கடன் சுமைக்கு அஞ்சிய குணவிலாச முதலியார் மயில் துத்தம் அருந்தி உயிர் நீத்தார்.

பிட் ஆளுநராகப் பதவியேற்றதும் அவை எல்லாவற்றையும் சீர் செய்தார். பர்மா, பெங்கால் ஆகிய மாகாணங்களைக் காட்டிலும் மதராஸ் மாகாணத்தைப் பெரிய வணிகக் கேந்திரமாக உருமாற்றினார். அவருடைய ஆட்சிக்கு உட்பட்ட காலத்தில் வணிகர்களும், அவர்களுக்குக் கருவியாகச் செயல்பட்ட துபாஷிகளும் மிகுந்த செல்வாக்குடன் வாழ்ந்துவந்தனர். வணிகர்களுக்கு பிட் மீது மதிப்பும் மரியாதையுடன் சேர்ந்து பயமும் இருந்தது.

இருக்கையை விட்டு பிட் எழுந்திருப்பதற்கு முன்னரே அவையோர் எழுந்தனர். புறக்கை ஏறியவரின் தலையைத் தட்டுவதுபோலக் கையசைத்து நின்றிருந்தோரை அமரச்செய்து அவர் பேசினார். “அன்பும், அக்கறையும் கொண்ட வணிகர்களே எல்லோருக்கும் மாலை வணக்கம். என்னுடைய ஐந்து வருட ஆட்சியில் இது கடைசி வருடத்தின் ஆரம்பம். அந்த ஆரம்பத்தின்

முதலாவதான வணிக ஆலோசனைக் கூட்டத்தில் உங்கள் அனைவரையும் சந்திப்பதில் பெரு மகிழ்ச்சி அடைகிறேன்.

இது முக்கியமானதொரு கூட்டம் என்பதையும் நினைவில் வைத்துக்கொண்டு நான் சொல்வதை நீங்கள் கவனமாகக் கேட்டு எனக்கு ஒத்துழைப்பு அளிக்க வேண்டும். நாம் இதுவரை எந்தப் பிரச்சினையும் இல்லாது தொழில்நேர்த்தியுடன் பருத்தித் துணிகளை இங்கிலாந்துக்கு ஏற்றுமதி செய்துகொண்டிருக்கிறோம். ஆமாம்தானே" எல்லோரும் "ஆமாம் துரை" என்று கூட்டுக் குரலால் ஒலித்து முடித்ததும் பேச்சைத் தொடர்ந்தார்.

"ம் ... விஷயம் என்னவென்றால் லண்டனில் முன்பெப்போதும் இல்லாத அளவுக்கு 'காலிகோ' ப்ராண்ட் வகைத் துணிகளுக்கு டன் கணக்கில் மவுசு நிலவிவருகிறது. அவற்றையெல்லாம் உடனடியாக உற்பத்தி செய்து அனுப்பி வைக்கும்படி லண்டன் அதிகாரிகள் என்னைக் குடைந்து கொண்டிருக்கிறார்கள். இதுவரை நான் எடுத்த காரியங்களில் எதிலுமே தோல்வி கண்டவனில்லை என்பதினாலும் என் மீதுள்ள நம்பிக்கையினாலும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்திருக்கிறார்கள். நான் உங்கள் மீதுள்ள நம்பிக்கையினால் அவர்களுக்கு இசைந்துவந்திருக்கிறேன்."

இரு மூலைக்கும் நடந்து வந்து பேசியவர் நடுவாந்திரமான இடத்தில் அழுத்தமாக நின்று முன் பக்கம் கைகளைக் கட்டிப் பேச்சைத் தொடர்ந்தார்.

"தற்போது பிரச்சினை என்னவென்றால் லண்டனில் கேட்கப்படும் அளவுக்குப் பருத்திகள் நம்மிடையே இருந்தாலும் அவற்றை நெய்வதற்குத் தேவையான அளவு நெசவாளிகள் நம்மிடையே இல்லை. மட்டுமில்லாது, நெய்வதற்குச் சரியான இடமும் மதராஸில் இருக்கிறதா என்கிற சந்தேகமும் என்னை இரண்டு நாட்களாகத் தூங்க விடாமல் அலைக்கழிக்கிறது. நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் கலை வண்ண வேலைப்பாடுகளுடன் பருத்தியை நெய்யக்கூடிய நெசவாளிகளைக் கண்டுபிடித்து நம் கோட்டைக்கு

அருகே அவர்களை அமர்த்த வேண்டும். அவர்களுக்கென்று ஒரு கிராமத்தை உருவாக்க வேண்டும். கோட்டைக்கு அருகே அவர்களைக் குடியமர்த்தினால் துணிகளைக் கிடங்கில் போட்டு வைப்பதற்கும், இங்கிருந்து துறைமுகத்தில் கொண்டு சேர்ப்பதற்கும் உதவியாக இருக்கும். நேரமும் மிச்சப்படும். லண்டன் கேட்டுக்கொண்டது போலவே அவர்களுக்கு காலிகோ துணி வகைகளை நாம் நெய்து ஏற்றுமதி செய்தால் மிகுந்த லாபம் கிடைக்கும். அதில் கிடைக்கும் தொகையை நறுமணப் பொருட்கள் வாங்குவதற்கு முதலீடு செய்யலாம். இன்னொரு விஷயம்; இந்தத் தொழில் பரிவர்த்தனையில் கிடைக்கும் தொகையில் ஒரு பகுதிக்கு நீங்களும் தகுதியானவர்கள் என்பதை மறந்துவிட வேண்டாம்.

"என்னுடைய ஆட்சியின் கீழ் எனக்குக் கொடுக்கப்பட்ட கடைசிப் பொறுப்பாகத்தான் இதை நான் பார்க்கிறேன். ஒழுங்கும் கிரமுமாக இதை முடித்துவிட்டால் இவ்வருட இறுதியில் நான் இங்கிலாந்துக்குப் புறப்படச் சித்தம் கொண்டிருக்கிறேன். போகும்போது உங்களுக்கு நல்ல பொருள்வளம் கிட்டும் எண்ணத்தின் தோன்றலாகவே இத்திட்டத்தை நான் வழிமொழிந்திருக்கிறேன். யாரும் இதை மறக்க வேண்டாம். இன்றிலிருந்தே நெசவாளர்களைக் கண்டுபிடிக்கும் வேலையை ஆரம்பியுங்கள். அவர்களை இங்கே கொண்டுவருவதற்கு முன்பாக நெசவாளர்கள் வந்ததும் தங்க வைப்பதற்கான இடத்தையும் கண்டுபிடிப்பீர்கள் என்கிற நம்பிக்கையுடன் என் பேச்சை முடித்துக்கொள்கிறேன். வந்திருந்த அனைவருக்கும் நன்றி" என பிட் பேசி முடித்தார். கண நேரத்தில் மேடையிலிருந்த ஒரு துபாஷி கைகளைத் தட்டியதும் கூடியிருந்தோரும் எதிரொலியாகக் கரவோசை எழுப்பினர். கூட்டம் நிறைவுற்றது. பிட் மெய்க்காவலர்களுக்கு இடையில் நடந்து சென்று மேடையிலிருந்து வேகமாகக் கீழிறங்கி மறைந்தார். கூட்டம் முடிந்தும்கூட மற்றவர்கள் கலைந்து போகவில்லை. வந்திருந்த பாதிக்கும் மேற்பட்ட வணிகர்களுக்கு அவர்களுக்கான துபாஷிகள் பிட் சொன்னதை மொழிபெயர்த்தும் அதைச்

செயல்முறைப்படுத்த வேண்டிய ஆலோசனைகளைப் பற்றியும் ரகசியம் போலச் சொல்லிக்கொண்டிருந்தனர்.

அன்றிரவு பிட் ஓய்வறையிலிருந்து நடந்து உணவறைக்கு வந்து பசியுடன் நாற்காலியில் அமர்ந்தார். மேசையின் நடுவில் பெரிய கண்ணாடிக் குடுவையிலுள்ள விளக்குக் கதிர் ஆடாமல் அசையாமல் சுடர மஞ்சள் வெயிலொளியில் அறை தகித்திருந்தது.

கண்ணாடிக் குடுவையின் கீழறையில் சதுர வடிவப் பீங்கானிலிருந்த அவித்த மாட்டிறைச்சி மேலறையிலுள்ள விளக்குச் சூட்டில் கதகதவென - சமையல் செய்தபோது இருந்த - வெப்பத்தைத் தக்க வைத்துக்கொண்டிருந்தது. அதைத் திறந்து உஷ்ணத்தின் அளவைச் சோதனை செய்தவர் குடுவைக்குப் பக்கத்திலிருந்த மதுப் புட்டியையும் புது மனைவியைப் போன்று புட்டிக்கு அருகில் ஒட்டிக்கொண்டு நின்ற கண்ணாடிக் குடுவையையும் சற்று ஓரம் நகர்த்திவிட்டு மேசையிலிருந்த வெள்ளைத் துணியை மடி மீது படரவிட்டார்.

உஷ்ணத்தில் திருப்தி கண்டதும் கறியைக் கடித்துச் சுவைக்க, அறைவாசலருகே “ப்ரெசிடென்ட்” என்றொரு குரல் கேட்டது.

குரல் வந்த திசையைப் பார்த்தார். “உன்னைத்தான் எதிர்பார்த்திருந்தேன்” எனத் தலையை மெல்ல அசைத்து கண்களை சிமிட்டிச் சிமிட்டி அழைத்தார். மஞ்சள் வெளிச்சம் வியாபித்திருந்த அறையில் பிட்டின் சாம்பல் நிற விழிகளின் சிமிட்டல்கள்; ஓவியம் அசைவது போலிருந்தது.

மூர்த்தியப்ப நாராயண செட்டி உணவு மேசையை நோக்கி தொந்தியசைவுடன் நடந்துவந்து பிட்டின் எதிர் நாற்காலியைத் தொட்டு அதன் விளிம்பில் அமர்ந்தார்.

“நீ இதையெல்லாம் சாப்பிட மாட்டாய் எனத் தெரியும். இந்தா இதைச் சாப்பிடு ...” எனப் பாலாடைக்கட்டி அமுக்கி வைக்கப்பட்டிருந்த கண்ணாடிக் குடுவையை எடுத்து செட்டியார் பக்கம் தள்ளினார்.

“வேணாம் தொர. வீட்டிலேயே வயிறு நிரம்ப சாப்பிட்டு வந்தேன்” என்றவர் நொடிநேரம் நிலவிய அமைதியை அவரே உடைத்தார் “என்ன துரை எப்பவும் நீங்களேதான் போட்டு சாப்பிட்டுப்பீங்களா?”

“ஆமாம். நான் அருந்த வேண்டிய உணவை நானே எனக்குப் பரிமாறிக்கொள்வேன். எனக்கு பட்லர்களின் உதவி தேவையில்லை.”

சாப்பிட்டு முடித்ததும் இருவரும் மாடிக்குச் சென்று உப்பரிகையையொட்டி எதிரெதிரே போடப்பட்டிருந்த நாற்காலியில் அமர்ந்து பேச ஆரம்பித்தனர். மூர்த்தியப்ப நாராயண செட்டி துபாஷியாகவும் இருப்பதால் மொழிப் பிரச்சினை இல்லாது சரளமாக உரையாடினர்.

“மூர்த்தியப்பா, இன்று வணிகர்களுடன் நான் நடத்திய கூட்டம் ஒரு சம்பிரதாயம்தான். வந்திருந்த வணிகர்களுள் இரண்டு மூன்று பேரைத் தவிர யாரும் எனக்கு உதவ மாட்டார்கள் எனத் தெரியும். பணக் கொழுப்பால் களைப்படைந்து போன அவர்கள் உடலலையும் வேலையில் ஈடுபட மாட்டார்கள் எனவும் தெரியும். தவிர என்னால் இனி அவர்களுக்கு ஆகப் போவதென்று ஏதுமில்லை. போதுமான அளவுக்குச் சேர்த்து வைத்திருக்கிறார்கள். ஆகையினாலேயே நாம் நம்பக்கூடிய சில பேருடன் திட்டமிட்டு வேலையை முடிக்க வேண்டுமென விருப்பப்படுகிறேன். உடனடியாகத் தரமான நெசவாளர்கள் இருக்குமிடத்தைக் கண்டுபிடித்து இங்கு அழைத்து வா. ஏற்கனவே நான் உனக்குக் கொடுத்த மூன்று மாத அவகாசம் முடிந்துவிட்டது. நீயும் என்னை ஏமாற்ற வேண்டுமென நினைக்காதே மூர்த்தியப்பா ...”

மூர்த்தியப்ப நாராயண செட்டியார் துரையின் கைகளைப் பிடித்துக்கொண்டு சொன்னார்; “துரை நம்முடைய கிழக்கிந்திய கம்பெனியின் பிரதானத் தொழிலாக பருத்தித் துணி ஏற்றுமதி என்றானதற்குப் பிறகு மதராஸ் முழுக்க நெசவாளர்களுக்கு மிகுந்த தட்டுப்பாடு நிலவி வருகிறது. அதிலும் நீங்கள் கேட்பது போலக் கலை நேர்த்தியுடன் நெசவு செய்பவர்கள் சொற்பத்திலும் சொற்பம். எனக்கு இன்னும் இரண்டு வாரம் அவகாசம் கொடுங்கள்.

காஞ்சி என்னும் ஊரில் இது மாதிரி வேலை செய்யும் குறிப்பிட்ட மக்கள் இருப்பதாகக் கேள்விப்பட்டேன்". செட்டியார் பிடியிலிருந்து தன் கரங்களை விடுவித்ததும் பிட் சொன்னார்: "அப்படியென்றால் ராத்திரியே கிளம்பு".

~

முப்பது நாட்கள் கழித்து மூர்த்தியப்ப நாராயண செட்டியார் பிட்டைச் சந்தித்தார். பதினேழு நெசவாளக் குடும்பங்கள் புலம்பெயர ஒப்புக்கொண்டதாகச் சொன்னபோது தாமதமாக வந்தாலும் நல்ல செய்தியுடன் வந்த செட்டியாரைப் பாராட்டி முழுக்க நட்சத்திர பகோடாக்கள் அடங்கிய சுருக்குப் பையைச் செட்டியார் கையில் திணித்தார். காஞ்சியிலிருந்து நெசவாளர்கள் வந்தடைவதற்கு குதிரை பூட்டப்பட்ட பத்துக் கூண்டு வண்டிகளை பிட் ஏற்பாடு செய்து அனுப்பினார்.

நெசவாளர்கள் வந்தால் அவர்களுக்கென்று பிரத்தேயகமான ஒரு நெசவாள கிராமத்தை நிர்மாணம் செய்ய வேண்டுமென பிட் விருப்பப்பட்டார். ஒரே தொழில் செய்யும் மக்களை ஒன்றுசேர்த்து அவர்களுக்கென்று ஒரு கிராமம் உண்டுபண்ணி வியாபாரத்தைப் பெருக்கும் யுக்தியைப் பல்லவர்கள், சோழர்கள் ஆகியோர்களிடமிருந்து ஆங்கிலேயர்கள் பயின்றிருந்தனர். தவிர, காலட் என்கிற ஆளுநர் பதினேழு வருடங்களுக்கு முன்பே சாயம் போடுபவர்களுக்கென தனி கிராமத்தை (காலடிப்பேட்டை) உருவாக்கியது பிட் போன்ற ஆளுநர்களுக்கு முன்னுதாரணமாக இருந்தது.

இலண்டனிலுள்ள அதிகாரிகள் கொடுத்த அவகாசம் நெருங்கிக்கொண்டிருக்கிற வேளையில், நெசவாள கிராமத்தை உண்டுபண்ணுவதற்கான இடத்தைக் கண்டுபிடிப்பதற்கு மற்றவர்களை நம்புவதைப் பார்க்கிலும் தானாகவே களத்தில் இறங்குவது உத்தமம் என முடிவு செய்த பிட், செட்டியாரின் உறுதுணையுடன் மதராஸை வலம் வந்தார்.

தென்னிந்தியாவிலுள்ள ஒட்டுமொத்தப் பருத்தி வளத்தையும் சுரண்டல் செய்து சாயம் போடாத / சாயம் போடப்பட்ட துணி களைத் தயாரித்து ஏற்றுமதி செய்ய

வேண்டுமென வியாபார வெறியுடன் பிரிட்டிஷார்கள் அலைந்துகொண்டிருந்ததனால் கோட்டையைச் சுற்றியுள்ள பெரும்பாலான நிலங்களில் மக்களைக் கூலிக்கு அமர்த்தி ஆக்கிரமிப்புச் செய்திருந்தார்கள். மற்றவர்களின் தொழில் அபிவிருத்தியையும் கெடுக்காமல் தகுந்த இடம் வேண்டுமெனத் தேடியலைந்த பிட்டும் செட்டியாரும் உடல் சோர்ந்து கோட்டையை அடைந்தனர்.

“இறுதி வாய்ப்பாக நாளை கருப்பு டவுனுக்குச் (ஜார்ஜ் டவுன்) சென்று அங்குள்ள அதிகாரிகளிடம் பேசிப் பார்க்கலாம்.”

“ஆகட்டும் தொர” என்றார் செட்டியார்.

ப்ளாக் டவுனுக்கு ஆளுநர் வரும் செய்தி அறிந்ததும் ப்ளாக் டவுனின் தலைமை நிர்வாகப் பணியாளரான இளைஞன் கேமிக்கு உடல் நடுங்க ஆரம்பித்தது. முன்னேற்பாடாக ஏதும் செய்யவில்லையே! வந்து என்ன சொல்லப்போகிறார் என்கிற குழப்பத்தில் வட்டத் தொப்பியைக் கழற்றி வெறுங்கையில் முடி அலசினான்.

சாக்கடைக்கு நடுவில் ஆங்காங்கே இருக்கும் கற்களின் மீது தாவித் தாவி பிட் வருவதைப் பார்த்ததும் ஓடிவந்த கேமி ‘ப்ரேக்’ போட்டதுபோல நின்று வீரவணக்கம் அடித்த கையை எடுக்காமல் சொன்னான்.

“மாட்சிமை பொருந்திய ஆளுநர் எங்கள் இடம் நோக்கி வந்ததற்கு மகிழ்ச்சி. அடியேன் என்ன உதவி புரிய வேண்டும்?”

உன் பெயர் என்ன?

“மாட்சிமை பொருந்திய ஆளுநர் அவர்களுக்கு பதில் சொல்லக் கடமைப்பட்டிருப்பதில் மகிழ்ச்சி அடைகிறேன். என் பெயர் ஆல்வின் கேமி.”

“உன் அறைக்குச் சென்று உட்கார்ந்து கொண்டே பேசலாமா? எந்த தயக்கமும் இல்லாமல் என் எதிரில் உட்காரலாம்.” - பிட் சிரித்தார்.

கேமி நாற்காலியின் விளிம்பில் உட்கார அவருக்கு பக்கத்தில் செட்டியார் சாவகாசமாக அமர்ந்தார்.

“நேரடியாக விஷயத்திற்கு வருகிறேன். காஞ்சியிலிருந்து இருபது நெசவாளக் குடும்பங்கள் இங்கு வருகிறார்கள். அவர்கள் நிரந்தரமாக இங்கயே தங்கி நெசவு நெய்ய இடம் வேண்டும். இருபது குடும்பங்கள் என்பது காலப்போக்கில் அதிகரிக்கவும் செய்யலாம்.”

கேமி பார்வையை வேறு பக்கம் திருப்பி விநாடிகள் யோசித்துவிட்டு பிட்டைப் பார்த்து … “மாட்சிமை பொருந்திய ஆளுநருக்கு பதில் சொல்லக் கடமைப்பட்டிருப்பதில் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்” என்கிற சம்பிரதாய மரியாதையை ஒரே தொனியில் சொன்னவன் அடுத்த வரியைக் குரல் தேய ஆரம்பித்தான். “ஆளுநரே, துணிகளைச் சாயம் போடுவதற்கும், வெளுப்பதற்கும் போதிய மற்றும் சுத்தமான நீர் வசதி இல்லை என்பதால் நீண்டநாள் கோரிக்கையின் பேரில் பெத்தநாயகன் பேட்டையிலிருந்து இதோ நீங்கள் பார்க்கும் இவர்கள் கடந்த மாதம் இங்கே (பிற்காலத்தில் இது வண்ணாரப்பேட்டை) வரவழைக்கப்பட்டிருந்தார்கள்.

இந்தச் சூழலைப் பார்க்கும் உங்களுக்கே புரியும் எவ்வளவு ஜன நெருக்கடியில் இவர்கள் வேலை செய்துகொண்டிருக்கிறார்கள் என்று. இந்நிலையில் புதிதாக ஆட்கள் கலந்தால் இவர்களுக்குள்ளேயே கலவரம் ஏற்பட வாய்ப்புண்டு. தொழிலும் நேர்த்தி இருக்காது. தவிர, வருபவர்கள் வேறு ஜாதியினராக இருந்தால் . . ?? மேற்கொண்டு சொல்வதற்கு ஏதுமில்லை ஆளுநரே -கேமி அலட்சியமாகச் சிரித்தான்.”

பிட்டும் சிரித்தார்.

கேமி பேசிய ஆங்கிலத்தின் வேகமும் உச்சரிப்பும் புரியாத செட்டியார் தன் அறியாமையை வெளிக் காட்டிக்கொள்ளாதவாறு நடுநிலையான முகபாவத்தில் அமர்ந்திருந்தார்.

பிட் கேட்டார்: “உன் சொந்த ஊர் எது?”

“மாட்சிமை பொருந்திய ஆளுநர் அவர்களுக்கு பதில் சொல்லக் கடமைப்பட்டிருப்பதில் மகிழ்ச்சி

அடைகிறேன். அடியேன் பிறந்தது மதராஸில். என் அப்பா - அம்மாவின் ஊர் ஸ்காட்லாந்து.''

கேமியின் வருத்தமான முகபாவத்தை வைத்து தங்களுக்குச் சாதகமாக அவன் ஏதும் சொல்லவில்லை என்பதை உணர்ந்த செட்டியார் தன் கருத்தை முன்வைத்தார்.

''துரை, நாம் திட்டமிட்டது போல நெசவாளர்கள் நிழலில் அமர்ந்து சௌக்கியமாக நெய்வதற்கு இந்த இடம் பொருந்திப் போகுமா என்பது சந்தேகமே. தவிர, நெசவாளர்கள் வந்தாலும் நம் தொலைநோக்குத் திட்டத்தின்படி கருப்பு டவுனில் இடப் பற்றாக்குறை உண்டாவது திண்ணம்.''

செட்டியார் சொன்னதற்கு பிட் ''ஆமாம்'' என்று தலையை மட்டும் அசைத்து ''நன்றி கேமி'' எனச் சொல்லி விடைபெற்றார்.

~

காலையில் மிகுந்த சோர்வுடன் பிட் உணவு மேசையில் அமர்ந்து முள்கரண்டியில் காளான் துண்டுகளைக் கொத்திச் சாப்பிடலாமா வேண்டாமா என வாயருகே வைத்து யோசித்துக்கொண்டிருக்க, செட்டியாரின் குரல் வாசலில் கேட்டது.

''சரியாய் நான் சாப்பிட ஆரம்பிக்கும்போதுதான் நீ வருகிறாய்.

வா செட்டியார். உள்ளே வா உட்கார்.''

''துரை, கிராமம் நிர்மாணம் செய்வது சம்பந்தமாக உங்களிடம் பேச வேண்டும்.''

கையிலிருந்த முள் கரண்டியைத் தட்டில் போட, அது ''க்ளிங்'' என்றது. இயலாமையினால் உண்டான சோர்வின் வெளிப்பாடாக பிட் அவ்வாறு செய்தார். ''செட்டியார் எனக்கு நம்பிக்கையே போய்விட்டது. நேற்று வந்த அதிகாரிகள் என் முகத்தில் மலம் கழிக்காத குறை.''

தங்களின் கவலையில் பங்கு கொள்வதற்கெல்லாம் நேரமில்லை என்பது போல ''உங்களுக்கு சுங்குராமரைத் தெரியுமா?'' என்று கேட்டார் செட்டியார்.

சுங்குராமரை நொடி நேரம் வெற்றிடத்தில் தேடிவிட்டு பிட் சொன்னார்: “ஆ, அவனா … அவனுக்கென்ன இப்போது?”

“பெரியமேட்டிற்குத் தெற்கே உள்ளே கூவம் நதிக்கரையின் ஓரத்தில் அவனுக்கு மிகப் பெரிய தோட்டமும் விசாலமான காலி மனையும் இருக்கிறது.”

“சரி, அதற்கென்ன இப்போது? அது அவனுடைய சொந்தத் தோட்டம் ஆயிற்றே? அதற்கான ஆவணமும் பிசகாமல் இருக்கிறதெனக் கேள்விப்பட்டேன்.”

“இல்லை துரை. அதில் ஒரு வில்லங்கம் இருப்பதாக அவனிடம் செயலாளராகப் பணிபுரியும் என் நண்பன் சொன்னான்.” - செட்டியார் குரல் தாழ்த்தினார்.

“யார் உன் நண்பன்?”

“அவன் பெயர் கலவைச் செட்டியார்.”

“உன் ஜாதிக்காரனா . .?” என்றார் பிட்.

பூடகமாகச் சிரித்தார் செட்டியார்.

“துரை, அந்தத் தோட்டத்தைப் பார்த்திருக்கிறீர்களா? நீங்கள் அவசியம் வந்து பார்க்க வேண்டும். கூவம் நதிக் கரையில் எனக்கு தெரிந்த யாரும் அவ்வளவு பசுமையான தோட்டம் வைத்ததில்லை.”

“ஓ. அது என்ன வில்லங்கம்?”

வில்லங்கத்தை அறிந்த பிட் மெய்க்காவல் படையினருடன் செட்டியாரை அழைத்துக் கொண்டு கோட்டையிலிருந்து சுங்குராமரின் தோட்டம் நோக்கிச் சென்றார்.

சேனைகளுடன் வந்திறங்கியதும் தோட்டத்தைச் சுற்றி அமைக்கப்பட்டிருந்த வேலியை ஒரு வட்டம் பார்த்துவிட்டு மரக் கம்புகளினால் செய்யப்பட்ட வாயில் கதவை நோக்கிச் சென்றார். அவருடன் வந்த காவலர்கள் அவர் கட்டளையின்படி குதிரைகளின் கடிவாளங்களைப் பிடித்தவாறு வேலியருகிலேயே நின்றுவிட்டனர்.

செட்டியாருடன் பிட் நடந்து வரும் வேகத்தைக் கண்டு அஞ்சிய சுங்குராமரின் தோட்டத்துக் காவலாளிகள்

கதவைத் திறந்து ஒதுங்கி நின்றனர்.

செட்டியார் காவலாளிகளைப் பார்த்துக் கேட்டார்: “ராமரு எங்க உன்னாருடா?”

குனிந்திருந்த காவலாளிகள் ஒரே நேரத்தில் நெடும் முழங்காலிட்டனர். அதில் ஒருவன் “தேவ்டு லோப்ல உன்னாரு பாவா” என்று குனிந்த தலை நிமிராமல் கூப்பிய கைகளை எடுக்காமல் சொன்னான்.

பிட், தோட்டத்தின் உள்ளே சென்றதும் அவருக்கு இடதுபுறத்தில் நின்றிருந்த வேப்ப மரம் கிளுகிளுத்து அவரை வரவேற்றது. வேப்பங்காற்று அவர் மீது படர்ந்ததில் சொக்கிப்போய் கண்களை மூடி மலர்ந்து சொன்னார், “அருமையான இடம் செட்டியார்.”

“இன்னும் உள்ளே வாருங்கள்.”

கூவம் நதிக் கரையை ஒட்டிய சுங்குராமரின் தோட்டத்தில் உள்ளே தென்னை மரங்கள் ஒட்டுரசல் இல்லாமல் வரிசையாக நின்றிருந்தன. தென்னைகளுக்கு அடுத்ததாகப் பெரிய புளிய மரமொன்று நான்தான் இந்த தோட்டத்திற்கே ‘தலைவன்’ என்பதுபோல் பிரம்மாண்டமாக விரிந்து கனிந்து நின்றிருந்தது. எதிர்த்தாற்போல் இன்னும் வகை வகையான மரங்கள், சாமந்திச் செடிகள், பூசணிக் கொடி என்று சுங்குராமரின் தோட்டம் பராமரிக்கப்பட்ட காடுபோலக் காட்சியளித்தது.

“தொர அங்கபாருங்க.”

செட்டியார் சுட்டிக்காட்டிய இடத்தை பிட் பார்த்தபோது பெரிய அணில் மாதிரி ஒன்று அவரைப் பார்த்து வெட்கப்பட்டுப் புதருக்குள் மறைந்து ஓடியது.

“என்ன அது?” என்றார் பிட்.

“கீரிப்பிள்ளை.”

“ஓ விலங்குக்கும் உங்கள் ஊரில் சாதி உண்டா?”

“இது அந்தப் பிள்ளை இல்ல. பேரே கீரிப்பிள்ளைதான்.”

இருவரும் பேசிக்கொண்டிருக்கையில் இதுவரை அவர்களின் கண்களுக்குப் புலப்படாத அவர்களுக்கு

அருகிலேயே அமைந்திருந்த காரனேஸ்வரி கோயிலின் உள்ளே இருந்து சுங்குராமர் வெளியே வந்தார். சூரியன் இருக்கும் திசை நோக்கி இரு கரம் விரித்துக் கண்கள் மூடி வழிபட்டார். மார்பில் பெரிய உத்திராட்சக் கொட்டைகளினால் கோர்க்கப்பட்ட மாலை தொங்க, வெற்றுடம்பில் பட்டை பட்டையாக விபூதி பூசியிருந்தார். மேல்சட்டை இல்லாமல் சாயம் போன காவி வேட்டி. ஈரத்தால் வேட்டி அவர் மீது பரிவுடன் ஒட்டியிருந்தது.

கண்கள் திறந்ததும் தன் தொழில் விரோதியான செட்டியாரைப் பார்த்ததுமே சுங்குராமரின் முகம் கறுவியது. ஆயினும், கோட்டையின் ஆளுநரே தன் தோட்டத்திற்கு வருகை புரிந்த ஆச்சரியத்தால் செட்டியாரைப் பொருட்படுத்தாமல், “ஆளுநர் அவர்களே! என் தோட்டத்திற்கு வருகை புரிந்தது குறித்துப் பெருமகிழ்ச்சி அடைகிறேன். வீட்டுக்குள் வாருங்கள்.” - சுங்குராமர் கனிந்த முகத்துடன் அழைத்தார்.

“சுங்குராமர், தங்களின் விருந்தோம்பலை ஏற்று நடக்கும் அளவுக்கு எனக்குக் கால அவகாசமில்லை. இந்தத் தோட்டம் யாருடைய பெயரில் இருக்கிறதென்பதை உடனடியாகச் சொல்ல முடியுமா?”

சுங்குராமர் உடனடி எதிர்வினை ஆற்றாமல் சற்று மௌனமாக இருந்தார். பிறகு, அவர் கட்டுப்பாட்டையும் மீறி அவர் விரல் நுனிகள் நடுங்க ஆரம்பித்தன. நடுக்கம் தெரியாதவாறு கைகளைப் பின்னால் கட்டிச் சொன்னார்: “என்னுடைய பெயரில்தான் இருக்கிறது. கவர்னர் காலட் ஆட்சியின் போது 1719இல் அவர் எனக்குக் கொடுத்தது. வேண்டுமானால் உரிமைப் பத்திரத்தைக்கூட இப்போது உங்கள் முன்னால் கொண்டுவந்து காட்டுகிறேன்.”

நினைத்ததைக் காட்டிலும் வேலை சுலபமாக முடியப் போவதை நினைத்து பிட் செட்டியாரைப் பார்த்துச் சிரிக்க, “பத்திரத்தைக் கொண்டுவந்து காட்டச் சொல்லுங்கள்” என்றார் செட்டியார் காரியமாக.

செட்டியார் பேசியதும் சுங்குராமருக்கு ஆதங்கம் மூண்டது. இரு கைகளையும் நீட்டி “இந்த

நேயங்கெட்டுப்போனவன் ஏன் உள்ள வந்தான்?'' என்றார்.

''மிஸ்டர் சுங்குராமர் எனக்கு நேரமில்லை. நீங்கள் உரிமைப் பத்திரத்தைக் கொண்டு வாருங்கள்'' என்றார் பிட்.

அவர் உள்ளே சென்று உரிமைப் பத்திரத்தை பிட்டிடம் கொடுத்ததும் அதைப் புரட்டிப் படித்தவர் ''மிஸ்டர் சுங்குராமர் இனி இந்தத் தோட்டம் உங்களுக்கு சொந்தமானதில்லை'' என்றார்.

''ஏன்?'' என்ற சுங்குராமர் பிட்டிடமிருந்துப் பத்திரத்தை வாங்க முயன்றார். எந்த சச்சரவுக்கும் இடம் வைக்காமல் பத்திரத்தை ராமர் கையில் கொடுத்ததும் மிதமான குரலில் பிட் சொன்னார்: ''ஆளுநர் காலட் ஆட்சியில் வழங்கப்பட்ட இந்த உரிமைப் பத்திரம் உங்கள் பெயரில்தான் இருக்கிறது. மறுப்பதற்கில்லை. ஆனால் இது கவுன்சிலால் அங்கீகரிக்கப்படவில்லை. கல்கத்தா மாகாணத்திலுள்ள நம் தலைமைச் செயலகத்தின் அறிவுறுத்தலின்படி கவுன்சிலின் அங்கீகாரம் கட்டாயம். ஆதலால் உங்கள் சொத்து கையகப்படுத்தப்படுவதோடு, இவ்வளவு நாள் முறைகேடாக நீங்கள் அரசுடைமையைப் பயன்படுத்தி வந்ததால் உங்களின் தலைமைச் செயலகர் பொறுப்பும் பறிக்கப்படுகிறது.''

சுங்குராமர் ''ஓ ... ... ஈஸ்வரி'' என்று கத்தினார். இவ்வுண்மை தெரிந்த ஒரே ஆள் கலவைச் செட்டியார் மட்டுமே. அவர் செய்த நம்பிக்கைத் துரோகத்தை ஒரு கணம் நினைத்து சுங்குராமர், ''ஏய் கலவாஆஆஆஅ'' என்றவர் கீழே குனிந்து கைநிறைய மணலை அள்ளியெடுத்து ஆள் இல்லாத பக்கம் விசிறினார். மணல் வீசிய அதே கைகளைச் சுத்தப்படுத்தாமல் மார்பில் ஓங்கி அடித்துக்கொண்டார். சற்று நிறுத்திப் பெருமூச்சு வாங்கினார். பிட்டிடம் ஆங்கிலத்தில் பேச வேண்டும் என்பதை மறந்து ''யான் வழக்காடு மன்றத்துக்குப் போவன்'' என்றார். செட்டியாரை நோக்கி ''ஏய் காருங்கே'' என்று அடிக்கப் பாய்ந்தார். பிட் சுங்குராமரைத் தடுத்து, பின்னகர்ந்து ஓங்கி அவர் கன்னத்தில் தன் கை ரேகையைப் பதிக்க, நிதானமிழந்து

கீழே விழுந்த சுங்குராமர் எழுந்திருக்காமல் மண்ணில் புரண்டார்.

"மிஸ்டர் ராமர், உங்களுக்கு ஒருநாள் அவகாசம் தருகிறேன். உங்கள் உடமைகளை இங்கிருந்து அப்புறப்படுத்தி நீங்களும் வெளியேறுங்கள்." பிட் சத்தம் போட்டுச் சொன்னதை சுங்குராமர் காதில் வாங்கினாரோ இல்லையோ மண்ணில் அவர் புரளல் நின்றபாடில்லை.

~

மறுநாள் பிட் தன்னுடைய இராணுவத் தடவாளங்களை சுங்குராமர் தோட்டத்திற்கு அனுப்பினார். ராமர் சலம்பல் ஏதேனும் செய்தால் பாரபட்சமின்றி அவரைக் கைது செய்து இடத்தைக் கையகப்படுத்த உத்தரவு பிறப்பித்தார். ஆனால், அதற்கு அவசியமே இல்லாமல் போனது. இராணுவ வீரர்கள் சுங்குரமாரைத் தோட்டத்தினுள் எங்கு தேடியும் அவர் கிடைக்கவில்லை. அவர் உடமைகளையும், அவர் வளர்த்த கீரிப்பிள்ளைகள், கூண்டிலிருந்த முயல்குட்டிகள், ஆகியவற்றை இராத்திரி உணவுக்காக இராணுவ வீரர்கள் கூண்டோடு கொண்டு சென்றனர். மறுநாள் தோட்டத்திற்குள் கூலியாட்கள் அனுமதிக்கப்பட்டுத் தரையில் முளைத்திருந்த செடி, கொடிகளைக் களையெடுக்கச் சொல்லிக் கொத்து வேலை செய்து அவ்விடம் சமநிலையாக்கப்பட்டது. ஒன்பது நாட்கள் கழித்து பிட்டின் தலைமையில் முதன்முதலாகப் பதினோரு குடும்பங்கள் அங்கு குடியமர்த்தப்பட்டன. நிழலில் அமர்ந்து நெசவுவதற்கு இவ்விடம் பொருத்தமாக இருக்குமென வந்திருந்தவர்கள் செட்டியாரிடம் சொல்லிப் புளகாங்கிதம் அடைந்தனர்.

செட்டியார் நினைத்தது போலவே அவ்விடத்திற்கு "மூர்த்தியப்ப நாராயண செட்டியார் தலைவர்" என்ற சாசனத்தில் பிட் கையெழுத்திட்டார். ஒரு கிராமம் உருவாவதற்குத் தேவையான ஆட்கள் இங்கு உடனடியாக வரவழைக்கப்பட வேண்டுமென பிட் செட்டியாரிடம் ஆணை பிறப்பித்தார். செட்டியார் தனக்குதவியாகக் கலவைச் செட்டியாரை வைத்துக்கொண்டார். கிராமம் உருவாக்குவதற்குத் தேவையான மக்களை இருவரும் பட்டியலிட்டனர்.

அதன்படி துணி வெளுப்பவர்கள், சாயம் தோய்ப்பவர்கள், அங்குள்ள கோயிலுக்கு பூஜைகள் செய்ய பிராமணர்கள், சதிராட்டக்காரர்கள். நாடகக் கணிகைகள், நூல் நூற்பவர்கள், மற்ற ஏவலாளர்கள், கழிவு அள்ளுபவர்கள் ஆகியோரைக் கூட்டிவந்து குடியமர்த்தினர்.

நெசவாளர்களை ஊக்குவிக்கும் பொருட்டு கம்பெனிச் செலவிலேயே அவர்களுக்குக் கிராமத்தில் வீடுகள் கட்டித்தர முடிவு செய்திருந்தது. தவிர அங்கு வாழ்பவர்கள் வரி செலுத்த வேண்டியதில்லை எனவும், அங்கு குடியேறிய, இரண்டு தலைமை வணிகர்களுக்கு, 2,000 பக்கோடாக்கள் கடனாக வழங்கப்படும் என்றும் பிட் ஆணை பிறப்பித்தார். அதன்படி முறையே மூர்த்தியப்ப நாராயண செட்டியாரும், கலவைச் செட்டியாரும் அச்சலுகையை அநுபவித்தனர்.

வருட இறுதியில் விறுவிறுவென்று 130 நெசவாளர் குடும்பங்கள் குடியேறினர். அக்கிராமத்தில் சின்னச் சின்னத் தறிகள் அமைத்து நெசவு செய்து கொண்டிருந்ததால் அப் பகுதிக்கு "சின்னதறிப் பேட்டை" எனப் பெயர் வைத்து மக்கள் அழைத்தார்கள். (நாளடைவில் அது சிந்தாதிரிப்பேட்டை என அழைக்கப்பட்டது) பேட்டையில் நெசவாளர்கள் அதிகமானது போலவே அவர்களுக்கு மறைமுகத் தேவையாக வரவழைக்கப்பட்ட மற்ற வகையினரும் பல்கிப் பெருகினர். டிசம்பர் மாதம் இங்கிலாந்து செல்வதற்கு முன்பு தான் உருவாக்கிய கிராமத்தைப் பார்வையிட வந்த பிட் கூவம் ஓரத்தில் இருந்த வெற்று நிலத்தில் மக்களை ஒன்றுத் திரட்டி, "உங்களுக்கு ஏதேனும் குறையிருக்கிறதா" என்று கேட்டபோது, பெரும்பாலானோர் ஒரு சாரராகத் திரண்டு; துபாஷிகளான செட்டியார்கள் மூலம் தங்கள் விண்ணப்பத்தை பிட்டிடம் முன் வைத்தார்கள்.

அதாகப்பட்டது, "கிராமத்தில் மக்கள் தொகை அதிகரித்துக்கொண்டிருக்கிறது. அரசாங்கப் பணத்தில் வீடு கட்டும் வேலைகளும் மும்முரமாக நடந்துகொண்டிருக்கின்றன. ஆகவே, இந்தத் தருணத்திலேயே ஜாதி அடுக்குகளை முன்வைத்து வீதி

அமைக்கப்பட்டால் பிறகு நாங்கள் தராதரத்துடன் குடித்தனம் நடத்த சௌகரியமாக இருக்கும்'' என்றனர்.

இது ஏற்கனவே எதிர்பார்த்திருந்த விண்ணப்பம் என்பதால் ஆயத்தமான பெருமூச்சுக்குப் பிறகு மக்களின் நடுவில் நின்று உரத்த குரலில் பிட் பேச ஆரம்பித்தார். "என் அப்பா, அம்மா என்னைப் பெற்றெடுத்து வளர்த்தது இந்தியாவில். நான் இந்த நாட்டிலுள்ள எல்லா நெளிவு சுளிவுகளையும், உங்களுடன் எப்படி வியாபரம் செய்ய வேண்டுமென்கிற தந்திரங்களையும் கற்றறிந்து கொண்டேன். எனக்கு கடைசிவரை பிடிபடாத விஷயம் உங்களின் ஜாதி கட்டமைக்கப்பட்டிருக்கும் விதம்தான். ஒருபோதும் இந்தியர்களின் ஜாதியடுக்கை ஆராய்ச்சி செய்ய முனையாதே; அது உனக்குப் பைத்தியத்தை உண்டுபண்ணும் என்று என் தந்தை ஜான் சொன்னதை இந்நேரத்தில் நன்றியோடு நினைவுகூர்கிறேன். நான் வியாபாரத்தை நிர்வாகம் செய்ய வந்தவன். எனக்கு அது சிறப்புற நடந்தால் அதுவே முக்கியம். ஆகவே இங்குள்ள பெருவாரியானோர் கேட்டுக்கொண்டதற்கிணங்க மூர்த்தியப்ப செட்டியாரும், கலவைச் செட்டியாரும் ஜாதி வாரியாகத் தெருக்களை அமைக்க அவர்களுக்கு நான் கட்டளையிடுகிறேன்.'' பிட் பேசி முடித்து, துபாஷிகள் அவற்றை மொழிபெயர்த்ததும் சிலர் மகிழ்ச்சியில் பிட்டிடம் ஓடிப்போய் அவர் காலில் விழுந்தனர். சிலர் நின்ற இடத்திலிருந்தே கை தட்டினர். சிலர் கைகளை மேலே உயர்த்திக் கூக்குரலிட்டனர். சிலர் தங்களுக்குள் ஒருவரையொருவர் மௌனமாகப் பார்த்துக்கொண்டனர்.

~

சில மாதங்களுக்குப் பிறகு வீடுகள் கட்டி முடித்ததும் ஜாதி, இனப் பிரிவினையை முன்வைத்து அங்கு வீதிகள் அமைக்கப்பட்டன. கடவுளுக்கு மிக நெருக்கமானவர்கள் என்பதால் கிராமத்திலுள்ள ஆதிகேசவ பெருமாள் கோயிலை ஒட்டியிருக்கும் அகன்ற சாலைக்கு அக்ரஹாரம் எனப் பெயரிடப்பட்டு பிராமணர்கள் முதலில் குடிபெயர்ந்தனர். முறையே நாயக்கர்கள், செட்டியார்கள், முதலியார்கள், பிள்ளைமார்கள், போன்றோர்கள் தம் இனவிருத்திக் கேற்ப ஒவ்வொரு சாதியும் மூன்று, நான்கு தெருக்கள் என ஆக்கிரமித்துக்

குடிபெயர்ந்தனர். ஒவ்வொரு சாதிக்கும் தலைவர் நியமனம் செய்து அவர் பெயரில் தெருக்களுக்குப் பெயர் வைக்கப்பட்டது.

அவர்கள் குடிபெயர்ந்தது போக மிச்சமுள்ள இருபத்தி ஏழு குடும்பங்களுக்கு ஜாதியின் அடிப்படையில் சின்னதறிப்பேட்டை ஊருக்குள் வாழ தகுதி இல்லை என்று தீர்மானம் ஆகியது. ஆனால், ஒரு சில நிபந்தனைகளுடன் அம்மக்கள் ஊருக்குள் நுழையலாம் என்று சலுகைகள் வழங்கியிருந்தனர். நிபந்தனைகள் பின்வருவன; 1) ஊருக்குள் ஆடு, மாடு, எலி, நாய், பூனை போன்ற ஜீவராசிகள் உயிரிழந்தால் தூக்கிக்கொண்டு போவதற்கு 2) மயிர்ச் சவரம் செய்வதற்கு 3) தேவைப்படுவோருக்கு மாப்பிள்ளைச் சவரம் செய்வதற்கு 4) மலப்புதரில் வாரம் ஒரு முறை வந்து ஊர்ப் பீயைக் கூடையில் அள்ளிக்கொண்டு போவதற்கு 5) வருடத்திற்கொருமுறை நடக்கப்போகும் பெருமாள் யாத்திரையை அக்ரஹாரத்துச் சாலையின் நிழல் படாத தூரத்தில் நின்று ஸ்வாமியை தரிசனம் செய்வதற்கு 6) இன்னும் ஊர் மக்கள் விருப்பப்படும் ஏவல் வேலைகளைச் செய்வதற்கு பேட்டையினுள் நுழையலாமேயன்றி மற்றபடி ஊர்க்கூபத்தில் நீரெடுக்கக்கூட அனுமதி இல்லை என்பன போன்ற கட்டளைகளை “சலுகைகள்” உள்ளடக்கியிருந்தது.

கிராமத்தினுள் அனுமதி இல்லை என்பதெல்லாம் தங்களுக்கு முன்பே நடக்கும் என்பதைத் தெரிந்து வைத்திருந்த ஒதுக்கப்பட்ட குடும்பங்கள் கூவம் ஆற்றை ஒட்டியிருக்கும் மரங்களுக்குக் கிடையில் ஆற்றங்கரைக் குளிர்ச்சியில் குடில்கள் அமைத்து சுகபோகமாகவே வாழ்ந்தனர். கூவம் நீர் தேங்காய்த் தண்ணீரின் தித்திப்புக்கு சவால் விடும் வகையில் இருந்ததால் ஊர்க்கூபத்தில் நீரெடுக்கும் அவசியம்கூட இல்லாமல் கூவாற்று நீரிலேயே குளித்தும் குடித்தும் சமைத்தும் வாழ்க்கையை ஆனந்தித்தனர்.

காலக்கணக்கிலிருந்து பல வருடங்கள் கழிந்தன. பஞ்சம் பிழைப்பதற்காக நாட்டுப்புறத்திலிருந்து மதராஸுக்கு வந்தவர்களில் ஒரு சாரர் தங்கள் ஜாதிக்கு விதிக்கப்பட்ட

தகுதிக்கேற்பக் கூவத்தை ஒட்டியுள்ள கரையிலேயே வாழ நேர்ந்தது.

கூவத்தை ஒட்டி சின்னதறிப்பேட்டையில் வாழ ஆரம்பித்தவர்கள் பின்னர் மதராஸைச் சுற்றி கூவம் ஆறு பாயும் எல்லாக் கரையோரங்களையும் புகலிடமாக்கிக் கொண்டனர்.

கூவத்தில் சிறிது சிறிதாகக் கொட்டப்பட்ட நெசவுக் கழிவுகள் அவ்வப்போது வேலையைக் காட்டினாலும் கழிவுகளை அதிகமாய் உள்வாங்கிய கூவாறு பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் நோய்வாய்ப்பட ஆரம்பித்தது. திரவ நிலையிலிருந்த ஆறு தவணை முறையில் திடப்பொருளாக மாறி துர்கந்தம் வீச ஆரம்பித்தது.

1815இல் கடலோடு கூவம் சங்கமிக்கும் ‘லாக்நகர்’ என்னும் பகுதியில் மணல்மேடு உருவாகி ஆற்றைக் கடலோடு ஊடல் கொள்ளாதவாறு செய்ததால் அப்பகுதி தோண்டப்படுவதற்காகத் திறந்து விடப்பட்டது. அதன் பொருட்டு ஆற்றங்கரை மக்கள் கோரமான பின்விளைவுகளைச் சந்தித்தனர். அதில் ஒன்றாக, கடல் பாம்புகள் கூவம் ஆற்றுக்குள் மாப்பு மாப்பாக விஜயம் செய்ய ஆரம்பித்தன. அடுத்த இரண்டு மாதத்தில் பாம்பு கொத்தி பலர் இறந்துபோயினர். அப்பகுதி மறுபடியும் மணல் மூட்டைகளைக் கொண்டு அடைக்கப்பட்டது. பிறகு கூவம் ஆற்றில் தேங்கியிருந்த நீர் போக்கிடமின்றி முழு மனதுடன் சாக்கடையாக மாற ஆரம்பித்தது.

இவ்வூரை ஒரு காலத்தில் பூந்தோட்டமாக வைத்திருந்த சுங்குராமரிடமிருந்து அபாண்டமாக இது பறிக்கப்பட்டதால் அவர் கட்டிய காரனேஸ்வரி கோயிலினுள்ளேயே சுருக்கு மாட்டிக்கொண்டு அழுகிய நிலையில் கண்டெடுக்கப்பட்டார். சுங்குராமரின் சாபமே இதற்கெல்லாம் காரணம் என்று ஊர்ப் பெருசுகள் வழியாகச் செய்தி பரவியது. பரிகாரமாக 1818ஆம் ஆண்டு ஒரு கடா எருமை பலி கொடுக்கப்பட்டு சுங்குராமருக்கு அவர் வாழ்ந்த இடத்திலேயே ஒரு கோயில் கட்டப்பட்டது.

~

சின்னதறிப்பேட்டை கூவக்கரையில் வருடத்திற்கு வருடம் மக்கள் கூட்டம் திரண்டு வருவதாலும், தொற்றுக் கிருமிகள் தாக்கி அவர்கள் இறந்து போவதைக் கண்டு காக்ஸ், ரெக்ஸ் என்கிற பிரிட்டிஷ் இரட்டையர்கள் மனக் கிலேசம் கொண்டனர்.

அதைச் சமாளிப்பதற்காக 1914ஆம் ஆண்டு இரட்டையர்கள் ஆற்றங்கரையை ஒட்டியுள்ள தாழ்வாக இருக்கும் தங்களுக்குச் சொந்தமான பகுதியில் ஒதுக்குப்புற மக்கள் வாழ்வதற்கு அனுமதித்தனர். மேல்சாதிக் குழுவினர் என்று சொல்லப்பட்டவர்கள் ஒன்றுகூடி ஊருக்கு அருகில்கூட ஆற்றங்கரை மக்களை குடியமர்த்தக் கூடாது என்று கோஷமிட்டு எழுப்பிய குரல்கள் பிரிட்டிஷ் இரட்டையர்கள் முன்பு செல்லுபடி ஆகவில்லை.

அவர்கள் கொடுத்த இடம் நதியோரத்தைச் சேர்ந்த எல்லோருக்கும் போதுமானதாக இல்லை.

வாழப் போனவர்கள் காக்ஸ் தெரு, ரெக்ஸ் தெரு, காக்ஸ் காலனி, ரெக்ஸ் ஸ்கொயர், பஜார் தெரு என்று பெயர் வைத்து

அங்கு வாழ்ந்தார்கள். பெயரே வைக்கப்படாமல் இருந்த தெருக்களுக்கு, தெருவுக்கு ஒன்றென கோயில் கட்டிய பிறகு படவட்டம்மன் கோயில் தெரு, கொல்லாபுரி அம்மன் கோயில் தெரு, ஆதி துலுக்கானத்தம்மன் கோயில் தெரு என்று தெருக்களுக்கு பெயர் வைத்துக்கொண்டார்கள்.

கூவத்திலிருந்து மக்கள் முற்றிலுமாக இடம் பெயர வசதி வாய்ப்பில்லாததால் மீதி பெரும்பான்மையானோர் அங்கேயே வாழ வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது. சுங்குராமரின் நினைவாக அப்பகுதி ‘ராமர் தோட்டம்’ என்றழைக்கப்பட்டது.

சென்ட்ரல் ஜெயிலுக்கு பின்புறம், குடியிருப்புப் பகுதி இருப்பது முறைகேடான காரியம் என நினைத்த அரசாங்கம் ராமர் தோட்டத்து மக்களை அங்கிருந்து முற்றிலுமாக அப்புறப்படுத்தியது. அலைகழிப்பு தாங்க முடியாத சில குடும்பங்கள் பூர்வீகக் கிராமத்திற்கே சென்றார்கள். மீதத்தினர் பிரிட்டிஷ் இரட்டையர் கொடுத்த

இடங்களிலும், ரிச்சி தெருவை ஒட்டிய நரசிங்கபுரத்திலும், நேப்பியர் பார்க்கிற்கு (மே தின பூங்கா) அருகிலுள்ள பம்பிங் ஸ்டேஷன் பகுதியிலும் தஞ்சம் புகுந்தனர். எங்கேயுமே இடம் கிடைக்காதவர்கள் சாலையோரத்திலேயே தார்ப்பாய்களினாலும், கோணிப்பைகளினாலும் கூரை அமைத்து நடைபாதைவாசிகளாயினர்.

தமிழ்நாடு அரசு 1967ஆம் ஆண்டு கூவத்தை ஒட்டி வாழும் சிந்தாதிரிப்பேட்டை மக்களுக்கு கூவத்தை ஒட்டியே குடிசை அமைத்துக் கொடுத்து வாழ்வாதாரம் அளித்தது. அனைத்து மக்களுக்கும் அது போதாதிருந்ததால் மீதமுள்ளோருக்கு அடுத்த வருடம் நாட்டு ஓடு அமைத்த விசாலமான வீடுகளை வரிசை வரிசையாகக் கட்டிக்கொடுத்தது.

அதற்கடுத்த வருடமே அடுக்குமாடிக் குடியிருப்புகள் கொண்ட ஹவுசிங் போர்டு வீடுகளை முதல் கட்டமாக நான்கு ப்ளாக்குகள் கட்டிக்கொடுத்தது. வாக்கு சேகரிக்க ஓட்டு வங்கியை ஒரே இடத்தில் அமைத்து எளிமையாகப் பிரச்சாரம் செய்வதற்கான சுயநலமும் அதில் இருந்ததென்றாலும் மக்கள் அதைப் பற்றியெல்லாம் சிந்திக்காமல் வாக்கு கேட்டு வந்தோரை வாழ வைத்தனர். ஓலை வீடுகள், ஓட்டு வீடுகள், ஹவுசிங் போர்ட் வீடுகள் என்று வகைவகையாக மக்கள் வாழ்ந்தனர். கூவத்தின் நாற்றமும், கொசுக்கடியும் இருந்தாலும் தொல்லையின் வடிவம் நிரந்தரமாக்கப்பட்டது குறித்து பேட்டைவாழ் மக்கள் மகிழ்ச்சியாகவே இருந்தனர். நாளடைவில் அவர்களுக்கென்று நிரந்தரமான வாழ்க்கைமுறைகளும் உருவாகின.

## -1-

பஜார் தெருவில் வாழ்ந்த ரெஜினா கூவத்தின் கரையோரத்திலுள்ள ராமர் தோட்டத்தில் ஹவுசிங் போர்டு வீடு கிடைக்காமல் அதனருகிலேயே ஹவுசிங்போர்ட் வீடுகளுக்குத் தம்பிகள் போல அரசாங்கம் கட்டிக்கொடுத்த ஓட்டு வீடுகளுள் ஒரு வீட்டில் ஜீவனம் செய்துவரும் சிங்கப்பூரான் குடும்பத்தின் தலைப்பிள்ளையான குணசீலனுக்குத் துணைவியானாள்.

பிறந்த வீட்டிலிருந்து மாமியார் வீட்டுக்குப் பொடிநடையாக வந்துவிடும் தொலைவில்தான் வாக்கப்பட்டாள். பிறந்த வீடா? ம்ஹூம். இல்லை.

சிங்கப்பெருமாள்கோயில் ரயில்வே ஸ்டேஷனில் ஒரு நீள்நாற்காலியில் குற்றாலத் துண்டில் சுருட்டப்பட்டு உள்நாக்கு தெரிய அலறிக்கொண்டிருந்த குழந்தையை 'பார்க்' ரயில்வே ஸ்டேஷனில் கொய்யாப் பழம் விற்கும் ஒரு முதியவர் கண்டு கைகளில் ஏந்தினார். அக்கம்பக்கம் பார்த்தார். ஒருவரும் இல்லையெனத் தெரிந்ததும், கொய்யாப்பழத்தோடு கொய்யாப்பழமாகக் குழந்தையை கூடையில் போட்டுத் தலையில் சுமந்து நடக்க ஆரம்பித்தார். தொட்டிலில் ஆடிக்கொண்டிருப்பதாக உணர்ந்ததோ என்னவோ பரவசத்தில் குழந்தை அமைதியாய் அவருடன் பயணம் செய்தது.

சிந்தாதிரிப்பேட்டையிலுள்ள தன் இரண்டாவது மனைவி லூர்து மேரியிடம் குழந்தையைக் கொடுத்து வளர்க்க வேண்டும் என்று பயணத்தின் இடையே கொய்யாப்பழக்காரர் முடிவு செய்தார்.

நெடுங்காலமாக கொய்யாப்பழக்காரருக்கும் லூர்து மேரிக்கும் நிலவிய குற்றவுணர்ச்சிக்கு அருமருந்தாக ரெஜினா என்கிற பெயரில் குழந்தை வளர்ந்துவந்தது.

தத்தெடுத்த குழந்தைக்கு ஏழு வயது இருக்கும்போது கொய்யாப்பழக்கார் தீராத வயிற்று வலியால் இறந்துபோனார்.

கிழடு தட்டிப்போன லூர்து மேரி, ரெஜினாவை யாருக்காவது மணமுடித்து அனுப்பிவைக்கும்வரை தான்

இருக்க வேண்டுமென உயிரை அழுத்திப்பிடித்து பூ விழுந்த கண்ணோடு நகர்ந்து நகர்ந்து காலம் தள்ளினாள்.

ரெஜினா பிறக்கும்போதிருந்த இளஞ்சிவப்பு நிறம் பத்தொன்பது வயதில் இல்லையென்றாலும் அப்படிப் பிறந்த தற்கான அடையாளங்கள் நிலைத்திருக்கும் நிறம். இளம்பெண்ணாகத் திரண்டுவிட்டவளைப் பாதுகாப்பாக இன்னும் தன்னால் எவ்வளவு நாள் பராமரிக்க முடியுமென லூர்து மேரி தன் தோழி நாகம்மா என்கிற நகோமியாம்மாவிடம் சொல்லி விசனப்பட்டாள்.

நகோமியம்மாவின் மூலம் ராமர் தோட்டத்திலுள்ள குணசீலனின் இல்லறம் சிறக்க அவனுக்குத் துணைவியாகச் சென்றாள் ரெஜினா.

ரெஜினாவைக் கூட்டி அனுப்பும்போது, அவளின் மாமனார் சிங்கப்பூரான் லூர்து மேரியையும் தங்களோடு வந்து தங்கியிருக்குமாறு கேட்டார். எவ்வளவு கேட்டும் கிழவி அவர்களுடன் செல்ல மறுத்துவிட்டது. பூ விழுந்த கண்களுடன் வீட்டைத் தடவித் தடவித் தனியாக வாழ்வதை ஒரு வரம்போலச் செய்ய விருப்பப்பட்டதோ என்னவோ முகம் பூரிக்க வழியனுப்ப மட்டுமே செய்தது கிழவி.

ரெஜினா அழுதாள். கண்களோடு ஒப்பிடுகையில் அவள் மூக்கிலிருந்து அதிக நீர் வழிந்தது. அழுகையை அடக்கியதால் அது விம்மலாக மாறி மூக்குச் சிவந்து மூக்கால் அழுதாள். கிழவியை விட்டுப்போகிறோம் என்பதை விட கிழவி இல்லாமல் எப்படி வாழப்போகிறோம் என்பதை நினைக்கும்போது அவளுக்குக் கலவரமாக இருந்தது. வளர்ந்த இடம் குடிசை வீடு என்றாலும் அது கூவத்தின் அருகிலில்லை. புகுந்த வீடு கூவத்திற்கு மிக அருகிலுள்ள வீடு. கரையிலிருந்து அவர்கள் வீடுதான் முதல் வீடு. அவளுக்குப் பிரச்சினை அதுவல்ல. வெளிக்குச் செல்பவர்கள் தன் வீட்டைத் தாண்டி இருக்கும் செடிப் புதர்களில்தான் காலைக் கடன் செலுத்த வேண்டியிருந்தது. போகும்போதும் வரும்போதும் ஒரு சில ஆண்கள் பார்வையாலேயே இவளை மயக்கிக் கடத்திக்கொண்டு போய்விட வேண்டுமென நம்பிக்கையுடன் பார்ப்பதை அருவருப்பாக உணர்ந்தாள்.

மட்டுமில்லாது, அந்தி சாய்ந்ததும் கொசுக்கள் இவளைத் தேடிவந்து இவள் உடம்பை ஓர் உணவு விடுதியாக நினைத்துச் செயல்பட்டன. வீடு தனக்கு அசௌகரியமாக இருப்பதைத் தவணை முறையில் குணசீலனிடம் தெரியப்படுத்திக்கொண்டிருந்தவள் ஓர் இரவு குணசீலனின் தட்டில் குழம்பு ஊற்றுகையில் அவனிடம் சொன்னாள்.

"அவுசிங் போடு எப்ப கெடிக்குன்னு கேட்டுப் பாறேங்."

வாய்க்குக் கொண்டுபோன சோற்றுருண்டையைப் பாதி வழியில் நிறுத்தி அவளைப் பார்த்துச் சொன்னான், "தெபேர், இது எங்கம்மா ஆண்ட வூடு, இங்கதாங் குடும்பம் பண்ணுங்."

"வீடு ரொம்ப சின்தா இருக்குது."

"தெபேர். நம்ளுக்கு கல்யாணங் ஆன்தாலதான எங்கப்பங், தம்பியில்லாங் கல்றியாண்டா வீடெத்னு போய்கிறாங்கோ. முன்னாடி நாங்க அத்தினி பேரு இங்க ஒரே வீட்லதான் இர்ந்தோங்.

உங் ஒராளுக்கு கசுக்குதா?"

"உங்க அப்பாவயும், தம்பியும் இங்கியே வந்து இருக்க சொல்லு, நம்ம எங்க ஆயா வீட்டுக்கு போயி அங்க இருக்கலாங். அதுக்குங் வய்சான கால்த்துல கூடமாட யார்னா இர்ந்தபோல இருக்குங்."

தின்னுகிற தட்டைப் பிடுங்கியதைப்போல குணசீலன் கோபப்பட்டான். தட்டை வலது கையினால் விசிறி அடித்து அதே கையினால் அவள் கூந்தலைப் பிடித்தான்.

"போச்சடிக்கே, உனுக்கு இங்கின்னா கேடு?" - அவள் முடியை உலுக்கினான்.

"ஏ, முடிய வுடு, மு … டி … ய வுடு" - என்று வீறிட்டாள்.

இன்னும் வேகமாக உலுக்கினான்.

"வுடு முடிய. வு … டு" என்று சத்தத்திலிருந்து அழுகைக்கு மாறி அவனைக் கெஞ்சினாள். விடவில்லை.

"ங்கோத்தா எப்பப்பாரு … இந்த வூட்டப் பத்தி எ … துனா சொல்லிகினு."

ங்கோத்தா என்கிற அவன் உச்சரிப்பில் ‘ங்கோ’ என்பது பெரிய சத்தமாக இருந்ததால் சத்தம் கேட்டுப் பக்கத்து வீட்டிலிருந்து நகோமியம்மா ஓடிவந்து அவன் கையை முறுக்கி அவளை விடுவித்தாள்.

தலையை இரு கைகளிலும் அழுத்திப்பிடித்த ரெஜினா எழுந்து நகோமியம்மாவின் பின்னால் நின்றாள்.

“டேய் பாடு ஒத்து குஸ்டா சூத்தடக்கினு இருக்க முடியாதா. வேற வூட்டுக்கு வாணான்னா நயமா சொல்லு. ன்னமோ மயிற புச்சி இழுக்கிற?”

நகோமியம்மா யாரோ தூரத்தில் இருப்பவரிடம் பேசுவது போல குரலிழுத்துப் பேசினாள்.

“தே, கம்னு போ. உங்கிட்டியா பேசுறாங்கோ” - நகோமியம்மாவின் முகத்தைப் பார்க்காது ரெஜினாவிடம் தொடர்ந்தான்.

“ங்கோத்தா உனுக்கு ஒண்ணா இங்க இரு. இல்லாட்டி அந்தக் குருட்டுக்கூதி கூடியே போய் அங்கியே இர்ந்துக்கோ. எங் வூட்டுக்கு வராத. சா … வச்ச்சிடுவேங் உன்ன.”

இதற்கும் நகோமியம்மாவே பதில் சொன்னாள். “அயியோ தோ … அப்பத்லந்து கேட்னுக்றேங் ன்னாமோ சாவச்சிடுவெங் சாவச்சிடுவென்னு புல்பு காட்னிகிறியே. எங்க சாவடி?” என்று ரெஜினாவை அவன் முன்னால் இழுத்துத் தள்ளினாள்.

குணசீலன் லுங்கி அவிழா வண்ணம் ஒரு கையில் அதைப் பிடித்துக்கொண்டு எழுந்தான். அவனருந்திய போதை முழுவதும் எழுவதற்கு உடந்தையாக இல்லை. பின்னாலிருந்து யாரோ அவனை இழுப்பது போலச் சென்று கீழே விழுந்தான். எழ முயற்சித்தவனை நகோமியம்மா “டேய் ஒய்ங்கா படு” என்று அவன் உடம்பைப் பிடித்து அழுத்தினாள்.

ரெஜினா வாசலுக்கு வந்து நின்றுகொண்டாள். படுத்த வாக்கிலேயே தலையை மட்டும் தூக்கித் தூக்கி விக்கலுடன் அவளைத் திட்டிக்கொண்டிருந்தான். திடீரென முழு சக்தியையும் திரட்டி எழுந்து, தடுத்த நகோமியம்மாவைப் புறந்தள்ளி திரும்பவும் அவள்

கூந்தலைக் கொத்தாகப் பிடித்துக்கொண்டான். சந்து நடுவிற்கு வந்தான். அவனின் ‘காச் மூச்’ சத்தத்தால் அக்குறுக்குச் சந்தில் பாய் போட்டுப் படுத்திருந்தவர்கள் உட்பட தூக்கம் கலைந்து பாயிலிருந்தபடியே வேடிக்கை பார்த்தனர்.

இரு ஆடவர்கள் குணசீலன் அருகே வந்து அவனை மடக்கி அவன் விரல்களிருந்து அவளைப் பிரித்தார்கள். அவன் மேற்கொண்டு ஏதும் செய்யாதவாறு அவனைப் பிடித்துக்கொண்டார்கள். அவர்களின் பிடியிலிருந்து தன்னைத்தானே விலக்கித் தள்ளாட்டத்துடன் சுயேச்சையாக நின்றான்.

ரெஜினா நகோமியம்மா ஒரு குழுவாகவும், குணசீலனும், அவனை மடக்கிய ஆடவர்கள் ஒரு குழுவாகவும் இடைவெளி விட்டு நிற்க, குணசீலன் தெருவே கேட்கப் பேசினான். புதியதாய் ஏதேனும் பேசுவானென்று பார்த்தால் அதே ரிக்கார்டு. “தெபார்,

இது எங்கம்மா ஆண்ட வூடு, இங்கதான் குடும்பம் பண்ணணும் ...”

ரெஜினா, காலில் முள் குத்தியது போல மௌனமாக சிணுங்கினாள். சிணுங்கலின் பின்னணி தற்போதைய நிலவரம் எனச் சொல்வதை விட எதிர்காலத்தை நினைத்ததால் உண்டான பயத்தின் வெளிப்பாடு என்பதாக இருந்தது.

“நீலிக்கண்ணி வடிக்கிறா பார் போச்சடிக்க. த்தா ... ப்போ வந்தேங் சாவச்சிடுவெங்.”

வெறுமென நிற்பது மானப் பிரச்சினை என்று போதை அறிவுறுத்த, நடையை வேகப்படுத்தி அவளை அடிக்கப் பாய்ந்தான். இவன் விபரீதம் உண்டுபண்ணுவான் எனப் பயந்த மத்தியஸ்தர்கள் அவன் பாய்ந்த வேகத்தில் அவனுக்கு ஈடாகக் கெட்டியாகப் பிடித்தார்கள். அவர்களின் நம்பிக்கையைப் பொய்ப்பிக்கக் கூடாது என்பதற்காக இன்னும் ஜிம்பினான்.

ஒருவழியாக, சீமந்தப் பெண்ணை அழைத்துச் செல்வது போல மத்தியஸ்தர்கள் அவனைப் பத்திரமாக அழைத்துக்கொண்டு வீட்டினுள் கிடத்தினார்கள்.

“தே ... நீ வா எங்கூட்ல வந்து பத்துக்கோ” - நகோமியம்மா அழைத்தாள்.

ரெஜினாவுக்குப் போகவும் மனமில்லை. ராத்திரி அவனுடன் இருந்தால் எதற்கும் உத்திரவாதமில்லை என்கிற பயம் ஒரு பக்கம். ஆனாலும் நகோமியம்மா அழைத்த அதிகாரக் குரலுக்குக் கட்டுண்டு அவள் வீட்டில் கொஞ்ச நேரம் இருந்து விட்டுப் பிறகு அவன் உடல் சாய்த்ததும் போகலாமென்று நிகழ்காலத்திற்குப் பணிந்தாள்.

குணசீலன் குரல் இருவருக்கும் கேட்டுக்கொண்டே இருந்தது. நடுவில் சுவர் என்பது ஒப்புக்குத்தான். பார்த்துக்கொள்ள முடியாதே தவிர பக்கத்து வீட்டு நடவடிக்கைகள் துல்லியமாகக் கேட்கும்.

நகோமியம்மா இங்கிருந்தே அவனுக்குக் குரல் கொடுத்தாள்.

“தே நீயேங் வர” என்றான் அங்கிருந்தே.

நகோமியம்மா, இன்னும் சில வார்த்தைகளைக் கொண்டு அவனைத் திட்டினாள். குணசீலனிடமிருந்து பதில் இல்லை.

தன் அம்மா வாழ்ந்த காலத்தில் அம்மாவுக்கு அடங்கினானோ இல்லையோ அம்மா வயதுடைய நகோமியம்மாவின் பேச்சுக்கு

குணசீலன் அடங்கிப் போகிறவனாகவே இருந்தான். நகோமி யம்மாவுக்கும் குணசீலனுக்கும் அந்தரங்க உறவு இருந்ததாய் தோட்டத்தில்கூடப் பேச்சு இருந்தது.

அவனிடமிருந்து கொஞ்ச நேரமாய் சத்தம் இல்லை என்றானதும் இருவரும் வெளியே வந்து குணசீலன் வீட்டுக் கதவைப் பிரம்பகலம் திறந்து பார்த்தார்கள்.

தரையில் அமர்ந்து கால்களைப் பரப்பி அதற்கிடையே தலை குனிந்து பேசிக்கொண்டிருந்தான். அவன் வாயிலிருந்த எச்சில் கம்பிக் கம்பியாகத் தரையில் விழ, அதைப் பொருட்படுத்தாது பேசினான். அந்தப் பேச்சு அடுத்தவர் கேட்க வேண்டுமென்கிற கவலையின்றி உள்ளக் குமுறலாக வெளிவந்தது. “தோ இந்த வீட்டு வாசல் முன்னாடிதாங் எங்கம்மா கட்லீஸ், கவாப்பு கட

போட்டுன்ச்சு. கிளியாம்பாக்கா கவாப்பு கடன்னா ராமர் தோட்த்துல ன்னா … ங்கொம்மா … ல ஒக்க சி … ந்தார்பேட்டிலியே தெரியாத ஆளு இருக்காது. இந்த வூடு எங்ளுக்கு அடியாளன்டி போச்சடிக்க'' - பெரிதாக விக்கினான்.

குணசீலன் கொடுங்குணம் கொண்டவனில்லை என்றாலும் குடிகாரன். பெரியமேட்டிலுள்ள 'முகம்மது ஹபீப் ராஜா லெதர் கடை'யில் தினக் கூலிக்கு வேலை செய்பவன். மணமான ஒரு வாரத்திற்குக் குடியின்றி காந்தியவாதியைப்போல் சம்சாரம் செய்தவன் பிறகு தினமும் வீட்டுக்கு வரும்போது கால்கோலம் போட்டபடியே வரலானான். என்றபோதிலும் அவன் கையில் அவளுக்காகத் தின்பண்டப் பொட்டலம் இருக்கத் தவறியதில்லை. அவளை அன்பாகப் பார்த்துக்கொள்வான். இந்த அன்பின் ஆயுள் ஒரு மாத காலம்கூட நீடிக்காததற்குக் காரணம் வேற வீடு போலாமென அவள் இவனிடம் தெரிவித்ததே காரணம். அவள் விண்ணப்பிக்கும்போதெல்லாம் பழைய காலம்போல் வாழ முடியாமல் போன தவிப்பு அவனுக்குள் கோபமாக மாறும். அது கோபமாக மாறினாலும் புதுப் பொண்டாட்டியை அடிப்பது தவறென அடக்கிக்கொண்டவன் இன்று வெடிக்க நேரிட்டது.

கதவு ஓட்டை வழியாகத் தன்னை கவனிக்கிறார்கள் எனத் தெரிந்ததும் திரும்பவும் எழ முற்பட்டுக் கீழே சரிந்தான். ரெஜினா கண்ணீர் திரள கதவிடுக்கில் அவனைப் பார்த்தாள்.

கதவை முழுதுமாகப் படாரென்று திறந்து நகோமியம்மா சொன்னாள்.

"ஏய், பட்றா, ன்னாமோ சும்மானா புல்பு காட்னிகிற. உன்னாலதாங் எவ் வாய் கெட்டுப்போது. யேசப்பா என்ன மன்ச்சிரு …'' என்று ஆள்காட்டி விரலை மடக்கி வானம் பார்த்து முத்தமிட்டாள்.

குணசீலன் தன் வாய்மீது உள்ளங்கையைப் பொத்தி அதை எடுக்காமல் அவ்விதமாகவே சாய்ந்து படுத்துக் கொண்டான்.

“தே, நீ வா. அங்கியே பத்துக்கோ”. தன் வீட்டிற்கே அவளை அழைத்துச் சென்றாள் நகோமியம்மா.

“எம்மா அதுக்கு சாப்பாடு போட்டு வெஸ்ட்டு வந்துற்றேம்மா. தட்டு சோற தூக்கி அச்சிச்சி. பாவொங் நைட்டு பசியெடுக்குங்”

“யாரு அவனா . .? அவன் பீக்கொடலங். அதுலாங் கர்ட்டா போட்டுத் துன்ட்டுதுதாங் தூங்குவாங். நீ இப்டி ஒக்காரு. சாப்டியா நீ?”

“இல்லம்மா.”

“சாப்றியா?”

“வேணாம்மா பசியெடுக்கல.”

“தே எதியும் போட்டு யோஸ்ச்சினு இருக்காத. அவெங் நல்ல போதில இருக்கும்போது நீ எதுக்குமே வீட்டுப் பேச்ச எத்த ... ன்னாவோ அந்த பாடு ஓவராத்தாங் பேசுறாங். எல்லாங் நேரன்னு நென்ச்சிக்கோ. அந்த அருக்குசூத்தங் பேசின்துக்கு நானாருக்கவும் ரெண்டு கேவி கேட்டேங். உங்க மாமியாகாரி இந்துந்தா மவன அவுர செம்த்தியா குத்துருப்பா.”

“ஆமாமா பயிங்ரமா கோவப்படுவாங்ளாமே. இதுகூட ஒரு வாட்டி சொல்லிகிது.”

“அத ஏங் கேக்ற. அது ஒரு காலம். அவ்ளுக்கு கோவம் வந்தா அஞ்சாலு மடக்குனாலும் ஜிம்மிகினு போய் அடிப்பா” -

நீரில் திணறுவது போலச் செய்கை காட்டினாள் நகோமியம்மா.

“ஆங்!! அவுங்கோ வட்டிக்குலாம்கூட வுடுவாங்ளாமே?”

“ஆமா, ஒரு கால்த்துல உட்டுந்தா. உனுக்கு யாரு சொன்னது?”

“தோ, அதாங் சொல்ச்சி, ஒரு சீசன்ல ரொம்ப வசிதியா இர்ந்தாங்ளாமே?”

“ஆமா, இந்த பாடுங்கதான அழிச்சானுங்கோ” - சொல்லிய மாத்திரத்தில் நகோமியம்மா சொன்னாள்

“யேசப்பா என்ன மன்ச்சிரு.”

“அப்றங்?”

“கேளு கதய. நம்ம தோட்த்துல வட்டிக்கு வுட்ர ஒரே பொம்பள கிளியாம்பாதாங். வாங்னா டைமுக்கு குத்துண்ணுங். ரெண்டுவாட்டி நாயமா போய் கேப்பா. ஜப்று காட்னன்னு வெச்சிக்கோ. ‘திர்ட்டுப் பூலு போட்டாவது துட்ட எத்து வெய்ங்கடி. இல்ல கூதி முடிய கொள்த்தி போட்ருவேன்னு’ கேள்வி கேக்க ஆரம்பிப்பாபாரு அப்பவே தலய அடமானம் வெச்சாச்சி குத்துடுவாளுங்கோ. துட்டும் குடுக்க முடியாம அவ கேக்கற கேவிக்கு மானம்போய் தோ நம்ம ஊட்லந்து நாலாவது ஊட்ல இர்ந்த ஏழுமலை ஆத்துல உய்ந்து செத்தாம்பார்.”

வாய்மேல் கை வைத்தாள் ரெஜினா.

“எம்மா தோ நீ கீறியே … உன்னப் போல ரெண்டு சுத்து ஒடம்பு அவ்ளுக்கு. எப்பியும் மொறமொறன்னு புது வாயில் பொடவதாங் கட்டுவா. ஒருவாட்டி கட்டுன பொடவய உன்னொரு வாட்டி கட்டுறதுக்கு கொறஞ்சிது ஒரு மாசம் ஆவுங்.

தலில மஞ்சக்கனாம்பரம் வெச்சிகிக்னு கெட்டிகொல்சுல நட்ந்து போனான்னு வெச்சிக்கோ, தெருவே ஆந்துபோவும். சாவித்ரின்னா அழகு … கிளியாம்பா அந்துசு வருமா? ஊட்ல போட்டாலியே பாத்துருப்பியே” - ரெஜினாவின் பதிலுக்காக அவள் முகத்தைப் பார்த்தாள்.

“ஆமா … மா. பெரிய குங்குமப் பொட்டு வெச்சிகினு …”

“கிளியாம்பா சேத்து வெச்ச துட்டுக்கு ஏழு தலமொறக்கி ஒக்காந்து சாப்டுருக்கலாங். சிங்கப்பூரான் பாடு உட்டானா. அவ துட்ட சேக்க சேக்க கூதி கான்ச்சல்ல பொம்பள சோக்குலயும் ரேசிலயும் போய் வுட்டாங். துட்டு குடுக்கலன்னா ரோட்ல வல்ச்சினு வந்து அடிப்பான் பாரு அவள. அது ன்னாவோ, ஊட்டுக்காரன்னா கொரலு எழாது அவ்ளுக்கு. எல்லாத்தயும் அழிச்சாம் பார்.”

அவளுக்கு மனம் கேட்கவில்லை. “மோவ் இருமா அது இன்னா பண்துன்னு ஒரு எட்டுப் போய் பாத்துட்டு

வந்துர்றேங்'' -

நகோமியம்மாவின் அனுமதிக்குக் காத்திராமல் கதவைத் திறந்து வெளியே சென்றாள்.

“சாப்ட்னுக்துமா.''

“சொல் …ல நானு?''

“ம்க்கும்மா …''

“செரி, உங்க மாமியாகாரி சோத்துக்கட போட்டாளே அத சொன்னானா அவங்?''

“ஆங் சொல்ச்சிமா, ஆனா அது சொல்றதுக்கு முன்னாடியே, அவ்ங்க பேர நா கேள்விப்பட்டுக்கிறேங். எங்க வீட்டாண்டந்து கூட வந்து வாங்கினு போவாங்கோ. அவ்ங்க சாப்பாடு கட செம்ம பேமசாமா?''

“ம்க்குங் சாப்பாடு கட போட்றதுக்கு அவ எவ்ளோ தின்சு காட்னான்னு எனுக்கில்ல தெரியுங் …'' - நகோமியம்மா நாக்கைத் துறுத்திப் பழிப்புக்காட்டினாள்.

“ஏங்?''

“அந்தம்மாவுக்கு வெக்கம். தோட்டத்துல ராணி மாரி சுத்தினுன்ட்டு ரோட்ல ஒக்காந்து சோத்துக் கட போட எப்டி மன்சு வரும்? ஆனா கட போட்டா. எடைக்கு எட ரெண்டு எருமைங்கள பெத்தாலே அதுங்களுக்கு சோறு போட தேவல்ல? அதுலயும் உம் புர்ஷங்க்றாம் பாரு. வேல வெட்டி ஒன்னுத்துக்குங் போவொ மாட்டாங். ஆனா டைமுக்கு வந்து தட்டு நெறிய போட்டு வெச்சுக்கினு நாய் பீய துன்றா போல சலுப்பு சலுப்புன்னு துன்னுவாங். அவன் ன்னோர்த்தான் கீறாம்பாரு கிளியாம்பா புர்ஷங். சிங்கப்பூராம் பாடு, கூத்தியாளுங்க சல்ச்சிப் போறப்பலாங் வருவான். நயாபைசாக்கு ப்ரோஜனங் இல்னா கூடோ அவள அச்சி உயிர எடுப்பாம் பாரு பாடு. கைப்பக்குவமோ, ராசியோ சோத்துக் கடைலயுங் நல்லா சம்பார்ச்சா கிளியாம்பா, அதுலதாங் அவ தங்கச்சி ஒருத்தி க்ரா பாரு உங்க சின்ன மாமியா மேனாமினுக்கி. அவ்ளுக்கு கல்யாணம் பண்ணா.''

முகத்தில் ஆச்சர்யம் துலங்கக் கதை கேட்பது போலவே கதையைச் சொல்லும் பாணி நகோமியம்மாவிடம் இருந்தது. பழைய சிநேகிதியைப் பற்றிச் சொல்ல வாயெடுத்ததும் கிளியாம்பாள் பற்றிய நினைவுகள் நகோமியம்மாவிடமிருந்து பிரவாகமெடுத்தன.

"உங்க மாமியாகாரி கவாப்பு செஞ்சா ன்னா டேஸ்ட்டா இருக்குங் தெரிமா?"

"ஆமாம்மா, தோ அதுகூட டெய்லி சொல்னேருக்குங். எனுக்கு எப்டி செய்ணோன்னுகூட தெரியாது. ஒருநாள் செஞ்சிக் குடுக்கணுங்" ரெஜினா முகத்தைச் சுருக்கிச் சிரித்தாள்.

"தோ அதுன்னா அதிசயம். நா சொல்றேங் கேளு."

"ரெஜினா ... ரெஜினா ஏய்" என்கிற குரலும் கதவு தட்டும் சத்தமும் பரஸ்பரத்துடன் ஒலித்தன.

"எம்மா அடிக்க கிடிக்க போதும்மா."

"அதெப்படி அடிப்பாங். இது அடிக்கிற கொர்லு இல்ல. போ போய் சாப்ட்டு பத்துக்கோ."

வாசலில் தயங்கி நின்றவளை இழுத்துத் தோளின் மீது கை போட்டுத் தன் முகத்தருகே அணைத்து "நீ சாப்டியாமே?" என்று கேட்டான். அவள் அவன் பிடியிலிருந்து தன்னைப் போலியாக விடுவிக்க முயற்சி செய்து குழைவதைப் பார்த்த நகோமியம்மா வீட்டுக் கதவைப் படக்கென்று சாத்திக்கொண்டாள்.

~

சாப்பிட்டு முடித்து, அவன் காம இச்சைக்கு ஒத்துழைத்தற்குப் பிறகு சோர்வுடன் பாயில் சாய்ந்தவளுக்கு கிளியாம்பாளைப் பற்றி இன்னும் தெரிந்துகொள்ள வேண்டுமென ஆவல் பிறந்தது. சுவாரசியமான ஒன்றைப் பாதியில் நிறுத்திய வருத்தத்தைச் சமன்செய்ய, படுத்த வாக்கிலிருந்தே சுவரில் மாட்டியிருந்த கிளியாம்பாளின் புகைப்படத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாள். நகோமியம்மா சொன்னதை வைத்து மாமியார் பற்றிய சித்திரத்தைத் தன் கற்பனா சக்தியின் துணையால் இன்னும் விசாலமாக

மனக்கண்களில் ஒட்டி அதில் லயித்தவளுக்கு உறக்கம் எப்படி வரும். மீன்பாடி வண்டியின் சத்தம் போல சீரான இடைவெளியில் குறட்டை விட்டுத் தூங்கிய குணசீலனுக்கு அருகில் தூக்கம் வராமல் புரண்டு புரண்டு இருட்டில் நீந்தினாள்.

காலையில் சமையல் வேலைகளை முடித்ததும் அவனை வேலைக்கு அனுப்பி வீட்டை ஒப்புக்குச் சாத்திவிட்டு வெளியே வருகையில் பத்து மணி இருக்கும். நகோமியம்மா வீட்டு வாசலில் போய் நின்றாள். கதவு திறந்தே இருந்தது. நகோமியம்மாவும் நைட் ஷிப்ட் முடித்து வந்த அவள் வீட்டுக்காரரும் எதிரெதிரில் அமர்ந்து பொறையைக் கருப்புக் காப்பியில் தொட்டு விளாவுகையில் நகோமியம்மாவின் வீட்டுக்காரர் சடாரென்று கால்களை மடக்கி “வா எம்மா உள்ள வா” என்று புன்னகைத்தார்.

“மோவ், எங்கத்த கவாப்பு எப்டி செய்வாங்கன்னு சொல்லும்மா. நைட்டு அது வேய்ல்லந்து வர்றதுக்குள்ள செஞ்சி வெக்கிலான்னுக்றேங். அது கேக்கதாங் வந்தெங்.”

“அய்ய மாவுபொம்ம. நீ வுட மாட்டபோலக்தே” என்றாள் சலிப்புடன்.

“தே சொல்லேங் எம் மருமவ ஆசியாதான கேக்து” - நகோமியம்மாவின் வீட்டுக்காரர்.

“உன் படுக்க அடக்கு. எங் மருமவளுக்கு நா சொல்லாத யார் சொல்லப்போறா. எம்மா நீ வூட்ல இரு. தோ இத தூங்க வெஸ்ட்டு வரேங்.”

‘செரிம்மா’ - வீட்டுக்குப் போனதும் மாமியார் படத்தைச் சுவற்றிலிருந்து கழட்டி ஈரத்துணியால் துடைத்து மாட்டினாள். வெறுமனே உட்கார்ந்து எதையோ யோசித்தவளாய் இருந்தாள். மாமியார் கெட்டிக்கொலுசு மாதிரியே ஒரு ஜோடி வாங்கிப் போட வேண்டுமென தனக்கு வந்த ஆசையை நினைத்துக் கமுக்கமாகச் சிரித்தாள்.

“ரெஜினா ...”

“வாம்மா ...”

“இன்னாடி எம்மா பண்ணினுகிறே தனியா ஒக்காந்துகினு” -

ஒரு பாடலின் ராகநயத்துடன் கேட்டாள் நகோமியம்மா.

“சும்மாதாம்மா …”

“செரி கவாப்பு செய்னோன்னு கேட்டியே. எப்டி செய்னோன்னு சொல்றேங். ஆனா இன்னிக்கி செய்யாத இன்னா?”

“ஏம்மா?”

“இன்னிக்கி அம்மாவாசடி …”

“நீங்க அல்லேலூயா தானம்மா? அதுலாம் பாப்பீங்ளா?”

“பாக்க மாட்டோந்தாங். ஆனா நா அல்லேலூயால சேந்தது இப்போ மூணு வர்சமாதான …”

” … … …”

“பொறந்ததுலந்து நாகம்மாதான எம்பேரு. நானஸ்தான பேர்தாங் நகோமி … அது இன்னாவோ நானஸ்தானம் எத்த அப்றம்கூட இந்த இந்து சாங்கியங்கள வுட மன்சே வர்மாட்டுது. அம்மாவாசக்கி கறி செஞ்சி கறிகடிக்கு போயி எனுக்கு பழக்கெங் இல்லமா. உன் மாமியாகாரியுங் செய்ய மாட்டா.”

“அப்போ இன்னிக்கி செய்ய முடியாதா … மா?”

“நாளிக்கு செய்லாம் வுடு. நானே உன்ன கறிகடிக்கு கூட்னு போய் சொல்லி வுற்றேங். அப்போதான் நீ எப்ப கவாப்புக்குன்னு போட்டி வாங்க போனாலும் பாய் நல்லா கனமான போட்டியா எத்து குடுப்பாரு.”

“செரி நாளிக்கு செய்லாங். இப்போ எப்டி செய்ணோன்னு ஒண்டி சொல்லுமா. எங்க அத்த செஞ்ச மாரியே டேஸ்ட்டா இருக்கணுங். அதுமாரி சொல்லு.”

“அயியோ தோ நீ … ன்னா அத்த அத்தன்னு அவுத்துகிறியே, ன்னாதான் நல்ல செலுவு மசாலாலாங் போட்டு செஞ்சாலுங் டேஸ்ட்டா வருதுலாங் ஒரொருத்தரு கைப்பக்குவங். தெர்தா …”

ரெஜினா வாய் திறக்கவில்லை. “ம்” என்று சத்தம் மட்டும் வந்தது.

“உங்க மாமியாகாரி சோத்துக் கட போட்டாபாரு அதுக்கு நாந்தான் எல்லா எடுப்பு வேலயும் செய்வேங். அவ கூடவே இர்ந்து எல்லா கத்துகினேங். இன்னிக்கி வரிக்கும் அவ செய்றதுல பாதி டேஸ்ட்டுகூட எங் வூட்டு சட்டில இல்லன்னு எங் வூட்டுகாரங் சொல்லுவாங். இதுக்கு இன்னான்ற?”

சிரித்து முடித்ததும் “நீங்க எப்பியுங் அவங்க கூடவே இருப்பீங்களா?” என்றாள்.

“ஆமா துட்டு வசூலுக்கு, புகாரில பிரியாணி துன்றதுக்கு, கோயிலுக்குன்னு எல்லாத்துக்குங் கிளியாம்பாக்கு எங் தொண வோணுங். எந்தோள் மேல கைய அழுத்தித்தாங் நடப்பா … அயோ அவ வெய்ட்டுக்கு ஒரு பக்கம் அப்டியே வுட்டுப்போய்டுங் எனுக்கு … தோ அப்பகூட அவகிட்ட ம்ங்னு ஒரு வார்த்த முணுங்ன்துல்ல நானு” தூரத்திலிருந்து டாட்டா காட்டுவது போலச் செய்தாள் நகோமியம்மா.

“அவ்ளுக்கு நா இந்தாதாங் வேலியே ஆவுங், ஆனா என்னால ஒரு வேலியுங் அவ்ளுக்கு ஆவாது. செரி அத வுடு. நாளிக்கு கறிகடிக்கு எங் கூட வா. கிளியாம்பா மருமவன்னு சொல்றேங். பாய் நல்லா தண்டுக்கொடலா பாத்து தருவாரு, ன்னா?”

“செரிமா.”

நகோமியம்மா வீட்டுப் பக்கம் திரும்பினாள். அவள் விடுகிறவளாய் இல்லை.

“எம்மோவ், எப்டி செய்ணுன்னு சொல்ட்டு போ …”

“ஏன்டி சுடுகாட்டுக்குப் பொணமாவா போறேங் தோ இரு.

வந்துர்றேங்.”

கணவனை ஒரு எட்டுப் பார்த்துவிட்டுப் பழைய இடத்திற்கே பழைய தோரணையிலேயே வந்தமர்ந்தாள். வீட்டு வாசலில் உட்கார்ந்த ரெஜினா இம்மி நகரவில்லை.

என்ன கேட்டாளென்று தெரியும். ஆனால் ஞாபகம் தவறியது போல தனக்கு விஷயம் தெரிந்த ஆதிக்கத்தைச் செலுத்தும் பொருட்டாக …

“ன்னா கேட்ட?” என்றாள்.

“கவாப்பு எப்டி செய்ணோன்னுமா …”

“ஆங். அப்டி கேளு. போட்டி வாங்கினு வரியா … அத வாங்கினு வந்த ஒண்ணோ கிளீன் பண்ணுங். சிலும்ப மாரிக்ரதெல்லாங் சுட்தண்ணி போட்டு அல்சி கத்தில வர்ட்டு வர்ட்டுன்னு வர்ட்டுனா நல்லா கிளீன் ஆய்டுங்.”

“எதுக்கு?”

“இதே கேள்வியதான் ஒருவாட்டி கிளியாம்பா பக்கத்துல ஒக்காந்து நா கேட்டேன்; ‘மாடு இன்னான்த்த துன்னு இருக்குமோ. அந்த அய்க்கிலாம் தவ்ளோ தவ்ளோ பூச்சியா மாறி கொச்சகொச்சன்னு இருக்குன்டி. கத்தில சொரண்டுனா அதுலாம் வெளிய ஓடி போட்டி பள்ச்சின்னு வெள்ளியா மாறிடுங். கொஞ்சங் சொரண்டி குடேன்டி நாகம்மான்னு கேப்பா. படக்குன்னு வாங்கி செய்வேங். ஆனா வேல ஆவாது. ப்தூ. தொடய விரிக்கதான்டி நீ லாக்கின்னுவா’ கோய்ச்சிகினு ஏன்ச்சிப்பேங். போட்டத போட்ட கையோட வுட்டு ஓடியாருவா எங் பின்னால.”

”அப்றங்?”

“அப்புறங் ன்னா, எனுக்குன்னா அவ மேல கோவம் நான் ஒடின்யுங் பேசிடுவேங்.”

“அய்ய அது இல்லம்மா, போட்டிய சொரண்டன்துக்கு அப்புறங் ன்னா பண்ணுங்?”

“காரியக்காரிதாங் நீ. கேளு … போட்டிய கைல எத்து இப்டி புச்சுப்பா” - நகோமியம்மா அருகிலிருந்த அடுப்பூதும் ஊதாங்குழலை எக்கிக் கையில் எடுத்து உதாரணத்திற்கு செய்து காண்பித்தாள்.

“கொடல் மேல நைசா தோல்போல ஒண்ணு வருங். அத அப்டியே உரிச்சி எத்து கீல போட்டுட்டு வெரல வுட்டு கொடல ரெண்டா கீக்கிணுங். எத்தினி வாட்டி உன்னால கழுவ முடியுமோ அத்தினி வாட்டி நல்லா கழுவணுங்.

கிளியாம்பா கழுவ கழுவ தி … ருப்தியே பட மாட்டா பாரு … அப்டி கழுவுனா உள்ளக்ற கசுடு கிசுடுலாம் ஓடியாந்துருங்'' - ஊதாங்குழலை கீழே வைத்தவளின் வாயும், வாயில் வரும் விஷயங்களுக்கு ஏற்பக் கைகளும் பேசின.

''உங்க மாமியாக்காரி மதியானமா போட்ட சோத்துக் கடய ஏறக்கட்டிட்டு இந்த வேலய ஒரு மூணு மணிப் போலத்தாங் ஆரம்பிப்பா … கேளு. போட்டியே அப்டியே ஆவிபோட்டு வேவ வுடனுங். ஆவிகூட போடத் தேவல்ல. கொஞ்சம் தண்ணி ஊத்தி மூடி வெச்சாலே அது தண்ணி வுட்டு நல்லா வேவுங். கல்லுப்புபோட்டு இன்னும் நல்லா வேவ வெக்கணுங். அது வெந்து ஆவி பறக்க எறக்குன அப்றங் நல்லா ஆற வெக்கணுங். ஆற வெச்சி உனுக்கு வேணுன்ற மாறி சைசுல பொடிபொடிசா வெட்ணுங். ஆனா கிளியாம்பா வூட்டுக்காரனும் சரி உன் வூட்டுக்காரனும் சரி கருங்க ஜல்லி சைசுலதான் கறி துன்னுவானுங்கோ.''

ரெஜினா சிரித்தாள்.

அவள் சிரித்த இடைவெளியில் பண்பட்ட பேச்சாளரைப் போல அமைதி காத்து சிரித்து முடித்ததும் தொடர்ந்தாள் நகோமியம்மா.

''கேளு. வெட்டுன்த உப்பு, மொளகாத் தூளு, மஞ்சாத்தூளு, கேசிரி பவ்டரு, இதுலாம் போட்டு நல்லா பெர்ட்டு பெர்ட்டு பெர்ட்டனுங்'' - நகோமியம்மாவின் கை செய்கைகளைப் பார்த்து மறுபடியும் சிரித்தாள்.

''ன்னா சிரிக்கிற தெபார். பெரட்டுறப்போ தண்ணி கிண்ணி ஊத்தக் கூடாது. நல்லா பெர்ட்டி ரெண்டு மூணு மணி அவுரு ஊற வெக்கணும். அப்றமா போட்டி பெரட்டுன கடாய அடுப்பு மேல வெச்சி நல்ல அனல் வெச்சுட்டு கொழுப்பக் கொட்டி கூட கொஞ்சம் எண்ண ஊத்தணுங்.''

''எதுக்குமா கொழுப்பு?''

'நல்லா கேட்ட போ. அவ்ளோ எண்ண கடில வாங்குனா நம்ளுக்கு கட்டுபடியாவுமா? போதாக்கொறைக்கு எண்ண நெறியா ஊத்துனா ஆண்டு வராது. போட்டி

வாங்றப்பவே கொழுப்பு கொஞ்சம் குடு பாய்னு கேட்டா வெண்ணக்கட்டி மாறி குடுப்பாரு. எனுக்குனா கொஞ்சம் நெறியா குடுப்பாரு. கேளு. கடாய்ல கொழுப்பும், எண்ணயும் எளுகி வரவர அடுப்புலக்ற கட்டயல்லாம் எத்து வெளிய வெச்சிடு. தவ்ளோ அனல்ல நல்லா மொறுமொறுன்னு சத்தங் வர்ற அளுவுக்கு நல்லா பெர்ட்டனுங். இதுலாம் கிளியாம்பா பக்கத்துல இருந்து நா பாத்துது. மூணு மணிக்கு ஆரம்பிச்சா பொறுமையா அஞ்சு மணிக்கு முடிப்பா. வாசன புச்சிதுமே வந்து வாங்க ஆரம்பிச்சுடுவாங்கோ. ஒர அடிக்கிறவனுங்களுக்கு நல்லா தொட்டுக்க அது. பத்து பிசா குத்தா ஒரு துண்டு பேப்பர்ல கவாப்பு கீழ வுழுற அளவுக்கு போட்டு குடுப்பா. கவாப்பு வேல ஒரு அடுப்புல முடிஞ்சிதும் அனல்ல அத அப்டியே வுட்டுட்டு இன்னொரு அடுப்புல கட்லீஸ் கற்கல் வர்த்த மீனுக்குலாம் வேல நடக்குங்."

"நாளிக்கு எப்போ வர்றோன்னுக்துமா."

"சொம்புல கொஞ்சம் தண்ணி குடு" என்றாள் நகோமியம்மா.

தண்ணீர் குடித்து முடித்ததும் "துணி ஊறவெஸ்ட்டு வந்துக்றேங். தொவ்ச்சிட்டு வரேங்" என்று சொல்லிவிட்டு புட்டத்தைத் தட்டி எழுந்தரிக்க நகோமியம்மாவை பின்தொடர்ந்து அவளுடனே நடந்து "மோவ், எங்கத்த அவ்ளோ லோல் பட்டா செத்துச்சு?" அடுத்ததாக இந்தக் கேள்வியைக் கேட்க வேண்டுமென ராத்திரியே தயார்செய்துவிட்டவளாதலால், குரலில் சோகம் இழையக் கேட்க முடியவில்லை.

"ஆமா ஏன் கேக்ற" திரும்பாமலே நகோமியம்மா தன் வீட்டிற்குச் சென்றாள்.

"இ … ல்ல கல்யாணம் ஆன அன்னிக்கி நைட்டு இது சொல்லி அவ்ளோ அழ்திச்சிமா."

"யாரு, உம் புருஷனா அழ்தாங். நடிகர் திலகமாச்சே அவந்தாங்" - தரையிலிருந்த ஊர்வசி சோப்பைக் காண்பித்து "யே … ங் கேக்குற" என்று ராகம் இழுத்து "அத எத்து பிர்ச்சி வை" என்றாள் நகோமியம்மா. பக்கெட் நீரில் நனைந்து உப்பியிருந்த துணிகளை இரு கைகளால் அமிழ்த்தினாள். உட்கார்ந்து உட்கார்ந்து

வழவழப்பாகிப்போன தன் அபிமான மணைக்கட்டையைக் கொண்டுவந்து வாசலுக்கு வெளியே போட்டு அதில் அமர்ந்தாள்.

“இந்தாமா.”

“அந்த கொட்த்துல கொழாத் தண்ணி இருக்குது பாரு அத எத்துனு வந்து இப்டி ஓரமா வை. கொழாத் தண்ணில அல்சுனாதாங் அழுக்குப் போவுங்” என்று தலையை பின்னால் திருப்பாமல் கையை மட்டும் திருப்பி ஒரு ரத்தச் சிவப்பு குடம் நின்றிருக்கும் திசையைக் காட்டினாள். குடத்தின் கழுத்துப் பகுதியில் ‘தேவனுக்கே மகிமை’ என்று சந்தன வண்ணத்தில் எழுதியிருந்தது.

சொன்ன இடத்தில் குடத்தை வைத்துவிட்டு “சொல்லுமா எப்டிமா செத்தாங்க அவ்ங்கோ” - பக்கத்தில் உட்கார்ந்துகொண்டாள் ரெஜினா.

எதிர் வீட்டுப் பெண் கையிலிருந்த கொழம்புச் சட்டியை ஆரத்தி எடுப்பது போல ஒரு சுற்று சுற்றி அதிலிருந்த தண்ணீரைக் கீழே ஊற்றிவிட்டுக் கேட்டாள் “ன்னா நாகம்மா ராத்திரிலந்து ஒரே கிளியாம்பக்கா பேச்சா இருக்குதே?”

“காத எங்க வூட்ல கயிட்டி வெஸ்ட்டே நீ அங்க ஒக்காருடி ஓல்வாங்கி.”

“தே நீ ன்னாமே சில்த்துக்கிற …”

நகோமியம்மா சிரித்தாள். “புது பொண்ணுடி, அவங்க மாமியாகாரியப் பத்தி ஆசியா கேக்குறா நான் சொல்லாம யார் சொல்வா?”

“உங்ளால தாண்டி எவ்வாய் கெட்டுப்போது யேசப்பா என்ன மன்ச்சிரு.”

ரெஜினா உதடு பிரியாமல் சிரித்தாள்.

“செர்தாங். இன்னிக்கி மதியானங் அம்மாவாச ஜெபக் கூட்டம்க்து மற்ந்துறாதே” - எதிர்வீட்டுப் பெண் உள்ளே சென்றுவிட்டாள்.

“அயியோ ஆமா” என்று குரலமிழச் சொல்லித் துணியை அவசரமாகத் துவைத்தாள் நகோமியம்மா.

“மோவ் சொல்லு … மா”

“அ … தியேங் கேக்குற. கேளு கதய …” ராகத்துடன் கதை ஆரம்பமாகியது …

“கிளியாம்பா மன்சுக்கு அவ்ளுக்லா நல்ல சாவு வந்துருக்ணுங். ன்னா பண்றது? ஊர் சாப்ன.”

ப்ரஷ் போடுவதை நிறுத்திவிட்டு மெதுவாகச் சொன்னாள்: “அநியாய வட்டி வாங்குனாளே … யேசப்பா உடுவாரா …

ஆனா ஒன்னுமா எனுக்கின்னா மன்சு கேக்லன்னா சாவுறதுக்குக் கொஞ்ச வருசம் முன்னாடி ராம்ரு தோட்த்துக்கே சோறு போட்டுவ கடிசி ஒரு மாசங் தொண்டில தண்ணி கூட எற்ங்காத செத்தாப் பாரு. அதெ நென்ச்சாதாங் எனுக்கு ஆந்து ஆந்து போது.”

துணி துவைப்பதை நிறுத்திவிட்டு “எம்மா உள்ள சொம்பு இருக்குங் மலாய் நெறியா போட்டு குஞ்சாங் கடில சிங்கள் டீ வாங்கினு வாயேங்.”

இருவரும் டீ குடித்துக்கொண்டே …

“அப்டி இன்னாமா ஆச்சி, சாப்பாடு எறங்காத அளுவுக்கு?”

“நல்லா கேட்டப் போ, உங்க மாமியாகாரிக்கு எப்பப் பாரு வாய்ல பொய்லதாம் பார். பொடி பொய்ல வெத்துலபாக்குன்னு எப்பப் பார் வாய சொதசொதன்னு வெச்சுனுர்ப்பா. ஒருநாள் என்ன கூப்ட்டு ‘எது துன்னாலும் மண்ணு மாரிக்து நாகம்மா, ஒருண்ட முய்ங்க முடில ஜல்லாஸ்பித்திரிக்கு வாய’ன்னு சொன்னா. பாடுங்கோ எங்கள நடயா நடக்க வெச்சிட்டு சொன்னானுங்கோ தொண்டில புத்துநோய்னு. அதுக்குள்ள ஆளே பாதி போய்ட்டா. கடிசி மூணு மாசம் அவ இர்ந்த நெலம தோ இந்த எதிர் வூட்டுகாரிக்குகூட வரக் கூடாதுமா. பூத மாறி இருந்தவள பீ மூத்திரம் வாருதுக்கு எங் ரெண்டு கையால அலுக்கா தூக்கி அப்டி வெப்பேங்.” நகோமியம்மாவின் கண்கள் நீர்கட்டியிருந்தன.

“ஏங் எங்க மாம்னாரு, தோ இதுலாங் ன்னா பண்ணிந் தாங்கோ?”

உடனே வேறு பாவத்துக்கு மாறி சினங்கொண்டு சொன்னாள், ‘‘யாரு இந்தப் பொட்டய்ங்ளா. கிளியாம்பா எதுனா ஆக்கி வெச்சா வந்து வய்சி வய்சி துன்ட்டு போவானுங்களே கண்டி அவள இன்னா ஏதுன்னு பாத்தானுங்களா. கொஞ்ச நாளிக்கு நான்தாங் இவனுங்ளுக்கு சோறு ஆக்கிப்போட்டுன்தேங். எம்பேர சொல்லி, என் மடியிலதாம்மா உயிர வுட்டா கிளியாம்பா’’ - நகோமியம்மாவின் குரலில் திரும்பவும் சோகம் ஒட்டியது. தாவாங்கட்டையைக் கையினால் முட்டுக்கொடுத்து இமையசையாமல் நகோமியம்மாவையே பார்த்துக்கொண்டிருந்தாள் ரெஜினா. பக்கெட்டில் பெரிய முட்டைபோல உப்பியிருந்த துணியை அழுத்தி நீருக்குள் தள்ளினாள் நகோமியம்மா.

~

கிளியாம்பாளுக்கும் சிங்கப்பூரானுக்குமிடையே துளிர்த்த காதலால் ஊர் ரெண்டுபட்டு நடந்த அவர்களின் கல்யாணக் கதையை நகோமியம்மா ரெஜினாவுக்கு சொன்னாள். கிளியாம்பாளின் தைரியத்தைக் கேட்டு பிரம்மித்துப் போனாள் ரெஜினா. அதிலிருந்து தன் மாமியார் மீதிருந்த ஆசையும், மரியாதையும் பல மடங்காகக் கூடியது. பொழுது போகவில்லையென்றால் கிளியாம்பாளை அசை போடுவதே இருவருக்கும் வேலையாய் இருந்ததால் மாமியாரைப் பற்றிய ஒரு கெட்டியான உருவம் அவளுக்குள் குடியமர்ந்தது. கிளியாம்பாளைப் பற்றி குணசீலனுக்கே தெரியாத விஷயத்தை எல்லாம் அவனிடம் சொல்லி அமர்க்களப்படுத்தினாள். நாளடைவில் ரெஜினாவின் நடை, உடை, அணிகலன், பாவனைகளில் கிளியாம்பாளின் சாயல் வர ஆரம்பித்தது. அடுத்தவர் கண்டுணரும் அளவுக்கு இல்லையென்றாலும் அந்த மாற்றத்தை அவளால் உணர முடிந்தது. தன்னுடைய அபிலாஷைக்கு உட்பட்டுத்தான் அது நடப்பதால் தனக்குள் நிகழ்வதை எண்ணி அவள் அந்தரங்கமாகப் பெருமிதம் கொண்டாள். நாட்கள் கடந்தன. அவள் மூன்று மாத கர்ப்பிணியாய் இருந்த ஒரு மத்தியான வேளையில் தெருவே வெறிச்சோடியிருந்தது. ‘ஒரு கைதியின் டைரி’

படத்தின் ஷூட்டிங் ராஜாஜி ஹாலில் நடந்துகொண்டிருந்ததால் தவழும் குழந்தையிலிருந்து கிழடுக் கட்டைகள் வரை எல்லோரும் கமல்ஹாசனைப் பார்ப்பதற்கு ராஜாஜி ஹாலில் முகாமிட்டிருந்தார்கள். கமல்ஹாசனைப் பார்ப்பதற்கு அவ்வளவொன்றும் வாஞ்சையில்லை. இதே பாக்யராஜ் வந்திருக்கிறார் எனத் தெரியவந்தால் ஆள்பிடி இல்லாமல் முதன்முறை சைக்கிள் ஓட்டும் பரவச முகத்துடன் ஓடிப்போய்ப் பார்த்திருப்பாள். அதுவும் ‘மௌன கீதங்கள்’ படத்தைப் பார்த்ததற்குப் பிறகு பாக்யராஜின் மீதான ஆசை அதிகமாகியிருந்தது. நகோமியம்மாள் அழைத்ததற்கு ‘நாவ்வர்ல போய்ட்டுவாமா’ என்றாள்.

“ஆமா நீயுங் இதுவாக்ற. வீட்லய இரு” என்றாள் நகோமியம்மா.

தனித்திருந்தாள். சந்தைமயமாய் இருக்கும் தெருவில் கல்லறை அமைதி குடிகொண்டிருந்தது. வெளியே எட்டிப் பார்த்தாள்.

மணி ஒன்றரை இருக்கும். வீட்டை சாத்திவிட்டுத் தெரு முனையிலுள்ள செட்டியார் கடையில் நாலணாவை நீட்டி …

“வெத்தல, கள்ளிப்பாக்கெ, நீட்டுப்பொய்ல, சுண்ணாம்பு இதுலா குடு செட்டியார்” என்றாள்.

“யாருக்குமா?”

“இன்னிக்கி வெள்ளிக்கெழமல எங்க மாமியார் படத்துக்கு படிக்கிறதுக்கு.”

“என்னைக்கும் இல்லாத திருநாளா என்ன இன்னைக்கு?”

“குடு செட்டியார் … நீ வேற.”

அவள் கேட்டவற்றைக் கொடுத்துவிட்டு மீதியைக் கொடுப்பதற்கு செட்டியார் கல்லாப்பெட்டியை தடவி நிமிர்கையில் அவள் அங்கில்லை.

வீட்டுக்கு வந்து கதவைச் சாத்திக்கொண்டாள். நீட்டுப் புகையிலையை வாயில் போட அது காரல் எடுத்ததும் உடல் சிலிர்க்கக் கண்களை மூடிக்கொண்டு சில நிமிடங்கள் சகித்து மென்றவள் கையிலிருந்த

வெத்தலையையும் அதற்கேற்ற அளவு தெரியாமல் சுண்ணாம்பையும் சேர்த்து வாயைச் சொதப்பியதனால் எரிச்சல் எடுத்தது. தொடர்ந்து மென்றாள். இடையில் கள்ளிப்பாக்கையும் வாயில் போட்டு கடுக் மொடுக் என்றாள். நாக்கைக் கடித்துக்கொண்டதுபோல் ஒரு வலியுணர்வு. ஆனாலும் எச்சிலைத் துப்பவில்லை. கண்ணாடியைச் சுவரிலிருந்து எடுத்து வெளிச்சம் கசியும் இடத்தில் கண்ணாடியைப் பார்த்து வெற்றிலையை மென்றாள். கண்ணாடியில் பட்டுத் தெறித்த சூரிய ஒளியின் பிம்பம் அவள் மீது வெள்ளி நீராகத் தளும்பியது. கண்கள் கூச உதடும் நாக்கும் ரத்தச் சிவப்பாய் மாறியதைப் பார்த்து அவள் முகம் பூரித்தது. நாக்கை நீட்டி கண்ணாடியில் பார்க்கும்போது வெற்றிலைச் சாறு அவள் வாயோரத்தில் கசிந்தது. நன்றாகச் சிவக்கிறதா என்று பார்த்துப் பார்த்துச் சுவைத்தாள். சாறு வாயை நிறைத்ததும் கண்ணாடியைப் பின்னால் மறைத்து யாரும் இருக்கிறார்களா என்று வெளியே எட்டிப் பார்த்து நீருள்ள ஜோத்தாலையுடன் வாசலுக்கு வந்து மணல் படர்ந்திருக்கும் இடத்தில் ‘ப்புள்ச்’ என்று வெற்றிலைச் சாறை உமிழ்ந்து வாய் கொப்பளித்துவிட்டு உள்ளே சென்றாள்.

வாயெரிச்சல் குறையவில்லை. வாயில் உப்புச்சுவையையும் உணர்ந்ததும் ஏதோ அசம்பாவிதம் என்று முகக் கண்ணாடியில் நாக்கை நீட்டி வலியின் ஆதாரம் எங்கே என்று இடமும் வலமும் பார்க்க, நாக்கின் வலது ஓரத்தில் கடுகளவு கிள்ளியெடுத்தது போல இருந்தது. சுண்ணாம்புக் காரமும், நாக்குக் கடியால் பிறந்த வலியும் கண்ணாடிக்கு முன் “உபு உபு” என்று ஊதி அவளை மூச்சுவிட வைத்தது.

வெயிலை அசட்டை செய்து வாசலில் குத்துக்காலிட்டுச் சாமான்களை விரவி, வலிக்கு நிவாரணியாக நாக்கைத் தொங்கப்

போட்டு உள்ளிழுத்து, தொங்கப்போட்டு உள்ளிழுத்து சாமான் தேய்த்துக்கொண்டிருந்தாள். தெருவில் நடமாட்டம் தொடங்கியது. நாக்கை வெளி நீட்டாமல் வாயடக்கத்துடன் வேலை செய்தாள்.

நகோமியாம்மா வேகவேகமாக வந்து அவளிடம் சொன்னாள், “ரெஜினா வராம பொய்ட்டியே, எவ்ளோ கிட்ட பாத்தெங்தெர்மா. கமலு ரோஸ் கலர்லக்ரான்டி.” அவள் உதட்டைப் பார்த்த நகோமியம்மாவின் முகத்தில் பரவசம் அஸ்தமனமானது.

“ஏய், ஆ காட்டு” என்று கூனடித்து ரெஜினாவைப் பார்த்தாள்.

“வெத்தல பாக்கு போட்னுக்றியா?”

“வாய் ஒரு மாரின்ச்சி ஒரே ஒரு வெத்தல வாங்கி போட்டம்மா” - பாவபேதத்துடன் சொன்னாள்.

“ஏங், வாய் ஒரு மாரின்ச்சினா செட்டியார் கடில ஆல்பொகடா பழங் ஒண்ணு வாங்கி வாய்ல போட்டுக்க வேண்டித்தான?”

” … … …”

“உங்கத்த இத போட்டுபோட்டுதாங் வாரிக்கினு போனா.”

” … … …”

“நல்லாதாண்டி இந்தே. ன்னா கேடு உனுக்கு. ன்னொருவாட்டி போட்ட அப்றங் நல்லா அர்த்தமா கேப்பேங் உன்ன.”

“மோவ் … உனுக்கின்னா. உன் வேலிய பாத்துனு போயேங். ன்னமோ சில்த்துக்கிறெ?” - உட்கார்ந்திருந்தவள் எழுந்து சபீனா கையை நகோம்மியம்மாவின் முகத்தருகே கொண்டுபோய் ஆவேசப்பட்டாள். எதிர் வீட்டுப் பெண்ணும், இவர்களைத் தாண்டிப் போய்க்கொண்டிருந்த ஒரு இளைஞனும் சுவாரசியமாக ஏதேனும் நடக்குமென்று தரையில் ஆழமாகக் கால் பதித்தார்கள்.

நகோமியம்மாவுக்கு பக்கென்றது. எதிர்த்துப் பேச முடியாதவள் அல்ல நகோமியம்மா. கடந்த மூன்று மாதத்தில் புருஷனிடம் எப்படி நடந்துகொள்ள வேண்டும், தெருவாசிகள் யார் யார் எப்படிப்பட்டவர்கள், நீக்குப் போக்காக அவர்களுடன் நடக்கும் விதம், சமையற் கலை, பணத்தை மிச்சம் பிடிப்பது, சின்ன

மாமியாருடன் அனுசரித்துப் போவது என்று வாழ்க்கையின் நெளிவு சுளிவுகளனைத்தையும் குறுகிய காலத்தில் அவளுக்குக் கற்பித்தவள் நகோமியம்மா. குரலெழாத பூனைக்குட்டியைப்போல் சுற்றி வந்தவள் இன்று தெரு வாசலில் மற்றவர் முன்னிலையில் கை நீட்டிப் பேசுகிறாள். என்ன காரணமாய் இருக்கும்? நகோமியம்மாவுக்கு யோசனையாய் இருந்தது. அந்த யோசனை நொடிநேரம் நீடிக்காதபடி ஒருவேளை குணசீலனுடன் தனக்கு உறவு இருந்ததென்று யாராவது இவளிடம் காது கடித்திருக்கலாம். செட்டியார் சொல்லியிருப்பாரா? எதெப்படியோ எதிர்க்குரல் கொடுத்தால் இவள் அம்பலப்படுத்திவிடுவாள் என்று நினைத்த நகோமியம்மா, “இனிமே உங்கிட்ட வந்தா ச்சீ‘ன்னு” என்று சொல்லிவிட்டு வீட்டுக்குள் சென்று கதவை வேகமாக அடைத்தாள். அவள் போனதும் ரெஜினா நாக்கை வெளியே தொங்கச் செய்து மூச்சு விட்டதும், எதிர்வீட்டுப்பெண் விசித்திரமாகப் பார்த்தாள்.

இருவருக்குமிடையேயான விரிசலில் பிறந்த அசௌகரியத்தால் வீட்டிலிருந்து வெளி வராமல் உள்ளேயே முடங்கியிருந்தாள் ரெஜினா. குணசீலன் வேலையிலிருந்து வரும்வரை வாசப்படியிலேயே உட்கார்ந்திருப்பவள் இரண்டு நாட்களாக வீட்டினுள்ளேயே இருந்தாள். நகோமியம்மாவுக்கும் அவளுக்குமிடையே பேச்சுவார்த்தை, முகதாட்சண்யம் என எதுவுமில்லாமலாகிவிட்டது. அவளாக வந்து பேசட்டும் என நினைத்த நகோமியம்மாவுக்கு ஒருபுறம் மனம் ஒப்பவில்லை. “புள்ளதாச்சி பொண்ணு நாளிக்கு நம்ளா போய் பேசில்லாங்” என்று நினைத்திருந்த அன்று, சாயுங்காலம் மணி ஏழு இருக்கும். ராமர் தோட்டத்துத் தெரு முனையிலுள்ள ட்யூப் லைட் மரணத் தறுவாயில் எரிந்துகொண்டிருந்தது. அந்தச் சோம்பல் வெளிச்சத்தின் கீழ் சதுரமான ஒரு மரப்பலகையைப் போட்டு அதன்மீது ‘கேக்தூள், ஏர்போர்ட் ஜாம், க்ரீம், ஸ்வீட்பன்’ ஆகியவற்றை பொருள் வாரியாக பிரித்து எவர்சில்வர் தட்டில் வைத்து விற்றுக்கொண்டிருக்கும் முத்தமாயா ஈக்களுடன் நடத்திய வாடிக்கைப் போராட்டத்தை கொசுக்களுடன் தொடர்ந்தாள். கையசவை நிறுத்திவிட்டு வட்டமாக நின்று கொக்காலங்கா குருவிலங்கா பாடி

வட்டமடித்த சிறுவர் சிறுமிகளைப் பார்த்து “எம்ன ஓத்துதுங்களே எத்தினி வாட்டி சொல்றது அப்டி போய் வெளாடுங்கலேங்” என்று கடையை விட்டு சற்றுத் தள்ளி விளையாடச் சொல்லித் திட்டினாள். சட்டை போடாத ஒரு முரட்டுச் சிறுவன் பதிலுக்கு முத்தமாயாவைத் திட்டினான். அவள் அருகிலிருந்த கல்லை எக்கி எடுத்து அவனை அடித்தாள். அது அவன்மீது படாததால் அவன் முத்தமாயா பக்கம் திரும்பி இரண்டு கையையும் விரித்து நடனமாடி விட்டு ஓடினான்.

நகோமியம்மாவின் வீட்டு வாசலில் எதிர் வீட்டுப் பெண் உட்பட மூன்று பேர் அளவளாவியபடி இருந்தார்கள். அவர்களைத் தாண்டி ஒரு நாய் இன்னொரு நாயின் பின்புறத்தை முகர்ந்து மடி குலுங்க கூவாறு நோக்கி ஓடிக்கொண்டிருந்தது. அதைப் பார்த்த பெண்களுள் ஒருத்தி ரகசியமாக ஏதோ சொல்லக் கூட்டுச் சிரிப்பு ஒலித்தது. நாய்களுக்கு எதிரே வந்த ரிக்ஷாக்காரர் தன் வண்டியை அரவணைப்புடன் தள்ளியவாறு போனார். தெரு இவ்விதமாய் இருக்கும் சூழலில் எல்லோரையும் இருந்த இடத்தில் உறைய வைத்தது ஒரு குரல். “ஏ நாகம்மா ஏ நாகம்மா” என்று ஊளை செய்தது அக்குரல். “ஏ நாகம்மா ஏ நாகம்மா” எனத் தொடர்ந்து கேட்டுக்கொண்டே இருந்தது. ஒரு ஏ நாகம்மாவுக்கும் இன்னொரு ஏ நாகம்மாவுக்கும் சீரான இடைவெளியுடன் அக்குரல் ஓங்காரமிட்டது. சத்தம் வரும் திசையை அறிந்தவர்கள் குணசீலனின் வீட்டைப் பார்த்த கண்ணோடு நகோமியம்மா இதற்கு எப்படி எதிர்ச் செயலாற்றுகிறாள் என்று சமயோசிதமாக வேடிக்கை பார்த்தனர். ரெஜினா தீ வைத்துக்கொண்டிருக்கிறாள் என்கிற அனுமானத்துடன் ஒரு வாலிபன் பக்கெட் நீர் தளும்ப நின்றிருந்தான்.

“ரெஜினா, ரெஜினாம்மா’ என்று கதவைத் தட்டினாள் நகோமியம்மா. முத்தமாயா கடையை அம்போவென விட்டு வந்து இடுப்பில் கை வைத்தவாறு பார்வையைக் கூர்மைப்படுத்த கண்களைச் சுருக்கி நின்றாள். வீட்டு வாசலுக்கு முன் சூழ்ந்திருந்த கூட்டத்தைக் காக்க வைக்காமல் கதவைத் திறந்த வேகத்தில் ரெஜினா ஓடி வந்து நகோமியம்மாவைக் கட்டிப்பிடித்தாள். “எங்கிட்டே

பேசமாட்டியா நாகம்மா?'' என்று அவள் தோளைக் குலுக்கி அழுதவுடன் நகோமியாம்மாவின் முகம் இன்னும் கலவரமடைந்தது. ''கிளியாம்பா ஏறினுகிறா'' என்று அவளைப் பார்த்துச் சுட்டிக்காட்டிவிட்டு முத்தமாயா அலட்சியமாக அங்கிருந்து விலகி வியாபாரத்தை கவனிக்கச் சென்றுவிட்டது.

அவளை அணைத்து மறுபடியும் வீட்டுக்குள் கிட்டத்தட்ட தூக்கிச்சென்றாள் நகோமியம்மா. குழுமியிருந்த சிறார்களை எதிர் வீட்டுப் பெண்மணி ''ஏய் போங்க ன்னா வேடிக்க'' என்று காகங்களைக் கைகளால் துரத்துவது போல் விரட்டிவிட்டாள். பெரியவர்களுக்கும் உறைக்கும் விதமாகச் சொன்னதால் அவர்களும் மனமில்லாமல் கலைந்தனர்.

''என்னத் தொடாதீங்கோ, என்னத் தொடாதீங்கோ. நாகம்மா மேலந்து கைய எடு நா கம்னுகிறேங். அழ மாட்டேங் அழ மாட்டேங்'' என்றாள். நகோமியம்மாவும், எதிர் வீட்டுப் பெண்மணியும் அவள் மீது பற்றியிருந்த கரங்களைத் தளர்த்தினர். விட்டதும், குளிரில் நடுங்குவதுபோல் வீட்டின் ஒரு மூலையில் அமர்ந்து உடலை வலுக்கட்டாயமாக உதறினாள். நகோமியம்மா எதிர் வீட்டுப் பெண்மணியிடம் ஒரு சொம்புத் தண்ணீரில் ஜெப எண்ணையை விட்டுக் கலந்துகொண்டு வருமாறு செய்கை செய்தாள். நகோமியம்மா ஜெப எண்ணெய் கலக்கப்பட்ட சொம்புடன் அவள் அருகில் செல்ல அவள் வேகமாக எழுந்தாள். குத்துச்சண்டை வீரர்கள் வலைக்குள் வலம் வருவதுபோல நகோமியம்மா சொம்புடனும் ரெஜினா வெறுங்கையிலும் வட்டமிட்டனர்.

நகோமியம்மாவின் சொற்களை அவள் பொருட்படுத்தவில்லை. நகோமியம்மா அவளை தைரியமாக நெருங்கிப் போக, திடீரென அவள் அங்கேயே அமர்ந்து சம்மணங்காலிட்டு 'வாக்மேனில்' பாட்டுக் கேட்பது போல ஏதேதோ முணுமுணுப்புச் செய்தாள். ஜெப எண்ணையைத் தொட்டு நெற்றியில் ''இயேசுவின் ரத்தம்'' எனச் சொல்லி சிலுவை போட்டதும் ''ஏ நாகம்மா எதுக்கிடி என்னத் தொட்ட'' என்று நெற்றி நரம்புகள் தடிக்கக் கூச்சலிட்டாள்.

வீட்டு வாசலில் மறுபடியும் கூட்டம் கூடியது. இருவரையும் இடித்துத் தள்ளிவிட்டு அவள் வெளியில் வந்தாள். சிறிய வீடு என்பதால் வெளியே போவதும் உள்ளே வருவதும் நொடியாய் நடந்தது.

வெளியே வந்தவள் காது குடைகையில் உண்டாகும் சுகபாவனையைப் போல முகத்தை மாற்றிக் கண்களை மூடி உடம்பை உதறினாள். மறுபடியும் கூச்சல். தெருவே நின்று வேடிக்கை பார்த்தது. யாராவது நெருங்கி வந்து அவளைத் தொட்டால், தொட முயன்றால் ஆக்ரோஷம் உச்சம் அடைந்தது. ஒரு பெரிய வன மிருகம் காரத்தைத் தின்றுவிட்டு உறுமுவது போலச் சத்தம்.

தொப்பென்று கீழே விழுந்து அமர்ந்தவள், "எனுக்கு பொய்ல வேணுங் ... பொய்ல வேணுங்" என்று அழுதழுது சோர்ந்த பின்னும் சோகத்தை விட்டுக்கொடுக்காமல் அரற்றுவது மாதிரி அரற்றினாள்.

நகோமியம்மாவுடன் துணைக்கு இன்னும் இரண்டு பேர் சேர்ந்து அவளை அலேக்காகத் தூக்க முற்பட்டார்கள். உடல் திமிறுகையில் ரெஜினாவின் மாராப்பு கீழே சரிந்தது. ஒரு கையில் சரி செய்து மறுகையில் நகோமியம்மா அவளைத் தூக்கினாள். திமிறாட்டம் குறையவில்லை. போராட்டத்தில் வென்று அவர்களிடமிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு பற்களை நரநரவென்று கடித்து அவர்கள் மீது காரி உமிழ்ந்தாள். பாதங்களைத் தொட்டு நிற்கும் தன் புடவை முனையை குனிந்தெடுத்து முழங்காலுக்கு மேலே தூக்கி "துட்ட குடுங்கடி இல்லாட்டி வந்து நாக்போடுங்கடி வாங்கடி" என்று வேடிக்கை பார்த்தவர்களை நோக்கித் தூக்கிக் காண்பித்தாள். பொதுவாகக் காறி உமிழ்ந்தாள். மறைவில் நின்றிருந்த ஒரு ஆடவன் பதுங்கி வருவதுபோல வந்து அவளைத் தூக்கி வீட்டுக்குள் கொண்டுபோய்ப் போட்டு வெளியே வந்தான். இதுதான் நேரமென்று நகோமியம்மா கதவைத் தாழ்ப்பாள் போட்டு மூச்சு வாங்கக் கதவருகிலேயே நின்றாள்.

கதவு வெடிப்பது போலத் தட்டும் சத்தம். "ஏ நாகம்மா நீயும் அவளுங்கூட சேந்துனுக்றியா தொர கதுவ இல்ல உன் கூதி முடிய கொள்த்தி போட்ருவேங்" நகோமியம்மா மூச்சுவிடவில்லை. எதாவது செய்து கொள்வாளோ

என்கிற பீதி நகோமியம்மாவை இன்னும் துயரப்படுத்தியது. “தொற கதுவ தொற கதுவ” கதவு வெடித்துக்கொண்டே இருந்தது. “வ்வூஊஊஊஊஊஊஊ” என்று கூச்சல். திடீரென்று அமைதி. “வ்வூஊஊஊஊஊஊஊ” அமைதி.

சில நிமிடங்களுக்கு எதுவுமே இல்லை. நகோமியம்மா பதறிப் போய் ஜன்னல் கதவை மிதமாகத் திறந்து பார்த்தாள். சாணி மொழுகுவது போலத் தரையைத் தடவிக்கொண்டிருந்தாள். ஒருவன் சைக்கிளில் போய் சிங்கப்பூரானைக் கூட்டி வந்தான்.

ரெஜினாவின் சின்ன மாமியாரும் வந்தாள். அவர்களின் எதிர்வினை என்னவாக இருக்குமென்று கூட்டம் ஆர்வப்பட்டது. விஷயத்தைக் கேள்விப்பட்டதும் சிங்கப்பூரான் நகோமியம்மாவைத் திட்டினார். “ங்கோத்தா என் பொண்டாட்டியுங் இவதான் நாஸ்னம் பண்ணா எம்மருவளையுங் பண்ட்டா” என்று நகோமியம்மாவை அடிக்கப் பாய்ந்தார். நியாயஸ்தர்கள் மடக்கி விட்டார்கள். அவரைத் தொடர்ந்து, அவருக்கு ஒத்திசைந்து சின்ன மாமியாரும் நகோமியம்மாவைத் திட்டினாள். தோட்டத்துக்காரர்கள் யாரும் நகோமியம்மாவை விட்டுக் கொடுக்கவில்லை.

“தே ஒரு மருமவ புது எட்துல வந்துகிறா, புள்ளதாச்சாருக்கிறா இதுவெரிக்குங் அவள இன்னா ஏதுன்னு வந்து பாக்கோ உனுக்கு பவுசி இல்ல. ன்னாமோ சூத்த ஆட்டி ஆட்டிப் பேசுற இப்ப வந்து” கடையை ஏறக்கட்டிவிட்டு வந்த முத்தமாயா நகோமியம்மாவுக்கு பரிந்துப் பேசினாள்.

“ஏம்ப்பா, ன்னா பொம்பிளிய அடிக்க எகுற்ற, குண்சீல் மூஞ்ச பாத்தாங் உர்றங் வ்வுன்ன. போப்பா கம்னு’ - சிங்கப்பூரானின் முகத்தைக் குத்துவது போல கையைக் கொண்டுபோய் எச்சரித்த ஓர் இளைஞன், எச்சரித்துவிட்டுக் கையை அசைக்காமல் தலையை அசைத்து அவரைப் போகச் சொன்னான்.

ஏற்கனவே அச்சத்தால் துவண்டிருந்த நகோமியம்மா சிங்கப்பூரான் அடிக்க வந்ததால் மனம் நடுங்கிப்போனாள்.

கூட்டத்தை இன்னும் ருசிப்படுத்தும் விதமாக குணசீலன் சந்துக்குள் நுழைந்தான். அவன் வரும் வழியிலேயே அவன் சித்தி “டேய் குண்சீல், உம் பொண்டாட்டிமேல கிளியாம்பக்கா ஏறினுகிதுடா … ன்னா வோணுன்னு போய் கேளுடா” என்று நாடக பாணியில் பேசினாள். குணசீலன் அவளைப் பொருட்படுத்தாது சைக்கிளை மிதவேகமாக ஒட்டியபடியே நகோமியம்மாளிடம் போய் விசாரித்தான். நகோமியம்மா எதுவும் பேசவில்லை. குணசீலன் முகத்தில் எந்தச் சலனமும் பயமும் இல்லை. அவள் அப்படியெல்லாம் செய்பவள் இல்லை. அவனுக்கு நன்றாகத் தெரியும்.

போய்ப் பேசலாம் என்று கதவைத் திறந்தான்.

“ஏ … ன்னாமே ஆச்சி உனுக்கு?”

உட்கார்ந்திருந்தவள் தலை நிமிரவே இல்லை. குத்துக்காலிட்டு அவள் முகத்தைக் கையில் ஏந்திக் கேட்டான். அவன் தொட்ட மாத்திரத்தில் திரும்பவும் அதே கூச்சல். குளிரில் நடுங்குவது போல உடல்மொழி. “பீ மூத்திரங் அள்ள ஆள் இல்லாம லோல் பட்னு இந்தனே, வந்து தொட்டியா?” தோள்களை உலுக்கி மிகத் தெளிவாகக் கேட்டாள். கேட்டுவிட்டு அழுதாள். உடனே அழுகையை நிறுத்தி “நாகம்மாவ கூப்டு, நீ வெளிய போ”.

குணசீலன் இன்னொரு முறை அவளைத் தொட முயற்சி செய்யவில்லை. அவளருகிலேயே சிலையாகச் சமைந்து நின்றான்.

சிங்கப்பூரானும், சின்ன மாமியாரும் வீட்டுக்குள் நுழைந்தார்கள்.

சின்ன மாமியார் ரெஜினாவின் தோளைத் தொட்டு உரிமைக் குரலுடன் “ஏய் ன்னா உனுக்கு. ஒண்ணுல்ல. இங்க பாரு தண்ணி குடிக்கிறியா?”

சின்ன மாமியார் தொட்டதும் பார்வையை வேறு பக்கம் திருப்பி தூரத்தில் ஒலிபரப்பாகும் பாடலைக் காதைக் குவித்துக் கேட்பது மாதிரியான முகபாவனை செய்தாள். சில நிமிடங்கள் அந்த பாவனையிலேயே இருந்தாள். சின்ன மாமியார் திரும்பவும் தொட்டாள். “ஏய்

ஓல்வாங்கி … ச்சீ மேலந்து கைய எடு. அப்றந் நல்லா அர்த்தமா கேப்பேங்'' பற்களால் கிடுகிடுவென்று ஓசை எழுப்ப சின்ன மாமியார் பயந்து விலகி நின்றாள். இதைப் பார்த்த பிறகு சிங்கப்பூரான் தன் பங்குக்கு எந்த முயற்சியும் எடுக்கவில்லை. உட்கார்ந்த வாக்கிலேயே தலை தரையைத் தொடும் விதமாக உடலை வளைத்துப் படுத்தாள். சின்ன மாமியார் குணசீலனின் காதருகே சென்று, "மாங்காளியம்மா கோய்லாண்ட பூசாரி இருப்பாரு. நீ போய் யார்கிட்டனா மோட்று வண்டி வாங்கினுவா போலாங்'' என்றாள்.

"ஆங் போலாம் போலாங்'' என்றாள் ரெஜினா.

குணசீலன் சொற்ப நேரத்தில் வண்டியுடன் வந்தான். ரெஜினாவின் அருகே போய் அவளைத் தொட முற்படுகையில் திட்டவட்டமாகச் சொன்னாள் "குண்சீலா, என்ன எங்க வோணா கூட்னு போ. ஆனா யாருங் என்ன தொடக் கூடாது'' இரு கைகளையும் பறப்பது போல விரித்துக் காட்டிச் சொன்னாள். அவளாகவே எழுந்து கொண்டை போட்டுத் தயாராகி வெளியே வந்தாள். வண்டியில் சின்ன மாமியார் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து "அயயோ இவ கூட நான் வர மாட்டேங்'' என்று குமட்டுவது போலச் செய்து வேகமாக வீட்டுக்குள் ஓடினாள். அவள் செய்வதையெல்லாம் பார்க்க குணசீலனின் கண்களிலிருந்து நீர் விழுவதற்குத் தயாராக இருந்தது.

அழுகையையும், கோபத்தையும் அடக்கிக்கொண்டு வீட்டிற்குள் சென்று அவளைத் தொடாமல் திரும்பவும் கெஞ்சி அழைத்தான். "அவ கிற வண்டில நான் ஏற மாட்டங். எங்கூட நாகம்மாவ வர் சொல்லு.''

நான் தயாராகிவிட்டேன் என்பதற்கு சமிக்ஞையாக மீன்பாடிக்காரர் வண்டியை முறுக்க நகோமியம்மா, குணசீலன், ரெஜினா மூவரும் சென்றார்கள். சக பயணிகள் யாரையும் தொடாமல் வண்டியின் பக்கவாட்டுப் பலகையினைக்கூட உறுதுணையாகக் கொள்ளாமல் வைராக்கியத்துடன் உட்கார்ந்து பயணம் செய்தாள். மூவரும் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ளவில்லை. மாங்காளியம்மன் கோயிலுக்கு ஐந்து நிமிடத்தில் சென்றார்கள். அங்கே பூசாரி தரிசனம் கிட்டாததால்

அங்கிருந்த ஒரு பக்தரிடம் விஷயத்தைச் சொன்னதும் அவர் வழிகாட்டுதலின் பேரில் வண்டி கெயிட்டி திரையரங்கின் முதுகுப் பக்கமிருக்கும் பச்சையம்மன் கோயிலுக்குச் சென்றது. பூசாரி இருக்கிறார் என்று குணசீலன் சொன்னதும் நகோமியம்மாவும், ரெஜினாவும் கீழே இறங்கினார்கள். அவளைத் தாங்கிப் பிடிப்பதற்காக நகோமியம்மா அவளைத் தொட்டதும் பற்களால் கிடுகிடு. "தெபார் நாகம்மா நீ மட்டுந்தாங் தொண்ணுங்" - நகோமியம்மாளின் பிடிமானத்துடன் நடந்து வந்தாள்.

பூசாரி குள்ளமாக இருந்தார். மேல்சட்டை இல்லாமல் உடல் முழுக்கப் பட்டை பட்டையாக விபூதி, சிகப்பு நிற டவுசர், ஜடாமுடி என்று பூசாரி பிரமாதமாக இருந்தார். கோயிலுக்குப் பின்னால் அழைத்து வரச் சொல்லி சைகை காட்டிவிட்டு உடுக்கையுடன் பேயோட்டும் இடத்திற்கு வந்தார். சிமென்டால் மெழுகப்பட்ட விஸ்தாரமான தரை. நகோமியம்மா ரெஜினாவைப் பிடித்து நின்றிருந்தாள். குணசீலன் சற்றுத் தள்ளி நின்றிருந்தான். ஒரு கையில் உடுக்கையும் மறு கையில் விபூதியுமாக அவள் முன்னால் வீற்றிருந்த பூசாரி பக்தி மணத்தை சுவாசிப்பதுபோல மூச்சை நன்றாக இழுத்து விட்டார். அவள் அருகில் சென்றார் ... காலொடிந்த பறவையொன்று நின்ற இடத்திலேயே நொண்டுவது போலப் பூசாரி தாவ ஆரம்பித்தார். உடம்பு உதற ஒரு வட்டம் சுற்றினார்.

"ம்மா யார்மா நீ?"

அவள் குனிந்த தலை நிமிரவில்லை.

"எதுனா காவு கேக்கிறியா? "

திரும்பவும் மௌனம்.

இதொரு சாத்வீகமான பேய் என்கிற நினைப்புடனும் அதனால் கிடைத்த முனைப்புடனும் கையிலிருந்த விபூதியை அவள் மீது அடித்தார். அவள் குனிந்திருந்ததால் உச்சந்தலையின் மீது தூசிபோல் படர்ந்தது விபூதி. தன் கையில் ஒட்டியிருந்த மீதி விபூதியை அவள் நெற்றியில் இடுவதற்காக "ஆத்தா மகமாயி அடியார்க்கு உபகாரி" என்கிற மந்திரத்தை குரலுதற மிதமாக ஆரம்பித்து அவள் நெற்றியில் அவர் கட்டை விரலை வைத்ததுதான் தாமதம் "நீ யார்ரா பாடு

மேல கை வெக்கிற” என்று ஓங்காரமாக பூசாரியை உதைக்க அவரின் மர்ம ஸ்தானத்தில் உதைபட்டு விடவே காற்றில் அடித்துச்செல்வது போலப் பூசாரி இரண்டடி பின்னால் சென்று விசித்திரக் கோலத்தில் நின்றார்.

~

நகோமியம்மாவின் அறிவுறுத்தலின்படி மீன்பாடிவண்டிக்காரர் கலவைச் செட்டி தெருவில் இருக்கும் மருத்துவர் காளமேகம் வீட்டிற்கு வண்டியை ஓட்டினார். மணி பத்து ஆகியிருந்தது. போகும் வழியில் அவள் யாருடனும் பேசவில்லை. வாயிலிருந்து எச்சில் கோழை கோழையாக வர உதட்டைப் பிதுக்கி அவளாகவே அதை வெளியேற்றுவது போல இருந்தது. மருத்துவரின் வீட்டு வாசலில் வண்டி நின்றதும் நகோமியம்மா வண்டியிலிருந்து கீழே இறங்கி “டாக்டர் டாக்டர்” என்று குரல் கொடுத்தாள். பால்கனியிலிருந்து வந்து எட்டிப் பார்த்த மருத்துவரின் மனைவி சொன்னாள் “ஏம்மா காலிங்பெல் இருக்கே ஏன் கீழ நின்னு இப்படி கத்தற?”

நகோமியம்மா எதுவும் சொல்லவில்லை. “டாக்டர கொஞ்சம் கீழ வரச் சொல்லுங்கம்மா அர்ஜென்ட்டு” என்றான் குணசீலன்.

கீழிறங்கி வந்து ரெஜினாவைப் பார்த்த மருத்துவர் காளமேகத்திற்கு அவளைத் தொட வேண்டும் போலிருந்தது. “என்ன ஆச்சு அவங்களுக்கு?” என்று தொடுவதற்கு முனைந்த டாக்டரிடம் பூசாரிக்கு நேர்ந்த துர்சம்பவத்தை நகோமியம்மா சொன்னாள். “ஓ! ஐ ஸீ” என்று மாடிக்குச் சென்றுவந்தார்.

நகோமியம்மாள் சொன்னதும், தண்ணீர் இல்லாமல் தூக்க மாத்திரையை விழுங்கியவளுக்குத் தூக்கமே வரவில்லை. நகோமியம்மா ராத்திரி அவளுடனே படுத்துக்கொண்டாள். குணசீலன் வாசலில் பாய் போட்டு படுத்து மாட்டுக் கொம்பு வடிவத்தில் இருந்த நிலவை உற்றுப் பார்த்தான். தன் அம்மாவுக்குக் கடைசிக் காலத்தில் செய்த அவமரியாதையை நினைத்து வருந்தினான்.

~

நகோமியம்மா எவ்வளவு கெஞ்சியும் ரெஜினாவின் உடல் தூங்குவதற்குச் சரியாமல் சுவரில் சாய்ந்தமர்ந்திருந்தது. உதடு திறக்கவில்லை என்றாலும் 'ர்ர்ர்ர்' 'ர்ர்ர்ர்' என்கிற சத்தம் அவளிடமிருந்து கேட்டுக்கொண்டே இருந்தது. கண்களில் தூக்கம் கனக்க நகோமியம்மா உறங்கிவிட்டாள். பாதித் தூக்கத்தில் திடுக்கிட்டு எழுந்து பார்த்தபோது ரெஜினா வெறும் வாயை நெடுநேரம் மென்று கொண்டிருந்தாள். நகோமியம்மாவுக்குக் கண்கள் கலங்கிவிட்டன. வயிற்றில் இருக்கும் பிள்ளையின் கதியை நினைக்கையில் 'இவகிட்ட கிளியாம்பாவப் பத்தி சொல்லிர்க்கவே கூடாது' என்று கையைக் கொண்டு தலையில் மெதுவாக அடித்துக்கொண்டாள். அவளருகில் சென்று "ரெஜினாமா ... ரெஜினாமா ... இங்க பாருமா" என்றாள். எதற்கும் பதிலில்லை. மனித ஜீவராசிகளிடம் இனி நான் பேசத் தயாரில்லை என்பது போல முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டாள்.

விடியற்காலையில் சிங்கப்பூரானும் குணசீலனின் தம்பி ஜெயசீலனும் வீட்டுக்கு வந்தார்கள். குணசீலன் வெறும் ஜட்டியோடு வாசலோரத்தில் அன்னக்கூடையில் இருந்த தண்ணீரை மொண்டு குளித்துக்கொண்டிருந்தான். ஜெயசீலன் கதவை மெல்லமாகத் திறந்து உள்ளே எட்டிப் பார்த்தான். நகோமியம்மா உட்கார்ந்திருந்த நிலையிலேயே தூங்கிக்கொண்டிருக்க அவள் மடியில் தலை வைத்து இரு கைகளையும் தொடையிடுக்கில் ஒளித்து வைத்து ஆழ்ந்த உறக்கத்திலிருந்தாள் ரெஜினா!

சிங்கப்பூரான் "குண்சீல் இது ஒங்கம்மாதாங். அவோ புடிவாதக்காரி அவ்ளோ சீக்கிரம் போவ மாட்டா. கோவல்த்துல எனக்கு தெரிஞ்ச பாய் ஒருத்தருக்றாரு. ன்னா சொல்ற கூட்னு போலாமா?"

முகத்தில் இருந்த சோப்பு நுரையைக் கையில் வழித்தெடுத்து ஒற்றைக் கண்ணில் குணசீலன் சொன்னான் "அவ்ங்கம்மாவையும் ஒரு வார்த்த கேக்க வாணாவா?"

"அதுக்கு ன்னாடா தெரியப்போது?"

“அதுலாங் ஒரு வார்த்த சொல்லிக்கிர்து நல்லதுதாங்” - ஜெயசீலன்.

“வாஸ்தவங்” என்றார் சிங்கப்பூரான்.

சின்ன மாமியார், வீட்டிற்குள் நுழைந்து ரெஜினா தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் தைரிய உத்தமியாகத் தேநீர் போட உத்தேசப்பட்டாள். முழிப்பு தட்டிய நகோமியம்மா மிக லாகவமாகத் தன்னிலிருந்து அவளைப் பிரித்து, வீட்டிற்குச் செல்ல முற்பட, “காபி குஸ்ட்டு போ …” என்று பேருக்காக விருந்தோம்பினாள் சின்ன மாமியார்.

நால்வரும் வாசலில் அமர்ந்து கறுப்புக் காப்பி குடித்துக்கொண்டிருக்கையில் சின்ன மாமியார் சொன்னாள்: “குண்சீலா, பெரிய பாளியத்துக்கு கூட்னு போலாங்ன்டா … எங்கூட்டாண்ட விஜியாக்றாளே அவ தல்ச்ச பொண்ணு இப்டிதாங் அடாவடி பண்ணிந்தா. மூன் நாளு பெரிய பாளியத்துல கூட்னு போய் வெச்சாங்கோ … கெழுங்குமாரி வந்தா பார்.”

“அதுலாம் வேலிக்காவாது. கோவ்லங் தர்காதாங் கரெட்டு” - சிங்கப்பூரான்.

ஜெயசீலன் - “எப்போவ், கம்னு இரு ஒன்னியும் பெர்ச்சன இல்ல. அண்ணி இப்போ தூங்கியேந்து ன்னா பண்துன்னு பாக்லாங். எப்பியும் போலன்ச்சினா கம்னு உட்டுல்லாங்.”

குணசீலன் தடுத்ததையும் மீறிச் சின்ன மாமியார் துடுக்காக அவளை எழுப்புவதற்கு உள்ளே சென்றாள். இவர்கள் பேசுவதைக் கேட்டுக்கொண்டிருந்த நகோமியம்மா, “இன்னும் கொன்னேரந் தூங்கட்டுங். ராத்திரிலாங் அது தூங்கவே இல்ல” என்றாள்.

“எங்க வூட்டு விசியத்துக்கு நீ எதுக்கு வர்ற?” என்றாள் சின்ன மாமியார்.

ரெஜினாவை தட்டித் தட்டி எழுப்பினாலும் அவளிடம் எந்த அசைவும் இல்லை.

சத்தமில்லாமல் குறட்டை மட்டும் விட்டுக்கொண்டிருந்தாள். குணசீலன், ஜெயசீலன், நகோமியம்மா, சிங்கப்பூரான் நால்வரும் வீட்டுக்குள்

வந்து அவளைச் சுற்றி நின்றார்கள். சின்ன மாமியார் அவள் முகத்தில் 'பள்ச் பள்ச்' என்று தண்ணீரை விளாசினாள். இமைச் சிறகுகளைப் படபடவென்று அடித்துக் கண்களைத் திறந்தவள் சுற்றி நின்றவர்களை ஒரு சுற்று பார்த்து எழுந்து உட்கார்ந்து புட்டத்தைத் தரையில் தேய்த்துத் தேய்த்து சுவர் மூலையில் போய் உட்கார்ந்தாள். சின்ன மாமியார் அவளருகே சென்று "ரெஜினாமா காபி குடிக்கிறியா" என்று கேட்டதும், எக்கி அவள் கூந்தலை இறுகப் பிடித்து தன்வசம் இழுத்து "உன்ன இந்த வூட்டுள்ள வர வேணான்னு சொல்லிகிறேல்ல. ஏங் வந்த?" என்றாள். சின்ன மாமியார் அலற குணசீலன் ஓடி வந்து ரெஜினாவை ஒரு உதை உதைத்தான். உதை வாங்கிய வேகத்தில் கீழே சாய்ந்ததில் ரெஜினாவின் கை சின்ன மாமியாரின் கூந்தலுக்கு சுதந்திரம் கொடுத்தது. சின்ன மாமியாரும் அவளைச் சரமாரியாக அறைந்தாள். நகோமியம்மாவும், சிங்கப்பூரானும் வந்து இருவரையும் மடக்கினார்கள். ரெஜினா கொடுத்த ஊளையில் ஆட்கள் ஒவ்வொருவராக அவர்கள் வீட்டை முற்றுகையிட ஆரம்பித்திருந்தார்கள்.

சிங்கப்பூரானின் பிடியிலிருந்து விலகி சுவரோரத்தில் இருந்தவளை இன்னொரு உதை உதைத்தான் குணசீலன். அவனை மடக்கி வாசலில் நிறுத்தினான் ஜெயசீலன். நால்வரும் அவரவர் இடத்திலிருந்து மூச்சு வாங்க அவளையே பார்த்தார்கள். யாரும் எதிர்பார்க்காத வகையில் தன் பக்கத்தில் கவிழ்த்தி இருந்த போன்சட்டியைக் கையில் எடுத்து உட்கார்ந்த நிலையிலேயே குணசீலனின் மீது எறிந்தாள். அவன் விலகிக் கொள்ளவே போன்சட்டி வாசலுக்கு வெளியே போய் விழுந்தது. "டேய் பாடு நாகம்மாகூட பத்தவந்தான நீ? வெக்கங்கெட்ட பாடு. எம்மேலயே கைய வெக்கிறியா?" எழுந்து கொண்டையைப் போட்டுக்கொண்டு வெறிமுகத்துடன் அவனை நோக்கி ஓடி வந்தாள். சின்ன மாமியார் பயந்து விலகி நிற்க நகோமியம்மா தன் பலம் கொண்டு அவளைக் கட்டிப் பிடித்தாள். அவளை சுவர் ஓரத்திற்கு அழைத்துச் சென்று சொன்னாள்: "தெபார் கிளியாம்பா என் பேச்ச கேப்பியா கேக்மாட்டியா?"

“ஏ நாகம்மா போ போய் பொய்ல வாங்கினுவா.”

“தோ போய் வாங்கினு வரேங். நீ கம்னு ஒக்காரு.”

“ஒரு சொம்புல தண்ணி குடு. கொஞ்சம் சாப்பாடு போடு. பசியெடுக்குது.” நகோமியம்மா ஒரு கணம் திகைத்துவிட்டாள். அவள் உடல்மொழி, அதிகாரத் தோரணை, குரல் எல்லாவற்றிலும் கிளியாம்பாவாகவே மாறிவிட்டிருந்தாள். அவள் மூச்சு விடும் ஆவேசத்தைப் பார்ப்பதற்கே பயந்துபோன நகோமியம்மா, “தோ வரேங் இரு” என்று வாசலுக்கு வெளியே வந்து ஓசைப்படமால் கதவைச் சாத்தினாள். குணசீலன் சொன்னான், “நேத்தவுட இன்னிக்கு ஓவரா பண்ணுங் போலக்கிதே.”

“கோவல்த்துக்கு கூட்னு போறதுதாங் செரி” - சிங்கப்பூரான்.

“அங்கலாங் வாணாங் துலுக்கனுங்க சாங்கியங் நம்ளுக்கு எதுக்கு. பெரிய பாளியத்துக்கே கூட்னுபோலாங். இது அங்கதாங் அடங்கும்” - சின்ன மாமியார்.

‘வயித்துல வேற ஒன்ன வெச்சினு கீது. இங்க அங்கன்னு சுத்த வெச்சிந்தா புள்ள நிக்காம போய்டபோது. அதுலாம் எங்கியுவ் வாணா. எங்க பாஸ்டரய்யா கிட்ட கூட்னு போறேங். இன்னாமாரி இதுவாந்தாலுங் அவ்ரு ஜெபத்துல ஓட்டுவாரு’ என்று குணசீலனின் - முகத்தை - கண்களைப் பார்த்துச் சொன்னாள். நெடுநாட்களுக்குப் பிறகு அவனை இப்படி நேருக்கு நேராக நகோமியம்மா பார்த்துப் பேசியதும் குணசீலனுக்குள் சிறு சலனம் வந்து மறைந்தது. அவன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டான்.

சின்ன மாமியார் சொன்னாள், “தே, நாங்க பாத்துக்றோங். நீ போ. சும்மா வந்துடுவே. ஏங் அவ்ளியும் கூட்னு போய் அல்லேலூயால சேத்து வுட்றுதுக்கா?”

“தெபார் சித்தா, நீ வன்ட்டு எதுனா மூத்திவுட்டு கம்னு போய்டுவ, இதாங் கூடந்து பாத்துக்க போவுது. நீ கெளும்பு நாங்க பாத்துக்கிறோங்.” நகோமியம்மாவின்

விருப்பப்படி சிகிச்சைக்கு ரெஜினா தயார்ப்படுத்தப்பட்டாள்.

நகோமியம்மாவும், எதிர் வீட்டுப் பெண்மணியும் அவளைக் குளிக்க வைப்பதற்கு கதவைச் சாத்தினார்கள். இனி எந்தெந்த நிந்தனைகளுக்கு உள்ளாகப்போகிறோம் என்று குணசீலன் சந்திரிகா பீடியின் துணையுடன் கவலைகளை வட்டவட்டமாக வாசலில் நின்று வெளியேற்றிக்கொண்டிருந்தான்.

வெகுநேரம் குளிப்பாட்டினார்கள். “உன்னுந் தேய் உன்னுங் நல்லா தேய்” என்று ரெஜினா மும்முரமாகச் சொல்ல நகோமியம்மா சோப்பைப் போட்டுத் தேய்க்கத் தேய்க்க எதிர் வீட்டுப் பெண்மணி நீரூற்றினாள். கெட்டியான உடம்பு. இருவரின் கைகளும் குடைச்சலெடுத்து ஓய்ந்து முடித்ததும் நிமிர்ந்து பெருமூச்சு விட்டார்கள். குளிக்க வைக்கப்பட்டதும் சிறிய விடுபடலை உணர்ந்த ரெஜினா மனைக் கட்டையில் உட்கார்ந்தபடியே தலையைப் பின்னால் திருப்பி இருவரின் முகத்தையும் பார்த்து “மஞ்சா தேச்சி குளிக்க வெய்ங்கோ” என்றாள். சொன்னதோடு உடம்பில் எந்தெந்த பாகத்திலெல்லாம் தேய்க்க வேண்டுமென அவளே கைகளினால் தேய்த்தும் காண்பித்தாள். இவளுக்குள் பேயா அல்லது பைத்தியம் பிடித்ததா என்ற குழப்பம் எதிர்வீட்டுப் பெண்ணின் முகத்தில் இருந்தது. நகோமியம்மாவைப் பார்த்தாள். “கிளியாம்பா மஞ்சா தேச்சி குளிப்பா” என்று நகோமியம்மா சைகை பேச, எதிர்வீட்டுப் பெண் அதே சைகையில் கேட்டாள் “இவ்ளுக்கு எப்டி தெரியுங் அது?” நகோமியம்மா அழாத குறையாய்ச் சொன்னாள், “சத்திமா நா சொல்லடி ...” ஒருவழியாக அவளைக் குளிப்பாட்டி, சாம்பிராணிப் புகையில் தலையுலர்த்தி குதிரைஜடை போட்டு வாயில் புடவையில் ஜோராக வெளியே கொண்டுவந்து நிறுத்தினார்கள். தெளிந்த முகம். ஆனால் கண்கள் மட்டும் நிலையில்லாமல் காற்றில் எதையோ தேடிக்கொண்டே இருந்தது.

நகோமியம்மா, குணசீலனையும் சபைக்கு அழைத்தாள். “தே அங்கெலாங் நா வர்ல போமே” எனச் சொல்லிவிட்டு உதட்டில் சுவைத்த பீடியை நன்றி கெட்டத்தனமாய்க்

காலில் போட்டு மிதித்து அவர்கள் மூவரும் போவதை வேடிக்கை பார்த்தான். அக்கம் பக்கத்தினரும் பார்த்தார்கள். எங்கு போகிறோம் என்கிற கேள்வியை ரெஜினா கேட்காமலில்லை. “ன்னா கிளியாம்பா நா எங்க கூட்னு போனாலுங் வர்மாட்டியா?” ரெஜினாவிடம் மறு பேச்சில்லை. நகோமியம்மாளின் ‘குபீர்’ புத்தி சுவாதினத்தை நினைத்து எதிர் வீட்டுப் பெண்மணி வாயை இறுக மூடிக்கொண்டு சிரித்தாள்.

இரண்டு சந்து கடந்து சபையிருக்கும் ராமர் தோட்டம் ஆறாவது சந்திற்குள் நுழைந்தார்கள். பெரும்பாலானோர்க்கு விஷயம் பரவியிருந்ததால் விசாரிப்புகளின்றி வேடிக்கை மட்டுமே பார்த்தார்கள். நகோமியம்மாவுக்கு அது சற்று நிம்மதி அளித்தது. சந்து முடியும் கடவாய்ப் பகுதியில் சபை இருந்தது. சபையும் குடிசை வேயப்பட்டதுதான் என்றாலும் மற்ற குடிசைகளோடு பார்க்கையில் அது கம்பீரமாக இருந்தது.

சபைக்குள் தான் கொண்டுபோகப்படுகிறோம் எனத் திட்டவட்டமாகத் தெரிந்ததும் ரெஜினா நடையில் தயக்கம் காண்பிக்க இருவரும் பிடியை இறுக்கினார்கள். ஆடு தலையைச் சிலுப்புவது போலச் செய்து அவர்களிடமிருந்து தப்பிக்க முயற்சித்தாள். அவர்கள் விடுவதாய் இல்லை. “ஊ ஊ ஊ ஊ …”

நீண்ட ஊளை. ரெஜினா திமிறினாள். முந்தானை சரிந்து கீழே விழுந்தது. வேடிக்கை பார்த்த ஒருவன் ரெஜினாவின் மார்பை இன்னும் தெளிவாகப் பார்க்க வாகான இடத்தை தேர்ந்தெடுக்க மெதுவாக இடம் பெயர்ந்தான்.

ஜெப வீட்டிலிருந்து ப்ரதர் எபினேசரும் இன்னொரு ப்ரதரும் வெளியே ஓடிவந்து நால்வருமாகச் சபையிருக்கும் முதல் மாடிக்குப் படிக்கட்டு வழியாக அவளை வேகமாகத் தூக்கி வந்தார்கள். ஊளை நின்றபாடில்லை. இம்முறை வித்தியாசமாக இருந்தது. கீ கீ என்று கிளிக் குரலிலும். ர்ர்ர் என்று கரகரப்பாகவும் இருந்தது. ஒரே தொண்டையில் இரண்டு குரல்கள். சபைக்குள் நுழைந்ததும் ஊளை மாற்றம் நிகழ்ந்ததை எண்ணி நகோமியம்மாவும், எதிர் வீட்டுப் பெண்மணியும் பீதியுற்றார்கள். ரெஜினாவின் திமிர்

அடங்கவில்லை. கை, கால்களைக் காற்றில் நீந்துவதற்கு உந்தினாள். சபையினுள் ஒருவரும் இல்லை. சபையின் கடைசி சுவரோரத்தில் ஒரே ஒரு பாய் ஆதரவின்றிப் படுத்திருந்தது. பாயின் மீது அவளைக் கொண்டுவந்து நிறுத்தினார்கள். பிடியை யாரும் தளர்த்தவில்லை. அவளாகவே தன் ஊளையின் வேகத்தைக் குறைத்துக்கொண்டு குரலின் சத்தத்தை உயர்த்தி வெற்றிடத்தை நோக்கிக் கத்தினாள்; "ஏ ஒல்வாங்கி நாகம்மா எதுக்குடி என்ன இங்க கூட்னு வந்தே. எம்மேலே கொல்லாபுரி அம்மா கீறா தெரியுல்ல உனுக்கு, ஏய் ஒல்வாங்கி நாகம்மா ..." தன் முழு சக்தியையும் திரட்டிக் கத்தியதால் நெற்றியில் ஒரு பச்சை நரம்பு ஓடி மறைந்தது. அவள் பின்புறம் நின்று கைகளைப் பிடித்த நகோமியம்மா பிடியை மட்டும் விடவில்லை, நகோமியம்மாவின் கண்கள் நீர் கோர்த்திருந்தன. திரும்பவும் "ஒல்வாங்கி நாகம்மா ..." என அவள் ஆரம்பிக்க, "ஏய் சாத்தானே பேசாமா இருக்க மாட்டா" என்று ப்ரதர் எபினேசர் அதட்டினார். "நீ யார்றா சிலோன்பொட்ட உன் மூஞ்ச பாத்துதேல்லியே" ரெஜினா அவரைக் காலால் எட்டி உதைக்க அவர் நகர்ந்துகொண்டார்.

எபினேசர் இன்னொரு ப்ரதரிடம் "பாஸ்டரய்யாவ கூட்டிட்டு வாங்க" என்றதும் ப்ரதர் ஓட வழியிலேயே பாஸ்டரய்யா படிக்கட்டிலிருந்து எழுந்தருளினார். பாஸ்டர் கால்சட்டை அணிந்திருக்கிறாரா, இல்லையா என்று சந்தேகிக்கக்கூடிய அளவுக்கு நீண்ட வெள்ளை அங்கி. சபையில் ஜெபக்கூட்டம் இல்லாத மற்ற நேரத்தில் அவரணியும் சுதந்திர ஆடையாக இருக்கலாம். சாப்பிட்ட மாமிசத் துண்டின் மிச்சத்தைச் சுண்டுவிரலால் எடுக்க முயற்சித்தபடியே சபையின் சுவற்றில் புதியதாய் எழுதப்பட்ட வசனங்களில் பிழையிருக்கிறதா என்று கவனித்து நடந்து வந்தார். ப்ரதர் அருகில் வந்து சொன்னார், "ரொம்ப அமுக்ளம் பண்துங்கய்யா" ப்ரதரின் பதற்றத்திற்கு மதிப்பளித்து நடையைத் தீவிரப்படுத்தி ரெஜினா குழுவினரிடையே பாஸ்டரய்யா சென்றதும் நகோமியம்மா பாஸ்டரிடம் சொன்னாள், "அய்யா நேத்து நைட்டு வந்து சொல்ட்டு போனேனே." பாஸ்டரய்யா தலையாட்டினார். ப்ரதர் தன் கையிலிருந்த பைபிளை

பாஸ்டரய்யாவிடம் கொடுத்ததும் அவர் ரெஜினாவுக்கு முன்னால் நின்று கண்களை மூடி இரு கரங்களையும் உயர்த்தினார். ஒரு கையில் பைபிள் இருந்தது. அவள் யாரையும் பொருட்படுத்தாமல் உறுமுவதில் கவனமாய் இருந்தாள். அவர் ஓரிரு நிமிடங்களில் கண்களைத் திறந்ததும் அவள் முகத்தருகில் சென்று மெதுவாக ‘‘ஏய்’’ என்றார். பிரம்மாண்டமான அவர் தோற்றத்தையும், இரும்புக் குரலையும் அவள் மதித்தாளில்லை. பார்வை எங்கோ பதிந்திருந்தது. இன்னொருமுறை ‘‘ஏ … ய்’’ என்று அவர் விடுத்த சத்தத்திற்கு அவள் உடலதிர்ந்து போனாள். எதிர் வீட்டுப் பெண்மணி கப்பென்று தன் மார்பைப் பிடித்துக்கொண்டாள். கூரைக்குள்ளிருந்த பல்லி பாஸ்டரய்யாவின் சத்தம் கேட்டதும் வெடுக்கென்று எட்டிப் பார்த்துப் பிறகு தலையைத் திருப்பாமல் இனி நடப்பதைக் கவனிக்கும் ஆர்வத்தில் இருந்தது.

அவர் ரெஜினாவின் தலையைப் பிடித்தார். அவர் கைக்கு ஏதுவாக அவள் இசைந்து போகவில்லை. தலையை அங்குமிங்குமாகத் திருப்பினாள். தலையை இன்னும் அழுத்திப் பிடித்தார். அவள் பற்களை இறுக்கிக் கடித்து உடம்பை முறுக்கினாள். யாரோ தனக்குக் காது குடைவதுபோல வான்நோக்கி பாவனை செய்தாள். அவள் முந்தானை நழுவியது. பாஸ்டரய்யாவுக்கு எதிரில் நின்றிருந்த இரண்டு ப்ரதர்களின் கண்களும் அனிச்சைச் செயல் புரிந்தன. நகோமியம்மா முந்தானையைச் சரிசெய்து அதை இறுக்கி ரெஜினாவின் இடுப்பில் சொருகினாள். அவள் கீழே விழும் பட்சத்தில் பிடிப்பதற்குத் தோதாக எதிர் வீட்டுப் பெண்மணியும், நகோமியம்மாவும் அவளுக்குப் பின்னால் பட்டும்படாமல் அவளைப் பிடித்தபடி தயார் நிலையில் இருந்தார்கள்.

பாஸ்டரய்யா கண்களை மூடி ‘‘என் ஜீவனுள்ள நல்ல தகப்பனே’’ என்றதும் ரெஜினாவின் இரு குரல் ஊளை ஆரம்பமானது. அவள் தலைமீது கைவைத்து சாதுவான குரலில் ஜெபிக்கலானார். ‘‘நாங்கள் ஆராதிக்கிற தேவனே … உன் ஜீவனைக் கொண்டு ஜெபிக்கிறோம் யேசப்பா … இந்த ஜாதி பிசாசு ஜெபத்தினாலும், உபவாசத்தினாலும்

ஒழிய எங்களை விட்டுப் போகாதென்று நாங்கள் அறிந்திருக்கிறோம் ராஜா. உன் நாமத்தினிமித்தம் ஜெபிக்கிறோம். என் நாமத்தினாலே எவைகளைக் கேட்பீர்களோ அவற்றைப் பெற்றுக்கொள்வீர்கள் என்ற வார்த்தையின்படி இந்த வாலிபப் பிள்ளையின் உடம்பில் இருக்கிற எல்லாப் பொல்லாத அந்தகாரக் கிரியைகளை (பாஸ்டரய்யா குரல் வேகமெடுத்தது) இயேசு கிறிஸ்துவின் உம் விலையேறப்பெற்ற நாமத்தினால் சபித்துக் கட்டுகிறோம் ராஜா. இந்த மகளை விட்டு இயேசுவினாலே இப்போதே போ. (ஊளை இன்னும் அதிகமானது.) இனி இந்த மகளைத் தொடுவதற்கு உனக்கு எந்த அதிகாரமும் இல்லை. இப்போதே போ சாத்தானே … இயேசுவின் நாமத்தினாலே நான் உனக்குக் கட்டளையிடுகிறேன்.” அவர் குரல் தாழ, அவள் காற்றில் நடுங்குவதுபோல் உடல் குறுக்கி இன்னும் ஊளையிட்டாள்.

பாஸ்டரய்யாவும் விடுவதாய் இல்லை. அதே வேகத்தில் ஜெபத்தைத் தொடந்தார் “யாக்கோபுக்கு எதிரான மந்திரமுமில்லை. இஸ்ரவேலுக்கு விரோதமான குறி சொல்லுதலுமில்லை என்று எண்ணாமகத்தில் சொல்லப்பட்ட இருபத்தி மூணாம் அதிகாரம் இருபத்தி மூணு வசனத்தின்படி உம்மை ஜெபிக்கிறோம் ஆண்டவரே. இந்த மகளுக்கு இப்பொழுதே உம்முடைய நாமத்தினிமித்தம் நாங்கள் கேட்கிறோம். பரிசுத்த ஆவியானவரே இதோ இப்பொழுதே இப்பொழுதே இப்பொழுதே இந்த ரெஜினாவின் மீது இறங்கி வாரும் ராஜா. இறங்கி வாரும் ராஜா! எல்லாப் பொல்லாத கிரியைகளிலிருந்து, பெலவீனங்களிலிருந்து இப்போதே இந்த மகள் கடந்து போகும்படியாய் உம்மைத் துதிக்கிறோம் ராஜா. விடுவிக்கிற என் தேவனாகிய கர்த்தரே … விடுதலையை நீர் கட்டளையிடுவீராக …” வேகத்தைக் குறைத்து ஒற்றைக் கண்ணில் பார்த்தார்.

மயக்க நிலையில் சாய்ந்திருந்தாள். அவர் ஒரு காலில் கீழே அமர்ந்து கண்களை மூடி ஜெபத்தைத் தொடர்ந்தார் … “எரேமியா முப்பத்தி மூணாம் அதிகாரம் ஆறாம் வசனத்தின்படி இதோ இவர்களுக்கு சௌக்கியமும் ஆரோக்கியமும் வரப்பண்ணி அவர்களை குணமாக்கி

பரிபூரண சமாதானத்தையும் சத்தியத்தையும் வெளிப்படுத்துவேன் என்று சொன்ன கர்த்தர் அப்படிப்பட்ட வாக்குத்தத்தத்தின்படியும் வசனத்தின்படியும் இம்மகளை குணமாக்குவீராக. இதோ கர்த்தருக்கு பயப்படுபவரின் மேல் நீதியின் சூரியன் உதிக்கும் என்று சொல்லி நாங்கள் பார்க்கிறோம். கர்த்தருக்குக் காத்திருக்கிறவர்களை நீங்கள் புது பெலன் அடைந்து கழுகுகளைப் போலச் செட்டைகளை அடித்து எழும்புவார்கள் அவர்கள் ஓடினாலும் இளைப்படையார்கள். நடந்தாலும் சோர்வடைய மாட்டார்கள் என்று சொன்ன வார்த்தைகளின்படி இந்த மகள் எழும்பிப் பிரகாசிக்கட்டும் ராஜா. ஏசாயா அறுபது ஒன்றின்படி எழும்பிப் பிரகாசி உன் வழி வந்தது என்று சொன்ன வார்த்தையின்படி இந்த மகள் எழும்பிப்பிரகாசிக்கட்டும் ராஜா. விடுதலை விடுதலை விடுதலை'' என்று முழங்கி முடித்த பாஸ்டரய்யா பிறந்த கன்றுக் குட்டி கண்களைத் திறப்பது போல மெதுவாக கண்களைத் திறந்து அவள் முகத்தைப் பார்த்தார். அவள் வாய் திறந்த நிலையில் அதே மயக்கம்.

தொண்டையைச் சரிசெய்து ப்ரதர் எபினேசரிடம் பாஸ்டரய்யா சைகை காட்டினார். அவர் ஓடிப்போய் ஒரு சொம்பில் தண்ணீர் கொண்டு வந்து கொடுக்கும் இடைவேளையில் நகோமியம்மவைப் பார்த்துச் சொன்னார், ''இந்தப் பொண்ணு மேல அசுத்த கிரியைதாம்மா இருந்திருக்கு இப்போ போயாச்சி கர்த்தருக்கு ஒரு அல்லேலூயா சொல்லுங்க'' என்றார். நகோமியம்மா, எதிர் வீட்டுப் பெண்மணி, ப்ரதர் மூவரும் ஒரே ஸ்ருதியில் ''அல்லேலூயா'' என்றனர்.

ப்ரதர் எபினேசர் சொம்புத் தண்ணியைக் கொண்டுவந்து கொடுத்ததும் பாஸ்டரய்யா கேட்டார், ''யேசு ரத்தம் கலந்து இருக்குல?''

''கலந்திருக்குங்கய்யா''

சொம்பிலிருந்த தண்ணீரை உள்ளங்கைகளில் ஊற்றி ரெஜினாவின் முகத்தில் அடித்து ... ''இயேசுவின் நாமத்தினாலே எழுந்திரு, இயேசுவின் நாமத்தினாலே எழுந்திரு'' என்றார். சவுக்கால் அடிப்பது போலச் சத்தம் கேட்டது. எப்போது எழுந்திருக்கலாம் எனத் தயாராக

இருந்த வேகத்தோடு அவள் கண்களைத் திறந்து வாயில் ஒழுகிய நீரைத் துடைத்துச் சுற்றியிருந்தோரைத் தயக்கத்துடன் பார்த்தாள். திரும்பவும் அவள் தலையில் கை வைத்து, "தேவன் உன்ன குணப்படுத்திட்டாரு நம்புறியா?" என்றார். அவள் பற்கள் தெரியாமல் சிரித்தாள்.

நகோமியம்மாவுக்கு இன்னும் முகம் கனியவில்லை. பாஸ்டரய்யா ரெஜினாவை எழுந்திருக்கச் சொல்லி அவள் தலையில் சொம்பு நீரினால் சிலுவையிட்டு முன்பு ஜெபம் செய்த குரலுக்கு முற்றிலும் வேறான கனிவுக் குரலில் ஜெபம் செய்யலானார். ரெஜினா உட்பட எல்லோரும் கண்களை மூடினார்கள். "என் பரலோக ராஜாவே இந்த மகளுக்கு இனிமேல் நல்ல பரிபூரணமான விடுதலையைக் கொடுங்க. சுகத்த கொடுங்க. சௌக்கியத்த கொடுங்க. ஆரோக்கியத்த கொடுங்க. மகளுக்கு வேண்டிய சந்தோஷத்தையும் சமாதானத்தையும் கொடுத்து ஆண்டவரே உமது விலையேறப் பெற்ற இரட்சிப்பை இந்த மகள் பெற்றுக்கொள்ளும்படி நான் ஜெபிக்கிறேன் ஆண்டவரே. இதோ ஆண்டவரே ஏசாயா ஐம்பொத்தன்பதாவது வசனம் ஒன்றின்படி இதோ இரட்சிக்கக்கூடாதபடிக்கு கர்த்தருடைய கை குறுகிப் போகவும் இல்லை. கேட்கக்கூடாதபடிக்கு உம்முடைய செவி மந்தமாகவுமில்லை என்று சொல்லிப் பார்க்கிறோம்" ஜெபத்தின் வேளையில் ரெஜினா ஏதாவது சில்மிஷம் செய்கிறாளா என்று நகோமியம்மா ஒரு கண்ணைத் திறந்து பார்த்தாள். எந்த இசைகேடான காரியமும் அவளிடம் இல்லை எனத் தெரிந்ததும் முகத்தில் நிம்மதி படர மறுபடியும் கண்களை மூடினாள் நகோமியம்மா.

"இதோ தேவனே … … நீர் இந்த ஜெபத்தை கேட்டுக் கொண்டிருக்கிறபடியால், உம்முடைய செவி கவனித்துக் கொண்டிருக்கிறபடியால் உமக்கு நன்றி செலுத்துகிறோம். நீர் காண்கிற தேவனாய் இருக்கிறபடியினாலே இந்த மகளை இந்த மன மகிழ்ச்சியான காலை வேளையில் உம் பரிசுத்த ஆவியை இறங்கச்செய்து அற்புத சுகத்தை நீர் தந்ததற்காய் உமக்கு நன்றி செலுத்துகிறோம் ராஜாவே. பரிபூரணமான சுகத்தை நீர் கொடுத்துவிட்டீர் என்று

விசுவாசிக்கிறோம். இதோ இனி இந்த மகள் போக்கிலும், வரத்திலும் காத்துக்கொள்ளும், பெலப்படுத்தும், வழி நடத்தும் துதி கணம் மகிமை யாவும் உம் ஒருவருக்கே செலுத்துகிறாம். இயேசு கிறிஸ்துவின் விலையேறப் பெற்ற நாமத்தில் எங்கள் ஜெபத்தை ஏறெடுங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே! ஆமென்".

எல்லோரும் கண்களைத் திறந்தார்கள். பாஸ்டரய்யா அவள் தலையிலிருந்து கையை எடுத்து முகத்தில் புன்னகை அரும்ப அவளைக் கேட்டார்.

"தேவன் உன்னத் தொட்டத உணர்ந்தியாமா?"

தலையை ஆட்டினாள்.

பாஸ்டரய்யா "ஸ்தோத்திரம்" என்று முணுமுணுத்தார். சுற்றியிருந்தோரை ஒரு வட்டம் பெருமிதத்துடன் பார்த்துவிட்டுத் தொடர்ந்தார்.

"எந்த சபைக்குப் போற?"

"ஐயா, அது சபைக்குலாங் எங்கியும் போவாதுயா."

"நகோமி நீ ஏன் பதில் சொல்ற? நீ சொல்லும்மா."

"சல்லாசர் கோயிலுக்குப் போறங்யா."

"அது எங்க இருக்கு?"

ப்ரதர் எபினேசர் சொன்னார் "அய்யா காக்ஸ் தெருவுல நம்ம சரோஜினி சிஸ்டர் வீடு இருக்கில்லையா அந்தக் கடைசில செயின்ட் லாசரஸ் சர்ச் இருக்குல்ல அதத்தான் சொல்றாங்க."

"ஓ அங்கயமா?"

தலையாட்டினாள்.

"நீங்க என்னன்னு சொன்னீங்க?"

"சல்லாசர் சர்ச்" சிரித்தாள்.

"ம்"

ஒரு கணம் கூரையைப் பார்த்துவிட்டுச் சொன்னார் "மாதாவ தொழுகுறீங்கல்ல? நல்லது. ஆனா உண்மையான கடவுள் யார் தெரியுமா? சொல்லுங்க …"

ரெஜினா நகோமியம்மவைப் பார்த்தாள். பார்வை திரும்பிய திசை நோக்கி பாஸ்டரய்யா கேட்டார் “நகோமி நீங்க சொல்லுங்க உண்மையான கடவுள் யாரு?”

“தேவனாகிய இயேசு கிறிஸ்துங்கய்யா.”

“சிஸ்டர் உங்க பேரு என்ன?” - என்று பக்கத்து வீட்டுப் பெண்ணைக் கேட்டார். பாஸ்டர் தன்னை கவனம் கொண்டதை எண்ணி முகம் பூரிக்க “பொம்மிங்கய்யா” என்றாள்.

“ம் நீங்க சொல்லுங்க உண்மையான கடவுள் யாரு?”

“யேசப்பாங்கய்யா”

ப்ரதர்களைக் கேட்காமல் அவர்களைப் பார்த்துத் தன் புருவங்களை மட்டும் குதிக்க வைத்தார். அவர்கள் சொன்னார்கள், “உண்மையுள்ள, ஜீவனுள்ள ஒரே தேவன். நம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துங்கய்யா.”

“ம். எல்லோரும் கரங்களை உயர்த்தி தேவனை மகிமைப்படுத்தும்படியா ஒரு அல்லேலூயா சொல்லுங்க.”

“அல்லேலூயா” என்றனர்.

ரெஜினா கைகளை உயர்த்தினாளே தவிர வாய் மௌனித்திருந்ததை கவனித்து பாஸ்டரய்யா அவளிடம் சொன்னார் “அம்மா, உனக்குள்ள மோசமான ஒரு அசுத்த கிரியை இருந்துச்சு, அத யார் எடுத்துட்டுப் போட்டா சொல்லு?” அவள் அமைதியாய் இருந்ததைப் பார்த்து அவரே சொன்னார், “தேவனாகிய இயேசு கிறிஸ்து. இனி அந்த சாத்தான் உன்ன அண்டக்கூடாதுன்னா நீ தேவனிடத்திலே மனந்திரும்பணும். வாரவாரம் நம்ம சபைக்கு வரணும். சரியா?”

“அய்யா நா சின்ன வயசுல இருந்து அந்த சர்ச்தாங்யா போறேங். மாதாவத்தாங் கும்பிட்றேன்” என்றாள் ரெஜினா.

“இங்க பாருங்க சிஸ்டர், மாதா நம்மளப் போல ஒரு சாதாரண மனுஷி இல்ல. அவங்க பரிசுத்தவாட்டி! ஆண்டவரைப் பெற்றெடுத்த மகிமைக்குரிய ஒரு தாய்! ஆக அவங்களுக்குள்ள மரியாதைய செலுத்தணும்.

ஆனா அவங்களுக்கு சிலை வெச்சி விக்கிரக ஆராதனை செய்யக் கூடாது. யாருடைய விக்கிரகத்தையாகிலும் நீ உனக்கு உண்டாக்க வேண்டாம்னு உபாகமம் அஞ்சி எட்டுல சொல்லியிருக்கு. மாதா ஆண்டவர பெத்தெடுத்ததோட அப்டியே இருந்து இருந்தாங்கன்னா தேவனின் தாய்னு அவருக்கும் மேலான ஒரு இடத்தைக் கொடுக்கலாம். ஆனா அதுக்கப்புறம் அவங்க கணவனோட சேந்து பிள்ளைங்கள பெத்துருக்காங்க. அப்புறம் எப்டி அவங்கள கடவுள்னு கும்பிட முடியும் சொல்லுங்க?'' என்றார்.

சாய்வாகத் தலை சாய்த்துப் புன்னகைத்தாள்.

அவர் முகத்தைத் தீவிரமாக வைத்துக்கொண்டு வலது கரத்தை மேல தூக்கிச் சொன்னார் ''இங்க பாருங்க சிஸ்டர் அவர் ஒருவரே மெய்யான தேவன்'' இரண்டு ப்ரதர்களும் ''ஸ்தோத்திரம்'' என்று மெல்லமாக வழிமொழிந்தனர்.

''உன்ன குணப்படுத்தினது யார்? நம்முடைய பரிசுத்த ஆவியானவர். முதல்ல பிதாவாய் இருந்து அப்புறம் இந்த உலகத்துக்கு எப்டியாவது வந்தாகணுமேன்னு கன்னி மேரியின் வயித்துல ஒரு குமாரனாக வெளிப்பட்டாரு. ஒரு மகனாக இந்தப் பூமியில பிறந்தாரு. பெறகு, அவர் மரித்து அடக்கம் செய்யப்பட்டு மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்து நமக்கு மத்தியிலே பரிசுத்த ஆவியா வாசம் பண்ணிட்டு இருக்காரு. இன்னும் பதினைஞ்சு வருஷத்துல அதாவது வர்ற இரண்டாயிரமாவது வருஷத்துல உலகம் அழியும்போது பூமிக்கு வருவாரு. அவருடைய வருகை ரொம்ப சமீபமாக இருக்கு. அதனாலத்தான் எல்லோரையும் மனந்திரும்பச் சொல்லி என்னைப் போல தூதுவர அனுப்பி இருக்காரு. அவர் வரும்போது நீ கிறிஸ்துவ சொந்த இரட்சகரா ஏற்று மனந்திரும்பலன்னா உன் மேல இருந்த அசுத்த கிரியை மாதிரி பல வகையான பில்லி, சூனிய பிசாசுகள் உன் உடம்புக்குள்ள புகுந்து உன்ன நரகத்துக்குக் கொண்டு போய்டும். அப்போ உன்ன மாதாவால எல்லாம் காப்பாத்த முடியாது. தேவன் ஒருவரே புகலிடம். நீ வாரா வாரம் நம்முடைய சபைக்கு வரணும். ஞானஸ்நானம் எடுக்கணும், சபைக்கு முன்பாக ஒரு சாட்சியா நிக்கணும். செய்வியா?''

“செய்றேங்கய்யா.”

“ம் … எல்லோரும் தேவனுக்கு ஒரு அல்லேலூயா சொல்லுங்க …”

ரெஜினாவும் உள்ளாழத்திலிருந்து “அல்லேலூயா” என்றாள். பாஸ்டரய்யா நகோமியம்மாவைப் பார்த்துச் சொன்னார், “நகோமி, வர்ற ஞாயிற்றுக்கிழமை ரெஜினா சிஸ்டரையும் சபைக்கு அழச்சிட்டு வாங்க.”

“செரிங்கய்யா.”

“ஆமா இந்த மாசம் தேவனுக்கு தசமபாகம் செலுத்தீட்டீங்களா, இல்லையா?”

நகோமியம்மாவுக்கு முந்திக்கொண்டு, ப்ரதர் எபினேசர் சொன்னார், “அய்யா நகோமியம்மா ரெண்டு மாசமா தசமபாகம் செலுத்தலங்கய்யா.”

“நகோமி, நீங்க செய்யிறது தேவனுக்கு கூடாத காரியம். தசமபாகம் கொடுங்கன்னு நான் சொல்லல. வேதம் சொல்லுது. அந்தப் பணம் எனக்கும் இல்ல. புரிஞ்சிதா? மல்கியா நாலாம் அதிகாரம் இருபதாம் வசனம் என்ன சொல்லுதுன்னா …” என்று பாஸ்டர் சொல்லி முடிக்கும் முன்னரே பின்னாலிருந்த ப்ரதர் எபினேசர் பைபிளைத் திறந்து வேறொரு குரலில் படித்தார்: “என் ஆலயத்தில் ஆகாரம் உண்டாயிருக்கும்படி தசமபாகங்களையெல்லாம் பண்டக சாலையிலே கொண்டு வாருங்கள்; அப்பொழுது நான் வானத்தின் பலகணிகளைத் திறந்து, இடங்கொள்ளாமற் போகுமட்டும் உங்கள் மேல் ஆசீர்வாதத்தை வருஷிக்க மாட்டேனோவென்று அதினால் என்னைச் சோதித்துப் பாருங்கள் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.”

“கேட்டியா நகோமி, தேவன் நம்மள சோதிக்கணும்னு அவசியம் இல்ல. அவர நாம விசுவாசிக்கணும். தசமபாகம் கொடுத்தா இரட்டிப்பான ஆசிர்வாதத்த நமக்கு கொடுப்பாருன்னு நம்பணும்.”

நகோமியம்மா செய்யக் கூடாத தவறைச் செய்துவிட்டவள் போலக் கண்ணீர் மல்க இருகரம் கூப்பி பாஸ்டரய்யாவைப் பார்த்த வண்ணமிருந்தாள்.

பாஸ்டரய்யா ரெஜினா பக்கம் திரும்பி ‘‘மாசமா இருக்கதான . .? எத்தனை மாசம்’’ என்றார்.

‘‘மூனு மாசங்கய்யா.’’

‘‘ம். தேவன் அப்போ உன் பிள்ளையையும் சேத்தேதான் தொட்டுருக்காரு. கர்ப்பத்தில இருக்கிறப்பவே அது பரிசுத்த ஆவியால ஆசிர்வதிக்கப்பட்டுருக்கு. உனக்கு சுக பெல ஜீவனோடு ஒரு ஆண் பிள்ளைதான் பெறக்கும். அவன நீ கர்த்தருக்குன்னு அவரோட ஊழியத்திக்குன்னு ஒப்புக்கொடுக்கணும் என்ன?’’

ஆண்பிள்ளை என்றதுமே உள்ளம் பூரித்த பரவசம் அவள் முகத்தில் தெரிந்தது. பிள்ளை எப்படி இருப்பான் என்கிற கற்பனை மிதப்போடு பாஸ்டரய்யாவின் வேண்டுகோளுக்குத் தலையசைத்தாள்.

முகம் கனிந்தவர், ‘‘எல்லோரும் தேவனுக்கு கனம் உண்டாகும்படியாய் ஒரு அல்லேலூயா சொல்லுங்க’’ என்றார்.

எல்லோரும் ஒருமித்தமாக ‘‘அல்லேஏ … … லூயா’’ என்றனர்.

~

தெருவையே இரண்டகம் செய்து சபையினுள் நுழைந்த பிசாசுப் பெண் சாந்தசொரூபியாக நடந்து போவதைப் பார்த்த மக்கள், தேவனைவிட பாஸ்டரய்யா செய்த அற்புத கிரியைகளை நினைத்தே வியப்பிலாழ்ந்தனர். மூவரும் வீடு நோக்கி நடந்து வந்தனர். ‘‘இனிமே வாரவாரங் சபைக்கு வா ரெஜினா உம்மேல எதுவுங் ஏறாது. கொஞ்சநஞ்சமா ஆடுன’’ என்று எதிர்வீட்டுப் பெண் ராகம் இழுத்ததற்கு ‘‘ஏ பல்கொர்ங்கு ச்சீ வாய மூடு’’ என்றாள் நகோமியம்மா.

அவள் இரண்டு நாட்களாக நிகழ்த்திய பேயாட்டங்கள் தெளிவாகவே ஞாபகமிருந்தன. அதேசமயம் அவள் அதைப் பற்றிப் பேசுவதற்கும் அடுத்தவர் பேசிக் கேட்பதற்கும் தயார் நிலையில் இல்லை. தனக்கெதுவும் இல்லை என்பதுபோல சாவகாசமாகக் காட்டிக்கொண்டாலும் நடையிலிருந்த சோர்வுத் தன்மையை அவளால் நிராகரிக்க முடியவில்லை. மனதை

ஒருநிலைப்படுத்தி பிடிவாதமாக வெவ்வேறு விஷயங்களை இருவரிடமும் பேசிவந்தாள். ஆனால் ஆழ்மனது வெத்தலை வாங்க செட்டியார் கடைக்குப் போனதிலிருந்து ப்ரதர் எபினேசரை சிலோன் பொட்ட எனத் திட்டியது வரையிலும் வரிசைக்கிரமமாகக் காட்சிப்படுத்த அவளுக்கு அதெல்லாம் யாரோ செய்ததுபோல இருந்தது.

பரிவுணர்ச்சியுடன் நகோமியம்மாவை ஓரக்கண்ணால் பார்த்தாள். கறிக்கடைக்குப் போக வேண்டுமெனச் சந்து முனையில் எதிர் வீட்டுப் பெண் திசைமாற, சந்தில் இருவர் மட்டும் நுழைந்தார்கள். அவர்களை உணர்ந்த குணசீலன் சைக்கிள் சக்கரங்களுக்கு எண்ணையூட்டுவதை நிறுத்திவிட்டுப் பார்த்தான். ரெஜினா முகத்தில் மலர்ச்சி இருந்தாலும் அருகில் வந்ததும் அவள் ஆற்றப்போகும் செய்வினையைப் பற்றிய எந்த அவதானிப்புகளும் இல்லாததால் பீதி முகத்தில் தங்கியிருந்தது.

அவனருகில் வந்ததும் தோராயமாகச் சிரித்து “எதுனா சாப்டியா” என முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டு கேட்டாள்.

அதிகாலையில் கணவன் மீது போன்சட்டியைத் தூக்கி எறிந்த குற்ற உணர்ச்சி அவன் முகத்தைப் பார்க்க விடவில்லை. கருணை பாவத்துடன் கேட்டது அவனைப் புன்முறுவல் செய்ய வைத்தது.

தலையை மட்டும் ஆட்டினான். இவள் குணமாகிவிட்டாளா என்கிற கேள்வியைக் கண்களினால் நொடி நேரம் நகோமியம்மாவைக் கேட்டான். ரெஜினா உள்ளே சென்றுவிட்டாள். ரெஜினாவிடமிருந்த தீய சக்தி அவளை விட்டு அகன்ற விதத்தைச் சொன்னதோடு கூடுதலாக ஓரிரு காரியங்களைச் செய்யச் சொல்லி நகோமியம்மா குணசீலனிடம் சொல்லிவிட்டுத் தன் வீட்டுக்கு அடைக்கலமானாள்.

பிற்பகல் மூன்று மணி; வெயில் தாழ்ந்திருந்த நேரம். “பட்த்துக்கு போலாமா” என்று கேட்டான். அவளுக்குப் போக விருப்பமில்லை என்றாலும் காலையில் கணவனை அடிக்க நேர்ந்ததை அன்பின் மூலம் ஈடு செய்யத் துடித்த

மனதிற்கு வாய்ப்புக் கிடைத்தது போலிருந்ததால். “நீ கொந்நேரம் வெளியரு. தோ குள்ச்சிட்டு வந்துர்றேங்” என்றாள்.

கூந்தலில் ஈரம் பிசுபிசுக்கப் புத்தம் புதுப் புடவை ரவிக்கையில் சைக்கிளின் பின்னே அவள் உட்கார குணசீலன் சிரிப்பை அடக்கிக்கொண்டு ஜரூராகப் பெடலை மிதித்தான். இரண்டு மிதிக்கு சைக்கிள் தள்ளாடிய பின்பு சமநிலைக்கு வந்தபோது வாசலில் நின்றிருந்த நகோமியம்மா சொன்னாள்: “தெபேர் மொள்ள ஓட்னி போ ... புள்ளதாச்சி.” அவள் சைக்கிளில் மிதந்தபடியே சிரித்த முகத்துடன் நகோமியம்மாவிற்குக் கையசைத்தாள்.

நாலு மணிக் காட்சி பார்க்கலாமென சாந்தி திரையரங்கிற்கு சைக்கிளை ஓட்டினான். பிரபு ஊர்வசி நடிப்பில் வெளிவந்த ‘அடுத்தாத்து ஆல்பர்ட்’ படத்திற்கு டிக்கெட் விநியோகம் நடை பெற்றுவந்தது.

படம் பார்த்து முடித்து அரங்கிலிருந்து வெளியே வந்ததும், “படம் புரிவேல்ல” என்றாள்.

“பீச்சுக்குப் போலாமா”

“அய்ய டைம் ஆய்டுங்”

“மூச்சப்புச்சினு மெர்ச்சா காலவர்ல போய்ல்லாங். கொந்நேரம் அண்ணா சமாதியாண்ட ஒக்கான்ட்டு வந்துல்லாங்.”

“செரி வா.”

மெரினாவில் அண்ணா சமாதிக்குப் பின்னால் இருக்கும் கடற்கரை மணலில் சற்று தூரம் நடந்து ஓர் இடம் பார்த்து உட்கார்ந்தார்கள். அவள் தோள்களைத் தன் வலது கரத்தால் அணைத்தான். அவள் தலையைத் திருப்பி சிணுங்கியதன் வழி கழுத்து தனித்துவமாகத் தெரிய, அதன்மீது உதடு பதித்தவன் சில நிமிடம் எடுக்கவில்லை. டூயட் பாடல்களில் தன் வாத்தியார் எம்.ஜி.ஆர். நாயகிகளுடன் விளையாடும் விளையாட்டை அவளுடன் செய்து பார்த்தான். அக்கம் பக்கம் யாருமில்லாததால் பொய்க் கோபத்தோடு அனுமதித்து இதுதான் நேரம் என பேச்சை ஆரம்பித்தாள்.

“தெபாரேங், நா பண்துக்குலாம் கொய்ச்சிக்காத.”

“அதுலாம் அப்பியே மறந்துட்டேங்” - அவன் கை அவளிடுப்பைத் துழாவியது.

“சபைக்குப் போனல்ல அந்த பாஸ்டரய்யா நானஸ்தானம் எடுக்க சொல்றாரு. அப்போதான் உன்னொரு வாட்டி அது மாரிலாங் ஆவாதாங்.”

வாயையும், கையையும் சம்பந்தப்பட்ட இடத்திலிருந்து மெல்ல விலக்கி அவளின் முகம் பார்த்துச் சொன்னான் “தெபார். அதுலாங் ஒன்னியுங் ஆவாது. அதுலலாங் சேந்தா பொட்டு வெக்கக் கூடாதுன்னு சொல்லுவானுங்கோ, பூ வெக்கக் கூடாதுன்னு சொல்லுவானுங்கோ, சினிமா பாக்கக் கூடாதுன்னு சொல்லுவானுங்கோ, பொடி போடக் கூடாதுன்னு சொல்லுவானுங்கோ” நான்கு விரல்களையும் ஒவ்வொன்றாக நீட்டி ஐந்தாவது விரலையும் நீட்டினான் அந்த விரலுக்கு பிரத்யேகமாகச் சொல்ல ஒன்றுமில்லை என்பதை உணர்ந்து திட்டவட்டமாகச் சொன்னான். “அதுலாங் வேணாங் நீ மாதாவியே கும்டு.”

“ம் செரி. போலாமா? எனுக்கு ஒரு மாரி கேராகிது, பசி எடுக்குது” புஹாரிக்கு சென்று பிரியாணி சாப்பிட்டு நகோமியம்மாவுக்கும் அவள் வீட்டுக்காரருக்கும் தலா இரண்டு பொட்டலங்கள் வாங்கிக்கொண்டு வீடு வந்து சேர்ந்தார்கள். வாசலிலேயே உட்கார்ந்திருந்த நகோமியம்மாவும், எதிர் வீட்டுப் பெண்மணியும் இவர்களைக் கண்டதும் எழுந்தார்கள். “சாப்பாடு செஞ்சிட்டேனே, செரி குடு காய்ல்ல சூடு பண்ணி துன்லாம். தே இந்தா” - எதிர் வீட்டுப் பெண்மணிக்கு நகோமியம்மா ஒரு பொட்டலத்தைக் கொடுத்தாள். குணசீலன் நீர் தளும்பும் பக்கெட்டைக் கையில் கொண்டு கூவம் நோக்கிச் சென்றான். இருவரிடமும் ‘அடுத்தாத்து ஆல்பர்ட்‘டில் தனக்குப் புரிந்த கதையைச் சொன்னாள் ரெஜினா.

ராத்திரி பதினோரு மணி. ஊர் நிசப்தித்க்க நாய்கள் தங்களுக்கான நேரம் துவங்கிவிட்டதென்று ஆங்காங்கே இருந்த இடத்திலிருந்து உற்சாகமாகக் குரைக்க ஆரம்பித்தன. வெகு நாட்களுக்குப் பிறகு மது

அருந்தாமல் தலை சாய்ப்பதால் உறக்கம் வராமல் புரண்டவன், அருகில் ரெஜினா படுத்திருந்த விதத்தைக் கண்டதும் அவனின் உயிர்த் தடம் நெம்பியது. கையைக் கொண்டு உயிர்த்தடத்தை சமரசம் செய்ய முயன்றவன் அவள் மூச்சுவிடும்போது அவள் மார்பு விம்மலின் ஏற்ற இறக்கத்தைக் கண்டு தோற்றுப்போய் அவள் முகத்தைப் பார்த்தான். ஆழ்ந்த உறக்கம். ஆனால் வாய் மட்டும் நீருடன் மீன் பேசிக்கொள்வது போல ‘உமுஉமுஉமு’. நெற்றியில் வியர்வையின் மினுமினுப்புகள். அதைப் பார்த்த அவன் உள்ளத்தில் கிலி படர்ந்தாலும் உடம்பு அவளை நெருங்கச் சொன்னது. படுத்தவாக்கிலேயே அவளை நெருங்கி ஒருக்களித்துத் அவள் பக்கமாகத் திரும்பினான். கையினால் அவளின் ஒரு முலையை அள்ளி எடுக்க முயற்சி செய்தான். அவள் உடம்பு மேலே எழுந்தது. முலையள்ளும் முயற்சியிலிருந்த கையின் நடுவிரலை ரெஜினாவின் வாய்க்குள் திணித்தான். அவள் குமட்டுவது போலச் செய்து உடலசைத்து அவன் விரலை வெளியேத் துப்பினாள்.

உடல் சோர்வு. தவிர, தூக்க மாத்திரையும் விழுங்கியிருந்ததால் அவன் செய்யத் துணியும் வன்புணர்வுக்கு அவளால் எதிர்த் தாக்குதலை நியாயமாகச் செய்ய முடியாமல் முனகலும், தூக்கமும் அவளைப் படுக்கையிலேயே அழுத்தின. சில்லறை இன்பத்தில் தோல்வியுற்றவன் எழுந்தமர்ந்து நான்கு காலில் தவழ்ந்து அவள் காலருகே சென்றமர்ந்து முகத்தைப் பார்த்தான். முனகல் அதிவேகமாக வாயிலிருந்து கிளம்பியிருந்தது. கனவில் யாருடனோ குழாய்ச் சண்டை போடுவது மாதிரி. மினுமினுப்பிலிருந்த வியர்வை முத்து முத்து நிலையில் அவள் நெற்றியிலும் முகத்திலும் இருந்தன.

ஏதோ அசம்பாவிதம் நிகழப்போகிறதென்று குணசீலனின் உள்மனம் சொன்னாலும் அதைப் பற்றிய அக்கறை அவன் உயிர்த்தடத்திற்கு இருந்ததாகத் தெரியவில்லை. அது கடிகார நொடி முள் வேகத்தில் மேலெழும்பிக்கொண்டிருந்தது. அருகிலிருந்த துண்டால் உடம்பைத் துடைத்துக்கொண்டான். ரெஜினாவின் கால்களை மெல்லத் தொட்டான். அவள் பாதங்கள்

வேண்டாம் வேண்டாம் என்பதுபோல அசைந்தன. உள்பாவாடையுடன் அவள் புடவையைச் சேர்த்துப்பிடித்து மெல்ல உருட்டி உருட்டித் தேவையான இடத்தை நோக்கிச் சென்றான். தொடைக்கு மேலே அவன் வருடல் நடக்கையில் குட்டி யானையொன்றின் மூர்க்கமான பிளிறல். பிளிறலைத் தொடர்ந்து குரல் அலறியது: "பெத்த அம்மா மேலியே ஏற பாக்குறியேடா சொறி நாய்க்கு சூத்து குத்த பாடு." குணசீலன் புடவையைக் கண வேகத்தில் கீழே இறக்கினாலும் பிளிறல் அலறலாக மாறியது. எழுந்தமர்ந்து கால்மாட்டில் உட்கார்ந்திருந்தவனைக் கண்களை மூடிக்கொண்டே ஓங்கி உதைத்தாள். குழுவாக இருந்த ஈயப் பாத்திரங்களின் மீது போய் விழுந்தான். பாத்திரங்களும் சேர்ந்து அலறின. பற்களின் நறநற. அவனைக் காறி உமிழ்ந்தாள். அவன் சற்றுத் தொலைவில் இருந்ததால் எச்சில் தன் நோக்கத்தை நிறைவேற்ற முடியாமல் அவள் காலிலேயே விழுந்து மன்னிப்புக் கேட்டது. குணசீலனுக்கும் கோபத்தில் வெறி ஏறியது. எழுந்து அவளை பதிலுக்கு ஓங்கி மிதித்தான். அவள் வயிற்றில் சுமப்பது தன் பிள்ளை என்கிற பகுத்தறிவோடு கருவறையை மிதிக்காமல் அவள் கால்களை மிதித்தான். அவள் வலியால் இன்னும் மூர்க்கமாக அலறினாள். 'கும் கும்' என கதவு குத்துகிற சத்தம். "ரெஜினா கதுவத் தொற கதுவத் தொற" கதவு திறக்கப்படவில்லை. அவள் அலறல் இப்போது நீண்ட ஊளையாக மாறியது. தங்களுக்குப் போட்டியான இந்த புதுக்குரல் யார் எனத் தெருமுனையிலிருந்த நாய்கள் தலையைத் திருப்பித் தேடின. குணசீலன் கதவைத் திறந்தான். நகோமியம்மா உட்பட வீட்டு வாசலில் கூட்டம். "ன்னா குண்சீல்" ஒரு முதியவர் பயந்த குரலில் கேட்டார்.

"திருப்பியும் அதே மாரி பண்து பெரிப்பா" - வாயில் பீடியை வைத்து வாசலிலிருந்து சற்று வெளியே சென்றான். தலைவிரிகோலமாக உட்கார்ந்திருந்தவள், நகோமியம்மா உள்ளே நுழைந்ததும் நாகம்மா என்று அவளை நோக்கிக் கைகளை விரித்து அழுதாள். சுழற்சி முறையில் அதே சம்பவங்கள். இம்முறை பாஸ்டரய்யா ஜெபம் செய்து முடித்ததும் அவளை வீட்டுக்கு அனுப்பவில்லை. இன்னும் குறைந்தபட்சம் அவள் மூன்று

நாளுக்குச் சபையிலேயே இருக்க வேண்டுமெனக் கட்டளையிட்டார்.

குணசீலனிடம் அனுமதி கேட்டாள் நகோமியம்மா. இனி அவள் ராத்திரி வீட்டில் இருந்தாலும் தனக்கு உதவியில்லை என்று உணர்ந்தவன் சபையில் நடக்கப்போகும் ஜெப வைத்தியத்திற்குச் சம்மதித்தான். ரெஜினா சபையிலேயே ஒரு ஓரத்தில் பாய், தட்டு, போர்வை, பைபிள், நகோமியம்மாவின் அண்மை இவற்றோடு தங்க வைக்கப்பட்டாள். அன்று ராத்திரி அவளிடமிருந்து எந்த குணக்கேடும் இல்லை. நிம்மதியாக உறங்கிக் காலையில் எழுந்தாள். எழுந்ததும் கணவனைப் பார்க்க வேண்டுமென்கிற விருப்பத்தை நகோமியம்மாவின் தூது மூலமாக ப்ரதர்களிடம் தெரிவித்தபோது அவர்கள் சம்மதிக்கவில்லை. மதியம் போல சிங்கப்பூரானும் சின்ன மாமியாரும், குணசீலனும் வந்து ரெஜினாவைப் பார்த்துவிட்டுப் போனார்கள். அவர்களிடமும் பாஸ்டரய்யா தேவனைப் பற்றிச் சொன்னார்.

நீதிமொழிகளிலிருந்தும், சங்கீதத்திலிருந்தும் தினமும் அவளை வசனங்களைப் படிக்கச் சொல்லிக் கேட்பார். சில வசனங்களை மனப்பாடம் செய்யச் சொல்லி ஒப்புவிக்கச் சொல்வார். பள்ளிக் குழந்தையைப் போல அவளும் ஆர்வத்துடன் சொல்லிவந்தாள். பைபிளில் வந்துபோகும் ஒவ்வொரு கதை மாந்தரைப் பற்றியும் அவர் சொல்லச் சொல்ல அதிலிருந்து சந்தேககங்கள் கேட்டாள். பிறகு பாஸ்டரய்யா சொல்லாமலேயே பைபிளைத் தன் போக்குக்கு வாசிக்க ஆரம்பித்தாள். நான்கு நாட்கள் சபையிலேயே தங்கியிருந்தாள். அந்நாட்களில் அவளிடம் கிளியாம்பாளின் எந்தச் சாயலும் எப்பொழுதிலும் இல்லை. எல்லாம் தேவனாலேயே நடந்தது என முழுதும் நம்பினாள். சனிக்கிழமை இரவு எட்டு மணி அவர் ரெஜினாவைப் பார்க்க மேலே வந்தார். வந்தவர், அவளுக்குப் பேய் பிடித்தபோது எப்படியெல்லாம் ஆட்டம் போட்டாள் தற்போது அவள் கர்த்தருக்குள் எந்த அளவுக்குப் பரிசுத்தமாக குணமாகி இருக்கிறாளென்று அவளிடம் சொன்னார். அதையே ஒரு வாக்குமூல வடிவில்

அவளைச் சொல்லச் சொன்னதோடு. “நாளைக்கு சபை வேளையில் காணிக்கைக்கு முன்னாடி நீ சாட்சி நேரத்துல எழும்பி சாட்சி சொல்லணும்” என்று அவளைப் பணித்தார். ரெஜினா சாட்சி சொல்லப்போகும் விஷயத்தை நகோமியம்மா குணசீலனிடம் சொல்லவும், மறுநாள் அவர்கள் குடும்பமாக சபைக் கூட்டத்தின் பின்வரிசையில் உட்கார்ந்தார்கள். சாட்சி நேரத்தில் அவள் தன் ஒருவார காலத்து வாழ்க்கையை அழுத குரலில் சொன்னாள். அவள் சொன்னதை சபையோர் கேட்கும்போதே ஒரு சிலர் அந்நிய பாஷையில் ததும்பினர். அன்று சபை முடிந்ததும் மதியம் சபையிலேயே சாப்பாடு முடித்து ரெஜினாவை பாஸ்டரும் ப்ரதர்களும் வழியனுப்பி வைத்தார்கள். வெள்ளைப் புடவையில் பைபிளும் கையுமாய் அவள் வீட்டுக்குள் அடியெடுத்து வைத்தாள். முதல் வேலையாக சுவற்றில் மாட்டியிருந்த ஆரோக்கிய மாதாவின் படத்தையும், கிளியாம்பாளின் படத்தையும் எடுத்து பெட்டிக்குப் பின்னால் போட்டாள். வீட்டுக்கு வந்த பின்னும் அவளிடம் பெரிதாக குண மாறாட்டம் இல்லை. அவ்வப்போது தனியாய் இருக்கும்போது அல்லது ராத்திரி நேரத்தில் உடம்பு வலிப்பு வந்தது போல முறுகிக் கோணத்தான் செய்தது. ஆனால் உடனே பைபிளைக் கையில் எடுத்து வைத்து முழங்காலிட்டு “க்றிஸ்துவுக்குள் வாழும் எனக்கு எப்போதும் வெற்றியுண்டு” என்கிற பாடலைக் கேட்போர் செவித்திரை கிழியும் அளவுக்குச் சத்தம்போட்டுப் பாடினாள். அக்குரலிலிருந்து வெளிப்படும் ஒலியின் வழியாக பயமும் ஓடியது. அவள் வீட்டுக்கு வந்த அடுத்த வாரம் ஓட்டேரியிலுள்ள தன் நண்பரின் சபைக்கு சாட்சி சொல்லுவதற்கு ரெஜினா வர வேண்டுமென பாஸ்டரய்யா அவளை அழைத்தார். கர்ப்பிணிப் பெண் என்பதால் அவளை ஆட்டோவிலே கூட்டிக்கொண்டுபோய் கொண்டுவந்து விட்டார். அவளுக்கு ஐந்து மாதம் இருக்கும்போது பாஸ்டரய்யா சபையினுள்ளேயே இருக்கும் சிமென்ட் தொட்டியில் அவள் தலையை மூன்று முறை முக்கியெடுத்து ஞானஸ்நானம் கொடுத்தார். சபைகளின் வட்டாரத்தில் அவள் பெயர் பிரபல்யம் அடைந்ததால் - பழையவை எல்லாம் ஒழிந்து போயின; எல்லாம் புதிதாயின என்று

கூறி - உனக்கு ரெஜினா என்றே பெயரிடுகிறேன் என அவளுக்கு ஞானஸ்நானப் பெயரிட்டார். அன்று மாலை பாஸ்டரய்யாவும் அவர் மனைவியும் அவளை குமரன் ஸ்டுடியோவிற்குக் கூட்டிச் சென்றார்கள். மூவரும் வெள்ளையுடையில் புகைப்படம் எடுத்துக்கொண்டு பாஸ்டரய்யா தனக்கொரு காப்பி வேண்டுமெனத் தக்கவைத்து ரெஜினாவிற்கு ஒரு காப்பியும் கொடுத்தார். ஞானஸ்நானம் எடுத்ததற்குப் பிறகு அவள் இன்னும் தீவிரமாக ஆவிக்குரிய பிள்ளையாய் மாறி எப்போதும் வெள்ளைப் புடவை உடுத்தினாள். கழுத்து, காது, கால் போன்ற உறுப்புகளில் அவளைக் கட்டிப் பிடித்திருந்த எல்லா அணிகலன்களையும் கழட்டியெறிந்தாள். “கம்பலாவது போட்டுக் கூடாது? அநியாயத்துக்கு இப்டி ஜிலோல்னுக்றியே” என்று கேட்ட நகோமியம்மாவையும் அவள் பரிசீலிக்கவில்லை. நிறைமாத கர்ப்பிணிப் பெண் என்பதையும் பொருட்படுத்தாது தினமும் காலையில் உபவாசம் இருந்து ஜெபம் செய்தாள். பேய் பிடித்தபோதே இவள் நன்றாகத்தான் இருந்தாள் என்று குணசீலன் நினைத்துக்கொண்டான். அவளை மடைமாற்றும் எந்த எண்ணத்திலும் அவன் ஈடுபடத் தயாராய் இல்லை. கிளியாம்பாள் அவ்வப்போது ரெஜினாவிடம் வந்து வேலையைக் காண்பிக்கத்தான் செய்தாள். அப்போதெல்லாம் தடுக்க முடியாத மூர்க்கத்திலும் வயிற்றிலிருக்கும் பிள்ளையை நல்ல விதமாகப் பெற்றெடுக்க வேண்டுமென்கிற வைராக்கியத்துடனும் முழங்காலிட்டு ஜெபம் செய்வாள்.

நாளடைவில் அவள் பைபிளுடனும், சபையுடனும் ஒன்றிப் போனாள். அவளுக்கு இருந்த ஒரே வருத்தம் பாஸ்டரய்யா ஊழியம் செய்யும்போது வசனங்களை அவர் அடிக்கோடிடுகையில் தடாலென பைபிளைப் பிரித்து அந்த வசனத்தைப் படிக்கும் வேகம் தனக்குக் கைகூடவில்லையே என்று ஜெபத்தில் பொறுமுவது மட்டுமே.

ஒரு மாலைப் பொழுது பிரசவ வலியில் அவள் துடிக்க சேப்பாக்கத்தில் இருக்கும் கோஷாஸ்பிட்டலில் கொண்டு வந்து சேர்த்தார்கள். அன்று நள்ளிரவு இரண்டு மணி அளவில் ஓர் ஆண் குழந்தையை ஈன்றெடுத்தாள். பிரசவ

அறையில் கட்டில் கிடைக்காததால் தாயும் சேயும் தரையில் கிடத்தப்பட்டிருந்தார்கள். பிறகு நகோமியம்மாவின் ஓரவத்தி அங்கு கூட்டிப் பெருக்கும் வேலை செய்வதால் அவள் செல்வாக்கைப் பயன்படுத்தி மறுநாள் கட்டில் கிடைத்தது. அம்மாவும் பிள்ளையும் நிம்மதியாக உறங்கிகொண்டிருந்த மாலைப்பொழுதில் விஷயம் கேள்விப்பட்ட பாஸ்டரய்யா அவர் மனைவி, இரண்டு ப்ரதர்கள், ஒரு சிஸ்டர் ஆகியோர் அவளைப் பார்க்க மருத்துவமனைக்கு வந்து சேர்ந்தார்கள். நகோமியம்மாவும், லூர்து மேரியும் படுக்கைக்கு அருகில் உட்கார்ந்து மருத்துவமனையிலேயே இனாமாகக் கொடுத்த ரொட்டியைத் தேநீரில் நனைத்து ருசி பார்த்துக்கொண்டிருந்தார்கள். பாஸ்டர் குழாம் வந்ததும் நகோமியம்மா எழுந்ததோடு லூர்து மேரியிடம் அவர்களின் வருகையைச் சொல்லிக் கையைப் பிடித்து எழுந்து நிற்க வைத்தாள். ரெஜினா தூங்குவதைப் பார்த்த பாஸ்டரய்யா, “இருக்கட்டும். பிள்ள தூங்கட்டும். தோ வந்துட்றேன்” எனச் சொல்லிப் பிரசவ அறையிலுள்ள முதல் படுக்கைக்குச் சென்றார். அவர் குழாம் பின்தொடர்ந்தது. பாஸ்டரய்யா உள்ளே நுழைகையிலேயே ஒரு கிழவி தன் பேத்திக்குப் பிறந்த குழந்தையை ஜெபம் செய்து ஆசிர்வதிக்கச் சொல்லி அழைத்ததால் அங்கு சென்றார். பாஸ்டர் ஜெபம் செய்ய ஆரம்பித்ததும். அவரைச் சுற்றிக் கூட்டம் கூடியது. ஒவ்வொருத்தரும் தங்கள் குழந்தைக்கும் வந்து அவர் ஜெபம் செய்ய வேண்டுமென மன்றாடினர். நகோமியம்மா பாஸ்டரய்யாவிடம் வந்து, “அய்யா ரெஜினா ஏன்ச்சிகிச்சி” என்று சொன்னதும் அவர் செல்ல, குழாம் பின்தொடர்ந்தது. பிரசவ அறையில் நேரம் போகாத சிலரும் அவர்களுடன் சென்றார்கள். பாஸ்டரய்யாவைக் கண்டதும் படுக்கையிலிருந்து எழுந்து அவருக்கு ஸ்தோத்திரம் செய்ய முயற்சித்தவளை பாஸ்டரம்மா “இருக்கிட்டும் படுமா” என்றார். “என்னம்மா சிங்கக்குட்டிய பெத்துட்ட போல இருக்கே” என்று அய்யா கேட்டதும் சிரித்தாள். நலம் விசாரிப்புகளுக்குப் பிறகு அவர் ஒரு கையை ரெஜினாவின் தலையிலும் இன்னொரு கையைக் குழந்தையின் தலையிலும் வைத்துச் சொன்னார்,

“யாவரும் கண்களை மூடி சகோதரி ரெஜினாவுக்காகவும் அவர் பெற்ற இந்த ஆண் பிள்ளைக்காகவும் தேவனை கனம் பண்ணுவோம்” என்றார். மருத்துவமனை என்பதால் பாஸ்டரய்யா குரல் தாழ்த்தி அதே சமயம் ஆவேசத்துடனேயே ஜெபத்தை ஆரம்பித்தார். ரெஜினாவையும் குழந்தையையும் பாஸ்டர் குழாம் வட்டமாகச் சுற்றி நின்று கரங்களை உயர்த்த பாஸ்டர் ஜெபத்தை ஆரம்பித்தார்: “எங்களை அதிகதிகமாய் நேசிக்கிறதான எங்கள் அன்பின் பரலோகப் பிதாவே மன மகிழ்ச்சியான இந்த நாளுக்காக உமக்கு நன்றி செலுத்துகிறோம் ராஜா. இந்த நாளிலேகூட நல்ல ஒரு குழந்தையை நீர் கொடுத்தீரே உமக்குக் கோடானகோடி நன்றி செலுத்துகிறோம் தகப்பனே! தாயின் கருவில் உருவாகும் முன்னரே உன்னைத் தெரிந்தெடுத்தேன் என்று சொன்ன வார்த்தையின்படி உன் கருவை என் கண்கள் கண்டதே என்று சொன்ன வார்த்தையின்படி ஆண்டவரே உம்மைத் துதிக்கிறோம் யேசப்பா! இந்தக் குழந்தை தாயின் வயிற்றில் மூன்று மாத கர்ப்பமாய் இருக்கும்போதிலிருந்தே யேசப்பா உம்முடைய ஜெபத்தைக் கேட்டு வளர்ந்திருக்கிறது தகப்பனே! இந்தக் கருவை நீர் கண்டெடுத்ததற்காய் நன்றி செலுத்துகிறோம் ராஜா! ஆண்டவரே உம்முடைய ஜெபத்தினாலே வளர்ந்த பிள்ளை அய்யா இது. இதோ பிள்ளைகள் கர்த்தரால் வரும் சுதந்திரம் கர்ப்பத்தின் கனி அவரால் கிடைக்கும் பலன் என்று சங்கீதம் நூத்தி இருபத்தியேழாம் அதிகாரம் நாலாம் வசனத்தில் சொன்ன வார்த்தையின் படி இது நீர் கொடுத்த சுதந்திரம் ஆண்டவரே. இந்தப் பிள்ளை நீர் கொடுத்த பலன் ஆண்டவரே. மூன்று மாதத்திலிருந்து உம்முடைய ஜெபத்தைக் கேட்டுக் கேட்டு பத்தாவது மாதம் சுகமாகப் பிரசவம் ஆகியிருக்கும் குழந்தை உம்முடைய ஜீவ அப்பம் அய்யா. இந்தக் குழந்தையை உமக்காக, உம்முடைய ஊழியத்தைச் செய்வதற்காக ஒப்புக்கொடுக்கிறோம் ராஜா. உம்மைப் பற்றிப் பிரசங்கம் செய்யக்கூடிய பிள்ளையாய் இதை மாற்றும் ஆண்டவரே. பிதாவே இந்தக் குழந்தையின் நிமித்தம் இவர்கள் குடும்பத்தில் யாவரும் மகிழ்ச்சியாய் இருக்க வேண்டும் ஆண்டவரே. உம் ஜெபத்தைக் கேட்டுக் கேட்டு வளர்ந்த இந்தப் பிள்ளைக்கு உம் நாமத்தினிமித்தம் ‘ரூபன்’ என்று

பெயர் வைக்கிறேன் யேசப்பா. வருங்காலத்தில் அநேக ஆத்துமாக்களுக்கு உம்முடைய சத்தியத்தை எடுத்துக் கூறக்கூடிய ஒரு ஊழியக்காரனாய் இந்த ரூபனை மாற்ற வேண்டுமென நாங்கள் ஜெபிக்கிறோம் கர்த்தாவே. குணசீலன் - ரெஜினா தம்பதியினருக்குப் பிறந்த இந்தக் குழந்தை ரூபன் தன் கடைசி வரையிலும் பெற்றோருக்கு கீழ்ப்படிந்து நடந்து ஒரு நீதிமானாய்த் திகழ வேண்டும் எனக் கேட்டுக்கொள்கிறோம் தேவனே. துதி, கனம், மகிமை யாவும் உம் ஒருவருக்கே செலுத்துகிறோம். இயேசு கிறிஸ்துவின் விலையேற்றப்பெற்ற நாமத்தில் ஜெபிக்கிறோம். ஜீவனுள்ள எங்கள் நல்ல பிதாவே ஆமென்.'' கண்களைத் திறந்த பாஸ்டரய்யா இருவர் தலையிலிருந்தும் கைகளை எடுத்து, ''எல்லோரும் கரங்களை உயர்த்தி கர்த்தருக்கு ஒரு அல்லேலூயா சொல்லுங்க'' என்றார். கூடியிருந்தோர் அல்லேலூயா என்றனர். சுற்றத்தார் கைகளை உயர்த்தி இறக்கியதும் குழந்தை ரூபனும் முகம் மலர ஒரு கை விரல்களைத் திறந்து மெல்ல மூடினான்.

## -2-

ரெஜினா ஊழியமே உயிராய் இருக்க, குழந்தை நகோமியம்மாவின் உடற்சூட்டிலேயே வளர்ந்தான். நகோமியம்மாவிற்குத் திருமணம் நடந்து இருபது வருடங்களுக்கு மேல் ஆகியிருந்தும் வயிற்றில் உயிர் வித்து இல்லை. தான் பெற்ற குழந்தையிடம் வெளிக்காட்ட வேண்டுமெனச் சேமித்து வைத்திருந்த அன்பு அக்கறையெல்லாம் தன்னையறியாமல் ரூபனிடம் செலவழித்தாள். தாய்ப்பால் மட்டும் கொடுக்கவில்லையே தவிர அவனைக் குளிக்க வைப்பதிலிருந்து மலவாய் கழுவுவதுவரை சலிப்பின்றிச் செய்தாள். இடுப்பில் தூக்கி வைக்கும் அளவுக்கு வளர்ந்ததும் ரேஷன் கடைக்கு, கறிக்கடைக்கு, செட்டியார் கடைக்கு எனக் குழந்தையை மடியில் வைத்து ஊர்வலம் வந்தாள். புதியாய்ப் பார்க்கும் உலகைப் பற்றிய சந்தேகங்கள் இருக்கிறதென்றாலும் அதைக் கேள்வியாகக் கேட்கக்கூடிய அளவுக்கு இன்னும் மூளை பக்குவப்படவில்லை என்பதால் ஆயாவின் மடியிலமர்ந்து வேடிக்கை மட்டும் பார்த்து வருவான்.

குழந்தையைக் கொஞ்சலாம். அழுத்தி அவன்

கன்னத்தைக் கிள்ளக் கூடாது. குஞ்சைத் தொட்டு

முத்தமிடக் கூடாது. அவனைப் பற்றிய விமர்சனங்களை முன்வைக்கக் கூடாது என்று அவனைக்

கொஞ்சுபவர்களுக்கு நகோமியம்மா சில கட்டுப்பாடுகளை விதித்திருந்தாள். ஒருமுறை செட்டியார் கடைக்கு

அவசரமாகப் போக நேரிட அவனை அப்படியே தூக்கிச் சென்றுவிட்டாள். கடையில் சாமான்கள் வாங்கிக்கொண்டிருந்த ரோஸி குழந்தையைப் பார்த்ததும் தொட்டு முத்தமிட்டதோடு "எக்கா … நாகமக்கா புள்ளய அம்னகட்டயா தூக்கினு வரியே? ஜட்டி கிட்டி எதுனா போட்டு தூக்கினு வரக் கூடாது அது எப்டி இருக்கிது பாரு" என்று அவன் குஞ்சைக் காட்டினாள். நகோமியம்மாவின் இடுப்பில் ஒட்டிய நிலையிலிருந்து விலகி சற்றுப் புடைத்து உடைக்காத வேர்க்கடலையைப்

போலிருந்தது அவன் குஞ்சு. ரோஸி சொல்லிவிட்டுச் சிரித்தாள். அவள் சொன்னதும் பக்கத்திலிருந்த இளம்பெண்ணும் சிரிக்க … நகோமியம்மா கையிலிருந்த முட்டையை ரோஸியின் முகத்தில் ஓங்கி அடித்தாள். ரோஸி நிலைகுலைந்து பின்னுக்குப் போனாள். சிரித்த இன்னொரு பெண்ணும் முன்னெச்சரிக்கையாய் நழுவ நகோமியாம்மா சத்தம் போட்டுப் பேசினாள்: "ஏன்டி தவ்ளோ புள்ள குஞ்சி ன்னாடி பண்ச்சி உங்கள? இப்டி நம்ச்செலெத்துனு அலியிரிங்ளே." முட்டைக்கருவை வழித்து பார்வைத் தெளிவானதும் ரோஸி நகோமியம்மாவை அடிக்கப் பாய்ந்து முடியைப் பற்றினாள். ஒரு கையில் குழந்தையை வைத்து மறுகையில் நகோமியம்மா ரோஸியினுடைய இரவிக்கையின் தோள்முனையை பிடித்துக் கிழிப்பதற்கு முனைந்தாள். முடியைப் பிடித்தவள் உலுக்கவும் இல்லை. இரவிக்கையைப் பிடித்தவள் கிழிக்கவும் இல்லை. இருவரும் பிடித்த நிலையிலேயே சிலைபோல நின்றனர். குழந்தை மெதுவாகச் சிணுங்கி வாயைப் பிளந்து அலற ஆரம்பித்தான். குழந்தையின் அழுகை அங்கிருந்தோரை சலனப்படுத்த இருவரையும் பிரித்து அனுப்பி வைத்தனர். கூட்டம் திரிந்ததும் கவலை படிந்த முகத்துடன் செட்டியார் தன் வேஷ்டியின் முன்பக்கத்தை பஜனைக்கட்டையை அமுக்குவது போல அமுக்கிப் பார்த்தார்.

~

குழந்தை பால்குடி மறந்த வயதைத் தாண்டியதும் நகோமியம்மா தன் வீட்டிலேயே அவனைப் படுக்க வைத்துக்கொண்டாள். ஆயா கூட இருந்தால்தான் கனைக்காமல் தூங்குகிறான். அதிகாலை ஸ்தோத்திர பலியிட்டு ஜெபம் செய்கையில் அவன் அழுது செய்யும் இடையூறுக்கும் முடிவு வந்தது ரெஜினாவுக்கு ஆறுதலாகவே இருந்தாலும் இராத்திரி அவளுக்கு இன்னொரு விதத்தில் குடைச்சல் வந்தது. அவள் தனிமையாகப் படுக்கும் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி குணசீலன் கணவன் என்கிற முறையில் அவளிடம் இன்பத்தைக் கோரி சீண்டல்கள் செய்ய ஆரம்பித்தான். முழுக்கவும் ஊழியக்காரப் பெண்மணியாக, சாட்சியின் உருவாக மாறிவிட்ட ரெஜினா உடலுறவு கொள்வதைப்

பெரிய பாவமென நினைத்ததால் குணசீலனை நெருங்க விடவில்லை. மேற்கொண்டு அவன் வற்புறுத்தினால் பழைய உறுமல்கள் வெளிப்பட்டன. அந்த நாட்கள் நினைவுக்குவர, அவளைத் தொந்தரவு செய்யாமல் போதையின் கிறக்கத்தில் மயங்கிப் பொழுதடைவில் படுத்துக்கொள்வான். ராத்திரிகளின் வெறுமையை சமன்செய்ய தினமும் நிறையைக் குடித்துவிட்டு வர ஆரம்பித்தான். பின்னர் வீட்டுக்கு வருவதும் குறைந்துபோய் வேலை செய்யும் இடத்தில் தன்னைவிடப் பன்னிரெண்டு வயது மூத்தவளுடன் தொடர்பு ஏற்பட்டு அவளுடன் சேர்ந்துகொண்டான். விஷயம் தெரிந்த ரெஜினா அவனுடன் எந்த சச்சரவும் செய்யவில்லை. பெரியமேட்டில் அவன் வேலை செய்யும் முகம்மது ஹபீப் ராஜா லெதர் கடைக்கு நகோமியம்மா தனியாகப் போய் சண்டைப் பிடித்தாள். ஒன்றும் நடக்கவில்லை.

போதைத் தள்ளாட்டத்தில் வாரத்திற்கு ஒருமுறை வீட்டுக்கு வந்து குழந்தை கையில் ப்ரிட்டானியா பிஸ்கட் பாக்கெட்டைக் கொடுப்பான். கொடுத்த கையோடு அவனை முத்தமிட்டு பணத்தாள்களைச் சுருட்டி மாடத்தில் வைத்து குணசீலன் கிளம்பி விடலானான்.

~

நகோமியம்மாவின் வீட்டுக்காரர் ஒருநாள் ஜன்னி கண்டு இறந்துப்போனார். தனெக்கென இருந்த ஓர் உறவும் விட்டுச் சென்ற பிரிவில் அவள் நெடு நாட்களெல்லாம் வாடி வற்றவில்லை. ரூபன் மீது முன்பை விடவும் அதிகப் பிணைப்புடன் இருந்தாள். அவனை இன்னும் செல்லமாக வளர்த்தாள். அவன் கேட்பது கேட்காதது என எல்லாவற்றையும் வாங்கிக் கொடுத்தாள்.

“ஆயா கேரட்டல்வா வாங்கிக் குடுய்யா.”

“வா அப்பேன்.”

மூச்சுப் பிடித்து அவனைத் தூக்கி இடுப்பில் போராடிய நகோமியம்மாவிடம் “ஆயா நானே நட்ந்து வரேன்” எனப் பிடிவாதமாகச் சொன்னான்.

துர்காபிரகாஷ் ஹோட்டலுக்கு அவனை நடக்க வைத்து அழைத்து வந்தாள். மடியில் உட்கார வைக்காமல் எதிரிலுள்ள நாற்காலியில் உட்காரச் சொன்னாள். அது அவனுக்குத் தனி மகிழ்ச்சியைக் கொடுத்தது. நாற்காலியின் விளிம்பில் அமர்ந்தும் நகோமி ஆயாவைப் போலப் பாதங்கள் தரையில் படவில்லையே என்கிற வருத்தம் கேரட் அல்வாவை முதல் ஸ்பூன் சுவைத்ததும் காணாமல் போனது.

எதிர் வீட்டுப் பெண்மணியின் வாயிலாக ரிப்பன் பில்டிங்கின் அருகில் இருக்கும் நேஷனல் தர்பார் ஓட்டலில் ஃபலூடா நன்றாக இருக்கிறதென ஒருநாள் கேள்விப்பட்ட நகோமியம்மா வீட்டுக்காரரின் பென்ஷன் வரும் வரைக்கும் காத்திருந்துக் கிடைத்த நாளில் அவனைக் கூட்டிப் போனாள். பார்க் ஸ்டேஷனுக்கு அருகில் வந்ததும் அங்கு கழிக்கப்பட்டிருக்கும் மலங்களை அவன் செருப்பு அணிந்திருந்தாலும் மிதிக்கக் கூடாதென விடாப்பிடியாக அவனைத் தூக்கிக்கொள்ள முயற்சித்தாள். அவனாகவே நடந்து வர இருவரும் தர்பாரை அடைந்தார்கள். அவனுக்கு அந்த தர்பார் உணவகம் மிகவும் பிடித்திருந்தது. பாதங்கள் தரையைத் தொட்டன. தெம்புடன் சுவைக்க ஆரம்பித்தான். ஃபலூடா என்கிற பழக்குழைவின் சுவை அவனை மகிழ்ச்சியின் எல்லைக்கே கொண்டு போயின. தொடர்ந்து சாப்பிட்டால் அது காலியாகிவிடும் என்பதால் பாதிக் கோப்பைக்குக் கீழ் சாப்பிடாமல் அப்படியே உட்கார்ந்திருந்தான்.

‘‘அப்பேன் சீக்கிரம் சாப்டு. போவ்ணுங். உங்கம்மா வேற வால்வால்னு கத்துங்.’’

பேச்சுமூச்சில்லை.

‘‘சாப்டுடா டைம் ஆவுது’’ - குரலால் கண்டித்தாள்.

‘‘ஆயா சாப்ட்டா காலி ஆ ... ய்டுய்யாங்’’ அழாதக்குறையாய் அவன் சொல்ல நகோமியம்மா அவன் தாடையைப் பிடித்து நெருங்கி வந்து ரகசியம் போலச் சொன்னாள்.

‘‘ஆயா சுருக்கு பைல உன்னுங் ரெண்டு இருவருபா இருக்கிது. இது எத்தினி வேணா வாங்கிலாம் சாப்டு நைனா’’ என்றாள்.

அம்மா, அப்பாவுக்கு வாங்கிய பொட்டலத்தை அவனே பிடித்துவர விரும்பினான். கடையிலிருந்து வெளியே வந்து சாலையைக் கடந்தார்கள். பூந்தமல்லி சாலையையும் சிந்தாதிரிப்பேட்டையையும் இணைக்கும் ரயில்வே படிக்கட்டில் நகோமியம்மாவால் தொடர்ந்து ஏற முடியவில்லை. அவகாசத்துடன் ஏறினாள். ரூபன் ஆயாவின் கையை விடவில்லை. படி இறங்கியதும் நகோமியம்மா நின்று பெருமூச்சு வாங்கினாள். அவள் இயல்பு நிலைக்குத் திரும்பி கூவாற்றுப் பாலத்தைக் கடக்கையில் ஆயாவிடம் பேச்சுக் கொடுத்தான். கேள்விகளின் வழியாக உலகை அறிந்துகொள்ளும் பிராயத்தில் அவனுக்கான எல்லாப் பதில்களும் நகோமியம்மாவிடமிருந்தே கிடைத்தன. வீட்டுக்கு வரும் வழியில் பேசிக்கொண்டே வந்தார்கள்.

“ஆயா யேசப்பா எப்பயா வருவாரு?”

“நம்ம யேசப்பாவா?”

“ஆமாயா.”

“இது இன்னா வருஷங் சொல்லு?”

“ஆயிரத்தி தொள்ளாயிரத்தி தொன்னூத்தி ஒன்னு.”

“ஆங் அப்பனா இப்பத்துலருந்து கணுக்கு போட்டுக்கோ ரெண்டாயிரம் வருசம் வரும்போது யேசப்பா வந்துருவாரு”

விரல்களால் கணக்குப் போட்டதும் “ஆயா வுன்னுங் ஒம்போது வருஷந்தாயா இருக்கிது” என்றவன் தொடர்ந்து “ஆயா யேசப்பா நம்ளலாம் கூட்னு போவாருலயா?”

“யேசப்பா உன்னதான் ரூபனு கூட்னு போவாரு. ஆயாவெல்லாம் கூட்னு போவ மாட்டாரு.”

“ஏங் ஆயா?”

“ஆயா நெறியா பாவம் பண்ணிக்கிறனே.”

“இன்னாயா பாவம் பண்ண?”

“ஆயா மூஞ்சிக்கு அப்பப்போ மஞ்சாலாங் தேக்கிறிறேல்ல. பொடி போட்றேல்ல. கனகவல்லி

ஆயா ஊட்ல போயி எட்னா குத்து டெக்குல படல்லாம் பாக்குறேல்ல. இதுலாங் யேசப்பாவுக்கு புடிக்காது.''

''எது எதுலாய்யா யேசப்பாவுக்கு புடிக்குங்?''

''காய்ல்லயும் ராத்திரியும் டெய்லி பைபிள் படிக்கணுங். திருடக் கூடாது. பொய் பேசக் கூடாது. டிவி பாக்கக் கூடாது. இந்து சாமிய கும்படக் கூடாது. அவுங்கோ கற்பூரம் கொள்த்துன பொருள குத்தா துன்னக் கூடாது. குடும்ப ஜெபம் பண்ணுங். இதுலா உங்கம்மாவே சொல்லிருக்குமே?''

''எப்பியும் அதியேதாங்யா சொல்லினுகிது.''

''அவ சொல்ற பேச்சியே கேளு. அப்போதாம்ப்பா யேசப்பா வந்து உன்ன கூட்னு போவாரு … ன்னா …''

ஆயா அம்மாவின் அருளுரைகளை தெய்வ வாக்காக நம்பியவன் அதன்படியே வளர்ந்தான். தன்னுடைய தொடர் ஜெபத்தாலேயே அரசாங்கம் கட்டிக் கொடுத்த ஹவுசிங் போர்டு வீடு தன் குடும்பத்திற்கு கிடைத்ததென்று எரேமியா முப்பத்தி மூனாம் அதிகாரம் மூனாம் வசனத்தின் உதாரணத்துடன் சபையில் சாட்சியும் சொன்னான். சபையோர் அவனை தெய்வக் குழந்தையாகப் பார்க்க ரெஜினாவும் நகோமியம்மாவும் பூரித்துப்போனார்கள். சீரணி அரங்கம், பெரியார் திடல் ஆகிய இடங்களில் நடந்த அற்புத சுகமளிக்கும் கூட்டத்திற்குத் தவறாது அவனை அழைத்துப் போனார்கள். பிரசங்கங்களைக் கேட்டுக் கேட்டு வளர்ந்தான். ஒவ்வொரு வருட 'விடுமுறை வேதாகமப் பள்ளி'யின் இறுதி விழாவில் வசனம் ஒப்புவித்தலில் மேடையில் அவன் வசனம் சொல்லுவதைக் கேட்டு கூடியிருப்போர் வியப்பிலாழ்ந்தனர். சங்கீதம் 1ஆம் அதிகாரம், 23ஆம் அதிகாரம், 91ஆம் அதிகாரம், 128-ம் அதிகாரம் என சங்கீதத்தில் இருக்கும் சிறப்பு வாய்ந்த அதிகாரங்களின் வசனங்களை எல்லாம் திக்கித் திணறாமல் வருங்காலத்தில் போதகராய் ஆக வேண்டுமென்கிற வாஞ்சையோடு அவர்களைப் போன்றே ஏற்ற இறக்கத்துடன் சொல்லுவான். ''ரெஜினா புள்ள பெர்சானா தினகரன், சாம் ஜெபத்துரை, அருள்ராஜ்

பாஸ்டரல்லாங் மிஞ்சிருவான் போலக்தே'' என்று சொல்லிக் காண்போர் மெய்சிலிர்த்தனர்.

ஆறாம் வகுப்பு முழாண்டுத் தேர்வை எழுதி முடித்திருந்த சமயம் கோடை விடுமுறையில் அவன் தாய்சபையில் அந்த வருட 'விடுமுறை வேதாகமப் பள்ளி' துவங்கியது.

பத்து, பதினைந்து நாள் தேவபிள்ளைகளுக்கு ஆடலும், பாடலும் பைபிள் வசனங்களும் சொல்லிக்கொடுத்து பள்ளி முடியும் கடைசி நாளில் சபையிருக்கும் தெருமுனையில் மேடை அமைத்து தேவனின் துதிபாடும் விதமாகக் கலை நிகழ்ச்சிகள் நடத்தப்படும். பாட்டுப் போட்டி, நடனப் போட்டி, வசனம் ஒப்புவித்தல் போட்டி, ''ஜீவ அப்பம் நானே'' என்கிற பெயரில் நாடகமும் அரங்கேறும். ரெஜினா, அலமேலு என்கிற ஆரிட்டா, ஜோசுவா, கனகராஜ் முறையே சிஸ்டர்கள், ப்ரதர்கள் அடங்கிய குழுவினர் பாஸ்டரய்யாவின் வழிகாட்டுதலில் வருடாவருடம் விபிஎஸ் நிகழ்ச்சியை கோலாகலமாக நடத்துவர். விழா அமைப்பாளர்களில் ரெஜினா முக்கியஸ்தர் என்பதால் மற்றவர்களைக் காட்டிலும் அவனுக்கு ஒரு பிடி சுண்டல், இரண்டு மூன்று கோப்பை 'க்ரேப் ஜூஸ்' அதிகமாகக் கொடுக்கப்பட்டது.

இவ்வருடம் அந்தச் சலுகைகள் மட்டும் அவனுக்குப் போதுமானதாக இல்லை. ஆண்டுதோறும் 'ஜீவ அப்பம் நானே' என்கிற பெயரில் நடத்தப்படும் நாடகத்தில் இயேசு வேடம் அவனுக்கு இம்முறை கிடைத்தே ஆக வேண்டும். விபிஎஸ் ஆரம்பித்த நாளே ரெஜினாவிடம் கறாராகச் சொல்லிப் பார்த்தான். ''சண்டே க்ளாஸ் அக்கா ன்னா சொல்தோ அத்தாங்'' எனச் சொல்லி அவள் விழா ஏற்பாடுகளைக் கவனிக்க சீக்கிரமே வீட்டை விட்டுச் சென்றுவிட்டாள்.

தனியாய்ப் படுத்துத் தேம்பி அழுதான்.

ஹவுசிங் போர்டு வீட்டினுள்ளேயே கழிப்பறை இருக்கிறதென்றாலும் நகோமியம்மாவிற்கு அது தோதாக இல்லை. ஆற்றோரத்தில் காலைக்கடனை முடித்துவிட்டு உள்ளே நுழையும் முன் கையில் எடுத்துப் போன அகன்ற 'பெயின்ட் டப்பாவை' வாசலில் வைத்தாள்.

முந்தானையால் கையைத் துடைத்துக்கொண்டிருந்த நகோமியம்மாவிற்கு தேம்பலொலி கேட்டது. அவனருகில் வேகமாக வந்து முகத்தை ஏந்தி என்ன ஏதென்று விசாரித்தாள். விசாரணையின் முடிவில் இருவரும் சபைக்குப் புறப்பட்டார்கள். உள்ளே நுழைந்ததும் இடது பக்கம் அண்டாவில் ‘ரஸ்னா’ கலக்கிக்கொண்டிருந்த ஆரிட்டா பக்கத்திலிருந்த ரெஜினாவைக் கூப்பிட்டுக் காண்பித்தாள். நகோமியம்மாவை ரெஜினாவுடன் நேரம் செலவிடாதவாறு அவள் கையைப் பிடித்து வேகமாக மாடிக்கு அழைத்துச் சென்றான். மேலே வந்ததும் படிக்கட்டு வாசலையொட்டி இருக்கும் சற்றுப் பெரிய இடத்தில் நடன ஆசிரியர் ஜோசுவாவின் வழிகாட்டுதலின்படி மூன்று சிறுவர்கள், மூன்று சிறுமிகள் முன்னும் பின்னுமாக “தாவீதைப் போல நடனமாடி அப்பாவை ஸ்தோத்தரிப்போம்” என்கிற பாடலின் வரிகளுக்கு ஏற்றாற்போல ஆடுவதற்குக் கை காலை உதைத்துக்கொண்டிருந்தார்கள். அவர்களைத் தாண்டிப் போகையில் “இதெல்லாம் யாருக்கு வேணுங்” என்கிற அலட்சியப் பார்வையுடன் கடந்து நகோமியம்மாவின் கையை விடாமல் நேராக அழைத்துச் சென்றான். சண்டே க்ளாஸ் அக்காவை தூரத்திலிருந்தே நகோமியம்மாவிடம் ஆள்காட்டினான். வருடா வருடம் அவன் இயேசு வேடத்திற்கு இடையூறாக இருக்கும் சண்டே க்ளாஸ் அக்காவை நகோமியம்மா இருக்கும் தைரியத்தில் வன்மத்துடன் நோக்கினான்.

அருகில் நெருங்கியதும் நகோமியம்மா அவளைப் பார்த்து கேட்டாள் “எம்மா பல்லாஸ்பிட்டல்ல வேல செய்தே கண்ணகி …

அது பொண்ணுதான நீ”?”

“ஆமாங்க பாட்டி.”

“உம்பேரு ன்னா?”

“வைலட்டு.”

“ஆங். செரி. ஏம்மா … யேசப்பாவா இவன நடிக்க வெய்யேங். வீட்ல ஒரே தொந்துருவு குத்துனுக்றாங்.”

“பாட்டி, இவன் அய்ட்டு யேசப்பா வேஷத்துக்கு பத்தாது”

“நல்ல கதியாகிதே போன வருஷமும் இதான் சொன்னியாங்?” ரூபனின் முகத்தைப் பார்த்தாள். அவன் ஆமாம் என்பதுபோல் தலையாட்டினான்.

“இந்த வருஷம் நல்லா அய்ட்டாதானமா ஆய்ட்டாங்?”

“பாட்டி, சிலுவய தோளுல வெச்சி குனிஞ்சி நடக்கிறப்போ இன்னும் குள்ளமா தெரிவாங்க பாட்டி.”

“யேசப்பா இன்னா அய்ட்டு இருந்தார்னு யாருக்குமா தெரியுங். எம்புள்ள வசனல்லாம் நல்லாதான சொல்லுவாங். ரூப்னு ஒரு வசனம் சொல்லுடா …”

“அயோ பாட்டி நீங்க பாஸ்டரய்யாகிட்ட பேசிக்கீங்க.”

மேற்பார்வை செய்வதற்காகப் படியேறி சபைக்கு வந்த பாஸ்டரய்யா சண்டே க்ளாஸ் டீச்சரிடம் நகோமியம்மா பேசியதைக்கேட்டு சினங்கொண்டவராய் …

“நகோமி, ஞானஸ்தானம் எடுத்தும் நீ ஒழுங்கா பைபிள் படிக்கிறது இல்ல. தேவனுக்கு உயரம்னுலாம் ஒன்னும் இல்ல. வானம் அவர் சிங்காசனம். பூமி அவர் பாதபடி. பைபிள் வாசிக்கிறதில்லன்னாலும் சபையில செய்தி சொல்லும்போது ஒழுங்கா கேக்குறதில்ல.”

“அய்யா …”

பதிலுக்குக் காத்திராமால் பாஸ்டரய்யா உடன் வந்தவருடன் பேசியபடி நகர்ந்து விட்டார்.

இயேசுவின் வேடம் கிடைக்காதென்று அவனுக்குத் தெரிந்துவிட்டது. கடைசி அஸ்திரத்தைப் பயன்படுத்தியும் தன் ஆசை நிறைவேறவில்லையென ஏக்கத்தில் சுழன்றான். சுழற்சியின் கிறக்கத்தால் சுருண்டு தரையில் விழவில்லை. படிக்கட்டுகளில் வேகவேகமாக இறங்கிப் போக, நகோமியம்மா அவன் வேகத்திற்கு முடிந்த அளவு பின்னாலேயேப் போனாள். அவள் சபையிலிருந்து வெளியேறுகையில் ஆரிட்டா “இது செல்லங்குத்து செல்லங்குத்து உம்புள்ளிய ன்னா கெதிக்கு ஆக்கப்போதோ போ” என்று அண்டா ரஸ்னாவைக் கலக்கிக்கொண்டே ரெஜினாவிடம் சொன்னாள்.

வீட்டுக்குள் நுழைந்ததும் அடுக்கி வைக்கப்பட்டிருந்த சாமன்களை எட்டி உதைத்தான். நீருள்ள குடங்களாய்ப் பார்த்துக்

கவிழ்த்தினான். கதவைச் சாத்திக்கொண்டான். கதவைத் திறக்க கொஞ்ச நேரம் முயற்சி செய்து விட்டு நகோமியம்மா வாசலிலேயே உட்கார்ந்து கொண்டாள். அவன் இவ்வாறு நடந்துகொள்வது வாடிக்கை என்பதால் கவலையின்றி சோர்வுடன் அமர்ந்திருந்தாள்.

மதியம் வீட்டுக்கு வந்த ரெஜினா வீடு இருந்த நிலையையும் அந்த நிலைக்கு என்ன காரணம் என்பதையும் காரணகர்த்தாவின் வாயிலாகவே கேட்டு அறிந்ததும் சுவரோரத்தில் நின்றிருந்த பூந்தொடப்பத்தை எடுத்து அதைத் தலைகீழாகப் பிடித்து அவனை விளாசினாள். மடக்கிவிட வந்த நகோமியம்மாவைப் பிடித்து “எல்லா உன்னாலத்தாங்” என்று ஒரு தள்ளுத் தள்ளி விளாசலைத் தொடர்ந்தாள். வாசலுக்கு அவனை வரவழைத்து தரையில் உப்பைக் கொட்டி அதன் மீது அவனை முழங்கால் போட வைத்தாள். நகோமியம்மாவின் விடாப்பிடியான எதிர்ப்பினால் ஐந்து நிமிடங்களுக்குள்ளாக கொடூரமான முழங்கால் தண்டனை கைவிடப்பட்டது. வீட்டுக்குள் தாங்கித் தாங்கி வந்தமர்ந்தான்.

“ஒழுங்கா எந்த வேசம் குத்தாலுங் நடிப்பென்” என தேம்பிக்கொண்டே வாக்குக் கொடுத்ததன் பேரில் அந்த வருட “ஜீவ அப்பம் நானே” நாடகத்தில் அவனுக்கு சீமோன் வேடம் கிடைத்தது. கல்வாரி மலையில் தேவன் சிலுவையைச் சுமந்து வருகையில் பாதி வழியில் அவரிடம் அதை வாங்கிச் சுமக்கும் கௌரவத் தோற்றம்.

அதற்கடுத்த வருடம் ‘விடுமுறை வேதாகமப் பள்ளி’ நடைபெறவில்லை. அது நடைபெறுவதற்கு இரண்டு மாதத்திற்கு முன்புதான் பாஸ்டரய்யா மாரடைப்பால் காலமாகியிருந்தார்.

அவர் இறந்த சில மாதங்களிலேயே சபையின் ஒழுங்கு முறைகள் வெகுவாக மாற்றம் கண்டிருந்தன. பாஸ்டரய்யாவின் மச்சானாகிய எபினேசரிடம் அதிகாரம் சென்றது. பிரசங்க நேரம் சரியாகக் கடைபிடிக்கப்

பட்டிருக்கவில்லை. தீர்க்க தரிசனமே கண்டிராத ஊழியக்காரர்களை செய்தி கொடுக்க அழைத்து வந்தார். மட்டுமில்லாது அமாவாசை இரவு ஜெபத்தில் சபைக்கு வந்த ஒரு பெண்ணுடன் ஞானஸ்தானத் தொட்டிக்கு மறைவாய் அவர் செய்த சில்மிஷத்தை ஆரிட்டா பார்க்க நேர்ந்தது.

எபினேசரின் ஆட்சி முறையில் ஏற்பட்ட அதிருப்தியாலும் அவர்மீது ஏற்கனவே இருந்த ஒழுங்கின்மைப் புகார்களினாலும் இறைப்பணிகளில் கலந்துகொள்ளாமல் ரெஜினா, ஆரிட்டா, ஜோஸ்வா, கனகராஜ் ஆகியோர் விலகத் தலைப்பட்டனர். ஆனாலும்

தாய்சபையை விட்டு வேறு சபைக்குச் செல்வது முறையல்ல என்பதாலும் பாஸ்டரம்மாவின் முக தாட்சண்யத்திற்காகவும் சபைக்குச் சென்றனர். அவர்கள் மட்டுமில்லாது ராமர் தோட்டத்திலுள்ள பெரும்பான்மையினருக்கு பாஸ்டரய்யா மீதிருந்த மரியாதையும் நம்பிக்கையும் எபிநேசரிடம் உண்டாகியிருக்கவில்லை. பாஸ்டரய்யா கஷ்டப்பட்டு கொஞ்சங் கொஞ்சமாகச் சேர்த்த ஆத்துமாக்களின் கூடாரமது.

ஆயிரத்து தொள்ளாயிரத்து எழுபத்து ஐந்தில் மதுரையிலிருந்து சென்னைக்கு வந்தவர் பால் மோசஸ். அவருக்கு அப்போது

ஐம்பத்தி நான்கு வயதென்று அவராகவே வாக்குமூலம் தந்தாலொழிய யாரும் நம்பாத மாதிரி முகப்பொலிவும் தேகக்கட்டும் கொண்டிருந்தார். மீசை இல்லாமல் மொழுமொழுவென மைதா நிறத்தில் பாம்பே நடிகரின் சாயலில் இருப்பார். எண்ணைய் பிசுக்குடன் தலைமுடி முன்னாலிருந்து இழுத்து தூக்கிவாரி டோப்பா வைத்தது போலிருக்கும். பாலிஸ்டர் துணியில் வெள்ளைச்

சட்டை, வெள்ளைப் பேன்ட், கருப்பு நிற பெல்ட், அதே நிறத்தில் ஷூ. கையில் பைபிளுடன் ஒரு மிஷனரியின் வழிகாட்டுதலின் பேரில் சிந்தாதிரிப்பேட்டையிலுள்ள கூவாற்றை ஒட்டியிருக்கும் ஹவுசிங் போர்டு குடிசை வீடுகளைத் தாங்கியிருக்கும் ராமர் தோட்டத்தைத் தேர்ந்தெடுக்கலானார். முதன்முறையாக அவர் ராமர்

தோட்டத்திற்குள் நுழைந்து மக்களிடம் பேச்சுக் கொடுத்தபோது அவர் தோற்றத்தைக் கண்டு எல்லோரும் பின்வாங்கினார்கள். அஞ்சினார்கள். முத்தமாயாதான் சந்து வழியாக நடந்து சென்ற பால் மோசஸை அழைத்து "யாரு சார் ன்னா வோணுங்?" என்று கேட்டாள்!

"அம்மா உங்களுக்கு இயேசு கிறிஸ்துவை தெரியுமா?"

"யாரு சார் அது?"

"அவர் ஒரு கடவுள். நம்மள ரட்சிக்க வந்தவர்."

""சாமியா?"

"ஆமாம்மா."

"எப்பா தெபேர் நானே ஒரு சாமிதாங். எங்கிட்டே மாங்காளியம்மாகிறா" என்று முத்தமாயா நாக்கை நீட்டியது. முத்தமாயாவின் தலையைக் கையால் வருடியவாறு அங்கிருந்து சென்றுவிட்டார்.

ராமர் தோட்டத்திற்கு தினமும் வந்து அங்குள்ளவர்களுக்கு மோசசய்யா என்று பரிச்சயப்பட்டார். குடிசை குடிசையாகச் சென்று மக்களின் விண்ணப்பத்தைக் கேட்டு ஜெபம் செய்தார். சாப்பாடு செய்வதற்குப் பணமில்லாமல் இருந்தவர்களுக்கு மளிகை உதவி செய்தார். இருண்டு போயிருந்த வீடுகளுக்கு மீன்கார விளக்கு வாங்கப் பணமளித்தார். அவர் செய்த உதவிகளையும், அவர் தோற்றத்தில் இருந்த அந்நியத் தன்மையையும் கண்டு அங்குள்ள மக்கள் அவருக்குப் பெருமதிப்பு தந்தார்கள். அவர் ஜெபம் செய்தால் நோய் பூரணமாகும் என நம்பினார்கள். அந்த நம்பிக்கையுடன் ஜெபம் செய்வதற்காக அவரை அணுகுகையில் தஞ்சமடைந்த எல்லோருக்கும் நோய் சுகமாக ஆரம்பித்தது. ஒரு இளந்தாரி பெரிய மரப்பெட்டியைத் தூக்கிக்கொண்டு தோட்டத்திற்குள் வர அவனுடன் மோசசய்யா வந்தார். மூன்றாவது சந்தில் பெட்டி இறக்கி வைக்கப்பட்டு அதிலிருந்து சிவப்பு, நீலம் ஆகிய வண்ணத்தில் இருக்கும் புதிய ஏற்பாடு நூலை வீடுவீடாகக் கொண்டு போய்க் கொடுத்தார். சிலர் அவரைத் திட்டி வெளியே அனுப்பினார்கள். கிளியாம்பாளும் அதில் ஒருத்தி. வாரவாரம்

ஞாயிற்றுக்கிழமை மாலைப்பொழுதில் தெருவில் நின்று இயேசுவைப் பற்றிப் பிரசங்கம் செய்ய ஆரம்பித்தார். ஒலிப்பெருக்கி இல்லாமல் “என் அன்பான தேவ ஜனமே, வரும் இரண்டாயிரம் வருடத்தில் உலகம் அழியும்னு இந்த பைபிள்ல சொல்லியிருக்கு. இந்த உலகம் அழியிறதுக்கு முன்னாலே தேவனாகிய இயேசு கிறிஸ்து தம் இரண்டாம் வருகையில் இங்கே வருவார். எல்லோரும் ஒரு அல்லேலூயா சொல்லுங்க” என்பார் இடையிடையில்.

ஆரம்பத்தில் மோசசய்யாவால் உதவி அடைந்தவர்கள் மட்டும் அல்லேலூயா என்றனர்.

“தேவனாகிய இயேசு கிறிஸ்து இங்க வருவாரு. இதே ராமர் தோட்டத்துக்கு வந்து தன்னிடம் மனந்திரும்பி ஞானஸ்தானம் எடுத்திருக்கிறவங்கள மட்டும் தன்னோட உள்ளங்கைகளிலே இப்டி ஏந்திட்டு போவாரு ...

“எப்டி ஏந்திட்டு போவாரு?” என்று கூடியிருந்தோரைக் கேட்டு, தாமாகவே கையை ஏரோப்ளேன் மாதிரி வைத்து கீழே இருந்து மெதுவாக மேலே தூக்கிக் காண்பித்தார்.

“ஞானஸ்தானம் எடுக்காதவங்கள, இயேசு கிறிஸ்துவ தன் சொந்த இரட்சகரா ஏற்றுக்கொள்ளாதவங்கள நரகத்துல கொண்டுபோய் போட்டுடுவாரு. அங்க அந்தகார இருள் இருக்கும். பல்லி, வகைவகையான பூச்சிகள், கொடிய ஸர்ப்பம் எல்லாம் இருக்கும். இதெல்லாம் நான் சொல்லல. வேதம் சொல்லுது” என்று ஒருமணி நேரம் தொடர் பிரசங்கம் செய்வார். பிரசங்கத்தின் கடைசிப் பகுதியாக, “யார் யாருக்கு என்னென்ன நோய் இருக்கோ வந்து எங்கிட்ட சொல்லுங்க தேவன் குணப்படுத்துவார்” என்பார். பின்னாட்களில் யார் யாருக்கு என்னென்ன வியாதி இருக்கிறதென்று அவரே வியாதியஸ்தர்களைப் பெயர் சொல்லி அழைத்து நோயிலிருந்து விடுதலை செய்தார். தன் ஜெபத்தின் மூலம் நோய் தீர்த்து குணமடைந்தவர்களை அடுத்த வாரம் சாட்சி சொல்ல வைத்தார். குறிப்பாகப் பேய் பிடித்து, நான்கு கால்களால் தரையில் தவழ்ந்து கத்திக் கூப்பாடு போட்டுக்கொண்டிருந்தவர்களையெல்லாம் தொட்டு உக்கிரமாக ஜெபம் செய்து மயக்கமடைய வைத்தார். சில

நிமிடங்கள் கழித்து அவர்களை எழுப்பினார். ஜெப எண்ணையினால் சிலுவை போட்டுப் பேசச் சொன்னார். அவர்களும் மழையில் நனைந்து தலை துவட்டிக்கொண்டவர்கள் போலப் புத்துயிரோடு பேசியது காண்போரைக் கண் வியக்க வைத்தது.

ராமர் தோட்டத்திற்குள் நுழைந்த ஆறு மாதங்கள் கழித்து மோசசய்யா ராமர் தோட்டத்திலேயே ஒரு வீட்டில் வசிப்பதற்குச் சித்தமானதும் ஊரிலிருந்து மனைவியையும் மைத்துனன் எபினேசரையும் அழைத்து வந்தார். வாரவாரம் அவரது வீட்டிலுள்ள சிறிய அறையிலேயே ஜெபக்கூட்டம் நடைபெற்றது. குங்கும நிற வெல்வட் துணியில் வார்னிஷ் செய்யப்பட்ட மூங்கில் பிரம்பைச் சொருகி முதன்முறையாகக் காணிக்கையும் வாங்க ஆரம்பித்தார்.

மோசசய்யா எல்லோராலும் பாஸ்டரய்யா என்று அழைக்கப்படலானார்.

வீட்டிலுள்ள சமையற்கட்டில் ஒரு சிறிய சிமின்ட் தொட்டி ஏற்பாடு செய்து தேவனை முழுமையாக நம்பி வருபவர்களை அந்தத் தொட்டியில் மூன்று முறை முழுக வைத்து பாஸ்டரய்யா ஞானஸ்நானம் கொடுத்தார். மூன்று ஆண்டுகளாக வீட்டில் ஊழியம் செய்தவர், பக்கத்து வீட்டையும் விலைக்கு வாங்கி மொட்டை மாடி விஸ்தரிப்பாக இருக்கும்படியாக மேஸ்திரியிடம் சொல்லிப் பெரிய மொட்டை மாடி வைத்து வீடு கட்டினார். கீழ் தளத்தில் லௌகீக வாழ்க்கையையும் மொட்டை மாடியில் பந்தல் போட்டு அங்கே ஆன்மிக வாழ்க்கையையும் தொடர்ந்தார். மொட்டை மாடியைச் சபையாக நிறுவினார். வாசப்படிக்கு மேல் நீல நிற இரும்புப் பலகையில் வெள்ளை எழுத்துக்களில் “தேவ கிருபையின் சுவிசேஷ ஜெப வீடு” என்று எழுதப்பட்டு அதற்கு கீழ் ‘யிமீsus நிகூஷீணீநீமீ நிஷீsஜீமீறீ றிக்ஷீணீஹ்மீக்ஷீ பிஷீusமீ’ என்று எழுதப்பட்டு அதற்கு கீழ் போதகர்; பால் மோசஸ் என்று எழுதப்பட்டிருந்தது. போதகர் பால் மோசஸின் புகழ் ராமர் தோட்டத்தைத் தாண்டி சிந்தாதிரிப்பேட்டையில் மட்டுமில்லாது எழும்பூர், புதுப்பேட்டை லாங்ஸ் கார்டன், பெரியமேடு, பல்லவன் நகர், கே.பி. பார்க் ஆகிய வட்டாரத்திலிருந்த

மக்களிடமெல்லாம் பரவியது. ஒரு வருடத்தில் மொட்டை மாடியிலிருந்த கூடாரத் துணியை அப்புறப்படுத்தி நான்கு புறமுள்ள சுவரையும் எழுப்பி தலையில் குடிசை வேய்ந்தார். ஞாயிற்றுக்கிழமை காலையில் ராமர் தோட்டத்தில் சபையிருக்கும் ஏரியாவே சலசலப்புக் கண்டது.

பாஸ்டரய்யா ஆறுமாதத்திற்கு ஒருமுறை மேல்நாட்டுக்குப் பயணித்து அங்கிருந்து வரும்போது வெள்ளைக்காரப் பிரசங்கிகளை அழைத்து சபையில் சுவிசேஷம் செய்ய வைத்து ஊர் மக்களையும் சபையோரையும் பிரம்மிக்க வைத்தார்.

வெள்ளைக்காரர்களும், பாஸ்டரய்யாவும் செய்த அதிசயங்களால் சுற்றுப்பகுதியில் குடும்பத்தில் ஒருவராவது கிறிஸ்தவர்களாக மாறியதோடு ஞானஸ்நானமும் பெற்று வந்தார்கள். பாஸ்டரய்யா ஊரிலில்லாத நேரத்தில் அவர் மைத்துனர் எபினேசர் ஊழியத்தை எடுத்து நடத்தினார். பாஸ்டரய்யா இறந்த தொண்ணூற்றி ஆறாம் ஆண்டு எபினேசர், “இடிமுழக்கம்” எபினேசர் என்கிற பெயரில் போதகராகி சபையைத் தன் கட்டுப்பாட்டுக்குள் முழுதும் கொண்டு வந்தார்.

~

ரூபன் எட்டாம் வகுப்பில் நுழைந்த மாலைப் பொழுது ராமர் தோட்டம் ஐந்தாவது சந்தின் எதிரிலுள்ள மாநகாராட்சி உடற் பயிற்சி மையத்தின் அருகில் புதியதாய் தொடங்கப்பட்ட அம்பேத்கர் இரவுப் பாடசாலையில் சேர்ந்தான். இதற்கு முன்பும்

அங்கு இரவுப் பாடசாலை இருந்ததென்றாலும் முறையாக இல்லை. கட்டணம் கிடையாது. படிக்கும் வகுப்புக்கு ஏற்றாற்போல் மாணக்கர்களைக் குழுக்குழுவாக உட்கார வைத்துப் பாடம் எடுக்கும் முறை இல்லாமலிருந்தது. கல்யாண மண்டபம்போல விசாலமான சீமை ஓடு வேயப்பட்ட இடம். ஓடுகளை இணைக்கும் கம்பிகளில் ஆங்காங்கே ட்யூப் லைட் பொருத்தப்பட்டிருந்தாலும் கொசுத் தொல்லையைச் சமாளிக்கக் கிருஷ்ணாயில் தோய்த்த வெள்ளைப் பேப்பர்

ஒவ்வொரு ட்யூப் லைட்டின் மீதும் கட்டித் தொங்க வைக்கப்படுவதால் வெளிச்சம் போதாது. உட்காரும் தரை குண்டும் குழியுமாக இருந்தது. இவ்வனைத்தும் சீர் செய்யப்பட்டதற்கு முக்கியக் காரணம் அரசியல்வாதிகள் அல்ல. ரிச்சி தெருவில் கடை வைத்துச் சம்பாதிக்கும் ஒரு மார்வாடியின் அன்பளிப்பால் அடிப்படை வசதிகள் சீர்செய்யப்பட்டன. வெறுந்தரையில் சோறு போட்டுச் சாப்பிடக்கூடிய அளவுக்கு சிமின்ட் மொழுகப்பட்டிருந்தது. பத்து இரும்பு நாற்காலிகள், இரண்டு கரும்பலகைகள், ஒரு பிளாஸ்டிக் குடம் ஆகியவை கிடைக்கப்பெற்றன. கம்ப்யூட்டர் சாம்பிராணிகள் மூலம் கொசுக்கள் தொடர்ந்து விரட்டப்பட்டன. பட்டப்படிப்பு தேர்ச்சி பெற்ற பொதுநல விரும்பிகள் முன்பைக் காட்டிலும் அதிக எண்ணிக்கையில் சேர்ந்து பாடசாலையை நடத்தினர். இரவுப் பாடசாலையின் முகப்பில் மாட்டப்பட்டிருந்த அம்பேத்கரின் முகத்தில் புன்னகை சற்று அதிகமாகக் கூடியிருந்தது.

எட்டாம் வகுப்பு மாணவர்களை இருவர் இருவராகச் சேர்ந்து படிக்கச் சொல்லி ஆசிரியர் வற்புறுத்தினார். ஒருவர் படித்துப் புரிந்து மனப்பாடம் செய்து இன்னொருவரிடம் ஒப்பிக்க

வேண்டும். அதில் தவறு இருக்கிறதா என அந்த இன்னொருவர் சரி பார்க்க வேண்டும். அன்றைய தினம் ரூபனுக்கு முபீனா என்றானது. இருவரும் ஒரே பள்ளிக்கூடம் என்றாலும் அப்போது தான் முதன்முறை நெருக்கமாக நேருக்கு நேர் உட்காரும் வாய்ப்பு

அமைந்தது. அவள் கண்களை மூடி பதிலைச் சொல்ல அவன் சரிபார்த்தான். கண்களை மூடி அவள் சொல்லுகையில் பாதியில் மறந்து போன பதபதப்பில் திக்கித் திணறினாள். இவன் எடுத்துக் கொடுக்க “இல்ல இல்ல நீ சொல்லாத, நானே சொல்றேங்” என்று பிடிவாதமாக அவளாகவே யோசித்து யோசித்து ஞாபகம் வந்ததும் ஓர் இளமுறுவலுடன் பதிலைத் தொடர்ந்தாள். அவளின் சிரிப்பு அவனுக்குள் ஊடுருவியதன் விளைவாக அடுத்து அவன் பதில் சொல்ல வேண்டிய தருணத்தில் முற்றிலும் மறந்து எதை

எதையோ உளறினான். அவனுக்குப் பாவம் பார்த்து "பரவால்ல வுட்ரா. சார்கிட்ட நீ ஒப்ச்சதா சொல்லிற்றேங்" என்று சொல்லிவிட்டு இன்னொரு முறை சிரித்தாள். மறுநாளிலிருந்து இரவுப் பாடசாலைக்குக் பேன்ட் போட்டு வர ஆரம்பித்தான்.

~

"ரூப்னு முஸ்லீம் பொண்ண உசார் பண்ணா நீயும் முஸ்லீமா மாற்னுன்டா அதுகூட பர்வால்ல மெயின் பாயின்ட்ட பாதி கட் பண்ணிடுவானுங்கோ" என்று ட்யூஷன்மெட்டான அண்டா உருட்டி அடித்த அபாயமணியையும் பொருட்படுத்தாது தீவிரமாக

முபீனாவைக் காதலித்தான். "தீவிரம்" என அர்த்தப்படுத்துவது, தினமும் அவளுக்காக முகம் கழுவி பவுடர் போட்டு மாலைப் பள்ளிக்குப் போவதைத்தான்.

பள்ளிக்கூடத்தில் வள்ளுவர் கோட்டத்திற்கு சுற்றுலா ஏற்பாடாகியிருந்தது. முபீனா போகிற திசையெல்லாம் அண்டா உருட்டியை தன் நிழலாக வைத்து இவன் முபீனாவின் நிழலாக யாரும் கவனிக்காத மாதிரி பின்தொடர்ந்தான். இவன் குறள்களைப் படிப்பதைப் போல பாவனை செய்கையில் எட்டாம் வகுப்பு மாணவன் காஜாபீர் - முபீனாவின் முறைப் பையன்- சத்துணவுக் கூடத்தில் ஒருமுறை ரூபன் அவளுடன் நெருக்கமாக நின்று பேசினான் என்பதற்கு தண்டனையாகக் கூட்டத்தின் மத்தியில் வைத்து ரூபனை "பளார்" என்று அறைந்தான். பதிலுக்கு ரூபனும் அடிக்க எகிறினான். அதாவது அடிக்க வேண்டுமென்று எகிறவில்லை. கூட்டத்தின் நடுவே ஒரு கௌரவத்திற்காக.

காஜாபீர் ஓங்குதாங்கானவன். 'சிங்கிள்ஸ்' செய்ய நேரிட்டால் தனக்குப் பெரிய அசம்பாவிதம் நேரிடுமென்று அறியாதவன் அல்ல ரூபன். அதனால் அடிக்க தைரியம் வரவில்லை. ஆனால் தன் நண்பன் அடிவாங்கியதைக் கண நேரம்கூடப் பொறுக்க முடியாத யோசேப்பும், அண்டா உருட்டியும், பாலுவும் காஜாபீர்

சீனியர் என்றும் பார்க்காமல் அவன் வயிற்றிலும் முகத்திலும் குத்தினர். சீனியர்களைக் காட்டிலும் அண்டா

உருட்டி வயதிலும்,

உருவத்திலும் பெரியவன் மட்டுமன்றி அவன் வீடு பள்ளிக்கூடத்திற்கு அருகிலேயே இருந்ததால் அவனுக்குச் செல்வாக்கு அதிகம் இருந்தது. யாராலும் அவனை ஒன்றும் செய்ய முடியாது. மறுநாள் தலைமை ஆசிரியர் அலுவலகத்தில் பெரிய பஞ்சாயத்து ஆனது.

அன்று மாலை ரெஜினா ரூபனுக்குப் பெரிய பூசை வைத்தாள்.

அதற்குப் பிறகும் அவன் முபீனாவை விடுவதாய் இல்லை. தனக்குப் பாத்தியப்பட்ட வழியில் அவளை வசியப்படுத்தலாம் என்றெண்ணி … “நல்லவரே, வல்லவரே, வாக்கு மாறாதவரே, வார்த்தையில் உண்மையுள்ளவரே, போதுமானவரே, இரக்கத்தில் ஐஸ்வர்யமுள்ளவரே, ஒத்தாசை வரும் பர்வதமே … உம்மை ஒருவிசையாய் ஒருவிசையாய் மன்றாடிக் கேக்கிறேன் யேசப்பா. கொஞ்ச நாளா நா செரியா ஜெபம் பண்றதுல்ல யேசப்பா. என்ன

மன்னியுங்க யேசப்பா. ஏழு முறை இல்ல எழுபது முறை மன்னிக்கிற தேவன் நீர் யேசப்பா. ஐயா என் ஜெபத்தை ஏறெடும்.

முபீனா பொண்ணு என்ன லவ் பண்ணனும் யேசப்பா. ப்ளீஸ்

யேசப்பா. அதிகாலையில் என்னைத் தேடுகிறவர்கள் கண்டடைவீர்கள் எனச் சொன்னீர்களே ராஜா. என் ஜெபத்தைக் கேளும் ராஜா. முபீனா என்ன லவ் பண்ணனும். நாப்பது நாள் உபவாசம் இருந்து ஜெபிக்கிறேன் ராஜா. என்னை ஏறெடுத்துப் பாரும் ராஜா” இஸ்லாம் மார்க்கம் என்பதாலா தெரியவில்லை. அவன் ஜெபத்திற்கு தேவன் நியாயம் செய்யவில்லை. தேவனுடன் அவனுக்கு ஏற்பட்ட பிளவுகளின் முதல் விரிசல் அது.

## -3-

ராமர் தோட்டம் எட்டுச் சந்துகளாக வகுக்கப்பட்டிருக்கும். சந்துகளின் ஒருமுனை சாலையையும் மறுமுனை கூவத்தின் கரையையும் தொடும். ஒவ்வொரு சந்தின் இடது பக்கம் ABCD என நான்கு ப்ளாக்குகளாகவும் வலது பக்கம் EFGH என நான்கு ப்ளாக்குகளாகவும் ஹவுசிங் போர்டு வீடுகள் வரிசைகட்டி நிற்கும். அதைத் தாண்டியதும் அரசாங்கம் ஏற்கனவே கட்டிக் கொடுத்திருந்த சீமை ஓட்டு வீடுகள். கடவாய்ப்பகுதியில் விளம்பரத் துணிகளை மேற்கூரையாகப் போர்த்தப்பட்டு அவரவர் கட்டிக்கொண்ட குடிசை வீடுகள் இருக்கும்.

அதைத் தாண்டினால் கறுப்புத் திரவம் நதியாக ... எல்லாச் சந்து முகங்களுடன் வேறுபட்டிருப்பது எட்டாவது சந்து. அது கூவத்திற்கு மிகவும் நெருக்கம். ஆகவே, ஹவுசிங் போர்டு வீடுகள் மட்டுமே அந்தச் சந்தில் இருந்தது. ஒவ்வொரு 'ப்ளாக்' வாசலிலும் இருக்கும் முருங்கை நிழல்களின் ரம்மியமான இருட்டு அந்தச் சந்தை எப்போதும் அமைதி கவிய வைத்திருக்கும். ஹவுசிங் போர்டுகளைத் தாண்டினால் புதர்களும், கருவேல மரங்களும் மட்டுமே இருக்கும். சூரியன் கொட்டாவி விட ஆரம்பித்ததும் எட்டாவது சந்தின் ஆள் அரவமற்ற சூழலையும், புதர்ப் பகுதியையும் காமுகர்கள் பயன்படுத்தி வந்தனர். ஓரினச் சேர்க்கையாளர்கள் தாபங்களைத் தீர்த்துக்கொள்ள எட்டாவது சந்து ஏதுவாய் இருந்தது.

கை டாக்கா வாய் டாக்கா போன்றவை கொடுக்கப்பட்டது. பேக் அடிக்க ஜோடியுடன் அவசரமாக புதருக்குள் நுழைந்தனர். டோப்பு அடிப்பவர்களுக்குத் தோதாக இருந்தது. சில சமயம் பகல் நேரங்களில்கூட இவை நடந்தன. எட்டாவது சந்து ஹவுசிங் போர்டுவாசிகள் இதனால் மிகுந்த இன்னலுக்குள்ளாயினர்.

சௌமியன் வளர ஆரம்பித்துவிட்டான். அரசுக் குடியிருப்பு கிடைக்கும்வரை இனியும் இந்தச் சந்தில் இருப்பது நியாயமல்ல என்று பட்டதும் சௌமியனின்

அப்பா லாரன்ஸ் தெரிந்தவர் மூலம் ஏழாவது சந்திலுள்ள டி ப்ளாக் இரண்டாவது மாடி ஹவுசிங் போர்டு வீட்டை வாங்கிப் பால் காய்ச்சினார்.

லாரன்ஸ் மத்திய அரசு ஊழியர். இந்திய அளவில் கேரம் சாம்பியனாக வெற்றி பெற்றதற்காக அரசாங்கம் ஒதுக்கிய ஸ்போர்ட்ஸ் கோட்டாவில் அவருக்கு செய்லில் (SAIL) வேலை கிடைத்திருந்தது. பிள்ளை பிறந்த ஒரே மாதத்தில் அது நடந்ததால் அவனை அதிர்ஷ்டத்தின் அடையாளமாகக் கருதி கவனமாக வளர்த்தார்.

பிள்ளையின் ஒவ்வொரு அசைவும் தன் விருப்பபடியே நிகழ வேண்டுமென விரும்பினார். மத்திய அரசாங்க உத்தியோகத்தைத் தவிர எக்காரணத்தைக் கொண்டும் அவன் வேறு வேலைக்குப் போகக் கூடாது என்பதில் அவர் உறுதியாக இருந்தார்.

ஒன்பதாம் வகுப்புக்குள் நுழையும் வயதுவரை தோட்டத்தில் சிநேகிதர்கள் என்று அவனுக்கு யாருமில்லை. வகுப்பில் ஒரு சிலரிடம் மட்டும் பேசுவதுண்டு.

தன் அப்பாவின் பிரபலத்திற்கு இணையாகத் தோட்டத்தில் யாரும் இல்லை என்று நம்பினான். தவிர, அவன் தாய்மாமன் பூபாலன் சிந்தாதிரிப்பேட்டையில் குறிப்பிடத்தக்க ஆர்டிஸ்ட் என்பதால் அந்தப் பெருமிதமும் அவனைச் சேர்ந்து அழுத்த, தன் குடும்பப் புகழுக்கு நிகராக இல்லாதவர்களின் பிள்ளைகளுடன் நட்புப் பாராட்டுவதில் அவனுக்கு உடன்பாடு இல்லாமலிருந்தது.

தன் வயதையொத்தவர்கள் சந்தில் விளையாடும்போது அவனுக்கும் ஆசையாக இருக்கும். ஓரிரு முறை அவன் விளையாடியதைப் பார்த்ததும் லாரன்ஸ் அவனைக் கடுமையாக அடித்தார். “இங்க கிற புள்ளிங்க கூட சேராதடானு எத்தினி வாட்டி சொல்லிக்கிறேங் … கோட்ரஸ் வாங்கினு சீக்கிரம் இங்கருந்து போனாத்தான் வேலிக்கு ஆவும்” என்று அவனை அடித்ததற்கான முடிவுரையை வழங்குவார்.

சௌமியன் மனதில் இதனாலேயே தான் இவர்களுடன் சேர்ந்து விளையாடும் அளவுக்கு இவர்கள்

மேன்மையானவர்கள் அல்ல என்கிற எண்ணம் வளர்ந்தது. அப்பா சொல்வதில் ஒரு நியாயம் இருப்பதாக அவனே கற்பிதம் செய்து கொண்டு அவர் கட்டளைகளுக்கு மரியாதை செலுத்தி பால்கனியில் நின்று வீடியோ கேம்ஸ் அல்லது எதிர் வீட்டு அண்ணனுடன் ‘ட்ரம்ப் கார்ட்’ ஆடிக்கொண்டிருப்பான்.

ஒருமுறை அவன் வீடியோ கேம்ஸ் பட்டன்களை வெறித்தனமாக விரல்களால் மாறி மாறி அமுக்கிக் கொண்டிருக்கையில் அது கைதவறிக் கீழே விழ, ஏழாவது சந்து வழியாகப் போன பாலு அதைச் சரியாகப் பிடித்தான். பாலுவுடன் துணைக்குச் சென்ற யோசேப்பு, ரூபன் ஆகியோர் வீடியோ கேம்ஸ் எங்கிருந்து விழுந்ததென்று தலையைத் தூக்கிப் பார்த்தனர்.

“ஹே ப்ளீஸ்டா மேல எத்துனு வந்து குடுங்கடா”

“பாலு போவதடா. ஏ உனுக்கு வேணுன்னா கீல வந்து வாய்ங்க்கோடா” என்றான் ரூபன்.

“போங்கடா அத நீங்களே வெச்சுகோங்க” என்று அலட்சியப்படுத்திவிட்டு வேறு பக்கம் பார்வையைத் திருப்பினான்.

பல நாட்களாக வாங்க வேண்டுமென ‘ஐம்பது பைசா கார்டு’ போட்டெல்லாம் சேமித்தும் வாங்க முடியாமல் போன வீடியோ கேம்ஸ் இன்று தனக்குக் கிடைக்கவிருக்கும் மகிழ்ச்சியில் பாலுவின் முகம் மலர்ந்தது. மலர்ச்சியின் தன்மை வெகுநேரம் நீடிக்காமல் அவன் கையிலிருந்த வீடியோ கேம்ஸை பிடுங்கித் தரையில் போட்டான் ரூபன். அது எதிர்பார்த்த அளவு உடையாததால் காலால் மிதித்து தரையில் தேய்த்தான். பதிலுக்குக் கோபப்படுவது தோல்வியை ஒப்புக்கொள்வதற்குச் சமம் என்பதால் உக்கிரமான எதிர்வினைகளன்றி சௌமியன் பால்கனிலேயே அமைதியாக நின்றான்.

சௌமியனும் ரூபனும் ஒரே வகுப்பில் படித்தனர். அவன் அகம்பாவம் ரூபனுக்குப் பிடிக்காது. சத்துணவு சாப்பிடும் மாணவர்களுக்கு அரசாங்கம் இலவசமாகக் கொடுக்கும் டவுசர் குட்டைப் பாவாடையைப் போலிருக்கும். அதை ஒருமுறை பாலு

அணிந்திருந்தபோது சௌமியன் கிண்டலடித்துப் பேச வகுப்பில் ஆரம்பமான பூசலின் ஒரு பகுதியாக வீடியோ கேம்ஸ் சின்னாபின்னமாகியிருந்தது.

சௌமியன் எப்போதும் மதிப்பெண்களில் முதல் இரண்டு இடங்களுக்குள் வருவது வழக்கம். பள்ளியில் அவனுக்கு நல்ல மரியாதை இருந்தது. அவனை மதிக்காதவன் ரூபன் மட்டுமே. சௌமியனுக்கு இது நன்கு தெரிந்திருந்தது. இவன் ஏன் மதிக்கவில்லை என்கிற காரணத்தை அறிய விரும்பாமல் அவனின் தனித்துவத்தின் மீது ஈர்ப்பு ஏற்பட்டு அவனுடன் நண்பனாக முயற்சித்தான். விடுமுறை நாட்களில் அண்டா உருட்டி குழுவினருடன் சேர்ந்து சுற்றுவதாக வாக்குறுதி அளித்தான்.

அவர்களின் நட்புக்கு அச்சாரம் போடும் விதமாக கோடை விடுமுறையும் ஆரம்பித்தது. லாரன்ஸ் வேலைக்குக் கிளம்பிவிட்டு வீட்டு வாசலில் நின்று சௌமியனை வெளியே எங்கேயும் போய் தெருப்பிள்ளைகளுடன் விளையாடக் கூடாது என்று எச்சரித்து அதற்கான உறுதிமொழியை அவனிடம் வாங்கிக்கொண்டதுடன் அதைக் காப்பாற்றுவதற்குத் தன் மனைவி துணையாக இருக்க வேண்டுமெனவும் சொல்லிவிட்டுச் சென்றார். தன் கணவர் பிள்ளையை வளர்க்கும் விதம் பூங்கொடிக்குத் திருப்தியாக இல்லை.

அண்டா உருட்டி, ரூபன், பாலு, யோசேப்பு ஆகியோர் சௌமியன் வீட்டிற்கு வந்து அவனை விளையாடக் கூப்பிட்டார்கள்.

அவன் அம்மா முகத்தைப் பார்த்தான் …

“எங்கடா கூப்புட்றிங்கோ அவன …”

அண்டா பதில் சொன்னான் “பார்க்ல கிரிக்கெட் வெளாடப் போறாங் … அவன்தாங் வெளாட போவ சொல்ல கூப்ட சொன்னாங்.”

“ம்க்கும். அவங் சொல்லுவாங் …” என்றவள் சௌமியனைப் பார்த்து “சௌமி உங்கப்பா ன்னா சொல்ட்டு போய்கிராறு”

“மோவ். போயிட்டு கொந்நேர்த்துல வந்துடுவெங்மா” என்றான். அவள் மறுப்பேதும் சொல்லவில்லை …

“அயியோ எனக்குத் தெரியாதுபா … போனாகூட சீக்கிரம் வந்துன்னோன்னா …”

“ம் …”

நால்வரும் மே தினப் பூங்காவுக்குச் சென்று அங்கு ஏற்கனவே இருந்தவர்களுடன் டீம் சேர்ந்து ‘டபிள் விக்கெட்’ விளையாடினார்கள்.

புதுபேட்டையில் விமரிசையாக ‘காத்தாடி டோர்னமென்ட்’ நடக்க இருப்பதால் அதில் போட்டியாளராகப் பங்குபெற இருக்கும் அண்டா உருட்டியின் அண்ணன் மே தினப் பூங்காவிற்கு வந்து விஷயத்தைச் சொன்னான்.

மாஞ்சா போடுவதற்காக அதில் கலக்க வேண்டிய பொருட்களில் நாய்ப்பீயும் முக்கியமெனவும் அது தனக்குத் தேவையெனவும் அவன் கட்டளையிட்டதன் பேரில் அண்டா குழுவினர் மட்டும் கிரிக்கெட்டைக் கைவிட்டுத் தேடுதல் பணிக்கு ஆயத்தமாக, சௌமியன் மட்டும் தயக்கம் காண்பித்தான்.

“ப்ரெண்டா இர்ந்தா எல்லாத்துக்குங் கூட வர்ணுண்டா … அப்பியே சொன்னேங் இவன்லாங் நம்ளுக்கு வேலிக்கு ஆவ மாட்டான்னு” என்று ரூபன் கடிந்துகொண்டே பாலுவைப் பார்த்தான் …

“யே அதுக்கில்லடா. கிரிக்கெட்டு வெளாடப் போனேன்னு தெரிஞ்சாலே எங்கப்பா ஓவரா பண்ணுவாரு. இதுக்கிலாம் எப்பிட்றா?”

அண்டா உருட்டி சொன்னான், “சௌமி, எங்களுக்கு மட்டுங் ஆசயா. நா ஒன்யுங் எங்க அண்ணனுக்கு கோஸ்ரம் போலடா … டோர்னமென்ட்ல சிந்தார்பேட்ட ஜெய்ச்சாதானடா நம்ளுக்கு கெத்து. நம்ம ஜெய்க்கணுன்னா மாஞ்சா மல்ச்சமா போட்டாதான்டா வேலிக்கு ஆவுங். நீ வர்தாருந்தா வா. நாங்க போறோங்” என அண்டா சொல்ல ரூபனும் பாலுவும் அவனைப் பின்தொடர்ந்தார்கள். சொல்லப் போனால் ரூபனுக்கும் இந்த விஷயமாகச் செல்வதில் உடன்பாடில்லை. ஆனால்

அவன் காதல் சம்பந்தமாக அண்டா உருட்டியின் தேவையை உணர்ந்திருப்பதால் செல்லத் துணிந்தான்.

"இருங்கடா நானுங் வரேங். ஆனா நா அத எடுக்கலாங் மாட்டேங். சும்மா உங்க கூடா வேணா வரங்" என்கிற உடன்படிக்கையுடன் அவர்களுடன் சென்றான்.

நால்வரும் தெருத் தெருவாகத் தரையை மோப்பம் பிடித்துத் தேடியும் நாய்ப்பீ கிடைத்தபாடில்லை. மின் கம்பங்களின் கீழ் பார்த்தால் கிடைக்குமென்கிற சௌமியனின் யோசனையும் எடுபடவில்லை.

"ஏ யார்ரா இவங். நாய் ஒன் பாத்ரூம் தான்டா கரண்ட் கம்பத்தாண்ட போவும். ட்டூ பாத்ரூம்லாங் வேற எங்கனாதான்டா போவுங் ..." என்றான் ரூபன். சௌமியனின் சில நொடி மௌனத்தில் வெற்றியைச் சுவைத்துக்கொண்டிருந்த ரூபனிடம் அண்டா உருட்டி சொன்னான், "அப்போ நாய் டூ பாத்ரூம் எங்க போவுங்னு நீதாங் ஜெபம் செஞ்சி கண்டுபுச்சி குடெங்."

"டேய் அண்டா" என்றதோடு சரி. முழுக் கோபத்தையும் அவனிடம் வெளிப்படுத்த முடியாத உன்மத்த நிலையில் ரூபன் இருந்தான்.

யோசேப்பு இந்த தேடுதல் வேட்டையில் அங்கிங்கு கிடைத்த சிகரெட் அட்டைகளைச் சேகரம் செய்துகொண்டு வந்தான். சாயுங்காலம் 'பச்சா' விளையாடுவதற்குத் தேவைக்கு அதிகமான சொத்து தன்னிடம் இருப்பதை நினைத்துப் பூரித்து வந்தான். அவனுக்கும் நாய்ப்பீயின் மீது பொருட்டே இல்லாமலிருந்தது.

எல்லோரும் சோர்ந்துபோய் சிந்தாதிரிப்பேட்டை காவல் நிலைய வாசலில் இருக்கும் மரத்தின் நிழலில் இளைப்பாறுகையில் பாலு அண்டாவிடம் சொன்னான், "அண்டா, பேசாம நீயே பீ பேண்ட்டு நாய்ப்பீனு சொல்லி உங்க அண்ணங்கிட்ட குத்துர்றா அவ்னுக்கின்னா தெரியவாப்போது?"

அண்டா பாலுவின் தலையில் கொட்டுவதற்கு அவனை நெருங்க, பாலு சுதாரித்து நகர்ந்துகொண்டான். "மகன, தவுடாசோறு மாட்டு உனுக்கு இருக்குது."

“ஏ, அவங் சொல்றதுங் நல்ல ஐடியாதான”

“யார்ரா இவனுங்கோ … நாய்ப்பீ சிமின்ட் கலர்ல இருக்குண்டா. பாத்தாலே எங்க அண்ணங் கண்டுபுச்சிடுவாங்.”

“செரி நீ பீ பேளு. அது மேல லைட்டா சிமென்ட்ட போட்டு பெரட்டி உங்க அண்ணங்கிட்ட எத்னுபோய் குத்துடு.”

“மகன பாலே … கிட்ட மாட்ன சாவச்சிடுவெங் உன்ன …”

என்று நாக்கை மடக்கி அண்டா பாலுவை எச்சரித்தான்.

“ன்னாட இது நம்ம ஏரியால ஒருத்தரு வீட்ல கூட நாய் வளக்க மாட்றானுங்களே” என்று ரூபனின் முனகலைக் கேட்டதும் பாலு சொன்னான் …

“ஏ இப்பதான்டா ஞாபகம் வருது … நம்ம காளமேகம் டாக்டர் வீடுகிதுல, அவங்க வீட்ல பெரிய நாய் ஒண்ணு வளக்கிறாங்கடா. கன்னுக்குட்டி மாரி இருக்குங். வோணா போய் கேட்டுபாக்கலாமா?”

சௌமியனுக்கு வீட்டுக்கு எப்போது போவோம் போலிருந்தது.

“வாங்க போலாங்” என்று அண்டா உருட்டி புத்துயிர் பெற்றான்.

டாக்டர் வீட்டு வாசலை நெருங்கியதும் ஒவ்வொருத்தராகப் பதுங்கிக்கொண்டார்கள் அண்டா உருட்டி மட்டும் டாக்டர் வீட்டு காலிங் பெல்லை அழுத்தியதும் நாய் குரைக்க ஆரம்பித்தது. நாய்க் குரைப்பின் சத்தம் காதில் விழுந்ததும் அண்டா பாதி வெற்றியை அடைந்த விதமாய்த் தன் நண்பர்களிடம் கட்டை விரலை உயர்த்திக் காண்பித்தான்.

பால்கனியிலிருந்து டாக்டரின் மகள் எட்டிப் பார்த்தாள். இவர்களின் சம வயது அவளுக்கிருக்கும்.

அவள் எட்டிப் பார்த்ததும் பதுங்கி இருந்தவர்கள் தங்களின் இருப்பை இன்னும் சுருக்கிக்கொண்டார்கள்.

“என்ன வேணும்?” என்றாள்.

அண்டா தலையை அண்ணார்ந்துப் பார்த்து அவளிடம் சொன்னான் “உங்க வீட்ல ஒரு நாய் இருக்குதுல அதோட டாய்லட் வேணுங்க” என்றான்.

“என்னது … எதுக்கு?”

“காத்தாடிக்கு மாஞ்சா போட்றதுக்கு” என்றதும் அவள் “மம்மீஈஈஈ” என்று உள்ளே போனதும் வீட்டு அம்மாள் பால்கனியில் தோன்றி “என்னப்பா என்ன வேணும்?” என்றாள்

“ஒண்ணு இல்ல மேடம். உங்க வீட்டு நாயோட டாய்லெட் வேணுங்.”

“ஏன்டா அது பேரு நாய்னு வந்து உங்கிட்ட சொல்லுச்சா?” என்றாள்

“அது நாய் கொரைக்கிற சவுன்ட் மாரிதான கேட்டுது …” என்று அண்டா டாக்டரம்மாவுக்குக் கேட்காமல் முணுமுணுத்தான்.

“சொல்லுடா. எதுக்கு உனக்கு அதோட டாய்லெட்டு?”

“இல்ல. எங்க தாத்தா நாட்டு மருந்து கட வெச்சுக்கிறாரு. ஒரு மருந்துத் தயாரிக்க எங்கனா நாய்ப்பி கெச்சா எத்துனு வர சொன்னாரு.”

“ம்” என்றவள், “அது காலைல வாக்கிங் போற அப்பவே மோஷன்லாம் போய் இருக்குமே.”

“எங்க வாக்கிங் கூட்னு போவீங்க” என்றான் அண்டா.

“மே டே பார்க் இருக்கில்லையா … அங்க போ இருக்கும்” என்றவளிடம் “தாங்க்ஸ் மேடம்” எனச் சொன்னான். அண்டா அங்கிருந்து நகர்ந்து போகும்வரை அந்த அம்மாள் பால்கனியிலிருந்து உள்ளே போகவில்லை.

உடன் வந்த நண்பர்களை வீட்டுக்குப் போகச் சொல்லி அண்டா மே தினப் பூங்காவை நோக்கி நடந்தான்.

மூர் மார்க்கெட்டுக்கு அருகே உள்ள விக்டோரியா ஹாலில் சாயுங்காலம் லாரன்ஸுக்கு மேட்ச் இருப்பதால் அலுவலகத்திலிருந்து மதியமே கிளம்பி வீட்டுக்கு வந்துவிட்டார். சௌமியனை வெகுநேரம் காணவில்லை

என்பதால் வெறியுடன் அவனுக்காகக் காத்திருந்தார். அவனை அனுப்பி வைத்ததற்கான பெறுமானத்தை பூங்கொடி அவரிடம் வாங்கி மூலையில் உட்கார்ந்திருந்தாள்.

நேரங்கழித்து வீட்டுக்கு வந்தவன் வாசலிலேயே நின்றுகொண்டிருந்த அப்பாவைப் பார்த்துத் திகைத்தான். அவர் அவனை ஏதும் விசாரிக்காமல் தன் பேன்ட்டிலிருந்த பெல்ட்டை உருவி அடிக்க வர அவன் திபுதிபுவென்று கீழே இறங்கி படிக்கட்டுகளில் ஓட அவன் வேகத்திற்குப் பின்னாலேயே ஓடி அவனை அவர் பிடித்த உடன் சந்து என்றும் பார்க்காமல் பெல்ட்டை சுழற்றிச் சுழற்றி அவன் கால்களில் அடித்தார். அவன் ஓடிவிடாமலிருக்க ஒரு கையால் அவன் தலைமயிரைக் கொத்தாகப் பிடித்தவாறே அடித்தார். மடக்கிவிட வந்தவர்களைப் பொருட்படுத்தவில்லை. சத்தம் கேட்டுக் கீழே வந்த பூங்கொடிக்கும் அடி விழுந்தது. அந்த வழியாய் வந்த பூங்கொடியின் தம்பி பூபாலன் அவர் அடிப்பதைப் பார்த்ததும் ஓடிவந்து லாரன்ஸ் கையிலிருந்த பெல்ட்டைப் பிடுங்கி சௌமியனைத் தன் வீட்டிற்கு தூக்கிக்கொண்டு போனான்.

அன்றிரவு பூங்கொடி வற்புறுத்தி அழுத பின்னரும் சௌமியன் சாப்பிடவில்லை. தோட்டத்திலுள்ள பிள்ளைகளுடன் சேர்ந்து சுற்றித் தன் மகன் கெட்டுப் போய்விடுவனோ என்கிற சிந்தனையில் நொந்து நொய்ந்து போயிருந்ததால் ஆட்டத்தில் கவனம் செலுத்த முடியாமல் தோற்றுப்போய் வீட்டுக்கு வந்தார் லாரன்ஸ்.

சாப்பிடாமல் ஒருக்களித்துத் தூங்கிக்கொண்டிருந்த மகனின் கால்களைத் தொட்டு மெல்ல நீவினார். அவன் தூங்கவில்லை. கண்களிலிருந்து நீர் கசிந்து மூக்குத்தண்டின் மேல் ஊடுருவியது. பூங்கொடி அவருக்கு சொம்பில் நீர் கொணர்ந்தாள்.

தண்ணீரை வேண்டாமென மறுத்து சௌமியனின் முகத்தருகே போய் அவன் கன்னத்தைத் தொட்டார். அவன் மறுபக்கம் திரும்பிப் படுத்துக்கொண்டான். அவர் கையைக் கொண்டு அவனின் இன்னொரு பக்கம் கன்னத்தைத் தொட்டதும் அவன் முகத்தைக் குப்புறச் சாய்த்துக்கொண்டான். அவர் அவன் பின்னந்

தலைமுடியைத் தடவிக்கொண்டே சொன்னார், “டேய் சௌமியன், கோய்ச்சுக்காதடா … நம்ம தோட்டத்துக்குப் பசங்க கூட சேந்து சுத்துனா நீயும் கெட்டுப் போய்டுவடா. நீ நல்லாப் படிக்கணுன்டா. அப்பாவுக்கு கேம் இருந்துது அப்பாய்ன்மென்ல கவர்மென்ட் வேல குத்தானுங்கோ. நீ கேரமயே தொட மாட்ற. நல்லாதாங் படிக்கிற. ஆனா நம்ம ஏரியா புள்ளிங்கோகூட சுத்துனா வேலிக்கு ஆவதுடா. மார்கெட் பசங்கக் கூட ப்ரெண்ட்ஷிப் வெச்சுக்கோ. அங்க போய் டூஷன் சேரு. இன்னுங் நல்லா படி. அப்போ தானடா உனுக்கு பேங்க்ல ரயில்வேலலாங் ஆபிசர் வேல கெடைக்குங்.”

அவன் தலையைக்கூட அசைக்கவில்லை குப்புறப்படுத்தவன் குப்புறவே கிடந்தான். “புள்ள சாப்டானாடி?” என்று பூங்கொடியைப் பார்த்துக் கேட்டார்.

“உங்கூட சேந்துதாச்சே அது வெறுஞ்சிலாக்கியப் புச்சது? எப்டி துன்னுங் …”

“ப்தூ. சோத்தப் போட்னு வாடி எம் புள்ளிக்கு நா ஊட்றேங்.”

அவனை எழுப்பி உட்கார வைப்பதற்கு அரும்பாடு பட்டார். உட்கார்ந்த பின்னரும் வாயைத் திறக்கவேயில்லை. சோற்றுருண்டையை அவன் வாயருகே கொண்டுபோய் அவனைக் கெஞ்சினார்.

“செரிப்பா இவனுங்கூடவே வெளாடு. ஆனா ரோட்டாண்டப் போவக் கூடாதுன்னா. நம்ம வீட்டுக்குக் கூட கூட்னு வந்து வீட்டுக்குள்ளியே வெளாடுங்க ன்னா” என்று அவன் முகத்தைப் பார்த்தார். அவன் எச்சிலை விழுங்கினான். இதில் ஓரளவு சம்மதம் போலத் தெரிந்தது.

~

தங்களுடனான சேர்க்கையினால் சௌமியனுக்கு நேர்ந்த இன்னல்களை அறிந்தபோது ரூபன் அவனை நண்பனாக ஏற்றுக்கொள்வதற்கு மனதளவில் தயாரானான்.

சௌமியனின் வேண்டுகோளை ஏற்று அவன் வீட்டிலேயே கேரம்போர்டு ஆடுவதற்கு ரூபனும்,

பாலுவும் மட்டும் தினமும் சென்றார்கள்.

பாலுவை ஆட்டத்தில் சேர்க்காமல் அவர்களிருவர் மட்டும் ஆடிக்கொண்டிருந்தார்கள். தேநீர் போட்டுக் கொண்டிருந்த பூங்கொடி கேட்டாள், “ன்னாடா அப்பத்லந்து பாத்துனுகிறேங் நீங்க ரெண்டு பேரு மட்டுங் வெளாடின்னுகிறிங்கோ அவ்ன சேக்குவே மாட்றீங்ளே?”

சௌமியன் சொன்னான் “எமோவ் கம்னுரு. அவங்கிட்ட ஸ்டைகர் போனா திருப்பி எங்ககிட்ட வருவே மாட்டுது. எல்லாக் காய்னயுங் சுருக்கா போட்டுறாங்.” அவன் சொன்னதை ஆமோதிக்கும் விதமாக, “ஆமாமாங். செர்ர்ரியா ஆர்றாங். லாரன்ஸப்பா வந்தா சொல்ணுங்” என்றான் ரூபன்.

ரூபன் சொன்னதின் அர்த்தத்தை உள்வாங்காமல் “ஆஆங் … அவ்ருன்னா ஆட்டக்காரு” என்று ராகம் இழுத்தாள் பூங்கொடி.

பாலு, ரூபனுக்கு ஆட்ட நுணுக்கம் ஒன்றைச் சொல்லிக் கொடுத்துக்கொண்டிருந்தான்.

லாரன்ஸ் வேலை முடித்து வீட்டுக்கு வந்து கைகால் கழுவி லுங்கிக்கு மாறியதும் கண்களை மூடிக்கொண்டு இரு கைகளாலும் தன் பிறப்புறுப்புப் பகுதியைச் சுற்றி கடற்கரையில் மண் தோண்டுவதுப் போல தோண்டினார். ரூபன் அவர் செய்வதைப் பார்த்து ரகசியமாகச் சிரித்தான். சௌமியனுக்கு வெட்கமாக இருந்தது. இதிலிருந்து விடுபட தன் அப்பாவிடம் இருக்கும் திறமையை முன்னிலைப்படுத்த வேண்டுமென அவரிடம் பாலுவைப் பற்றிச் சொன்னான்: “எப்போவ், பாலு சூப்பரா ஆட்ராம்ப்பா கேரமு.”

“அயியோ அப்டிலாங் இல்லப்பா. சும்மா சொல்றாம்பா.”

“இல்லப்பா சௌமி நெஜிமாதா சொல்றாங்.”

மண் தோண்டிய இடத்தில் வேகத்தை மட்டுப்படுத்தி ஒத்தடம் கொடுத்தபடியே மூவரின் பேச்சையும் கேட்டுக்கொண்டிருந்த லாரன்ஸ் சொன்னார், “எங்க அவங்கிட்ட ஸ்டைகர குடு.”

பாலு ஸ்டைகரை வாங்குவதற்கு வெட்கப்பட்டான். உடல் நெளிந்தான்.

“ஏ வாங்குடா ஸ்டைகர ... சௌமி காய்ன் செட் பண்ணு.”

“அயிய எனுக்கு காய்ன் செட் பண்ணத் தெரியாதுப்பா” என்று போர்ட்லிருந்து கைகளை விலக்கிக்கொண்டான்.

“ஒரு ஸ்டேட் ப்ளேயர் புள்ளிக்கு காய்ன் செட்டப் பண்ணத் தெர்லனு சொல்றியேடா. வெளிய கிளிய சொல்றாத. சூத்தால சிரிப்பானுங்கோ” என்றார் லாரன்ஸ்.

அதற்குள் பாலுவே காய்களை அடுக்கிவிட்டு லாரன்ஸ் முகத்தைப் பார்த்தான். அவன் வேகவேகமாகக் காய்கள் அடுக்கிய லாகவத்தைக் கவனித்தாலும் அது குறித்து ஏதும் பாராட்டாமல் “ஸ்ட்ரோக் அட்றா” என்றார்.

வலது தோள்பட்டையை சற்று மேலுயர்த்தி தலையை கீழ்சாய்த்து கண்களைக் கூர்மைப்படுத்தினான் பாலு. நடுவிரலைத் தவிர மற்ற விரல்கள் ஸ்ட்ரைகரை அணைத்திருந்தன. பிடியை அழுத்தியதும் இப்போது நடுவிரலாலும் சிறிய தொடுதலுடன் ஸ்டைகரைத் தடவி தடவி இலக்கிற்குக் கொண்டுவந்தான்.

“ஏ ஆட்றா எவ்ளோ நேரம்?” என்றான் சௌமி.

“ஏ கம்னு இர்றா” என்றார் லாரன்ஸ்.

எதிர்த் தரப்பிலுள்ள குழிகள் இரண்டிலும் காய்கள் பிரிந்து போய் விழுந்திருந்தன. அடுத்த காய்களைப் போடாமல் லாரான்ஸைப் பார்த்தான். “அப்டியே ஆற்றா” என்றார்.

உடலை ஏற்றாற்போல் வளைத்துக்கொண்டு அதில் திருப்தி ஏற்பட்டால் மட்டுமே குறி பார்ப்பது, பிறகு அந்த காயைப் போட்டதும் ஸ்டைகர் தனக்குச் சாதகமாக அடுத்து என்ன செய்ய வேண்டுமென்பது குறித்த சமயோசிதத்துடன் அவன் ஆடிய விதம் லாரன்ஸை ஆச்சரியப்படுத்தியது. ஏதோ பேச வாயெடுத்த ரூபனை ஆள்காட்டி விரலால் அமைதிப்படுத்தினார்.

தொடர்ச்சியாக ஏழாவது காயைக் குழிக்குள் தள்ளத் திட்டம் போட்டு அவன் ஸ்டைகரை விரல்களிருந்து

விடுவதற்கும் சமையற்கட்டிலிருந்து பூங்கொடி “அயோ பெர்ச்சலி” கத்துவதற்கும் சரியாக இருக்க, அவன் இலக்குத் தவறியது.

“அடிங்கோத்தா நாராக் கூதி” என்று லாரன்ஸ் போட்ட சத்தத்தில் கையிலிருந்த குண்டானை கீழே போட்டாள் பூங்கொடி. குண்டானிலிருந்த தண்ணீர் தரையில் கொட்டி கேரம் போர்டை நோக்கிப் பாம்பு போல ஊர்ந்து வந்தது. அவசரமாக அதை எடுப்பதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

~

மறுநாள், வேலையிலிருந்து வந்து உடற்புத்துணர்ச்சி பெறும் வேலைகளை முடித்துக்கொண்டதும் சட்டை பேன்ட் மாட்டிக்கொண்டு சென்ட் பாட்டிலைத் திருகி திருகி ‘கஸ்க் கஸ்க் கஸ்க்’ என்று அதைக் கொண்ட கையால் காற்றில் வயலின் வாசித்தார்.

“ஒரு நாளிக்கு எத்தினிவாட்டிதான் இத அச்சிபியோ … என்று சொன்ன பூங்கொடியை அவர் பொருட்படுத்தவில்லை.

நேற்றே சொல்லியிருந்தபடியால் பாலு தயாராக இருந்தான்.

“போலாமாடா”

“ஆங் போலாம்பா”

லாரன்ஸும் பாலுவும் வீட்டிலிருந்து கிளம்பினார்கள்.

ஒருவழியாகத் தான் பிரத்யேகமாக யாருடன் நட்புக்கொள்ள வேண்டுமென விருப்பப்பட்டானோ அதற்கே உண்டான நேரம் அமைந்ததை எண்ணி சௌமியன் மகிழ்ந்தான். ரூபனும் சௌமியனும் பால்கனியில் கதைபேச உட்கார்ந்தார்கள். சந்திலிருந்து மறையும்போது பாலு இவர்கள் பக்கம் திரும்பி டாட்டா காட்டினான்.

~

ரெக்ஸ் தெருவிலுள்ள மாசிலா வீட்டிற்கு பாலுவை அழைத்துச் சென்றார் லாரன்ஸ். வாசலில் நின்றவாறே

“மாசிலா மாசிலா” என்று குரல் கொடுத்தார். அவர் மனைவி உள்ளிருந்தே

“யா … ரதெ” என்றாள். “லாரன்ஸ்மா” என்றார். போட்டது போட்ட மேனியே வெளியே வந்து …

“கோயிச்சிகாதணா. கொரலு யார்தோ … ன்ச்சி உள்ள வாணா.”

“இருக்கட்டும்மா மாசிலா ல்ல?”

“பேங்ளூர்லந்து அவர பாக்க ஆளு வந்துகிறாங்கனு இப்போ தான் நேரு ஸ்டேடியத்துக்கு கூட்னு போனானுங்கண்ணா.”

“ஆங் அப்டியா …”

“ம்க்குண்ணா … இது யார் பையங்?” என்றாள் குரல் தாழ்த்தி.

“எம் பையன் தோஸ்த்து இவரு …”

பாலு சிரித்தான்.

“செரிமா மாசிலா வந்தா வீட்டாண்ட வர்சொல்லு” என்று சொல்லி இருவரும் கிளம்பிவிட்டார்கள்.

இரவு ஒன்பது மணி இருக்கும். மாசிலா நிறைபோதையுடன் தோட்டம் நோக்கி நடந்து வந்தார். அவருக்குத் துணையாக அவர் சிஷ்யன்களுள் ஒருவனைக் கூட்டிக்கொண்டு வந்தார்.

மாசிலாவின் முழுப்பெயர் மாசிலாமணி. சிந்தாதிரிப் பேட்டையில் கேரம் ஆட்டத்தின் மூலமாக அரசாங்க உத்தியோகம் கிடைத்திருக்கும் பெரும்பான்மையோருக்கு முதன்மைக் காரணமாக விளங்கக்கூடியவர் மாசிலா. இவருக்கு

ஸ்டைகரைத் தொட்டு கேரம் ஆடத் தெரியாது. ஆனால் ஆட்ட நுணுக்கங்களை இவர் அளவுக்குத் தெரிந்து வைத்திருப்பவர்கள் சிந்தாதிரிப்பேட்டையில் கிடையாது. மாவட்ட, மாநில, உலக அளவு போட்டிகளுக்கெல்லாம் சிந்தாதிரிப்பேட்டையிலிருந்து கலந்துகொண்டு வெற்றி வாகை சூடிய பலருக்கு இவரின் யோசனைகளே உரமாகியிருக்கின்றன. தன் வீட்டு மொட்டை

மாடியிலேயே கொட்டகை போட்டு மூன்று போர்டுகள் வைத்து சொல்லிக் கொடுத்துவருகிறார். தமிழ்நாடு கேரம் அசோஷியேஷனில் இருந்து தொழில்முறைப் பயற்சியாளராக சேர்வதற்கு மாசிலாவுக்கு அழைப்பு வந்த போது அசோசியேஷனில் தலைவராய் இருக்கும் நபரின் அரசியல் விளையாட்டைப் பார்த்துக்கொண்டு தன்னால் பொறுத்திருக்க முடியாது என்று தன்னைத் தேடி வருபவர்களுக்கு மட்டும் சொல்லிக் கொடுக்கவே விருப்பம் என்று போக மறுத்துவிட்டார்.

ரெக்ஸ் தெருவில் ‘போர்ட் ரூம்’ வைத்து ‘பெட்டிங்’ ஆசையைத் தூண்டி பணம் பார்க்கும் சித்திரைவேலுக்கும் மாசிலாக்கும் ஒருமுறை கைகலப்பு ஏற்பட்டதில் சித்திரைவேலு மாசிலாவின் மீது ஒரு விறகுக்கட்டையைத் தூக்கி அடித்தான். அவரின் வலது தோளெலும்பு உடைந்து அந்தக் கையே முன்பளவு ஊக்கத்துடன் செயல்படாமல் பெயருக்காக அவருடன் இருந்தது. அவர் நடக்கும்போது வலது கை அசையவே அசையாது. இடது கையை மட்டும் விசிறி விசிறி நடப்பார். அந்த நடையில் ராமர் தோட்டம் நோக்கி நடந்து வந்தார்.

ஹவுசிங் போர்டுக்கு உள்ளே போகாமல் கட்டிடத்திற்கு வெளியே நின்று “லாரா லாரா” என்று குரல் கொடுத்தார். பூங்கொடி பால்கனியில் வந்து எட்டிப் பார்த்தாள்.

“வா மாசிலண்ணா மேல வா.”

“இருக்கட்டுமா. பூபாலன பாத்தா ரெண்டு பசுங்க்ள அனுப்ப சொல்லேங். நம்ம செவுத்தாண்ட கொஞ்ச வேலக்கீது.”

“ஆங் சரிணா.”

“லாரா வீட்டாண்ட வந்தாப்லயாங் சம்சாரம் சொல்லுச்சு ...”

“ஆங் தோ கீழ எறங்குறார்ணா.”

லாரன்ஸ் டவலை பொன்னாடை போர்த்திக்கொண்டு போவதுபோலப் போட்டுக் கொண்டு கீழிறங்கிப் போனார்.

மாசிலா ஒரு சல்யூட் அடித்தார். லாரன்ஸும் பதிலுக்கு ஒரு சல்யூட் அடித்தார். லாரன்ஸ் நெருக்கத்தில் வந்ததும் கேட்டார்.

“ன்னா லாரா ன்னா மேட்ரு … வீட்டாண்ட வந்தியாங்?”

“ஆங் … அது இருக்கட்டுங் … ன்னா கை பர்வால்லியா உனுக்கு?”

“பர்வால்ல லாரா, தெவ்டியா புள்ளிக்கு கை சீதனம் புச்சிகினு போடு ஈரமாவுதுன்னு போர்ட்ரூம் உள்ளியே சேக்க மாட்டானுங்க அவன. அந்த பாட டெய்லி வீட்டுக்குக் கூட்னு போயி வெதுவெதுனு தண்ணி வெச்சு கைய தொச்சிவுட்டு சுண்ணாம்புத் தடவி அனுப்பி வுடுவெங் … ங்கோத்தா அது இப்போ இன்னாடான்னா எங் வூட்டு எதிர்க்கவே போர்ட்ரூம் எத்து பசங்கள பெட்டிங் ஆட வெச்சி பசங்க கேமயே நாசனம் பண்ணினுகிறாங் … அவருக்கு இருக்குது … பெட்டிசன் எய்திப் போடப்போறேங் பாத்துனே இரு” எனச் சொல்லி மாசிலா மூச்சிரைத்தார். சமீபகாலமாக அவருக்கு நிறைய மனஉளைச்சல் கொடுத்துக்கொண்டு வரும் சித்திரை வேலுவைப் பற்றி பேச நேர்கையிலெல்லாம் அவர் உணர்ச்சிவசப்பட்டார்.

ஏன்தான் கையைப் பற்றி விசாரித்தாமோ என்றிருந்தது லாரன்ஸ்க்கு. அவர் சொன்னார்.

“வுடு மாசிலா பாத்துக்லாங்.”

“ஆமா. ங்கோத்தா பிலுக்கா பய்யன் அவங். அத வுடு … ன்னா மேட்ரு லாரா தேடினு வந்தியாங் சம்சாரம் சொல்லுச்சி.”

“எம்பையங் தோஸ்த் ஒருத்தங்கிறாங் … நம்ம வீட்ல போடாடசொல்ல கேம பாத்தேங் மாசிலா … மெர்ச்சலாய்ட்டேங் … ன்னா பிங்கரிங் தெர்மா?”

“அப்டியா” என்றார் மாசிலா.

“ஆமா மாசிலா. அன்ருகட்டு, சிசர்லாங் அடிக்கிறப்போ பாடி மூமென்ட்ல பாக்னுமே அப்டியே நம்ம ஆரக்கிராஜ்தாங் போ.”

“ஆங்” என்ற மாசிலா, “எப்டி சப்பாங்கால் போட்னு ஆடுனானா, இல்ல சிட்டிங்கா?” எனக் கேட்டார்.

“சப்பாங்கால்தாங்.. வீட்ல சும்மா ஆடின்தானுங்கோ …

பாத்தேங் … பையங் கேமு சித்ரப் பசங்களுக்குத் தெரிஞ்சா ஜூதுக்கு தூக்கினு போய்டுவானுங்கனுதாங் உங்கிட்ட கூட்னு வந்தெங்”

“வாஸ்தவங்தாங். உனுக்கு காய்ல்ல டூட்டில … பையன வீட்டாண்ட அனுப்பி வுடு … ஆமா யார் பையன் அவங்?” என்ற மாசிலா பெரிய ஏப்பம் விட்டு நெஞ்சைத் தடவினார்.

“கூவத்தான்டா கல்பட்ரைல வேல செய்றாங்ல தவுடாசோறு அவன் பையங்” என்றார்.

“ஆங் அப்டியா பருவால்லியே காய்ல்ல அவன வரசொல்லு. செரி லாரா நா வரேங் நெஞ்சுக் கரிக்குது” என்றார்.

மாசிலாவுடன் வந்த இளைஞனைப் பார்த்து லாரன்ஸ் சொன்னார், “தம்பி, மொனில செட்டியார் கட இருக்குங். பன்னீர்சோடா ஒண்ணு வாங்கி குடிக்க வெச்சு கூட்னு போ” என்று அவன் கையில் ஒரு இருபது ரூபாய்த் தாளைக் கொடுக்க முன்வர … மாசிலா “டேய் வாங்காத வாங்காத” என்று சிஷ்யனின் கையை மறித்தார்.

~

லாரன்ஸ் சொன்னதால் காலையில் சௌமியன் ரூபன் வீட்டிற்குப் போய் அவனை அழைத்துக் கொண்டு அங்கிருந்து இருவரும் பாலுவின் வீட்டிற்குப் போனார்கள். பாலுவுக்கு வீடு என்று தனியாக ஒன்றில்லை. பாலுவின் அப்பா தவுடாசோறு வேலை பார்க்கும் கடப்பைக் கல் பட்டறையே அவனுக்கு வீடாக இருந்தது. தவுடாசோறுதான் அந்தக் கல் பட்டறையின் காவலாளி என்பதால் பட்டறைக்குப் பின்புறம் கூவத்தின் நுரை, வீட்டு வாசலை அவ்வப்போது ஈரப்படுத்தும் அளவுக்கு கூவத்தை நெருக்கி ஒட்டியுள்ள ஒரு சிறிய குடிலை பாலுவும் தவுடாசோறும் வீடாக நினைத்து வாழ்ந்து வருவதற்குப் பட்டறை முதலாளி அனுமதித்திருந்தார்.

பாலுவின் தாத்தனுக்கு அப்பனிலிருந்து மூன்று தலைமுறைகளாக தவுடாசோறு என்றே அவர்கள் கூப்பிடப்பட்டு வருகிறார்கள். அந்தக் காலத்தில் அவர்கள் சாப்பாடு பொங்கிச் சாப்பிடவோ, தங்குவதற்கோ அக்கம் பக்கம் இருக்கும் கூவத்து ஆட்கள் அனுமதிக்கவில்லை. சிந்தாதிரிப்பேட்டைச் சந்தையைச் சுற்றி இருக்கும் உணவகங்களுக்கு ராத்திரிபோலச் சென்று அவை மூடும் நேரத்தில் கையில் ஏதாவது சில்லறை இருந்தால் வாசலுக்கு வெளியே நின்று அதைக் கொண்டுபோய் கொடுத்து “தேவுடா சோறு” என்று கேட்பார்கள். என்னென்ன மிச்சம் இருக்கிறதோ அதையெல்லாம் ஒரு பெரிய பொட்டலமாகக் கட்டிக் கொடுப்பதை உண்டு வாழ்ந்திருக்கிறார்கள். இவர்களை தேவுடாசோறு என்றழைத்து அது மருவி தவுடாசோறாக பாலுவின் அப்பாவின் தலையில் நிற்கிறது. இந்தப் பெயரால் தானும் கூப்பிடப்பட்டுவிடக் கூடாது என்று பாலு தினமும் அவன் அம்மா படத்துக்கு முன்னும் சாமி படத்துக்கு முன்னும் முணுமுணுத்துக்கொள்வான்.

சௌமியனும் ரூபனும் கல் பட்டறையின் பின்புறம் வந்து பார்த்தபோது குத்தவைத்து உட்கார்ந்து சட்டையை அரக்கிக்கொண்டிருந்தான். இவர்களைப் பார்த்ததும் மேற்கொண்டு அவர்கள் இவனை நோக்கி வராதவாறு, “ஏ வாங்கடா வாங்கடா” என்று அவர்களிடம் சென்றான்.

“ன்னடா என்ன தேடினா வந்தீங்கோ?”

“ஆமாண்டா நேத்து எங்கப்பா உன்ன அந்த மாசிலாண்ணங் வீட்டுக்கு கூட்னு போனார்ல. அங்க நீ இப்போ போவியாங். அவரு இருக்கிறாராங்.”

“அப்டியாடா … நீங்க எங்க போறீங்கோ. அண்டா டபுள் விக்கெட் டோர்னமென்ட் நத்துலான்னு சொன்னான்டா.”

“அண்டாவ வுர்றா … நீ போயி கேரம் கத்துக்கோ” என்றான் சௌமியன்.

சொன்னவன் தொடர்ந்து “நானும் ரூபனும் ஸ்பென்சர் போறோண்டா. எனுக்கு ஹிட்மென்ட் டிஷர்ட் வாங்கணுங். ரூபனும் வராங். என் சைக்கிள்ல போறேங்” என்றான்.

“பாலு ரூபனைப் பார்த்தான். சௌமியனிடம் சேரவே கூடாது என்று தன்னிடம் சொன்ன ரூபன் இன்று தனக்குத் தெரியாமல் சௌமியனுடன் போக நேர்ந்ததற்கான பதிலை ரூபன் முகத்தில் தேடும் விதமாக இருந்தது அவன் பார்த்த பார்வை.

பாலுவுக்கு நீண்ட நாட்களாக ஸ்பென்ஸர் போக வேண்டியிருந்த ஆசை இருக்கவே செய்தது ஆனால் தன்னை நிராகரித்து இவர்கள் போட்டிருக்கும் திட்டத்தில் எந்த முகத்தை வைத்துக்கொண்டு அதைப் பற்றி விசாரிப்பது என்றெண்ணி அமைதி காத்தான்.

ரூபனுக்கு சங்கடமாக இருந்தது. ஸ்பென்சர் போவதை எதற்காக சௌமியன் வலுக்கட்டாயமாகச் சொன்னான் என்றிருந்தது. நான் உனக்கு நெருக்கமான நண்பனாக மாறிவிட்டேன் என்பதை மற்றவர்களுக்குத் தெரியப்படுத்தவே அவன் சொன்னான் என்று ரூபனுக்குத் தெரியவில்லை. எப்படியிருந்தாலும் முதன்முறை ஸ்பென்சர் போவதற்கான வாய்ப்பு கிடைத்தை எண்ணி உள்ளூர மகிழவே செய்தான் ரூபன்.

அவர்கள் போனதற்குப் பிறகு துவைத்த துணிகளை விட்டது விட்டபடியே கைகளைக் கழுவி தன் அரைக்கால் சட்டையிலேயே துடைத்துக்கொண்டு அம்மா படத்துக்கு முன் நின்று கண்களை மூடி ஏதோ வேண்டிவிட்டு ரெக்ஸ் தெருவில் இருக்கும் மாசிலா வீட்டை நோக்கி நடந்தான் பாலு.

## -4-

நாட்கள் செல்லச் செல்ல சௌமியன், ரூபன் நட்பு இன்னும் ஆழமானது. சௌமியன் சிரத்தை எடுத்து அதை ஆழப்படுத்தினான்.

ரூபன் அந்த ஆழத்தில் முழுவதுமாக விழுவதற்குப் பிரியப்படவில்லை.

தன் மனம் போன போக்கிலேயே செயல்பட்டான்.

குறிப்பாக ஞாயிற்றுக்கிழமைகளை சௌமியனுடன் அடக்கமாகச் செலவிடுவதில் அவனுக்கு விருப்பமில்லை. அன்று முழுதும் தான் சபையிலேயே இருக்க வேண்டுமென சௌமியனிடம் சொல்லிவிட்டு அண்டா உருட்டி, யோசேப்பு ஆகியோருடன் கிரிக்கெட் டோர்னமென்ட் ஆடப்போகும் காட்சிகளை ஓட்டிப் பார்ப்பான்.

ஆனால் சபைக்குப் போகாமல் முற்றிலும் தவிர்ப்பது அவன் குடும்பச் சூழ்நிலையில் இயலாத காரியமாய் இருந்தது.

ஞாயிற்றுக்கிழமைகளில் அம்மாவோடு சபைக்குச் செல்வதுபோல உள்ளே நுழைந்து அரை மணிநேரம் இருந்துவிட்டு வெளியேறிவிட ஆரம்பித்தான். அவன் போவதைப் பார்த்தாலும் பார்க்காதமாதிரி நகோமியம்மா கண்டுகொள்ள மாட்டாள். குடும்ப ஜெபம், அதிகாலை ஜெபம், வேத வாசிப்பு போன்றவற்றில் ஈடுபாடு தனக்குத் தேய்ந்துக்கொண்டே போவதை உள்ளூர அறிந்தவனுக்கு ஒருவிதக் குற்ற உணர்ச்சி கவலை கொள்ள வைத்தது. அந்தக் கவலையால் அவனின் ஆன்மிக வளர்ச்சியில் எந்த முன்னேறத்தையும் கொண்டுவர முடியவில்லை.

சபைக்குச் சென்று கொஞ்ச நேரம் ஆஜராகிவிட்டுத் தப்பித்துச் செல்வதற்குக்கூட நாளடைவில் உடம்பில் சோம்பேறித் தனம் படிந்தது. ஆன்மிக விருப்பத்தில் தனக்கு ஏற்பட்ட சோம்பேறித்தனத்துக்கு ‘நாத்திகம்’ எனப் பெயர் வைத்துத் தன்னையே சமாதானம் செய்துக்கொண்டு போகாமலே விட்டான். ரெஜினா சபைக்குக் கிளம்புகிற வேளையில், கலைந்த தூக்கத்தைத் தக்கவைக்கப் போராடுவதற்காக அவன் புரளும்போது …

“தன்னை முற்றிலும் தெரியாதவங்களைக்கூட யேசப்பா மன்னிச்சிடுவாரு, ஆனா அவரையும் அவர் வசனங்களையும் அறிஞ்சி நீ அவரோட ஊழியத்துக்காக ஒப்புக் கொடுக்கப்பட்ட நீ தேவனை அசட்டை செய்ற. அவரோட இரண்டாம் வருகையின்போது நீ நரகத்துக்குத்தான் போவ” ரெஜினா புலம்புவாள். கிட்டத்தட்ட அழுவாள்.

அம்மாவின் கண்ணீருக்கு மதிப்பு தரும் விதமாக நீண்ட நாட்கள் கழித்து சபைக்குச் சென்றான். இடி முழக்கம் எபினேசர் பேசிக்கொண்டிருந்தார். அவர் சொன்னார்: “தேவனுடைய பிள்ளைகள் விக்கிரக ஆராதனை செய்யக் கூடாது. நம்முடைய சபையை விட்டு வேறு சபைக்குப் போகக் கூடாது. எவ்வளவு கஷ்டப்பட்டாலும் ஆண்டவருக்குக் காணிக்கையோ, தசமபாகமோ கொடுக்காமல் இருக்கக் கூடாது.” இடி முழங்கிய ஒரு மணி நேரப் பிரசங்கத்தில், கடைசியில் சொன்ன “கூடாது” அடிக்கடி வந்தது. இதெல்லாம் பைபிளில் சொல்லப்பட்டிருக்கிறதா அல்லது தங்களின் தேவைக்கேற்றாற்போல் திரிபுவாதம் செய்கிறார்களா என்ற குழப்பம் அவன் சிந்தையைக் கிளற ஆரம்பித்தன. வேறு சபைக்கும் போகக் கூடாது என்கிற கட்டுப்பாடு, தாய்ச்சபையிலும் விருப்பமின்மை போன்ற காரணங்களால் அந்த ஒரு நாளுக்குப் பிறகு முற்றிலுமாக விலக ஆரம்பித்தான்.

கிரிக்கெட்டே வாழ்க்கை என்றானது. மெய்சி எனப் பெயர்கொண்ட ஒரு ஆங்கிலோ இந்தியன் பெண்ணை ஒருதலைப் பட்சமாகக் காதலித்தான். அவள் அண்ணா சாலையிலுள்ள தேவி திரையரங்கிற்குப் பக்கத்திலுள்ள ‘க்ரைஸ்ட் சர்ச்’ என்கிற பள்ளியில் படித்துக்கொண்டிருந்தாள். தினமும் மாலையில் அவளைப் பார்ப்பதற்குப் பள்ளிக்கூடம் முடிவதற்கு முன்னரே யோசப்பு சைக்கிளில் தப்பித்து அவளைப் பார்க்கச் சென்று காதல் வளர்த்தான்.

சௌமியன் தினமும் சாயுங்காலம் இவன் வீட்டுக்குத் தேடிப்போய் தோற்றுப்போனதே மிச்சமானது.

எழும்பூரில் உள்ள இறுதி ஆண்டவர் கோயிலின் பின்புறம் கிறிஸ்துமஸ் நள்ளிரவில் மெய்சியிடம் இவன்

காதலைத் தெரிவித்தான். அவள் பதிலுக்கு ஹாப்பி கிறிஸ்மஸ் என்று மட்டும் சொல்லி இவனிடமிருந்து விடைபெற்றாள். அதைத் தனக்குச் சாதகமான பதிலாக எடுத்துக்கொண்டு ஒரு வாரம் கழித்து புதுவருட நள்ளிரவில் மெய்சிக்கு ஒரு அன்பளிப்புடன் காத்துக்கொண்டிருந்தான். அவள் இவனைச் சந்தித்து இவன் காதலைப் புரிந்துகொள்வதாகவும் ஆனால் அவள் வருகிற ஏப்ரல் மாதம் ஆஸ்திரேலியாவுக்குச் செல்வதாகவும் திரும்பி எப்போது வருவேன் எனத் தெரியாது என்றும் சொல்லி கிறிஸ்துமஸ்க்கு அவள் வீட்டில் செய்த ஒயின் கேக்கில் சில துண்டுகளை அவனுக்கு பதில் அன்பளிப்பாகக் கொடுத்து விடைபெற்றாள்.

பன்னிரெண்டாம் தேர்வு பரீட்சை நெருங்கியது. இந்நேரத்தில் சௌமியனுடனான சகவாசத்தைப் புதுப்பித்துக்கொள்வதில் ஆதாயம் இருப்பதை உணர்ந்து நோட்டுப் புத்தகங்களுடன் அவன் வீட்டிற்குச் சென்றான்.

இவனின் நிராகரிப்புகள் எதையும் பொருட்படுத்தாமல் சௌமியன் இவனை ஏற்றுக்கொண்டு பாடங்களையும், கணக்குச் சூத்திரங்களையும் சொல்லிக் கொடுத்தான்.

படிப்பிலிருந்து முற்றிலுமாக விலகியிருந்த ரூபனைக் குறைந்தபட்சம் தேர்ச்சி ஆகும் அளவுக்காவது அவனைத் தயார்ப்படுத்துவதில் குறிக்கோள் கொண்டிருந்தான் சௌமியன். படிக்கும்போது யாரையும் அருகில் சேர்த்துக்கொள்ளாத குணங்கொண்ட சௌமியன், ரூபன் வீட்டிற்குச் சென்றான். அங்கு அவன் இல்லாது போனால் சைக்கிள் மிதித்து அவனை தேடிப் பிடித்து படிக்க உட்கார வைத்தான். தனக்கெனக் கொண்டிருந்த நிறைய விதிமுறைகளை ரூபனுக்காகத் தளர்த்திக்கொண்டு பிறகு அதை யோசித்துப் பார்க்கும்போது ஏன் இவன் மீது நாம் இவ்வளவு அக்கறை வைக்கிறோம் என்கிற தெளிவு சௌமியனுக்கு ஒருபோதும் கிடைத்ததே இல்லை. தெளிவுக்காக எல்லாம் அவன் காத்திருக்கவில்லை. பன்னிரண்டாம் வகுப்பில் ரூபனை தேர்ச்சி பெற வைத்தான்.

ரூபனுக்கு பச்சையப்பன் கல்லூரியில் இடம் கிடைத்தது. தினமும் கல்லூரிக்குச் செல்லும் 27B வழித்தடத்தில் ஒரு

பெண்ணுடன் நட்பு ஏற்பட்டது. அதைக் காதலாக்க அவள் முயன்றபோது அவள் அழகில் திருப்தி அடையாததால் அவளை நிராகரிக்கும் பொருட்டு தன் ரூட்டை 15Bக்கு மாற்றினான்.

கல்லூரியில் ஒரு சில நண்பர்களின் வாயிலாக அவனுக்குப் பெரியார் தாசனின் அறிமுகம் கிடைத்தது. அவர் சிபாரிசு செய்த சில புத்தகங்களை வாசிக்க நேர்ந்தபோது கடவுள் பற்றிய சந்தேகங்கள் ரூபனுக்கு எழ ஆரம்பத்தன. இத்தனை நாள் தான் ஏமாற்றப்பட்டிருக்கிறோம் என்பதை உணரும்போது அவனுக்குத் தன் மீதே கோபம் ஏற்பட்டது.

ஒரு ஞாயிற்றுக்கிழமை மதியம் போல ரெஜினாவிடம் வந்து “மோவ் நா பெரியார் கட்சில சேன்ட்டேங். இனிமே சபக்கிலாங் என்ன வர சொல்னிகாத.”

ரெஜினா, துணி துவைத்துக்கொண்டிருந்த ப்ரஷ்ஷைத் தூக்கிக் குறி பார்க்காமல் அவன் மீது அடித்தாள். அது அவன் மீது படாததும் சொந்தக் கைகளைக் கொண்டு அடிப்பதற்கு எழுந்து ஓடிவர நகோமியம்மா குறுக்கே புகுந்து ரெஜினாவை அணைக்க, ரெஜினா திமிற …

நகோமியம்மா குரலுயர்த்தினாள். “தே ன்னா தோளுக்கு மேல வள்ந்த ஆம்பள புள்ளிய ன்னமோ கை நீட்டி அடிக்க வர்ற?”

“எம்மோவ், அவங் இன்னா சொல்றாங் கேக்லியா நீ?”

ரெஜினா அவனைப் பார்த்துக் கேட்டாள். “எவங் அது பெரியாரு . .? அவங் நல்ல கெதிலியா போவான்?”

“தெபார் அவங் கிவங்ன்னு சொன்ன அப்புறங் அவுல்தா உனுக்கு.”

“ப்த்தூ. இன்னிக்கு நீ உயிரோட இருக்றது, நல்லா ஸ்கூல், காலேஜ்னு போயி பட்ச்சது, எல்லாந் தேவனோட கிருப. நீ கர்த்தரோட ஊழியத்துக்கு ஒப்புக்கொடுக்கப்பட்ட புள்ளடா” என்றவள் நகோமியம்மாவைப் பார்த்து “எமோவ் கம்னுகிறியே சொல்ல மாட்ட?” என்று வக்காலத்திற்கு அழைத்தாள்.

நகோமியம்மா “எப்பா, நீ எந்த நெலிமில பொற்ந்த தெரிமா, ஆண்டவர்தான்டா உன்ன கண்டெத்தாரு.

சபைக்கு வா ராஜா, தேவனுடைய புள்ளியா இருடா எந் தொர இல்ல?” என்றாள்.

“தெபார் ஆயா, கூட சேந்து நீயுங்வ் வெறுப்பு ஏத்தினி இருக்காத. எனுக்கு அங்கலாங்வ் வரவே புடிக்கல. அந்த பாஸ்டரு செரியான பொம்பள சோக்காங். பசுங்க சொல்றானுங்கோ.”

ரெஜினா குறுக்கிட்டாள் “அந்த ஆளு எப்டிந்தா உனுக்கு ன்னாடா நீ தேவன கனம் பண்ணப்போற.”

“பாரேங் இப்போ சும்மா வெறுப்பு ஏத்தினி இந்தீங்கனா மகன ஒருநாள் ஆத்துல உய்ந்திருவேங்.”

நகோமியம்மா அவனைக் கட்டிக்கொள்ள வர அவன் விலகிச் சென்றான். ரெஜினா கோபம் அடங்காமல் துணி துவைக்கும் இடத்திற்குப் போனாள்.

ஞானஸ்நானம் எடுத்தும் சபைக்கு ஒழுங்காக வராததால் சாத்தான் அவனுக்குள் குடிகொண்டுவிட்டதாக நம்ப ஆரம்பித்து, வீட்டிலேயே ஒரு அந்தி கிறிஸ்துவை வளர்க்கிறேனே என்று ஜெப விண்ணப்பத்தில் தேவனிடம் ஓலமிட ஆரம்பித்தாள்.

பிள்ளை பழைய மாதிரி மனந்திரும்ப வேண்டுமென்று நம்பிக்கைப் பிசகாமலும், நிச்சயம் செய்வேனென்று அவன் சிறு வயதில் செய்து கொடுத்த சத்தியத்தைக் காப்பாற்றியே ஆக வேண்டுமென அவனுக்காக தினமும் ஜெபம் செய்துவந்தாள்.

~

ரூபன், வீட்டுக்குச் செல்வதையே வெறுத்தான். குறிப்பாக தேர்வு சமயங்களில் சாப்பாடு தூக்கம் எல்லாம் சௌமியனின் வீட்டில்தான். தங்களுக்கு நேர்ந்த எல்லா நல்லது கெட்டதுகளையும் தினசரி சௌமியன் வீட்டில் சந்தித்துப் பகிர்ந்துகொண்டார்கள். வெவ்வேறு கல்லூரியில் படித்தாலும் பரீட்சை நேரங்களில் சௌமியன் வீட்டில் ராத்தங்கி ஒன்றாக சேர்ந்து படித்தார்கள்.

சந்தர்ப்பத்திற்காக மட்டுமே தன்னைத் தேடி வருகிறான் என்றாலும் சௌமியன் ஒருபோதும் அவனைக் கை

விட்டதில்லை. கல்லூரி முடிந்து ரூபன் பன்னாட்டு கம்பெனிகளுக்கு நேர்முகத் தேர்வுக்குச் செல்கையில் “அக்கவுண்ட்ஸ் கோல்டன் ரூல்ஸ் தெரிஞ்சினு போடா” என ஒவ்வொரு முறையும் கணக்கியலின் அடிப்படை விதிமுறைகளை சொல்லிக் கொடுத்து அனுப்புவான். ரூபனுக்கு ஒரு கம்பெனியில் வேலையும் கிடைத்தது.

~

சௌமியன் வணிகவியலில் இளங்கலை, முதுகலை பட்டங்கள் வாங்கியும் போதாமல் எம்.பில். முடித்து வீட்டில் இருந்தான். வேலைக்குப் போக வேண்டிய பொருளாதார நிர்பந்தம் ஏதும் இல்லை. காலையில் நூலகத்திற்குச் செல்லுதல், மதியச் சாப்பாட்டிற்குப் பிறகு குட்டித் தூக்கம், மாலையில் அரசுத் தேர்வுக்காகத் தன்னை தயார் செய்துகொள்ள வகுப்புக்குச் செல்லுதல் என்றே அவன் காலம் கழிந்துவந்தது. வெறிச்சோடிய மதிய நேரங்களில் போதும் போதுமென்கிற அளவுக்குத் தனிமையை உணர்ந்தான். ராமர் தோட்டத்தில் ஒரு வாலிபன் மட்டும் வேலையில்லாமல் சுற்றி வருவதாகவும் அது அவன்தான் என்றும் தோன்றும்போது வேறு ஏதாவது வேலைக்குப் போய்விடலாமா என்றும்கூட நினைத்ததுண்டு.

ஒருமுறை நூலகத்திற்குச் சென்றுவிட்டுப் ஹவுசிங்க்போர்டு படிக்கட்டிலிருந்து மேல ஏறி திரும்புகையில் மாடியின் இடைவெளியில் யதேச்சையாக கவனித்தபோது கீழ்வீட்டில் புதியாய் வீடு வந்திருந்த பூமா வைத்த கண் எடுக்காமல் அவனைப் பார்த்தாள். அவளின் பார்வை புது மனிதர்களை ஆர்வத்துடன் பார்க்கும் நிலையையும் தாண்டி வேறு எதையோ வேண்டி நிற்கிறது என்பதை அடுத்த சில நாட்களில் தெரிந்துகொண்டான். அவள் அவனை ரகசியமாகப் பார்த்து, தொடர்ந்துப் பார்த்து வருவதை உணர்ந்ததும் அவனுக்குப் பயம் ஏற்பட்டது. தன் வாழ்க்கையில் ஏதோ விபரீதம் நடக்கப்போவதை உணர்ந்தவன் அவளைப் பொருட்படுத்தக் கூடாது என்று முடிவெடுத்துப் படிக்கட்டுகளின் இடைவெளியில் அவளைப் பார்க்காது கடந்து செல்கையில் எதையோ சாதித்ததுபோலப் பெருமையும் எதையோ இழந்தது

போல சோகமும் அவனுக்குள் கிளர்ந்தன. எட்டாவது சந்தில் புதர்களுக்கு நடுவே பார்த்து வளர்ந்த காமக் களியாட்டங்களை முதன்முறையாகச் செய்துப் பார்க்கும் வாய்ப்பிற்காக ஒரு பக்கம் துடித்தான்.

அடுத்த சில நாட்களில் இருவரும் சந்தித்துக்கொள்ளும் சந்தர்ப்பங்களை அவன் உருவாக்கவில்லை. கண்களால் அவள் செய்யும் காமச் சிமிட்டல்களை நினைத்துப் பார்த்து கழிப்பறைச் சுவரை முத்தமிட்டு உடல் தளர்ந்தான். அன்று மாலை அவன் வீட்டுக் கதவை தட்டும் சத்தம் கேட்டது … கதவைத் திறந்த பூங்கொடி,

“வா பூமா உள்ள வா” என்றாள்.

கருப்பு புர்காவில் முக்காடிட்ட தலையுடன் உள்ளே நுழைந்தவளின் கைப்பிடியில் ஏழு வயதுப் பெண்குழந்தை “ம்ம்ம்’ என்று மூக்குச்சளி துடைக்கப்பட்ட அடையாளத்துடன் கரைந்துகொண்டிருந்தது.

பூமா எதிர்பாராத விதமாக உள்ளே நுழைந்ததால் அவன் அவசரமாக லுங்கியைச் சரி செய்யும் காட்சி அவளுக்குக் கிடைத்தது.

“வாங்க உள்ள வாங்க என்றான்” லுங்கியை முறுக்கலாகத் திரித்துக்கொண்டே.

பூமா அமைதியாய் இருக்க பூங்கொடி அவனிடம் சொன்னாள் “எப்பா, இந்த பூமா ரெண்டாவது சந்து ஓட்டு வீட்லருந்து நம்ம ப்ளாக்ல புதுசா குட்த்தனம் வந்துகிது. அவங்க பொண்ணு சுத்தமா படிக்க மாட்டுதாங். சாய்ங்கால்த்துல எதுனா சொல்லிக் கொடு … இன்னா?”

“அஆஇஈ ஏபிசிடி எதுமே தெர்லங்க தம்பி” என்றாள் பூமா.

அவன் பதிலுக்காக காத்திருந்த இருவரில் அம்மாவின் முகத்தைப் பார்த்து, “ஆங் செரிமா” என்றான்.

“இப்பயே விட்டுட்டுப் போறேங்” என்றாள். குழந்தை அழத் தயாரானது.

“அதுலாங் ஒன்னும் இல்ல உங்க மாமாதான் அவங்” என்றாள் பூங்கொடி.

பூமா குழந்தையை விட்டுப் போகையில் அவள் பின்புறத்தைப் பார்த்தான். சதைத்திரட்சி இல்லாத கவர்ச்சியற்ற இவளின் மீது எதற்காக காம உணர்ச்சிவயப்பட்டோம் என்று தன்னையே அருவெறுத்தான். இனி இவளைப் பார்க்கவே கூடாது என்கிற சபதம் அடுத்த முறை அவள் பார்க்கும் வரைதான். பூமாவுக்கு மார்பகங்கள் இருக்கிறதாவென சந்தேகிக்கும் முன்கட்டு. சதைப் பிதுக்கல்களினால் காண்போரைத் தன்வயப்படுத்தும் திறன் இல்லாத மெலிந்த தேகங்கொண்ட ஏற்ற இறக்கமில்லாத சரீரம். அவனுக்கு இதெல்லாம் தெரியும். ஆனால் மாடிப்படிகளின் இடைவெளியில் அவள் பார்க்கக்கூடிய பார்வை அவன் ஆணுறுப்பைக் கண்களால் வருடக்கூடியதாய் இருந்தது. பிள்ளையைக் காரணமாக வைத்து அவனைச் சந்திப்பாள். ஒருமுறை அவன் அருகில் நின்று பேசியவள் பிள்ளையின் பள்ளிப்பைக்குக் கொக்கி மாட்டிவிடுவது போல நெருங்கி வந்து அவன் வலது காலை மிதித்தாள். தன் பாதங்களால் அவன் விரல்களை வருடினாள். அவனுக்கு அப்போதே அவளைக் கட்டியணைத்து சுவரின் ஓரத்தில் கொண்டு போய் பிணையலாமெனத் தோன்றும்.

குழந்தையும் பூங்கொடியும் இடையூறாக இருப்பதால் கட்டுப்படுத்திக்கொண்டு கற்பனையில் அவற்றை நிகழ்த்திப் பார்த்தான்.

ஒவ்வொரு முறையும் படிப்பு நிலவரத்தைப் பற்றி மிகச் சாதாரணமாக விசாரிப்பாள். விசாரிப்பின் முடிவில் “தம்பி” எனச் சேர்த்துக்கொள்வாள். அவனால் அவள் முகத்தைப் பார்க்க முடியாது. தனியாக பார்க்கும்போது இவள் பார்வையில் இருந்த தீவிரம் எங்கே? இப்போதும் அது இருக்கிறதா? நாம்தான் இவள் கண்களைச் சந்திக்க மறுக்கிறோமா?

கற்பனையில் அவளுடன் இயங்கிய வேகம் வெள்ளைத் திரவம் வெளியேறிய பின்னும் அடங்கவில்லை. அவள் வீட்டுக்காரர் தாமதமாக வருவார். சிறுமி தூங்கிக்கொண்டு இருக்கும்.

கீழே போய் கதவைத் திறந்து அவளை … இரவுகளில் தூக்கமே இல்லாமல் சுய இன்பத்தின் சோர்வால் தூங்க

ஆரம்பித்தான்.

தாபத்தின் சூட்டில் தகித்தான். ஒருமுறை நூலகத்திற்குச் சென்றுவிட்டுக் காலை பதினொரு மணிக்கெல்லாம் ஹவுசிங் போர்டுக்குள் நுழைந்தவன் மாடிப்படி ஏறுகையில் அலைபேசியில் சத்தமாகப் பேசிக்கொண்டே மேல ஏறி மாடிப்படி இடைவெளியில் நின்று திரும்பி கவனித்தான். பூமா கதவுக்குப் பின்னாலிலிருந்து அவனைப் பார்த்துச் சிரித்தாள். வெகுநாட்களாக நடக்கும் இந்தப் பார்வை பரிமாற்றத்தை அடுத்த கட்டத்திற்கு கொண்டுபோக வேண்டுமென எண்ணியவன் திட்டமிட்டது போலவே செய்தான். மாடிப்படி ஏறி வீட்டுக்குப் போகாமல் பூமாவைப் பார்த்தவாறு நின்று ஒருகையில் அலைபேசியில் பேசியவாறே இன்னொரு கையை மெல்ல தன் உறுப்புக்குக் கொண்டுபோய் தானே தடவினான். தெரியாமல் தேநீர் கொட்டியதும் ஆடையைச் சரிச் செய்வது போல யதார்த்தமாகத் தடவினான். அவன் உள்ளர்த்தத்தை அறிந்ததும் நின்ற இடத்திலிருந்தே கீழுதட்டைக் கடித்தாள். ஹவுசிங் போர்டு ஆட்கள் யாரும் ஏறியிறங்கும் வேலையில் ஈடுபடவில்லை. அவளைப் பார்த்தபடியே அவன் கை தடவும் வேகத்தை அதிகப்படுத்தியது. அந்த வேகத்திற்கு நிகராக அவன் வாய் அழுத்தத்துடன் எதிர்முனையில் அலைபேசியில் ஏதேதோ பேசியது. அவள் தன் மார்பகத்தை மெல்ல வருடினாள். இவனுக்கு வேகம் இன்னும் அதிகரித்தது. சில விநாடிகளில் தடவுவதிலிருந்து கையை எடுத்து உயிர்நீர் வெளியேறும் உச்ச கணத்தை அநிச்சையாக நிகழவைத்தான். தோள்களைச் சிறு குலுக்கலுடன் ஆட்டியதும் “ஓக்கே பாய்” என்று அலைபேசி இணைப்பைத் துண்டித்துவிட்டு வீட்டுக்குள் நுழைந்த வேகத்தில் கழிப்பறைக்குச் சென்றான்.

பூமாவின் அலைபேசி எண்கள் கிடைத்ததும் நூலகத்திற்குச் செல்வதுபோல மே தினப் பூங்காவிற்குள் நுழைந்து முற்பகல் வெயிலில் அவளுடன் காமப் பேச்சுப் பேசினான். காலப்போக்கில் இடம் பொருள் பார்க்காமல் அலைபேசியில் கொஞ்சிய படியே பகல் முழுக்க ராமர்

தோட்டத்துச் சந்துகளில் ஒரு பிறழ்வுக்காரனைப் போலச் சுற்ற ஆரம்பித்தான்.

அவன் வீட்டில் யாரும் இல்லாத ஒரு மதியப் பொழுதில் ஆடைகளை அவிழ்க்காமல் இருவரும் பிணைந்தனர்.

இன்னொருமுறை பூமா வீட்டில் நிகழ்ந்தது. அவளின் ரவிக்கைப் பொத்தான்களை அவசரமாக அவிழ்த்துக்கொண்டே அவளிடம் முனகினான்.

“உன்ன கல்யாணங் கட்டிக்கப்போறேண்டி … நீ எங்கூட வருவல்ல? நாம எங்கியாவது போய்ல்லாங்.”

“மொதல்ல நீ கீழ பண்ணு” என்றாள்.

பெரிய திட்டமிடலுக்குப் பிறகு மிகவும் திருப்தியாக மகாபலிபுரத்தில் இரண்டு மணி நேரம் இருந்தார்கள்.

நாளடைவில் டி ப்ளாக்வாசிகள் இருவரையும் சந்தேகிக்க ஆரம்பித்தனர். பூங்கொடிக்கு விஷயம் தெரிந்தும் வெளிப்படை யாக பிள்ளையிடம் இதைப் பற்றிக் கேட்பதற்கும், மறைமுகமாகக் கணவனிடம் சொல்லுவதற்கும் பயப்பட்டாள்.

மத்திய அரசாங்க வேலையை, கல்லூரியில் பேராசிரியராகப் போக வேண்டுமென்கிற கனவுகளைத் துறந்து பூமாவுடன் வெளி மாநிலத்திற்கு ஓடிப்போய் வாழ வேண்டுமென்கிற முடிவு எடுத்தான். பிறகு அவன் யோசிக்கவில்லை. மறுபடியும் அந்த முடிவை பரீசீலனை செய்வது அவனை வெட்கமடைய வைத்ததால் யோசிக்காமல் உறுதி பூண்டான்.

பூமாவின் எதிர் வீட்டிலிருக்கும் ஒரு நபர் ஐயா முதலி தெருவில் அவள் கணவர் ஜியாலுதின் பாய் வேலை செய்யும் டெய்லர் கடைக்கே போய் அவரைத் தனியாக அழைத்து விஷயத்தைச் சொன்னார். ஜியாலுதின் பாய்க்கு ஏற்கனவே இருந்த சந்தேகம், இன்னொருவர் வந்து சொன்னதும் வலுப்பட்டது. சொல்லுகிற நேரத்திற்கு வந்தால் அவள் கையும் களவுமாகப் பிடிபடுவாள் என்று திட்டமிட்டதன் பொருட்டு தகவல் கொடுக்கப்பட்டதும் வீட்டுக்கு வந்து கதவைத் திறந்து பார்த்தார். கட்டிலில் படுத்து அலைபேசியில் உரையாடிக்கொண்டிருந்தாள்.

அவளை எட்டி உதைத்தார். பக்கத்தில் பொருள் ஏதாவது இருக்கிறதா என மூச்சிரைக்கத் தேடினார். அரசாங்கம் இலவசமாகக் கொடுத்த கிரைண்டரில் சிரித்துக்கொண்டிருந்த ஜெயலலிதாவின் முகத்தை இரு கரங்களால் பிடித்து பூமா மீது தூக்கிப் போட்டார். அவள் தப்பித்தாலும் போட்ட கூச்சலில் ஜனம் திரண்டது. பிழைக்க வந்த இடத்தில் ஊர்க்காரர்களைப் பகைத்துக்கொள்ளக் கூடாது என்பதால் சௌமியன் வீட்டிற்குப் போய் சண்டை போடாமல் பூமாவை மேலும் அடிக்கத் திமிறினார்.

கூட்டம் அவரை மடக்கியது. மீறியும் போய் அவளை அடித்தார். ஊதாங்குழலினால் அவள் மண்டையை உடைத்தார் ஜியாலுதின் பாய். ஏழாவது சந்து முழுக்கத் தெரிந்து, விஷயம் ராமர் தோட்டத்திற்கே பரவியது. மருத்துவமனையில் சேர்க்கப்பட்ட பூமா பத்து நாட்கள் கழித்து வீட்டுக்கு வந்ததும் அவமானம் தாங்காமல் தீ வைத்துக் கொளுத்திக்கொண்டு பிறகு உயிர் பிழைத்தாள். வேலூரில் நண்பன் வீட்டில் தங்கியிருந்த சௌமியன் ஊர் திரும்பியிருக்கவில்லை.

## -5-

ரூபனுக்கு இருபத்தெட்டு வயது முடியும் நிலையிலிருந்தது. இன்னும் திருமணம் ஆகவில்லை. அதற்கான வருத்தம் அவனிடம் இல்லை. ஆனால் சொந்தங்கள், நண்பர்கள், நலம்விரும்பிகள் என்கிற புனைபெயர் கொண்டவர்கள், அவன் கழிவறைக்குச் சென்றாலும் கதவைத் தட்டி, "அப்புறம் எப்ப ரூபன் கல்யாணங்? பொண்ண நீயே பாத்துட்டியா இன்னா?" என்று குத்தலாகக் கேட்கும் கேள்விகளைத் தான் எதிர்கொள்ளத் தெரியாமல் முக்கினான்.

மூன்றாவது மாடியிலிருந்து கீழே இறங்கி, சந்து முனைக்குச் செல்வதற்குள் எத்தனை கேள்விகள், எத்தனை விசாரிப்புகள். பற்றாக்குறைக்கு நகோமியம்மா பார்ப்பவர்களிடமெல்லாம் சொல்லிவைத்திருக்கிறாள். அவர்களையும் குறை சொல்வதற் கில்லை. சந்திலேயே ஓரளவு நன்றாகப் படித்து வெளிநாட்டு நிறுவனத்தில் வேலை செய்து, பெரிய கார் வைத்து, வேலைக்குக் கொண்டு போய்க்கொண்டு வந்துவிடுகிற ஸ்தானத்தில் இருக்கும் ரூபனுக்கு ஏன் பெண் கிடைக்கவில்லை என்கிற காரணத்தில் ஏதேனும் சுவாரசியமான அந்தரங்கம் இருக்குமா என்று முனைப்புடன் சந்துவாசிகள் விசாரிக்கிறார்கள். நல்லதுதான். அவர்களுள் விகிதாச்சார அடிப்படையில் அவன் நலத்தில் அதிக அக்கறை உள்ளவர்கள் தாங்களாகவே பெண் பார்த்து, பெண் வீட்டாரில் தங்கள் பெயருக்குக் களங்கம் ஏற்பட்டுவிடக் கூடாதென்று அவர்கள் பார்த்த பெண்ணையே கல்யாணம் செய்யச் சொல்லி ரெஜினாவின் மூலமும் நகோமியம்மாவின் மூலமும் அவனை நிர்பந்தம் செய்கிற கொடுமை நாஜிக்களின் வதைமுகாமிலும் செய்யப்படாததாக இருந்தது.

திருமணம் ஆகவில்லை என்கிற வருத்தமும், எதிர்காலம் குறித்த பயமும் அவனுக்கு இல்லையே தவிர திருமணம் செய்துகொள்ள வேண்டுமென ஆசை இருக்கத்தான் செய்தது. அந்த ஆசையைப் பூரணப்படுத்திக்கொள்ளத் தேவையான - சில பேரிடம் -

தேவைக்கு அதிகமான உழைப்பைக் கொடுத்தும் அது நிறைவேறாததால் அவன் சோர்ந்துபோய் இருந்தான்.

சௌமியனிடம் இந்த சோர்வைப் பகிர்ந்துகொள்ள விருப்பப்படும் போதெல்லாம், அதை முழுதும் கேட்காமல் "த்தா அவளுங்களாங் கழ்ட்டி வுட்டுடுவாளுங்கடா" என்று உரையாடலை பாதிலேயே நிறுத்தி ரூபனை அலட்சியப்படுத்தினான். அந்த அலட்சியத்திற்குப் பின் அவனுக்கு இருந்தது பொறாமையா அல்லது ஐ.டி. பி.பி.ஓ'வில் வேலை செய்யும் பெண்கள் மீதிருந்த வெறுப்புணர்வா என்பது யூகிக்க முடியாததாக இருந்தது. ரூபனும் அவனிடம் மேற்கொண்டு தன் காதல் அனுபவத்தை பகிர்ந்துகொள்ளாமல் இருந்தான்.

தன் 'மண'க்குமுறல்களை யாருக்கும் தெரியாமல் தேவனிடம் முறையிடலாம் என்றால் முபீனா விஷயத்திலிருந்து அவர் நடந்துகொண்ட மூர்க்கத்தனம் அவரிடம் அவனை நெருங்க விடவில்லை. "முபீனாவிக்கு அப்றங்கூட எத்தினியோ பொண்ணுங்கள லவ் பண்ணோமே …" எதற்குமே ஒத்தாசைக்கு வராத இயேசுவின் மீது அவனுக்கு வெறுப்பே கூடியது. எத்தினியோ என்பதின் பொருள் நான்கு விரல்களை விட்டு எண்ணக்கூடியதுதான் என்றாலும் ஒவ்வொரு விரலாக விட்டு எண்ணும்போது அவர்கள் ஏன் அவனை விட்டுச் சென்றார்கள் என்கிற காரணத்தையும் அவன் நினைவுபடுத்திக்கொள்ள வேண்டியிருந்தது. அது பெரிய அயர்ச்சியை உண்டு பண்ணிவிடும் செயல் என்பதாலேயே "எ … த் … தி … னி … யோ" என்று ராகம் இழுத்ததாய் நினைத்துக்கொண்டான். அயர்ச்சி மட்டுமில்லாது அவன் காதலித்த பெண்களின் நினைவுகளை மீட்டுருவாக்கம் செய்வதென்பது வலிமிகுந்த செயலும்கூட என்று அவனுக்குத் தோன்றியது. அதிலும் கிரண்யா மறக்கக்கூடியவளா!!

~

நான்கு வருடத்திற்கு முன் அலுவலகத்தில் அவனுடன் ஒரே அணியில் வேலை பார்த்த கிரண்யாவுடன் தனக்கிருந்த காதலும் அவள் அவனை விட்டுப் பிரிந்து

சென்றதுமுதல் இன்றளவும் அவள் நினைவில் உழன்றுகொண்டிருப்பதும் அவனுக்கே புதிராக இருக்கின்றன. காதல் சமாச்சாரத்தில் கசிந்திருக்கும் அடிப்படைவாதி அல்ல அவன். கொஞ்ச நாளிலேயே அவனுக்கு இன்னொரு பெண் அழகாகத் தெரிய ஆரம்பித்து விடுவாள். ஆனால் கிரண்யாவின் குணமும், அவளின் அழகும் தனித்துவமானது. அவளுடன் பழகிய நாட்கள் வேறு யாருடனும் அவனை இனஞ்சேராத வகையில் தொந்தரவு செய்துவந்தன.

அதே தொந்தரவு அவளுக்கும் இருக்கக் கூடாதென்று நினைத்தவள் வேறு கம்பெனிக்குச் சென்றுவிட்டாள். அவள் இல்லையே தவிர அவள் ஞாபகங்கள் 'நான்-லீனியர்' திரைக் கதையைப் போல அவனுக்கு வந்து போகும். ஞாபகங்கள் தூண்டிவிட்ட கிளர்ச்சி உச்சத்தை அடைந்ததும் நீண்ட தயக்கத்திற்குப் பிறகு லேப்டாப்பில் சேமித்து வைத்திருக்கும் அவள் புகைப்படங்களை அக்கம்பக்கம் யாரும் இல்லாதபோது பார்த்துக்கொண்டிருப்பான். அவள் புகைப்படங்களில் அவனுக்கு மிகவும் பிடித்தது, அவள் புதியதாய் வாங்கிய கைக்கடிகாரத்தைக் காட்டுவதற்காக அதை செல்ஃபி எடுத்து அனுப்பியிருப்பாள். அதில் முழுவுருவமாகக் கடிகாரம் தெரிந்தாலும் கையின் இடைவெளியில் கிரண்யாவின் முகம் கொஞ்சம் தெரியும். அந்த முகத்தில் புன்னகையை அடக்கிக் கொண்டதால் ஏற்பட்ட உதட்டுச்சுழிப்பு பிரமாதமாக இருக்கும். அகில உலகில் செல்ஃபி முறை புழக்கத்திற்கு வரும் முன்னரே வெறித்தனமாகத் தன்னைத் தானே படமெடுத்துக்கொள்ளும் பழக்கம் கிரண்யாவுக்கு இருந்தது.

"எதுக்கு பாம்பு மாறி உன்ன நீயே போட்டோ புடிச்சிக்கிற" என்று அவன் கேட்டதற்கு "ஆமா நான் ஸ்னேக்தான்" என்று அவனை முகத்தால் கொத்த வந்தாள். அவனுக்கு கிரண்யாவின் மீசை பிடிக்கும் என்பதற்காக அவன் விண்ணப்பத்திற்கிணங்க நெடுநாள் வேக்சிங் செய்யாமல் இருந்தாள். பிறகு ரொம்பவும் அதிகமாகியிருந்ததும் பார்லருக்குச் செல்லும் முன்பாக அகலச் சிரிப்புடன் அவளனுப்பிய புகைப்படத்திற்கு

“தொங்கு மீசையுடன் பாரதியார் சிரிக்கும் புகைப்படம் என்னிடம் மட்டுமே இருக்கிறது” என அவளுக்குக் குறுந்தகவல் அனுப்பினான்.

கிரண்யாவுக்கு டெரகோட்டா கம்மல் என்றால் உயிர். ஒரு கட்டத்தில் அதன் செய்முறையைத் தெரிந்துகொண்டு சொந்த மூளையில் அவளே வண்ண வண்ணமாக டெரகோட்டா செய்ய ஆரம்பித்தாள். சிக் லீவ் எடுத்துக்கொண்டெல்லாம் டெரகோட்டா செய்திருக்கிறாள். தினுசு தினுசாகத் தான் செய்யும் ஒவ்வொரு ஜோடிக் காதணிகளையும் அணிந்து அதைப் படமெடுத்து அவனுக்கு அனுப்புவாள். அவள் அனுப்பிய படங்களில் முக்கால்வாசி பனி படர்ந்தது போலிருக்கும். அவள்மீது குறையில்லை. நோக்கியா 6680 காலத்தில் கேமராவின் துல்லிய வசதி அப்படி. அந்தப் படங்களைத்தான் போட்டோஷாப் செய்து தன் கோப்பில் வைத்து அவ்வப்போது பார்த்துவருகிறான். காதணிகளைவிட அதனருகில் படர்ந்திருக்கும் காது முடிகளைத் தான் தடவித் தடவி இல்லாதவளின் ஸ்பரிசத்தை உணர்வான்.

இருவரும் பரஸ்பரம் இனி பேசிக்கொள்ளக் கூடாது, இனி நமக்குள் எதுவும் இல்லை என கேஃப்டீரியாவில் வைத்து கிரண்யா ஒருநாள் எடுத்த முடிவிற்கு அவள் மீதுள்ள அன்பின் காரணமாக அவனும் ஒத்திசைந்தான்.

அவளின் அண்மை இருந்தும் வார்த்தைகளின்றி ஒவ்வொரு பொழுதையும் கழிப்பது மிகுந்த சஞ்சலத்திற்குள்ளாக்கியது. இருவரும் எதிரெதிரே நடந்து போகும்போதோ அல்லது வேலை நிமித்தமாகவோ பேசிக்கொள்ள நேரிடும். அத்தருணம் கிரண்யாவின் முகம் அழுவதற்குத் தயார் நிலையில் இருக்கும். தேவைக்கு அதிகமாக ஒரு வார்த்தைகூட அவள் அவனுடன் பேசத் தயாராய் இல்லை. தூண்டும் விதமாக அவளுக்குப் பிடித்த கலரில் பிடித்த மாதிரி அரைகுறையாக ‘டக்-இன்’ செய்து ஆடை அணிந்து வந்தான். கண்டும் காணாத மாதிரி சென்றுவிட்டாள். ப்ளோர் எனவும் பாராமல் எல்லோர் முன்னிலையிலும் “கிரண்யாஆஆஆ” என்று கூச்சலிட்டுச் சட்டையைக்

கிழித்துக்கொள்ள வேண்டுமென்றுதான் அவனுக்கு தோன்றியது.

ஒருமுறை வேண்டுமென்றே அவளுக்குப் பிடிக்காத மாதிரி ஹேர்ஸ்டைல் மாற்றிக்கொண்டு வந்தான். அதற்கும் எந்த பதிலும் இல்லை. முகபாவத்தைக்கூட மாற்றி தன் பதிலைத் தந்துவிடக் கூடாது என்பதில் அவள் கவனமாக இருந்தாள். மனிதர்கள் உமிழும் வெறுப்பை விட அவர்களின் நிராகரிப்பு ஏன் இத்தனை கொடுமையாக இருக்கிறதென்று அவன் உணர்ந்த கணங்கள் அவை.

இனியும் இந்த அலுவலகத்தில் வேலை செய்வது தன்னைப் பைத்தியக்காரானாக மாற்றிவிடும் என பயந்துபோனவன் வேறு எங்காவது வேலை தேடலாமென நேர்முகத் தேர்வுகளுக்குச் சென்றான். அது ‘ரிசஷன்’ காலமென்பதால் எங்கு சென்றாலும் வேலைக்குப் பதில் போலிப் புன்னகையுடன் “வில் கெட் பேக் டு யு” என்ற வசனமே கிடைத்தது. வேலை கிடைக்காவிட்டாலும் பரவாயில்லை. முதலில் இங்கிருந்து நின்றுவிடலாமென யோசித்தான்.

உடல்நலம் குன்றி ஈரல் பாதிக்கப்பட்டுத் தோல் பொம்மையாக குணசீலன் மாறிய பிறகு பெரியமேட்டுப் பெண் அவரை விரட்டிவிட்டாள். அவர் வீட்டிலேயே முடங்கியதற்குப் பிறகு குடும்பத்தில் பணம் காய்க்கும் ஒரே மரமான ரூபனின் நிலையை கிரண்யா அறியாதவள் அல்ல.

அவன் அலைபேசி எண் இருந்தும், அவன் ‘அவுட்லுக்’ முகவரிக்கு ஒரு மின்னஞ்சல் அனுப்பினாள்:

“Hi, I heard that you are planning to resign without any other offers on hand. I’m aware of your responsibilities and commitments. So, I have decided to quit. Today is my last working day here. Please Get rid of my thoughts go ahead and lead yourself and your family. Good luck”

அவன் பெயரைக்கூடக் குறிப்பிடாமல், வார்த்தைகளைக் குறுக்கி அனுப்பும் முறையையும் கையாளாமால் மிகவும் நேர்த்தியாக நெருக்கமான

மூன்றாவது மனிதனுக்கு அனுப்புவதுபோல அனுப்பியிருந்தாள்.

கிரண்யாவை அலைபேசியில் தொடர்புகொண்டான். அது அணைத்து வைக்கப்பட்டிருந்தது. அதற்குப் பிறகு அவள் அலுவகத்திற்கு வரவே இல்லை. 'நோட்டிஸ் பீரியட்' என்கிற பெயரில் இரண்டு மாதம் கம்பெனிக்குப் பிணையமாக இருக்க வேண்டியதற்கு மாற்றாகப் பிணையத்தொகையைச் செலுத்திவிட்டு நிறுவனத்தையும் அவனையும் விட்டுச் சென்றுவிட்டாள்.

~

அவள் தந்துவிட்டுப் போன வெறுமையை நிரப்பிக்கொள்ள நிறைய நேரம் சினிமா பார்த்தான். நெடுநேரம் புத்தகங்கள் வாசித்தான். பேஸ்புக்கில் கணக்கு ஆரம்பித்து நாட்டிற்காகக் கவலைப்பட ஆரம்பித்தான். நண்பர்களிடம் நேரம், பணம் செலவு செய்தான். அதெல்லாம் ஒரு பாவனை என்று அவனுக்கு நன்றாகவே தெரிந்திருந்தது. ஆனால் தொடர்ந்து நடித்தால் அந்த நடிப்பு வாழ்க்கையின் ஓர் அங்கமாகிவிடும் என்பதை நாளடைவில் புரிந்துகொண்டான்.

நடிப்பைப் பிரதானமாகக் கொண்ட சில்லறை வாழ்க்கையில் செய்யும் தினசரி செய்கைகளின் மீது சமயங்களில் அவனுக்கு மனச்சோர்வு ஏற்படும். சோர்வின் பாரம் தாங்காமல் தாய்மடி தேடி ஓடத் தோன்றும். அம்மா பாசமெல்லாம் அந்நேரத்தில் செல்லுபடி ஆகாது. ரெஜினாவிற்கும், அவனுக்கும் ஆன்மிகத் தகராறு இருந்ததால் பாசப் பிணைப்பிற்கும் இடமே இல்லாமலிருந்தது ஆகவே, தாய் மடி என்பது அவனுக்கு கிரண்யாதான்.

தனித்திருக்கும்போதெல்லாம் அவளே உறுதுணை. அவள் படங்களுடனே பேசிக்கொண்டிருப்பான். சில சமயம் அவள் நினைப்பில் சுவரைப் பார்த்துப் பேசுவான். அவ்வாறு பேசிக் கொண்டிருக்கையில் நாம் பைத்தியம் ஆகிவிட்டோமா என்று சந்தேகம் எழும்பி அது பயமாக மாறுகையில் பேசுவதை நிறுத்திவிடுவான். புகைப்படத்தின் முன்பமர்ந்து பேசுவதும் நிறுத்துவதும்

பேசுவதும் நிறுத்துவதும் என இவன் செய்யும் ‘ஸீஸா’ நிலையைக் கண்டு குழந்தை இயேசு மாதிரி இதழ் குமிழ் புன்னகையினால் கிரண்யா அதைப் பார்த்துக்கொண்டு மட்டுமே இருப்பாள். அவள் நேரில் அப்படியில்லை. இருவரும் பேசிக்கொள்கிற சமயத்தில் அவள் செய்யும் முகபாவனைகள் இயற்கைக் காட்சிகள் கொண்ட காலண்டர் மாதமொருமுறை அழகழகாக மாறுவது மாதிரி அவள் முகம் நொடிக்கொரு முறை மாறிக்கொண்டே இருக்கும்.

அவன் நிறுத்தி நிறுத்திப் பேசும் சீரான இடைவெளியில் “ஓக்கே … ஓக்கே … ஓக்கே …” என்பாள். தஞ்சாவூர் பொம்மை ஸ்லொவ் மோஷனில் தலையாட்டுவது போலிருக்கும். மர்மக் கதை சொல்பவன் இதோ இப்போது புதிரவிழ்க்கப் போகிறான் என்கிற ஆர்வத்துடன் “ஓக்கே … ஓக்கே … ஓக்கே” என்று மிதமாக ஆரம்பித்து ஒவ்வொரு ஓக்கேவுக்கும் ஒலியளவை உயர்த்திக்கொண்டே கதை கேட்பாள். தன் தோட்டத்துப் பகுதியிலுள்ள வித்தியாமான மனிதர்களைப் பற்றி, வீட்டில் நடந்த கதை, நண்பர்களுடன் அடித்த அரட்டை எனக் கதை கதையாகச் சொல்லுவான்.

நடுநடுவே அவன் வேடிக்கையாக ஏதேனும் சொல்லிவிட்டால், “ஓ ரியலி” என்பாள். அவள் “ஓ ரியலி” எனச் சொல்கை யில் அவள் வாய் நிசப்தமாக சிரிக்கும். சிரிக்க வாயெடுத்தால் வாயை எப்போது மூட வேண்டுமென்கிற பாவனை ரீதியான குழப்பம் கிரண்யாவுக்கு எப்போதும் உண்டு. வாயை மூடத் தெரியாத குழப்பத்தினால் விளைந்த தவிப்பில் அதை திறந்து வைத்திருக்கையில், அதாவது அவள் சிரித்துக்கொண்டிருக்கையில் முன்வரிசையிலிருக்கும் அவள் சிங்கப்பல்லின் கூர் அவ்வளவு அழகாக இருக்கும். யோசித்துப் பார்க்கையில் பொறாமையினால் மற்ற பற்கள் சிங்கப்பல்லுடன் சண்டைபோட்டு அதைத் தனித்துவிட்டிருப்பதால்தான் அந்தக் கூரழகு உன் சிங்கப்பல்லுக்கு வந்ததென்று அவளிடம் இப்போது சொல்லத் தோன்றுகிறது. ஆனால் காலம் அதற்கான சௌகரியத்தை அவனுக்குக் கொடுக்கவில்லை.

அவளுடன் தினமும் மணிக்கணக்கில் பேசிப்பேசி அவள் பேசும் விதம், அவள் சொற்கள், அவள் நடை போன்றவற்றை அனிச்சையாகச் செய்ய ஆரம்பித்தான். “ஓ ரியலி, ஓக்கே. ஓக்கே. ஓக்கே.” இந்த வார்த்தைகளெல்லாம் அவனுக்கு தொத்து வியாதியாகியிருந்தது. “ஏ தம்பி ஓரம் வாம்ப்பா ட்ரைன் வருது” என்று யாராவது அவனை அதட்டியிருந்தால் கூட அவரைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே “ஓ ரியலி” என்றுதான் சொல்லியிருப்பான். கிரண்யாவின் ஆடைகளை மட்டும் அணியவில்லை. மற்றபடி கிரண்யாவாகவே அவன் வாழ்ந்த காலமது.

அவர்கள் இணைந்திருந்த பவித்திரமான நாட்களையெல்லாம் அவன் அவ்வப்போது எண்ணிப் பார்த்து வீங்கிப்போவதுண்டு. அவனுக்குக் கிடைத்த பாராட்டுகள், வாங்கிய பதவி உயர்வு, கிரண்யாவுக்குப் பிடித்த வண்ணத்தில் வாங்கிய சட்டைகள், நேர்ந்த அவமானம், பிடித்த படங்கள், படித்த சிறுகதைகள், என நான்கு வருட இடைவெளியில் அவளிடம் சொல்வதற்குக் குப்பையாகக் குவிந்துபோய்க் கிடக்கின்றன. ஆனால் காலம் அதன் சுழற்சியில் எல்லாவற்றையும் மக்கிப் போட்டுக்கொண்டிருக்கிறது. அந்த உரத்தைத் தூவப்போகும் நிலத்திற்காகத்தான் ஒரு விவசாயியைப் போலக் காத்துக்கொண்டிருக்கிறான்.

காத்துக்கொண்டிருப்பதென்றால் ஒற்றையடிப் பாதையில் புருவத்தின் மீது கைவைத்து யாரேனும் வருகிறார்களா என்றல்ல. திருமணச் சந்தை வலைத் தளங்களில் தன்னை விளம்பரப்படுத்தி யாரேனும் வாங்குவார்களா என்று கம்ப்யூட்டர் முன்பு கன்னத்தில் கைவைத்து உட்கார்ந்திருக்கிறான். திருமணச் சந்தையில் அவன் புகைப்படத்துடன் கூடிய தகவல்களைப் பார்த்து பிடித்துப்போனவர்கள் அவனைத் தொடர்புகொண்டு தீவிரவாதியை விசாரிப்பதுபோல விசாரிக்கிறார்கள். முத்தாய்ப்பாக, சொந்த வீடு இருக்கிறதா எனக் கேட்கிறார்கள். இவனும் மிதவாதியைப்போல் சலிக்காமல் “இருக்கிது சார். சிந்தாதிரிப் பேட்டையில, ஹவ்சிங் போர்டு வீடு” எனச் சொன்னதும். எதிர் முனையில் குரல் தாழ்ந்து போகும். “சார், மேரேஜ்

ஆனதும், ஹவுசிங் லோன் போட்டு சிந்தாதிரிப்பேட்டையிலேயே ஒரு வீடு வாங்கிடுவேன் சார் ஒன்னும் ப்ராப்ளம் இல்லை'' என்று சொன்னால் ''செரி தம்பி வீடு வாங்கிட்டு இந்த நம்பருக்குக் கூப்டுங்க. ஒன்னும் ப்ராப்ளம் இல்லை'' என்று இணைப்பைத் துண்டித்துவிடுகிறார்கள். ஒவ்வொரு துண்டிப்பிலும் சமூகமே தன்னைத் துண்டிப்பதாய் நினைத்து நிர்க்கதியான நிலையில் காலத்தை நகர்த்திக்கொண்டிருந்தான்.

லாரன்ஸ், பூங்கொடி, பூபாலன் மூவரும் வேலூருக்குச் சென்று அவனை சமாதனப்படுத்தினார்கள். வரவே மாட்டேன் என முரண்டு பிடித்தவனைக் கட்டாயப்படுத்திக் கூட்டிவந்தார்கள். சந்துக்குள் ஆட்டோ வராது என வாதம் செய்த ஆட்டோக்காரரை பூபாலன் மிரட்டி டி ப்ளாக் வாசலிலேயே கொண்டுவந்து நிறுத்தினார். அவன் உள்ளே நுழைந்து மாடிப்படி இடைவெளியில் பூமா வீட்டு வாசலை இன்னொரு முறை பார்த்தான். (அவர்கள் மூணாவது சந்து சி ப்ளாக்குக்கு இடம் பெயர்ந்திருந்ததால்) வீடு பூட்டப்பட்டிருந்தது. யாரையும் பார்க்கத் தயாரில்லை என்கிற செய்தியைக் குடும்பத்தாரின் மூலம் சொல்லியதுடன் அலைபேசி எண்ணையும் மாற்றினான். ரூபன் அவ்வபோது சௌமியனின் வீட்டிற்கு அவனை ஆற்றுப்படுத்துவற்காக வந்தான். யாரையும் பார்க்க விரும்பவில்லை என்பதை சௌமியன் தன் அம்மாவின் மூலம் தெரியப்படுத்தியிருந்தான்.

“எப்பா ப்ரைவேட் வேலியா இர்ந்தாகூட பருவால்ல கொஞ்ச நாளிக்கு செய். வீட்ல இருக்காத நைனா” என்றார் லாரன்ஸ்.

கனவை ஊட்டிய அவரே துப்பச் சொல்கிறார்.

“அதுலா வேல கெச்சிடுங். நா பாத்துகிறேங்” என்றான்.

அவனுக்குத் திருமணம் நடத்தி வைக்கப் பூங்கொடியும் பூபாலனும் திட்டமிட்டார்கள். இனி உள்ளூரில் பெண் குடுக்க மாட்டர்கள் என்பதால் தம்பியிடமே வெளிப்படையாகக் கேட்டாள் பூங்கொடி.

“பாலா எதுக்குடா பிலோமினாவ வெச்சிகினு வெளிய தேன்னுங்?”

பூபாலன் திகைத்தார்.

மாமாவுக்கும் அக்காவுக்கும் நிறையக் கடமைப்பட்டிருக்கிறார். மருமகனும் கெட்டவன் ஒன்றுமல்ல, இரண்டு மூன்று பட்டப் படிப்பு படித்திருக்கிறான். சமீபத்திய நிகழ்ச்சி மட்டும்

நடைபெறாதிருந்தால் அமலோற்பவத்திடம் போய் கௌரவமாக "நம்ம சௌமிக்கு முச்சில்லாம் பிலோமினாவ" என்று கேள்வி கேட்காமல் கட்டளை பிறப்பத்திருப்பார்.

சௌமியனின் தற்போதைய பிரபலத்திற்கான காரணத்தை அறிந்த அமலோற்பவம் நிச்சயம் தன் பெண்ணைக் கொடுக்க மாட்டாள் எனத் தெரிந்தவர் "அம்லா சொந்தத்துல வேணா அசல்லதாங் குடுக்கணுன்னு அப்பத்துலருந்து சொல்லினு இருக்கிது" என்றார் தேய்ந்த குரலில்.

கல்யாணமெல்லாம் இப்போதைக்கு வேண்டாமென மறுத்தான். அதற்கான வேலையில் ஈடுபட்ட அம்மாவையும் திட்டித்தீர்த்தான். வெளியில் செல்வதற்குக் கூச்சமாக இருந்தாலும் வீட்டுக்குள்ளேயே அடைந்திருப்பது மன உளச்சலை அதிகப்படுத்தவே செய்தது.

வெளிய செல்ல ஆரம்பித்தான். பகல் பொழுதுகள் முன்பைக் காட்டிலும் தனிமையின் கோரப்பற்களால் அவனைக் குத்திக் கிழித்தன. காயத்திற்கு மருந்தாக முன்பே பழக்கமாகியிருந்த குடியை நாடினான். போதையில் இருக்கும்போது யாரும் தன்னைப் பற்றி என்ன நினைத்தால் என்ன என்கிற முரட்டு தைரியம் அவனைக் குதூகலப்படுத்தியது. யாராக இருந்தாலும் முகத்திற்கு முகம் சந்தித்தான். ரூபனின் வீட்டிற்கு அவனைச் சந்திக்கப் போனான். அவன் வீட்டில் இல்லை. இது எல்லாவற்றையும் செய்வதற்கு குடி அவனுக்குத் தேவையாக இருந்தது. ஓர் இரவு நிறைபோதையில் பூமா இருக்கும் மூணாவது சந்து சி ப்ளாக்கிற்கே போய்விட, ஜியாலுதின் பாய் சௌமியன் மீது காட்டாமல் விட்ட பழைய வன்மத்தை அவனை அடித்துத் தீர்த்துக்கொண்டார். வன்முறைக்கே பழக்கப்படாத சௌமியனின் கைகள் முறையாக எதிர்க்கக்கூடத் தெரியாமல் சரமாரியான குத்துகளை முகத்தில் வாங்க நேரிட்டது. விஷயமறிந்த லாரன்ஸ் குடும்பத்தினர் டெய்லர் கடையில் புகுந்து ஜியாலுதின் பாயை துவம்சம் செய்தார்கள். சௌமியனின் காயங்கள் பாதி குணமாகாத நிலையில் குடிப்பதற்காக அவன் மறுபடியும் எழும்பூர்

எஸ்.ஐ.ஆருக்குச் சென்றான். அப்போதுதான் அவனுக்கு ஜான்டியின் நட்பு கிடைத்தது.

~

ஜான்டி பிறந்தது சிந்தாதிரிப்பேட்டையில். அவன் இயற்பெயர் பாலமுருகன். ஜான்டி என்பது காரணப் பெயர். அப்பெயரை இன்னும் விரிவாகச் சொன்னால் புரிய வாய்ப்பிருக்கிறது. ஜான்டி ரோட்ஸ்.

கிரிக்கெட் விளையாட்டில் பந்தை கவ்விப் பிடிப்பதில் அவன் ஜான்டி ரோட்ஸயும் மிஞ்சக்கூடியவன். அவனைக் கௌரவப்படுத்தும் விதமாக அத்துறையில் அதிக பிரசித்தி பெற்ற ஜான்டி ரோட்ஸின் பெயரை அவனுக்கு வைத்து, பிற்காலத்தில் அதுவே அவன் பெயராக மாறியது. ஜான்டி ரோட்ஸுக்கு இருப்பது போலவே ஜான்டியின் கேசமும் லேசான செம்பட்டை நிறத்திலிருக்கும். அதே சமயம் ஜான்டி ரோட்ஸிடம் இல்லாத சிறப்பு குணாதிசயமும் ஜான்டியிடம் இருந்தது. பீல்டிங் செய்யத் தொடங்குவதற்கு முன்பு மேல்சட்டையைக் கழட்டிப் பந்துபோலச் சுருட்டி ஒரு ஓரமாக வைத்துவிட்டுத் தன் கையில் மண்ணை அள்ளி இரு உள்ளங்கைகளிலும் பூசிக்கொண்டு மாடுபிடிக்குத் தயாராவது போல பீல்டிங்கிற்குத் தயாராவான்.

அவன் திறமையை நிரந்தரமாக தங்களுக்குச் சாதகமாக்கிக்கொள்ள முயற்சித்த லெவன்ஸ்டார் அணியினர் தங்கள் அணி ஜெர்ஸியை அவன் பெயர்போட்டு வாங்கிக்கொடுத்து அவனை சேர்த்துக்கொண்டனர். ஒரே டோர்னமெண்ட்டில் அவர்களுடன் பிரச்சினை செய்து விலகிவிட்டான். அவனுக்கு அந்த எலுமிச்சை நிற ஜெர்சி நிகர லாபம்.

ஜான்டி இந்த அணியில்தான் ஆடுவான் என உறுதியான நிலைப்பாட்டுடன் சொல்ல முடியாது. எப்பொழுதுமே மே தின விளையாட்டு மைதானத்திலேயே சுற்றிக்கொண்டிருப்பவன் யார் அணியில் ஆள் பற்றாக்குறையோ அவர்களுக்கு உதவி செய்யும் பொருட்டு அந்த அணியில் ஆடுவான். யார் அணியில் விளையாடினாலும் மிகுந்த அர்ப்பணிப்போடு தன் பங்கைச் செலுத்துவான். பந்து போகும் திசையைக்

கவனித்துவிட்டால் மல, ஜலம், கல்லு, முள்ளு என எதுவும் அவன் கண்ணுக்குத் தெரியாது. அதே சமயம் அவனின் அதிகப் பிரசங்கித்தனத்தால் 'ஓவர் த்ரோ'வில் எதிரணிக்கு ரன்கள் கிடைத்து அவர்கள் வெற்றிபெற்ற வரலாறுகளும் உண்டு.

ஞாயிற்றுக்கிழமையில் ஜான்டிக்குப் பெரிய கிராக்கி ஏற்பட்டுவிடும். அந்த நாளில் அவன் மிகவும் பரபரப்பாக இருப்பான். ஜான்டி பீல்டிங் செய்வதில் மட்டுமின்றி பிட்ச் போடும் திறமை கொண்டவன். மே தினப் பூங்காவில் எந்த அணி டோர்னமென்ட் நடத்தினாலும் அவன்தான் பிட்ச் போடுவான். தேவையான அளவு கொத்தி, நீர் பாய்ச்சி, செம்மண் மொழுகித் தரமாக்கும் பொறுப்பு ஜான்டியினுடையது. இதற்காகப் போட்டி ஏற்பாட்டாளர்களின் மூலமாக ஜான்டிக்குக் கணிசமான தொகை கிடைக்கும். ஒருமுறை சிட்டி காய்ஸ் என்கிற அணியினர் ஆடம்பரமாகத் தாங்கள் நடத்திய மின்னொளிக் கிரிக்கெட் போட்டிற்கு பிட்ச் போடுவதற்காக ஜிம்கானா கிளப்பிலிருந்து ஆள் கூட்டிக்கொண்டுவந்து வேலை செய்தார்கள். அடுத்த நாள் காலையில் ஏற்பாட்டாளர்கள் வந்து பிட்சைப் பார்த்தபோது துணுக்குற்றனர். பேட்ஸ்மேன் நின்று ஆடும் இடத்திலும் பிட்சின் நடுப்பகுதியிலும் மொத்தையாக மலம் கழிக்கப்பட்டிருந்தது. அது ஜான்டியுடைய மலம் என்பதற்குப் போதிய ஆதாரங்கள் இல்லாததால் அவனை எதுவும் செய்ய முடியவில்லை.

மே தின மைதானத்தை ஜான்டி தன் சொந்த வீடுபோலக் கருதி அங்கு சுற்றிவந்தான். அங்குள்ள பஞ்சுக்கொட்டை மரத்தில் வாசம் செய்யும் கிளிகளைப் பிடித்துத் தருமாறு விண்ணப்பம் கொடுப்பவர்களிடம் தகுந்த சன்மானம் வாங்கிக்கொண்டு கிளியைப் பிடித்துத்தருவான். ஒருவேளை கிளி அகப்படவில்லை என்றால் அவன் பெற்ற சன்மானம் திரும்பித்தரப்பட மாட்டாது. ஒருநாள் திங்கட்கிழமை ஐந்தாறு அதிகாரிகள் இரண்டு கார்களில் மைதானத்திற்குள் நுழைந்தனர். அந்த அதிகாரிகள் கடந்த ஒரு மாத காலமாகவே வந்துபோவதால் அவர்களின் முகம் அவனுக்குப் பரிச்சயமாகி இருந்தது. அவர்களுக்கு இவனைத் தெரியும் அளவுக்கு அவர்கள் இவனைப்

பொருட்படுத்தவில்லை. அன்று அவர்களுடன் புல்டவுசரும் நுழைந்தது. திங்கட்கிழமை காலை என்பதால் மைதானத்தில் யாரும் விளையாட வரவில்லை. காலையிலேயே நல்ல வெயில். இரண்டு கூலியாட்கள் பஞ்சுகொட்டை மரத்தின் அருகில் சென்று அதை தட்டிப்பார்த்து ஏதோ பேசிக்கொண்டிருந்தனர். ஜான்டி அவர்களிடம் சென்று என்ன ஏதென்று விசாரித்தான்.

"இங்க ரயில்வே டேசன் வரப்போதுப்பா. இங்ககிற எல்லா மரத்தயும் இன்னும் ரெண்டு வாரத்துல எடுக்கணும். கூடமாட இருக்கிறியா" என்று சட்டையைக் கழட்டிக்கொண்டே கேட்டார் ஒருவர்.

ஜான்டி அவரிடம் எதுவுமே பேசவில்லை. மே தினப் பூங்காவில் மெட்ரோ ட்ரெயின் ப்ராஜகட் வரப்போவுது. இன்னும் கொஞ்சநாள்தான் விளையாட முடியும் என்கிற செய்தி அவனை எட்டியிருந்தாலும் அரசாங்கத் திட்டத்தின் மீது அசாத்திய நம்பிக்கை கொண்டு அது இவ்வளவு சீக்கிரம் நடைமுறைக்கு வராது என்று தெம்புடன் இருந்தவனுக்குத் திகிலாகிப்போனது.

அந்த வார ஞாயிற்றுக்கிழமை மைதானத்தில் போலீஸ்காரர்களின் உதவியோடு கட்டுமான அதிகாரிகள் யாரையுமே உள்ளே சேர்க்கவில்லை. புதிய தலைமைச் செயலகம் கட்டப் போகிறோம் என்று ஏற்கனவே அருகிலிருக்கும் ராஜாஜி ஹாலும் மூடப்பட்டுவிட்டதால் விளையாட இடமில்லாமல் சிந்தாதிரிப்பேட்டை கிரிக்கெட் ஆர்வலர்கள் ஸ்தம்பித்தனர். "சார் நா வெளாடப்போல. சும்மா உள்ளியாது பாத்துட்டு வந்துற்றேங்" என்று தொல்லை செய்த ஜான்டியை உயரதிகாரம் கொண்ட காவலொருவர் விரட்டினார். எரிச்சலுடன் ஜான்டியை திட்டினார். அதற்கு அவன் எதிர்த்துப் பேச கன்னத்தில் அறை கொடுத்து அவனை துரத்தினார். தப்பித்தவறியாவது உள்ளே அனுப்பிவிடுவார்களென்று காலிடுக்கில் பேட்டும், ஸ்டம்புமாக நின்றிருந்தவர்கள் ஜான்டிக்கு நேர்ந்த சம்பவத்தைப் பார்த்து கடைசி நம்பிக்கையையும் இழந்தனர்.

சிந்தாதிரிப்பேட்டையில் உயிர்ப்புடன் கிரிக்கெட் விளையாடிக்கொண்டிருந்த இருபது டீம்களில், ஓரிரு டீம்கள் மட்டும் கோபாலபுரம், மந்தைவெளி, சோமசுந்தரம் மைதானம் போன்ற இடங்களுக்கு அதிகாலையிலேயே சென்று ‘பிட்ச்’ பிடித்து விளையாடி வந்தனர். ஜான்டியை எவ்வளவு வற்புறுத்தியும் அவன் மற்ற ஊர் மைதானங்களுக்கு வந்து விளையாட மறுத்துவிட்டான். ஒருமுறை அழைத்துச்சென்ற போது நிறைய மிஸ் பீல்டிங் செய்தான்.

சிந்தாதிரிப்பேட்டையில் கிரிக்கெட் விளையாடிய பெரும்பாலானோர் போக்கிடமின்றி விளையாடுவதையே கைவிட்டனர். பரபரபப்பான அவர்களின் ஞாயிற்றுக்கிழமைகள் டாஸ்மாக்கில் செலவிடப்பட்டன. மீதிப் பேர் பேஸ்புக் போதைக்கு அடிமையாக ஆரம்பித்தனர். ரூபனும் அதிலொருவன்.

ஜான்டி குடிகாரக் குழுவில் சேர்ந்தான். அவனுடைய நண்பர்கள் வட்டம் பெரிதென்பதால் ஞாயிற்றுக்கிழமை காலையிலிருந்து இரவு வரை அவனுக்கு யாராவது வாங்கிக் கொடுத்துக்கொண்டே இருப்பார்கள். மற்ற நாளும் அவனுக்கு அந்த போதை தேவைப்பட்டது. வாங்கித்தர ஆள் இல்லை. ஆல்பர்ட் திரையரங்கின் அருகிலிருக்கும் எஸ்.ஐ.ஆர். வாசலிலேயே நின்று முப்பது ரூபாய் வைத்துக்கொண்டு “கட்டிங்கா பாஸ்” என்று வருவோர் போவோரைக் கேட்க ஆரம்பித்தான். அப்போதுதான் அவனுக்கு சௌமியனுடன் பழக்கம் ஏற்பட்டது. இருவரும் சுமார் ஏழு மாத காலமாக தினசரி குடித்தார்கள். இந்த ஏழு மாத காலத்தில் இவர்களிருவரும் எவ்விதக் கருத்து வேறுபாடு வந்தும் பிரிந்ததில்லை. அந்நியோன்யமாக இருந்தார்கள். ஜான்டி சௌமியனின் மீது நிறைய அன்பு கொண்டவனாகவும் நம்பிக்கைக்குரியவனாகவும் இருந்தான். முதன்முதலில் தன் நட்புக்கு ஒருவன் முழுமரியாதை கொடுப்பதை எண்ணி சௌமியனுக்கும் இதமாகவே இருந்தது.

சௌமியன் தினமும் இரண்டு பேர் குடிப்பதற்குத் தேவையான பணத்தை எப்பாடு பட்டவாது கொண்டுவந்து விடுவான். சௌமியனின்

கண்ணசைவுக்குக்கூட ஜாண்டி என்ன ஏதென்று விசாரித்துப் பணிவிடைகளைச் செய்வான்.

ஒரு கட்டத்தில் குடிக்கப் பணமில்லாமல் இருவரும் தத்தளித்தார்கள்.

ஒயின்ஷாப் நண்பர் ஒருவரின் வழிகாட்டுதலின் பேரில் வெவ்வேறு விதமான போதைகளுக்கு அடிமையானார்கள். அச்சமயத்தில் நரியங்காட்டிலுள்ள ஆங்கிலோ - இந்தியக் குடியிருப்புப் பகுதியான ப்ளாக்ஸில் வசிக்கும் “டாடி” என்பவர், இவர்களிருவருக்கும் அறிமுகமானார். டாடிக்கு அறுபதுக்கு மேல் வயது. அவரொரு ஆங்கிலோ இந்தியன். டாடி - மீஷல் தம்பதியனர் முதுமையைத் தொட்டும் அவர்களுக்குப் பிள்ளைகள் இல்லை. அவருடைய இயற்பெயரான டிக்ரோஸ் என்பதைச் சொல்லி மற்றவர் அழைப்பதை அவர் விரும்பவில்லை. தன்னை எல்லோரும் ‘டாடி’ என்றே அழைக்க வேண்டுமெனத் தொடர்ந்து போதையில் அவர் வலியுறுத்திக்கொண்டே இருந்ததால் அவரை அப்படியே அழைக்க ஆரம்பித்தார்கள். டாடி போதைப் பிரியர்.

ஹெடோனிச முறையை வாழ்க்கைச் சித்தாந்தமாக கொண்டு வாழ்ந்து வருவதாக நம்பும் டாடியினால் சௌமியனும் ஜான்டியும் கஞ்சா, ஊசி, பி.எஸ். எனப் பழக்கப்பட்டார்கள்.

டாடிக்குத் திருவண்ணாமலையிலுள்ள சித்தர்கள் பழக்கம் என்பதால் அவருக்குக் கிடைக்கும் தூய்மையான கஞ்சாவை இவர்களுடன் பகிர்ந்துகொண்டார். ஜிம்காரொட் எனச் சொல்லப்படுகின்ற ப்ரெட் அல்வாவை எல்லிஸ் ரோட்டில் போய் வாங்கிவரச் சொல்லுவார். அதைத் துணைக்கு வைத்துக்கொண்டு மூவரும் சேர்ந்து டாடியின் வீட்டிலேயே அமர்ந்து புகை இழுப்பார்கள். அவர்கள் முடிக்கும்போது காரமான சுக்குக் காப்பியை டாடியின் மனைவி மிஷல் அவருக்குக் கொண்டுவந்து கொடுப்பார். முதன்முறை இவர்களை டாடி வீட்டுக்கு அழைத்து கஞ்சா அடித்தபோது சுக்காபி கொண்டு வந்த மீஷல் டாடியைப் பார்த்துக் கேட்டார். “Why are you doing this??? U keep bringing kids home n doping with them … ahaam … Jesus will never forgive u

man” என்று சொல்லி விசனப்பட்டாள். தன் உடன் வந்தவர்களை அவமானப்படுத்துவதாக நினைத்த டாடி, மனைவியை “Bullshit man … why don’t you just mind ur business and get couple of coffees …” மனைவி கோபப்பட்டு போகையில் அவரைக் கூப்பிட்டு “Meeshal do you think Jesus is such a jobless guy to watch me all d time doping? எனச் சொல்லி தங்க நிறத்திலிருக்கும் பற்கள் தெரியச் சிரித்தார்.

இந்த உரையாடலுக்குப் பிறகும் மீஷல் மூன்று பேருக்கும் சேர்த்து சுக்குக் காப்பி போட்டு எடுத்து வந்து முகம் மலர இவர்களிருவருக்கும் கொடுத்ததும் ரொம்பவும் குளிர்ந்து போனார்கள். மறுநாள் இருவரும் சொந்தப் பணத்தைப் போட்டு டாடி வீட்டுக்குத் தேவையான இறைச்சி வாங்கிக் கொடுத்து மீஷலைச் சந்தோஷப்படுத்தினர்.

இவர்களுடன் பழக்கம் ஏற்பட்ட ஒரே மாதத்தில் யதேச்சையாக டாடி மாரடைப்பால் காலமானார். அனுபவித்த போதை சுகம் இவர்களை மேலும் துரத்தியது. “டாடி” இல்லாமலும், கையில் பணமில்லாமலும் வேண்டிய லாகிரி வஸ்துக்கள் இல்லாமல் கஷ்டப்பட்டனர்.

ஒருகட்டத்தில் பணத்திற்காக அப்பாவை அடிக்கும் நிலைக்குச் சென்றான் சௌமியன். வீட்டில் யாருமில்லை என்றால் பித்தளைச் சாமான்களைத் தூக்கிக் கொண்டு விற்று போதைகொள்ளும் அளவுக்கு மாறிப்போயிருந்தான்.

பிறகு ஜான்டி ஓர் ஆலோசனை கொடுத்தான். அதன்படி சுள்ளான்களுடன் சேர்ந்து பழுதான ஆட்டோ, கார் போன்றவற்றில் அமர்ந்து இருவரும் ‘சொல்யூஷன்’ அடிக்க ஆரம்பித்தனர். சொல்யூஷன் அடிப்பதற்கு நிறையப் பணம் தேவையில்லை. வாங்குவதற்கு அல்லல் படத் தேவையில்லை. ஃபெவிகால், ஒய்ட்னர் வாங்கத் தெரிந்தால் போதும். சில சமயங்களில் ஒய்ட்னர் வாங்கக்கூடப் பணம் இல்லையென்றால் பஞ்ச்சர் கடையில் வேலை செய்யும் தனக்குத் தெரிந்த நண்பன் ஒருவனிடம் ரப்பர் சொல்யூஷன் வாங்கி சுள்ளான்கள் இவர்களிருவருக்கும் கொடுத்தார்கள்.

ஒருமுறை ஒரு சிறுவன் நெயில் பாலிஷைக் கைக்குட்டையில் கொட்டி போதை அனுபவித்த விதம் சௌமியனுக்கு ஆச்சரியத்தை உண்டுபண்ணியது.

இவர்களுடனெல்லாம் பழக நேர்ந்ததற்குத் தான் எந்த விதத்திலும் காரணமில்லை என்றும் விதிதான் இந்த இடத்தில் கொண்டுவந்து நிறுத்தியது என்றும் விதியின் மீது தன் பழிகளையும் பாரங்களையும் பாவங்களையும் இறக்கி அவன் தன்னை இலகுவாக்கிக்கொண்டான்.

சுள்ளான்களின் உதவியில்லாமல் பழகியதும் சௌமியனே ஹார்டுவேர், மெடிகல் ஷாப் போன்ற கடைகளுக்குச் சென்று ஒரு குடும்பஸ்தரைப் போல கண்ணியமாகக் கேட்பான். ஒரு முறை வாங்கிய கடையில் அடுத்த முறை போனால் சந்தேகம் வலுக்கும். கொடுக்க மாட்டார்கள். ஒரு நாள் ஜான்டி மறுநாள் சௌமியன் என ஒரு கடையை இரண்டு முறை பயன்படுத்துவார்கள்.

வாங்கி வந்ததும் சிந்தாதிரிப்பேட்டை பறக்கும் ரயில் நிலையத்தின் பின்புறத்திற்கு வந்து அமர்வார்கள். கைக்குட்டை அல்லது வாட்டர் பாக்கெட் கவரில் ஒயிட்னரைப் பிதுக்கி அது பால்பச்சை நிறத்தில் மாறும்வரை கசக்குவார்கள். அதிலிருந்து வரும் நெடியை மூக்கு துவாரத்தில் மெதுவாக ஏற்றியதும் போதையில் தலை பின்னுக்கு போகும். சௌமியன் கண்களைத் திறக்காமலேயே சொற்ப நேரம் சிரிப்பான். ஜான்டி சிரிக்காமல் கண்களைத் திறக்காமல் தலையை மட்டும் மெதுவாக ஆட்டுவான். போதையில் எந்தெந்த எல்லை வரை சென்றோம் என்று சிந்தனைரீதியில் ஓர் அளவீட்டை உருவாக்கி யார் அதிக தூரம் சென்றது என்று பகிர்ந்துகொண்டார்கள். போதையை இப்படி அனுபவிக்கும் முறை கூட சொல்யூஷன் அடிக்கும் சிறுவர்கள் சொல்லிக் கொடுத்துப் போனதுதான்.

பணம் புழங்கும் நேரங்களில் டி.பி. சத்திரத்திற்குப் போய் பொட்டலம் வாங்கி சேத்துப்பட்டு ரயில்வே நிலைய பின்புறம் குழுவாக அவர்களுடன் சேர்ந்து இழுவை நடத்துவார்கள். அவர்களுடன் சேர்ந்து இன்பத்தில் திளைத்துக்கொண்டிருந்த சௌமியனுக்கு திடீரென ரயில் முன் பாய்ந்து சாக வேண்டும் போல்

தோன்ற வேகவேகமாக தண்டவாளத்தை நோக்கி ஓடிப்போக, அதை அறிந்துகொண்ட ஜான்டி ஒரே ஓட்டத்தில் சௌமியனுக்கு அருகில் சென்று ஒரே தாவலில் எக்கி சௌமியனின் இடுப்பை வளைத்துக்கொண்டான். தண்டவாளம் இன்னும் தூரம் இருக்கிறதென்றாலும் தான் காப்பற்றப்பட்டது குறித்து சௌமியனுக்கு மகிழ்ச்சியாக இருந்தது. யாராவது வந்து தடுப்பார்களா என்று உள்ளூர அவன் ஏங்கியது வீண் போகாமல் இருந்தது. ஓடிவந்த வேகத்தில் ஒரு கல்லில் கால் இடறி கட்டைவிரல் நகம் பிய்ந்து தொங்கியது ஜான்டிக்கு. போதையினால் அவனால் அந்த வலியை உணர முடியவில்லை. ஆனால் அதைப் பார்த்த சௌமியன் உடனே அவன் காலைத் தன் கைகளில் ஏந்தி அடிப்பட்ட இடத்தில் ஊதினான். ஜான்டி கண்களை மூடி அதையும் அனுபவித்தான். அந்த சம்பவத்திற்குப் பிறகு அவர்களின் நட்பு இன்னும் நெருக்கமானது.

டாடியின் நண்பர் சிந்தாதிரிப்பேட்டைக்கு வந்ததும் வழக்கம்போல் இவர்களைச் சந்தித்து மருந்து கொடுத்தார். தாளமுத்து நடராசர் மாளிகையின் எதிரே உள்ளே ஆற்றங்கரை மரங்களின் நிழலில் வட்டமாக அமர்ந்தார்கள். ஜான்டி ‘சிரஞ்சி’ வாங்க புதுப்பேட்டையிலுள்ள மெடிகல் ஷாப்பிற்குச் செல்வதற்கு எழுந்து சைக்கிளை நோக்கிச் சென்றான். டாடியின் நண்பர் அவனைப் போக வேண்டாமெனச் சொன்னதோடு அவரே சிரஞ்சி வாங்கி வந்திருப்பதைத் தன் பாக்கெட்லிருந்த ப்ளாஸ்டிக் கவரை எடுத்துக்காட்டி ஆச்சரியமூட்டினார். ஜான்டியும் சௌமியனும் புஜத்தில் ட்யூப் கட்டி ஊசியடித்தார்கள். எல்லா நரம்புகளும் தளர்ந்து போயிருந்ததால் டாடியின் நண்பர் தன் ஆணுறுப்பை விறைக்க வைத்து அதில் தெரியும் நரம்பில் ஊசியடிக்கப் போராடிக்கொண்டிருந்தார். சௌமியன் அதைப் பார்த்து மௌனமாகச் சிரித்தபோது பூபாலனிடமிருந்து அவனுக்கு தொலைபேசி அழைப்பு வந்தது.

அமெரிக்கா மற்றும் ஐரோப்பா நாட்டினத்தவர்க்கு வேலை செய்தவரை அவனுக்கு எந்த பிரச்சனையுமில்லை. கூடுதலாக அரைமணிநேரம் உட்கார்ந்து வேலையை முடித்துக் கொடுத்தால், “Hello, Ruban your work is highly appreciated” என்று ஐந்தாறு ஆச்சரியக் குறிகளுடன் மின்னஞ்சலில் அவனுக்குப் பாராட்டுப் பத்திரம் அனுப்புவார்கள். அப்ரைசல் நடக்கும் போர்க்காலச் சமயங்களில் இவ்வகை - அப்ரிசியேஷன் - மின்னஞ்சல்கள் கவசமாகவும் சிறந்த ஆவணமாகவும் அவனுக்குப் பயன்படும். அமெரிக்கர்களுக்கு, ஐரோப்பியர்களுக்கு வேலை செய்வதில் இன்னொரு அனுகூலம்; ‘வீக்கென்ட்’ எனச் செல்லமாக அழைக்கப்படும் வெள்ளிக்கிழமைகளில் வேலைநேரம் முடியும் மூன்று மணி நேரத்திற்கு முன்னதாகவே அவன் மேல்நாட்டு வாடிக்கையாளர்கள் கொண்டாட்டத்திற்குத் தயாராகிக் கடையைப் பூட்டிவிடுவார்கள். அது அவனுக்கும் தொற்றிக்கொண்டு, விடுமுறையைக் கிரண்யாவுடன் எப்படிக் கொண்டாடலாம் என மனக் கணக்கும் பணக் கணக்கும் போட்டுக்கொண்டிருப்பான். அவன் வாழ்க்கையின் பொற் காலங்களாக அவை இருந்தன.

அவள் போன பிறகு வெறுமையிலிருந்து தப்பிக்க வேறு அணிக்கு மாற்றலாகி வந்து எப்போது ஆசியக் கண்டத்திற்காகச் சேவை செய்ய ஆரம்பித்தானோ அப்போதே தன் வாழ்வில் கொஞ்ச நஞ்சம் ஒட்டியிருந்த வசந்தத்தையும் இழக்க ஆரம்பித்திருந்தான். ஒரே நாளில் மூல வியாதி வருமளவுக்கு உட்கார்ந்து முதுகெலும்பு வலிக்க வேலை செய்து சொன்னவற்றையெல்லாம் முடித்துக் கொடுத்த நாட்களும் இருக்கின்றன. ஆனாலும் வாய் திறந்தோ கை திறந்தோ ஆசியர்கள் பாராட்ட மாட்டார்கள். ஸ்ரீலங்கா, ஜப்பான், தாய்லாந்து மற்றும் வியட்நாம் ஆகிய நாடுகளிலுள்ள மென்பொருள் நிறுவனத்திற்கு, ரூபன் பணிபுரியும் நிறுவனம் செய்து கொடுக்கும் மென்கட்டுமானப் பணிகளுக்கான வருவாய், வரவு செலவுக் கணக்குகளைச் சரி பார்ப்பதே அவனுக்கு நியமிக்கப்பட்டிருந்த வேலை. நிறுவனம் இருக்கும்

அந்தந்த நாட்டுப் பிரிவில் வேலை செய்பவர்களே அவனுடைய மேலாளர்கள். பன்னாட்டு வணிக மொழியில் சொல்வதென்றால் அவர்கள் அவனுடைய Clients, Front Office Executives, Counterpart, எட்ஸட்ரா … இதில் அவன் அதிகம் பேச்சுவார்த்தை செய்ய வேண்டியதிருந்தது. ஸ்ரீலங்காவைச் சேர்ந்த ஒரு பிரஜையிடம். அவன் பெயர் ஜனக சந்திரஜித்.

ரூபன் தமிழனென்று தெரிந்து, அதனால்தானா எனத் திட்டவட்டமாகத் தெரியவில்லை; அவனை ஜனக சந்திரஜித் நிறையவே அலைக்கழித்தான், மன உளைச்சல் கொடுத்தான். அவன் அனுப்பும் ஆவணத்தில் காற்புள்ளி, அரைப்புள்ளி விடுபட்டாலும், நிர்வாகத்திடம் அவனைப் பற்றிப் புகார் செய்துவிடுவான். ஓர் ஒப்பந்தம் கொடுத்து அதை முடிக்கும் முன்னரே அடுத்தடுத்த வேலைகளைத் தந்து, “have you done this??? When I can expect that report??” என Lync வழியாகக் கேள்வி மேல் கேள்வி கேட்டு அவன் பின்மண்டையை வலிக்க வைப்பான். “Process Pressure is better than People Pressure” என்கிற பொன்மொழியை, ஜனக சந்திரஜித்துடன் வேலை செய்யும்போதுதான் அவன் அனுபவபூர்வமாக உணர்ந்தான்.

தனிப்பட்ட முறையில் சூப்பர்வைசர் விஷாலைச் சந்தித்து இரு நாட்டினருக்கு இடையே இருக்கும் இனப் பிரச்சனையை ரத்தினச் சுருக்கமாகச் சொன்னான். அதற்காகத்தான் ஜனக சந்திரஜித் தன்னை வஞ்சம் தீர்க்க நினைக்கிறான் என்று உணர்ச்சி பொங்கக் கூறினான். விஷால் வட இந்தியர். “க்ங்ற்றாஆப்” என்று ஏப்பம் விட்ட இடைவெளியில்,” hey nothing like that yar” என அவன் தோள்தட்டி அறையிலிருந்து எழுந்துவிட்டார். அண்ணன் சீமான் ஒருவேளை, தன் மேற்பார்வையாளராக இருந்தால் என்ன நடந்திருக்கும் என்று கற்பனை செய்து அதில் சமாதானமடைந்துகொண்டான்.

ஜனக சந்திரஜித்தின் குடைச்சலைத் தவிர, ஜப்பான், தாய்லாந்துக்காரர்களின் சுமாரான ஆங்கிலத்துக்கு மாதக் கடைசியில் மல்லுக்கொடுப்பது இன்னும் கொடுமை. இவன் பேசும் ஆங்கிலம் அவர்களுக்குப் புரியாது.

அவர்கள் பேசுவது ஆங்கிலம்தானா? அவனுக்குத் தெரியாது. இப்படிப் பெரும்பான்மை நாட்டினரை அவர்கள் தாய்மொழியிலிருந்து தங்களின் மொழியான ஆங்கிலத்தில் புலம்பவைத்த வெள்ளைக்காரனின் சூட்சுமத்தை நினைத்தால் அவனுக்கு ஆச்சரியமாக இருக்கும்.

இடத்தில் வந்து உட்கார்ந்து சிஸ்டம் லாகின் செய்ததும் மின்னஞ்சல்களின் வாயிலாக அன்றே முடிக்க வேண்டிய வேலைகளை 'எக்ஸலில்' குறித்துக்கொண்டிருந்தான். அடுக்கடுக்காக வேலை. மாதக்கடைசி ஆதலால் இம்மாதம் முழுக்க நடந்த பணப் பட்டுவாடா அனைத்தையும் துல்லியமாக ஆவணப்படுத்தி குறிப்பிட்ட நபர்களுக்கு அனுப்ப வேண்டும். இதையெல்லாம் முடிக்கக் குறைந்தது பதினாறு மணி நேரமேனும் ஆகும். 3rd Party வகை BPOவுக்குள் நுழைந்துவிட்டால் தினசரியையே அவர்களுக்கு அர்ப்பணிப்பதோடு நாள்பட்ட தலைசுற்றல், வாந்தி, மயக்கம், ஜீரணக் கோளாறு போன்ற எல்லா நோய்களுக்கும் உடல் ரீதியாக தன்னைத் தயார்படுத்திக்கொள்ள வேண்டுமென்று இந்த அணியில் சேர்ந்த சொற்ப நாட்களிலேயே அவனுக்குப் புரிந்துபோய் உடலும் அதற்கேற்றாற்போல் பழகிவிட்டது.

வேலையை ஆரம்பித்த சில நிமிடத்திற்குள் அவன் அலைபேசி "ர்ர்ர்ர்ர்ர்ர்" என ரீங்கரித்தது. உட்கார்ந்தபடியே ஜீன்ஸ் பாக்கெட்டிலிருந்து பிதுக்கிப் பிதுக்கி எடுத்துப் பார்த்தான்.

சேமித்து வைக்காத எண்ணிலிருந்து அழைப்பு

"ஹல்லோ"

"ஏ சௌமி பேசுறேன்டா"

"சௌமி … ன்னா மச்சான் … எப்டிடா இருக்கிற? வீட்டாண்ட …"

சௌமியன் அவனை இடைமறித்துச் சொன்னான்:

"அத வுர்றா எங்கப்பா சீரிஸாக்றாருடா."

கம்ப்யூட்டரை லாக் செய்துவிட்டு எழுந்து ஓர் ஓரமாக வந்தபடி கேட்டான். “ன்னா ஆச்சிடா?”

“நீ வா நா சொல்றேங். “சேட்பட்லக்ற எம்.ஆர் ஆஸ்பிட்லுக்கு சீக்கிரம் வாடா. தனியாக்றேங்.”

சௌமியன் இணைப்பைத் துண்டித்துவிட்டான்.

கிடத்தட்ட ஒரு வருடத்திற்குப் பிறகு அவன் குரலைக் கேட்கிறான்! அதிலிருந்த நடுக்கம் ரூபனைக் கலவரப்படுத்தியது. சௌமியனின் முகம் அவன் அகத்திரையில் வந்து போனது. கிளம்பிச் சென்று அவனுக்கு ஒத்தாசையாய் இருக்க வேண்டும்.

இப்போதிருக்கும் பணிச் சுமையில் கிளம்ப முடியுமா? அதுவும் விஷாலிடம் விடுமுறைக்கு அனுமதி பெறுவதென்பது லீப் ஆண்டிற்கு ஒருமுறை நடக்கக் கூடிய செயல். தவிர விடுப்பு எடுத்தால் வேலையை யார் செய்வார்? சைலேந்தரும் தேனிலவுக்காக கூர்க் போயிருக்கிறார். அவர் வேலையையும் சேர்த்தே முடிக்க வேண்டிய நிலையில், என்ன சொல்லிக் கிளம்புவது? தாத்தா, பாட்டியை எல்லாம் ஏற்கனவே சாகடித்து அவர்களின் கசப்புத்தலை, 16ஆம் நாள் காரியத்துக்காகவெல்லாம்கூடச் சேர்த்துப் போய் வந்தாகிவிட்டது. சௌமியனுடன் பேசிய பின் அந்த இடத்திலேயே நின்று என்ன காரணம் சொல்லலாமென யோசித்துக்கொண்டிருந்தான்.

தன் சித்தப்பா ஜெயசீலன் மீது பாரத்தைப் போட்டான்.

“சித்தப்பா என்ன கோய்ச்சுக்காத. எனுக்காக நீ எவ்ளவோ பண்ணிக்ற. நாயா பேயா அல்ஞ்சி எனுக்காக பொண்ணு பாத்துன்னுகிற. உனுக்குக்கூட நீ அப்டி பாத்திருப்பியான்னு தெர்ல சித்தப்பா. எனுக்கு வேற வழி தெர்ல”

சித்தப்பாவின் முகத்தை நினைவுக்கு கொண்டுவந்து அவரிடம் மனதார மன்னிப்புக் கேட்டு விஷாலின் கேபினுக்குச் சென்றான்.

விஷாலின் கேபின் கடைசியில் இருக்கும். பெரும்பாலான அலுவலகங்களில் டீம் லீடர், சூப்பர்வைசர், மேனஜர் போன்ற உயரதிகாரிகளின்

கேபின் வரிசைப்படி கடைசியில் அல்லது முதலில் இருக்கும். எதாவது மூலையில் அமர்ந்தால்தான் தனக்குக் கீழ் இருப்பவர்கள் சரியாக வேலை செய்கிறார்களா, இல்லையா என்று கழுகுப்பார்வை பார்க்க முடியுமென்பது அவர்களின் மூடநம்பிக்கைகளுள் ஒன்று. தவிர அங்கு உட்கார்வதுதான் உயர்பதவிக்கு கௌரவம் என்று நினைக்கும் மனப்போக்காகவும் இருக்கலாம்!

"Vishal, I would like to talk"

"Yes sure, Ruban. Can we get into a meeting room?"

"Yes"

ராஜினாமாவை அறிவிக்கத்தான் கூப்பிடுகிறானோ என்று சோகத்தினாலும், மகிழ்ச்சியினாலும் பிசையப்பட்ட முகத்தோடு விஷால் முன் செல்ல, அவர் பின் சென்றான். அறைக்குள் நுழைந்ததும், இருவரும் உட்காராமல் நின்றவாக்கில் பேசலானார்கள்.

"Ya Ruban, tell me"

"I got a call from home now, My Small Father passed away" இந்த வாக்கியத்தைச் சொல்லிவிட்டு விஷாலின் முகத்தைப் பார்க்காமல் அழுகையை அடக்கி பக்கவாட்டிலிருக்கும் சுவரைப் பார்த்தான்.

"You mean who?""

சித்தப்பாவுக்கு ஆங்கிலத்தில் Small Father இல்லையென்பது விஷால் கேட்ட whoவில் புரிந்து போனது. முகத்தை விஷால் பக்கம் திருப்பி …

"I mean my father's younger brother"

"Oh your uncle?"

சித்தப்பாவுக்கு ஆங்கிலத்தில் அங்கிளா?!! விஷால் சொன்னால் சரியாகத்தானிருக்கும்.

"yes Vishal"

Am sorry for your loss, how did this happen?

"கடன் தொல்லை தாங்க முடியாமல் என் சித்தப்பா நைலான் கயிறில் தூக்கு மாட்டி இன்று அதிகாலை இறந்து

போய்விட்டார்" - தன் ஆங்கிலத்தில் இதைச் சொல்லி விஷாலுக்குப் புரிய வைத்தான்.

"I am sorry Ruban. You may leave now, But don't forget to put an out of office" - சிவந்த முகத்தோடு விஷால் அவனை வழியனுப்பிவைத்தார். அவர் குடும்பத்திலும் யாரோ ஒருவர் இப்படி இறந்திருப்பார்கள்போல. அவரின் முகவாட்டம் அப்படியாகவே இருந்தது. ரூபனின் சித்தப்பா நிஜமாகவே இறந்திருந்தால் அவன்கூட இந்த அளவுக்கு சோகம் அப்பிய முகத்தோடு இருந்திருப்பானா என்பது சந்தேகம். ஆனால், இதே விஷாலிடம், "இன்று எனக்குச் சித்தப்பா பிறந்திருக்கிறார். அதை விழாவாகக் கொண்டாடுகிறோம் நான் போகவா?" என்று கேட்டிருந்தால். "ஹரே" என்று அவன் குரல்வளையைக் கடிக்கத் தாவியிருப்பார். இறப்புக்கு இருக்கும் துரித மரியாதை பிறப்புக்கும் கிடைக்கும்வரை ரூபன் போன்றோர்களின் குரல்வளைக்கு எந்த உயரதிகாரியிடமும் பாதுகாப்பில்லை.

~

லாரன்ஸ் தீவிர சிகிச்சைப் பிரிவில் சேர்க்கப்பட்டிருந்தார். அறையின் வாசலில் சௌமியனும் பூபாலனும் நின்றிருந்தார்கள்.

வகுப்பறையில் ஆசிரியருக்குத் தெரியாமல் பேசுவது போல அவன் தோள் தொட்டுக் காதோடு கேட்டான். - "ன்னா ஆச்சிடா அவ்ருக்கு?"

நெடுநாட்களுக்குப் பிறகு சௌமியனின் முகத்தை, அவன் பேசுவதை வெகு அருகில் பார்க்கிறான். முகத்தில் சதையில்லாமல் கன்னங்கள் உள்வாங்கியிருந்தன. குழியிலிருந்து கண்கள் சிமிட்டிக்கொண்டிருந்தன. மூக்கு மட்டும் எவ்வித பாதிப்புமின்றிப் புடைப்பாக விரிந்து மூடிக்கொண்டிருந்தது. அவனைப் பற்றி விசாரிக்க இது நேரமில்லை என்பதால் அதிகம் பாதிக்கப்பட்ட அவன் அப்பாவைப்பற்றி கேட்டான் …

"தோ இங்க, பக்கத்துலக்ற எம்.சி.சி. ஸ்கூல்ல நடக்கிற கேரம் டோர்னமென்ட்க்கு ரெப்ரி பாக்க கூப்ட்டுகிறாங்கடா, போயிட்டு பஸ் ஸ்டான்ட்க்கு வர்ற வழில மயக்கம் போட்டு உயின்ட்டுக்றாரு,

அங்கக்றவங்கதாங் இந்த ஆஸ்பிட்டல் பக்கத்துலகிதுன்னு கூட்னு வந்து அட்மிட் பண்ணிக்றாங்கோ.''

''சர்க்கச்சிந்தாப்லயா.''

''ம்''

''ன்னா சொல்றாங்க டாக்டருங்க?''- கேள்விக்கு பதில் சொல்லும் தருவாயில் செல்போன் ஒலித்தது. பாதி ஆள்காட்டி விரலில் ரூபனிடம் அனுமதி வாங்கிப் பேசிவிட்டு வந்தான்.

''அப்பாவுக்கு, ஆபிஸ்ல அன்லிமிடெட் மெடிகல் க்ளைம்டா. காசு கொடுக்க தேவைல்லன்றதால ஆளாளுக்கு வரிஞ்சி கட்டினு பேசுறாணுங்கோ ன்னாடா பண்லாம்? இதவிட பெரிய ஹாஸ்பிட்லுக்கு போயி அட்மிட் பண்ணிப் பாக்கலாமா? நீன்னா சொல்ற?'' என்று அவன் முகத்தை ஊடுருவினான்.

இவ்வளவு பொறுப்புமிக்க கேள்விக்கு உடனடியாக பதில் சொல்லக் கூடாது என்பதால் ரூபன் சற்று யோசிப்பதுபோல யோசித்தான். நீண்ட நாட்களுக்குப் பிறகு சௌமியன் தன் நட்பைப் பொருட்படுத்தியிருக்கிறான் என்பதை நினைக்கும்போது ரூபனுக்கு ஆறுதலாகவும் இருந்தது.

''அவ்ரு கண்டிஷன் இப்போ எப்டிக்துனு மொதல்ல உள்ள போயி பாக்கலாம், க்ளைம்தான்னு இந்த ஹாஸ்பிட்டல்ல சொல்ட்டியா?''

''சொல்ட்டன்டா''

சௌமியனின் தோளில் கைப்போட்டு அரவணைப்புடன் அதே சமயம் வேகமாக அவனை உள்ளே அழைத்துச் சென்றான்.

வாசலைத் தொட்டபோது அவர்களைத் தடுத்த செக்யூரிட்டியிடம் ரூபன் ''னோவ் அவ்சரம்'' என பத்து ரூபாய்த் தாளை அவர் கையில் திணித்தான். அவர் அதை வாங்கிய வேகத்தில் அவன் கையிலேயே திருப்பிக் கொடுத்து ''அதெல்லாம் வேணாம்

சார் உள்ள போகாதீங்க. அது போதும்'' என்றார். சௌமியன் செக்யூரிட்டியின் கைத்தடுப்பையும் மீறி அவரை விலக்கி உள்ளே சென்றான். அந்த ஆவேசத்தில் ரூபனும் பங்கெடுத்துக்கொண்டான்.

மருத்துவர் உட்கார்ந்திருக்கும் மேசை நோக்கிச் சென்றார்கள். இவர்களின் வருகையை எதிர்பாராதவர் இருக்கையிலிருந்து 'என்ன, ஏது?' முகபாவனையில் நோக்கினார்.

சௌமியன் பொறுமையாக ''டாக்டர் கண்டிஷன் எப்டி இருக்கு?'' என்று கேட்டான்.

''ட்ரீட்மென்ட் போய்ட்டு இருக்கு இப்போதைக்கு ஏதும் உறுதியா சொல்றதுக்கில்ல.''

''டாக்டர், இப்போ, இவர வேற ஹாஸ்பிட்டல்க்கு கூட்னு போயி அங்க அட்மிட் பண்ணலான்னு இருக்குறோம்'' ரூபன் துடுக்காகக் கேட்டான்.

''பேஷன்ட்க்கு நீங்க யாரு?''

''நான் பேஷண்ட்டோட, பய்யனோட ...'' எனத் தங்களின் உறவுமுறையை நீட்டி முடிப்பதற்குள், மருத்துவர் சற்று குரலுயர்த்தி ''ப்ளீஸ் வெயிட் அவுட்சைட்'' என்றார்.

உடனே சௌமியன் குறுக்கிட்டு ''டாக்டர் அவன் என் நண்பன்'' எனச் சொல்லி பாஸந்தி நிறத்திலிருந்த மருத்துவரின் முகத்தில் அடுப்புக் கரியைப் பூசுவான் என்று அவனை ஓரக்கண்ணால் பார்த்தான். அப்படி எந்த நட்பாட்டமும் நிகழவில்லை. அப்பா, தன்னை எப்படியெல்லாம் வளர்த்தார் என சௌமியன் யோசித்துக்கொண்டிருந்தான்போல.

''ப்ளீஸ்'' என மருத்துவர் இன்னொரு முறை ரூபனின் வெளிநடப்புக்குச் சிவப்புக் கம்பளம் விரித்தார்.

கோபத்தோடு சென்றால் அவமானமாக இருக்குமென்று, மருத்துவரையும் அவர் சூழலையும் புரிந்துணர்ந்தது போல ''இட்ஸ் ஓகே டாக்டர்'' எனச் சொல்லி மெதுவாகத் திரும்பி நடந்தபோது அந்த அறையில், ஓரமாய் நின்றிருந்த இளம் செவிலி ரூபனுக்கு நேர்ந்த அவலத்தைக் கண்டு சிரித்தாள். சிரித்தாள் என்று

வெளிப்படையாகச் சொல்ல முடியாது. வந்த சிரிப்பை அடக்கினாள். அவனுக்கு ஆத்திரமாக இருந்தது.

அவன் நுழைவாயிலை அடைந்ததும் அங்கிருந்த பூபாலன், "ன்னாப்பா நீ மட்டும் வெளிய வர? உள்ள ன்னா சொல்றாங்கோ?"

நேரடியாக அவரின் இரண்டாவது கேள்விக்கு பதில் சொன்னான் "ட்ரீட்மென்ட் போய்னுக்துன்னா ஒரு நாள் கழிச்சு

தான் எதுவும் சொல்ல முடியுன்றாங்கோ."

"யேசப்பா!!" என நெற்றி ஆரம்பிக்கும் இடத்தில், இரண்டு கைகளையும் வைத்து அவர் பெருமூச்செரிந்தார்.

"பொழைக்கிறது கஷ்டந்தாங் ... அன்லிமிட்டெட் க்ளைம்ங்கறதால வெச்சி செய்வானுங்கபோல" என்று தனக்குள் முனகி அறையின் இன்னொரு ஓரத்தில் வந்து நின்றான்.

சௌமியன் வெளியே வந்ததும் இவன் அருகில் வந்து "ட்ரீட்மென்ட் போய்னுக்து ... பாதில கூட்னு போனா தேவல்லாத ரிஸ்க், நாங்க இருக்கோங், பாத்துக்றோங்னு சொல்றானுங்கடா."

"அப்டியா சொல்றானுங்கோ?" என்று பூபாலன் பதிலளித்தார்.

"மாமா இரு கீல போய்ட்டு வந்துர்றோங்."

தேநீர் அருந்தச் சாலைக்கு வந்ததும், "சர்க்கு அடிக்கலாமாடா?" என்றான் சௌமியன்.

கிரண்யாவுடனான காதல் முறிவுக்குப் பிறகு ரூபன் சந்துவாசிகளுடனான பழக்கத்தைக் குறைத்துக்கொண்டு அலுவலக நண்பர்கள், அவர்களுடன் சினிமா, புத்தகம் என்று வேறொரு உலகத்தில் வாழத் தலைப்பட்டான். ரெஜினா அவ்வப்போது சௌமியனின் நிலையை ரூபனிடம் சொல்வாள். சொல்லும்போது தன் பிள்ளை அவனைப் போலக் கெட்டுப்போகவில்லை என்கிற ஆத்ம திருப்தியினால் அவள் முகத்தில் சோகம் முழுதும் இருக்காது. ஆனால் ரூபன் தன் நண்பனின் நிலையை எண்ணிக் கவலைப்பட்டான். கவலை அதிகமாகிற

சமயத்தில் அதை அப்படியே தக்கவைத்து சௌமியனைத் தேடிப்போய் ஓரிரு முறை பேசியிருக்கிறான். “மச்சி, அந்த மேட்டரப் பத்தி, நான் சர்க்கடிக்கிறதப் பத்தி பேசுறதா இர்ந்தா நீ கெளும்பு காத்து வர்ட்டும்” என்று சொல்லிவிட்டான். அதைப் பற்றி தன் நெருங்கிய நண்பனுடன் விவாதிப்பதைக்கூட அவன் விரும்பவில்லை என்பதால் ரூபனும் விட்டுவிட்டான். ஆனால் அவன் குடிப்பதற்கு ஒத்துழைக்கக் கூடாது என்று எண்ணிய நிலையில் சௌமியன் இன்னொரு முறை கேட்டான்.

“உன்னதான்டா கேக்றேங். ன்னா சர்க்கு அடிக்கலாமா?”

“வேணா மச்சி. அப்பா இப்டிக்றாரு. மகன நீ வேற ஓவரா போதைக்கு இதுவாய்னுக்ற பாரங் இவுர.”

“செரி காசாவது குற்றா, நா அஷ்ட்டு வரேங்.”

“சௌமி … வரவர நீ ஓவரா பண்றடா. உன் மூஞ்சி எப்டி இருக்கிதுன்னு பார்றா?”

“எ … ப்பா, எங்க கூடலாங் குடிப்பியா நீ. வெய்ட்டு கையா ஆய்ட்ட …”

“லூசுக் கூதி மாரி பேசாத. செரி. உங்கூட இப்போ குடிக்கிறேங். ஆனா அதுக்கு முன்னாடி எனுக்கு ஒரு ப்ராமிஸ் பண்ணிக் குடுக்கணும்.”

“ங்கோத்தா ன்னாடா பொம்பள பசங்க மாரி ப்ராமிஸ் கீமிஸ்னுகிற?”

இவனுக்கு கிரண்யாவின் ஞாபகம் வந்தது.

“செரி சொல்லு ன்னா ப்ராமிஸு?”

“உங்கப்பாக்கு ஒடம்பு சரியாய் வீட்டுக்கு வந்ததுங் நீ எங்க ஆபிஸ்க்கு வேலக்கி வரணுங். எங்க சூப்பர்வைசர் கிட்டக்கூட சொல்லி வெஷ்டேங்.”

சற்று நேரம் அமைதிகாத்த சௌமியன், “ஆமா மச்சி …

கவுர்மென்ட் வேல கெடிக்கிறது கஷ்டந்தான்போல. த்தா இப்போ நம்ம ஜாதியிலியே பயங்கர காம்படிஷன் ஆய்ச்சி, த்தா … இத்தனி வருஷம் வேஸ்ட் பண்ட்டனே” என்று இல்லாத எச்சிலைத் துப்பினான்.

“பர்வால்ல ஃப்ரியா வுடு. செரின்னா இப்போ உனுக்கு சருக்கு அச்சிதான் ஆவ்ணுமா?”

“அயிய. அடிக்கலனா வேலிக்காவாதுப்பா.”

சௌமியன் ஆஃப், இவன் குவார்ட்டர் என்று கணக்கை முடித்துக்கொண்டு ஒயின்ஷாப்பிலிருந்து வெளியே வந்தார்கள். பூபாலனிடமிருந்து அழைப்பு வந்தது.

“சொல்னா, நான் சௌமி ஃப்ரெண்ட் பேசுறேங்.”

“எப்பா, மெய்ன் ரோட்டாண்டா இர்ந்திங்கினா சௌமிய வரப்போ எனுக்கு கோட்ரு எம்.ஜி.எம். வாங்கினு வரச் சொல்ப்பா”

“ஆங் செர்னா.”

“ன்னாவாண்டா?” என்று மரணச் செய்தியைக் கேட்கும் பதைப்பில் அவன் முகத்தைப் பார்த்தான்.

“உங்க மாமா அவ்ருக்கொரு கோட்ரு எம்.ஜி.எம். வாங்கினு வர சொல்றாப்ல.”

“வாங்கினு போலாண்டா, பூபால மாமா இன்னிக்கு ட்யூட்டிக்குக்கூட போல. அப்பத்லந்து என் கூடவேக்து.”

பூபாலனின் வேண்டுகோளை ஏற்று அவருக்குக் குவார்ட்டர் வாங்கியதோடு தனக்கும் ஆஃப் வாங்கிக்கொண்டான் சௌமியன். சரக்கு வாங்கிக் கொடுத்தத்தோடு சௌமியனிடம் கைச்செலவுக்கு ஆயிரம் ரூபாய் கொடுத்தான் ரூபன். அவன் வேண்டாமெனக் கைகளை இறுக்க மூடி இப்படி போனால் அப்படி என்று விளையாட்டுக்காட்ட, அவன் சட்டைப் பாக்கெட்டில் தாளைச் சொருகினான். “சௌமி இந்த காச குச்சி செலுவு பண்ணாதடா” என்று அறிவுறுத்தலாம் எனத் தோன்றியது. ரோஷக்காரன். அவ்வாறு கேட்டுவிட்டால் பேன்ட் பாக்கெட்டிலிருந்த இருந்த புட்டிகளைத் தரையில் போட்டு உடைப்பதோடு ஆயிரம் ரூபாயையும் சுருட்டி முகத்தில் வீசிவிடுவானென்பதால் பணம் சொருகிய கையோடு வேறு விஷயத்தைப் பற்றி மருத்துவமனை வாசலுக்கருகில் வந்து பேசிக்கொண்டிருந்தார்கள்.

சைரன் ஒலத்துடன் வந்த ஆம்புலன்ஸ்க்கு இருவரும் விலகி வழிவிட்டு பிறகு ஒன்றிணைந்ததும் ரூபனுக்கு பிறந்தநாள் வாழ்த்துக்கள் சொல்லி, "பசங்ககூட பார்ட்டி முஷ்ட்டு ஸ்லோவாவே வா. மாமாக்றாரு. எதுனா ஒன்னுனா போன் பண்றோங்" எனச் சொல்லி அவனை அனுப்பி வைத்தான் சௌமியன். சைரன் சத்தம் நிற்கவில்லை.

~

இன்னும் மூன்று மணி நேரத்தில் ரூபன் பிறந்து 29 வருடங்கள் ஆகப்போகின்றன.

கடந்த பத்து வருடமாகத் தன் பிறந்தநாளை, நண்பர்களோடு வேளாங்கண்ணியில் கொண்டாடி வருபவன் இவ்வருடம் ஜனக சந்திரஜித் போன்ற சிங்களக் கிருமிகளால் போக முடியாமல் ஆயிற்று.

வேளாங்கண்ணி போய்க் கொண்டாடுவதில் சிறப்பு என்னவென்றால் அவன் பிறந்த இரண்டு தினங்கள் கழித்து "ஆரோக்கிய மாதா" பிறந்ததால் அவ்வாரம் முழுக்க - நாகப்பட்டினம் - வேளாங்கண்ணி திருவிழாக் கோலம் பூணும்.

தமிழர்களுக்கு இணையாக கோவாவைச் சேர்ந்தவர்களும் அன்னையைத் தரிசிக்க வருவார்கள். ஆடை, அணிகலன்களில் யார் சீவி, சிங்காரித்து வருகிறார்கள் என்பதில் பெரம்பூர், சிந்தாதிரிப்பேட்டை, புளியந்தோப்பு வியாசர்பாடி, ஆகிய பிராந்தியத்தைச் சேர்ந்த வாலிபர்களுக்கும் கோவாக்காரர்களுக்கும் இடையே பனி யுத்தமே நடக்கும் அல்லது அவ்வாறாக நினைத்துக்கொண்டு கோவாக்காரர்களுடன் சென்னைவாசிகள் முட்டி மோதுவர். கோலாகலமான வாரத்தில் தன் பிறந்தநாளும் வருவதால் அதை மேலும் சிறப்புறச் செய்ய அங்கு சென்று கொண்டாடுவான். இந்த வருடம் அவனைப் போலவே போக முடியாத நிலைக்கு ஆளான நண்பர்களெல்லாம் சேர்ந்து, யோசேப்பு வீட்டில் ரூபனின் பிறந்தநாளைக் கொண்டாட உத்தேசித்தார்கள்.

யோசேப்பு குடும்பத்தார் ராமர் தோட்டம் சந்திலிருந்து சிந்தாதிரிப்பேட்டை காய்கறி மார்கெட்டுக்குப் பின்புறமிருக்கும் ராஜகோபால நாயக்கன் தெருவில்

இடம்பெயர்ந்திருந்தார்கள். ராமர் தோட்டத்தில் மேற்கொண்டு வசித்தால் யோசேப்பு குடித்தே செத்துவிடுவான் என்று அவன் குடும்பத்தார் அங்கிருந்து இடம்பெயர்ந்திருந்தார்கள். ஹவுசிங் போர்டு மக்களுடன் ஒப்பிடுகையில் பொருளாதார ரீதியாக மேம்பட்டு வாழ்வோர்கள் அதிகம் குடியிருக்கும் பகுதியான அங்கு வீட்டு வாடகை முன்னுக்குப் பின் இருந்தாலும் பரவாயில்லை என்று யோசேப்புக்காக வசித்துவந்தார்கள்.

யோசேப்பு குடும்பத்தோடு வேளாங்கண்ணிக்குச் சென்றாலும் தன் நண்பர்கள் வெறுமையை உணரக் கூடாது என்பதற்காக வீட்டுச் சாவியை ரூபனிடம் கொடுத்துவிட்டுச் சென்றான். நள்ளிரவு ரூபன் பிறக்கையில் நண்பர்கள் தன் வீட்டில் குடித்து, கொஞ்சூண்டு கும்மாளம் போட வேண்டுமென்பது யோசேப்பின் ஆசை. உள் வராந்தாவில் காவலிருக்கும் அவன் தாத்தாவுக்கு மட்டும் ஒரு பீடிக்கட்டு கொடுத்து அவரைப் படுக்க வைத்தால் எல்லாம் சுபம்.

சௌமியனிடமிருந்து விடைபெற்று இரவு விழாவில் கலந்துகொள்ளப்போகும் சகாக்களைச் சந்தித்து தேவையானவற்றையெல்லாம் வாங்கி ரூபன் குழுவினர் யோசேப்பு வீட்டு வாசற்கதவைத் தட்டும்போது அவன் பிறந்தநாள் ஆரம்பிக்க ஒரு மணிநேரம் மிச்சமிருந்தது.

கதவு தட்டும் சத்தம் கேட்டு, வராந்தாவில் சயனித்திருந்த தாத்தா மெல்ல எழுந்தார். எழும்போது நழுவிய அவருடைய வேட்டியை லாகவமாக கட்டுவதற்கு முன்னரே கதவுக் கம்பிகளின் வழியே பார்த்த அண்டா உருட்டி, “தாத்தா பாத்து பாத்து” என்று தாத்தாவை வசியம் செய்ய முயற்சித்தான். பிரதிபலனாக, தாத்தா முகத்தில் எந்த பாவனையும் இல்லை. பாதி உடம்பைக் கதவுக்குள் வைத்துக்கொண்டு வெளியே தலை நீட்டி “யார் நைனா நீங்கெல்லாம்?” என்றார்.

விழா நாயகன் வாய் திறந்து “யோசு ப்ரெண்டுங்க தாத்தா, நைட்டு உங்ளுக்கு தொணையா பத்துக்க சொல்லி சாவி குத்துட்டு போனாங்.”

செவித்திறன் கொண்ட தன் ஒரே காது மடலை ரூபனின் வாய் இருக்கும் திசைக்குத் திருப்பி “ன்னா நைனா?” என்றார்.

“யோசு ப்ரெண்டுங்க … சாவி குத்துட்டு போனாங்.”

“எனக்கெதுக்கு நைனா தொண?” - சிரித்தார்.

“இல்ல தாத்தா இன்னிக்கு நைட்டு எங்கள, வீட்ல பத்துக்க சொன்னாங்” - உண்மைக்கு அருகில் வந்தான்.

தாத்தா, இசைந்து கொடுக்கவில்லை “போங்கப்பா வெளிய” -

அவர்கள் போகும்வரை கதவைத் தாழ்ப்பாள் போடாமல் நின்று பார்த்திருந்தார்.

விழாக் குழுவிலிருந்த அப்பு, “யோசுவுக்கு ஃபோன் போட்டு தாத்தா கைல குடு மச்சி” என்றான்.

“ஏங். நீயே கூட உன் ஃபோன்ல இர்ந்து அவ்னுக்கு போட்ருது?”

“இல்ல மச்சி, இன்னிக்கு நீ தானே ட்ரீட்டு. நீதான் எல்லாத்தியும் …”

ரூபன் யோசேப்புவைத் தொடர்புகொண்டான். “ஞானத்தைப் படைத்த தேவனின் தாயே” என்கிற பாடல் முடியும்போது யோசேப்பு அழைப்பை ஏற்றான். அவனால் பேசவே முடியவில்லை. போதை. பேசினாலும் புரியவில்லை. பேச்சில் கொழகொழப்புத் தன்மை அதிகமிருந்தது. யோசேப்பின் குரலை, தாத்தா கேட்டால்கூட போதுமென்றெண்ணி அவனை அப்படியே பேசவிட்டு தாத்தாவிடம் அலைபேசியைக் கொடுத்தார்கள். இருவரும் என்ன பேசினார்களென்று தெரியவில்லை. தாத்தா வேண்டாவெறுப்பாக ரூபன் குழுவினரை உள்ளே அனுப்பினார்.

ஆசுவாசத்தோடு உள்ளே சென்று, வட்டமடித்து உட்கார்ந்து குடிக்க ஆரம்பித்தார்கள். பிறந்தநாள் ஆரம்பிக்க இன்னும் பதினைந்து நிமிடங்கள் இருந்தன.

“மச்சி, டம்மு காலியாய்ச்சு, போயி வாங்கினு வந்துற்றேங்” அப்பு எழுந்து கிளம்பினான். வெளியே

செல்வதற்காக அவன் கதவைத் திறக்க முயன்று தோற்றுப் போனான். கதவைத் திறக்க முடியவில்லை.

அடித்த ஒரு ரவுண்டிற்கே அவனுக்கு போதை அதிகமாகி சுயமிழந்ததால் கதவைத் திறக்க முடியவில்லையென்றுதான் குழு நினைத்தது. வெளித்தாழ்ப்பாள் போடப்பட்டிருந்தது தாமதமாகப் புரிந்ததும் ‘‘தாத்தா தாத்தா’’ என்று குழுவினர் கூப்பாடு போட்டார்கள். பதிலில்லை. பத்து நிமிடங்களுக்குப் பிறகு வாசலில் வண்டி உறுமும் சத்தம் கேட்டது, ‘‘டுப்ச்ச்’’ ‘‘டுப்ச்ச்’’ என்கிற கால் சத்தத்துடன் யாரோ நடந்து வந்து கதவைத் திறந்தார்கள்.

‘‘ஏய், ஆளு இல்லாத வீட்ல என்னா‘‘ங்கடா பண்றீங்க?’’

போலிஸ்!

குழுவினர் மீதிருந்த அன்பின் நிமித்தமாகப் பக்கத்திலிருக்கும் போலிஸ் பூத்திற்குச் சென்று அவர்களைத் தாத்தா அழைத்து வந்திருக்கிறார்.

‘‘சார் இது எங்க ஃப்ரென்ட் வீடுதாங். நாங்க ஒன்யும் திருடனுங்க இல்ல. அவங் இவங்ன்னு மரியாத இல்லாம பேசாதீங்க’’ என்று போலிஸிடம் விழாகுழுவிலுள்ள ஜெகா வாக்குவாதம் செய்ய ஆரம்பித்தான். எப்போதும் அவ்வளவாக வாயைத் திறக்காத ஜெகா அப்போது வாயைத் திறந்து பேசியது ரூபனுடைய துரதிர்ஷ்டம்.

‘‘அடிங் ..., என்ன கொளுப்ருந்தா கை நீட்டி பேசுவ நீயி?’’ என்று போலீஸ்காரர் ஜெகாவை ஓங்கி அறைந்தார். சூதானமாக ஜெகா விலகிக்கொண்டதால் இவ்வருடத்தின் முதல் பிறந்தநாள் பரிசை சரியாய் பன்னிரெண்டு மணிக்கு ரூபன் தன் கன்னத்தில் வாங்கினான். அறை வாங்கிய நொடி அவன் தலைக்கு உள்ளே இருந்த சாமான்கள் ஒருமுறை மெதுவாகச் சுற்றி பின்பு அதன் பிரதான இடத்திற்கே வந்து நிற்பதற்குள் குழுவினரை வண்டியில் ஏற்றினார்கள். வண்டியில் ஏறி உட்காரும்போது ரூபன் தாத்தாவைப் பார்த்தான். குழுவினர் வாங்கிக் கொடுத்த பீடியை வாயில் சொருகித் தீப்பற்ற வைத்துக்கொண்டிருந்தார்.

~

போலிஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்லப்பட்டு இன்ஸ்பெக்டரிடம் விஷயத்தைச் சொன்னார்கள். அவர் உத்தரவின் பேரில், யோசேப்புவை ரூபன் தொடர்பு கொண்டான். இம்முறை அவன் எடுக்கவே இல்லை.

சிந்தாதிரிப்பேட்டையில் இராமகோபாலன் தலைமையில் இயங்கும் இந்து முன்னணி அலுவலகத்திற்குத் தொலைபேசி வழியாக அன்று மர்ம நபரால் வெடிக்குண்டு மிரட்டல் வந்திருந்ததால் கெடுபிடி அதிகமாய் இருந்தது. 1995ஆம் ஆண்டு அங்கு குண்டுவெடிப்பு நிகழ்ந்து இருவர் பலியானது போல் மீண்டுமொரு சம்பவம் நடந்தால் பிரதியுபகாரமாகத் தற்போது என்ன வேண்டுமானால் நடக்கலாம் என்பதால் காவலர்கள் உக்கிரத்துடன் ரோந்துப் பணியில் ஈடுப்பட்டிருந்த சமயம் யோசேப்பின் தாத்தா உதவியால் இவர்கள் அகப்பட்டிருந்தார்கள்.

“பிச்சை! இவனுங்க செல்போன்ஸ் எல்லாம் வாங்கி வெச்சுட்டு அவன் ஃப்ரென்ட் எப்போ ஃபோன் பண்றானோ அப்ப அனுப்புங்க” என்று சொல்லிவிட்டு இன்ஸ்பெக்டர் கிளம்பிவிட்டார். குழுவினர் ஓர் ஓரமாகக் கண்களைத் திறந்துகொண்டு படுத்திருந்தார்கள்.

மணி அதிகாலை ஐந்து இருக்கும்.

“ஒரு பொய்யாவது சொல் கண்ணே உன் காதலன் நான்தான் என்று …”

அழைப்போசை கேட்டவுடன் ரூபன் திடுக்கிட்டு எழுந்தான்.

“சார் … அது எங்ஃபோன் தான் சார் …”

குழுவினரின் கொள்ளைக் கூட்டத் தலைவன் பேசக்கூடும் என்கிற துப்பறியும் புத்தியினால் பிச்சைமணியே போன் எடுத்துப் பேசினார்.

“ஆங் … ஓ … அப்டியா …!! செரி, தோ … அவர்கிட்டயே ஃபோன தரேன் … பேசுங்க …” சைகையினால் ரூபனை அழைத்து ஃபோனைக் கொடுத்தார்.

“ன் … னாணா சொல்ற?!! எப்போ??? அயயோ … தோ கெளம்பி வர்றேங்” என்றவன், அலைபேசியைக்

கொண்டு நெற்றியில் ஒரு குத்துக் குத்தி அப்படியே மலம் கழிப்பது போல தரையில் உட்கார்ந்தான்.

“ன்னாச்சுடா?” என்றான் அப்பு.

ரூபன் நிமிரவில்லை.

அப்பு வேகமாக அவன் அருகில் சென்று தோளைத்தொட்டு “ஏ ரூபன் சொல்றா இன்னடா ஆச்சி . .?” என்றான்.

” … …”

பிச்சைமணி சொன்னார் “ஏம்ப்பா சௌமியன் யாரு உங்க ப்ரெண்டா?”

“ஆமா சார்” என்றார்கள் அப்பும், ஜெகாவும்.

“அவர் எறந்துட்டாராம்ப்பா. அவங்க மாமாதான் ஃபோன் பண்ணியிருந்தாரு …” எனச் சொல்லிவிட்டு பிச்சைமணி டீ க்ளாசை உறிஞ்சினார்.

ரூபனுக்கு அந்தச் செய்திக்கு எப்படி எதிர்வினை ஆற்ற வேண்டுமெனத் தெரியவில்லை. அவனின் மற்ற நண்பர்கள் அவனைச் சூழ்ந்து அவனுக்குக் கொடுக்கும் முக்கியத்துவத்தில் மற்றவரைக் காட்டிலும் இறந்தவன் இவனுக்குதான் நெருக்கம் போலும் என்றுணர்ந்த பிச்சைமணி ரூபனைக் கிளம்பச் சொல்லி அனுமதி கொடுத்தார்.

யோசேப்பின் வீட்டு வாசலில் இருக்கும் வண்டியை எடுத்துக்கொண்டு மருத்துவமனைக்குச் செல்ல வேண்டும். இங்கிருந்து யோசேப்பு வீட்டுக்கு நடக்கும் அளவுக்கு உடல் பொறுமையிழந்திருந்தது. ஆட்டோவுக்காகக் காத்திருந்தான். சிறு வயதிலிருந்து சௌமியனுடன் பழகிய நினைவுகள் அவன் கட்டுப்பாட்டை மீறி அவனுள் கிளற, கண்ணீர் திரண்டது.

கை நீட்டியதும் நிறுத்திய ஆட்டோக்காரரிடம் மருத்துவமனையின் பெயர் சொல்வதற்கு ஞாபகம் வரவில்லை.

“போணா. நான் ரூட்டு சொல்றேங்” - சளி பிடித்தது போன்று அவன் குரல் மாறியிருந்தது.

“எப்டிடா செத்துபோன … உனுக்கு எதுக்குடா ஹார்ட்டடாக் வர்ணும்?” என்று தனக்குள் கேட்டுக்கொண்டான்.

ஆட்டோக்காரர் கண்ணாடியில் அவன் முனகலைப் பார்த்துப் பார்த்து வண்டி ஓட்டினார்.

விஷால் அலைபேசியில் அவனைத் தொடர்புகொண்டார். எடுத்து காதில் வைத்தான். “ரூபன், எவ்ரிதிங் இஸ் ஓகே? பாசிபிள் மீன்ஸ் ஆர் யு ஏபில் டு கம் டுடே …” என்றார். அவன் அழ ஆரம்பித்தான்.

## -8-

சௌமியனின் மரணத்திற்குத் தானும் ஒரு வகையில் காரணம் என்று நினைத்தது அவனை வெகுவாகப் பாதித்தது. அந்த பாதிப்பை பிரக்ஞை பூர்வமாக அணுகுவதற்கு பயப்பட்டுக்கொண்டு பிணம் புதைக்கப்பட்டதிலிருந்து தொடர்ந்து குடித்தான். வேலைக்குப் போகாமல் மூன்று நாட்கள் நண்பர்களுடன் சேர்ந்து குடித்ததில் வயிற்றுப் போக்கு ஏற்பட்டு படுக்கைக்கும் கட்டிலுக்கும் நடையாய் நடந்தான். நகோமியம்மா செட்டியார் கடையிலிருந்து 'ஓம வாட்டர்' வாங்கி வந்து டீஸ்பூனில் ஊட்டினாள். வயிற்றுப் போக்கின் வேகம் குறைந்தது. ஆனால் உடல் அவனை எழுந்து நடமாட அனுமதிக்கவில்லை. ஆட்டோ வரவழைக்கப்பட்டது. லுங்கியை இடுப்பில் கட்டக்கூடத் தெம்பற்றுக் கொத்தாகப் பிடித்துக்கொண்டு ஆட்டோவில் ஏறியவனை சிங்கண்ண செட்டி தெருவிலுள்ள 'சுகம் க்ளீனிக்'கில் சேர்த்து ட்ரிப்ஸ் ஏற்றுவதற்கு படுக்க வைத்தார்கள். ஒருவர் மட்டும் அனுமதி என்பதால் நகோமியம்மா வெளியிலுள்ள நாற்காலியில் உட்கார, ரெஜினா அவன் அருகிலேயே அமர்ந்து கணவனைப் போலப் பிள்ளையும் ஆகிவிடுவானோ என்கிற கவலையில் வெறித்திருந்தாள்.

பிள்ளை எப்படியெல்லாம் ஆக வேண்டுமென்று அவள் கண்ட கனவை, அவன் சிறு வயதில் செய்து கொடுத்த சத்தியத்தை எண்ணினாள். குடுவையிலிருந்த 'க்ளுகோஸ்' சொட்டுச் சொட்டாக இறங்கியது.

அவனுக்குப் பதினோரு வயது இருக்கும். 'ஜீவ அப்பம் நானே' நாடகத்தில் இயேசு வேடத்திற்காக மரணப் போராட்டம் நடத்திக்கொண்டிருந்த காலகட்டம். மெரீனா கடற்கரையிலுள்ள சீரணி அரங்கத்தில் ஒரு ஜெபக்கூட்டத்தை முடித்து வீட்டுக்கு டிவி ஸ்டேஷன் வழியாக நடந்து வரும்போதுதான் ரெஜினா முதன்முறை தனக்கிருக்கும் மொழிபெயர்ப்பு ஆசையைப் பிள்ளையிடம் சொன்னாள்.

"ரூபனு நீ பாஸ்டரா ஆனா மட்டும் போதாதுப்பா. வெளிநாட்டுக்காரங்க இங்க்லீஸ்ல பேசுறத அவங்க

பக்கத்துல நின்னுகினு சூப்பாரா தமிழ்ல சொல்ணுங். அவ்ரு ப்ரைஸ்த லார்ட்னு சொன்ன ஒண்ணோ நீ தேவனுக்கு மகிமை உண்டாவதாகன்னு சொல்ணுங்.''

நகோமியம்மா இடைபுகுந்து ''அதுலாம் எந்தொர கணுக்கா செய்வான்'' என்று அவன் தாடையைக் கிள்ளி முத்தமிட்டாள்.

வழிதோறும் ரெஜினா மைக் பிடிப்பதுபோல் கையை வைத்து 'ப்ரைஸ் தி லார்ட்' என்று சொல்ல இவன் 'தேவனுக்கே மகிமை உண்டாகவதாக' என்று மொழிப்பெயர்க்க அதை ஒரு ஆன்மிக விளையாட்டாகவே செய்து வீடடைந்தார்கள்.

காலப்போக்கில் அது நடப்பதற்கான சாத்தியங்கள் குறைந்து வந்ததென்றாலும் ரெஜினா அவனுக்கு நினைவூட்டிக்கொண்டே இருப்பாள். அவனுக்கு எரிச்சலாக இருக்கும்.

சௌமியன் இறப்பதற்குச் சில தினங்களுக்கு முன்புகூட, ''நான் சாவ்றதுக்கு முன்னாடி நீ வெள்ளக்காரங்ககூட மேடையில ஏறி பிரசங்கம் செய்ணுங். அதப் பார்த்துட்டுத்தாங் என் கட்ட வேவுங்'' என்று உணர்வுரீதியாக அவனைத் தாக்கினாள்.

அப்படிச் சொல்லும்போது பரிதாப உணர்ச்சி மேலெழுந்து ஒரே பிள்ளையைப் பெற்றெடுத்த அம்மாவின் ஆசாபாசங்களை என்னை விட்டால் யார் நிறைவேற்றுவார் என்று தற்போதைய நிலவரத்தில் இது எந்தளவுக்கு சாத்தியம் என்று விளையாட்டுப் போக்காக யோசிப்பான்.

தமிழில் பிரசங்கம் செய்யச் சொன்னால்கூட ஓரளவு வாய்ப்பிருக்கிறது. யாரோ வெள்ளைக்காரத் துரை ''ழவழவ'' என்று பேசும் ஆங்கிலத்தை அதே வேகத்தில் சொல்லும் அளவுக்கு அவனுக்கு ஆங்கில மொழியில் புலமையில்லை. விஷாலிடம் சேர்ந்தாற்போல நாலு வார்த்தைப் பேசி தன் அபிப்ராயத்தைப் புரிய வைப்பதற்குள் நா வறண்டுவிடுகிற நிலையில் மேடையிலேறி எப்படி வேதாகமச் சொற்பொழிவைத் தமிழ்ப்படுத்துவது என்று யோசிக்கும்போதே அவனுக்கு மூத்திர உணர்ச்சி ஏற்பட்டுவிடும். அவனால் நிச்சயம் தன்

ஆசையை நிறைவேற்ற முடியுமென ரெஜினா நம்பினாள். பிள்ளை வெளிநாட்டு கம்பெனியில் வேலை செய்வதாலும், அலைபேசியில் நண்பர்களிடம் ஆங்கிலத்தில் பேசுவதையும், லேப்டாப்பில் ஆங்கிலப் படங்களைப் பார்ப்பதையும் அவள் கவனித்திருக்கிறாள்.

“ப்ரெண்டுங்ககூட நல்லா இங்லீஸ்ல பேசுற, இங்லீஸ் படல்லாம் பாக்குற. ஆண்டவரக் குறிச்சி மட்டும் இங்லீஸ்ல பேச சொன்னா மூக்கால அழுவுற. உன்ன ஜெபத்துல வெக்கிறேங் பாரு” என்று ஜல்லிக் கரண்டியை அவன் முகத்தருகே கொண்டு வந்து கேட்பாள்.

“மோவ், போமா கம்னு. என்ன இன்னா இங்லீஸ் மீடியமா படிக்க வெச்ச? எனுக்கு இங்லீஷ்லாங் அவ்ளவா தெரியாது. ஆபிஸ்ல வேல செய்ற இந்திகார பசங்கூட எதுல பேச சொல்ற? லேப்டாப்ல இங்க்லீஸ் படம் பாக்குறதுலாங் சப் டைட்டில் வெச்சித்தாங் புரிதா? … இப்படியெல்லாம் சொல்லலாமென வாக்கியங்கள் வரிசைக்கட்டி நிற்கும். வேண்டாம். சரளமாக ஆங்கிலம் பேசுவதாய் நம்பும் ஒரே ஜீவனின் எண்ணத்திலும் களிமண்ணைப் போடத் தனக்கு விருப்பமில்லை என நினைத்து அவ்வெண்ணத்தைக் கைவிடுவான்.

அவன் அடிக்கடி நண்பர்கள் வீட்டில் போய் இரவு தங்குவதாலும், வாயில் சில நாட்களில் பீர் வாசனை அடிப்பதாலும் பிள்ளை முற்றிலும் துன்மார்க்கனாக மாறிவிட்டான் என்றெண்ணி அவனிடம் பேசுவதை அதிகமாய்த் தவிர்த்துவந்த ரெஜினாவுக்கு பிள்ளை இந்த அளவுக்கு குடிகாரனாக மாறியதை நினைக்கையில் நெஞ்சே அடைத்தது.

ரூபன் கண்களைத் திறந்தான்.

“எப்பா சீக்கிரமே உனுக்கு ஒரு நல்ல பொண்ணாப் பாத்து அம்மா கல்யாணங் கட்டி வெச்சுருவேம்ப்பா. இனிமே குடிக்காதடா” என்று அவன் முகத்தருகே போய்ப் பேசினாள்.

அவன் அமைதியாக இருந்தான்.

“யார் கூடனா பேச்சு வார்த்தயா இர்ந்தாக்கூட சொல்லுப்பா பண்ணில்லாங்.”

நகோமி ஆயா ஒருமுறை பெண்களின் புகைப்படங்கள் கொண்டு வந்து இவனிடம் காட்டியது நினைவுக்கு வந்தது.

“தெபார் ஆயா. உனுக்கு எதுக்கு இந்த வேல? டொக்கு மூஞ்சிலாம் எத்துனு வந்து காம்ச்சினுகிற?”

“க்கும், இவ்ளோ நொங்கெடுக்கிற நீ, இத்தினி நாளிக்கு ஒரு பொண்ண பாத்து இருக்கணுங்.”

“அய்ய தோடா, லவ்லலாம் எனுக்கு இன்ட்ரஸ்ட் இர்ந்தா எப்பியோ உசார் பண்ட்டிருப்பேங்.”

“ம்க்கும் ஆடத் தெரியாத தெவ்டியா மேட கோண்லுன்னாளாங்” -

சொன்ன மாத்திரத்தில் நகோமியம்மா “யேசப்பா என்ன மன்னிச்சிரு” என்று ஆள்காட்டி விரலை உதட்டில் ஒத்திக்கொண்ட காட்சியை நினைத்துப்பார்த்து உதட்டை மெல்ல அசைத்துச் சிரித்தான். முழுதும் இறங்கி முடித்து க்ளுகோஸ் குடுவை எடையின்மையால் மின்விசிறிக் காற்றில் ஆடிக்கொண்டிருந்தது.

தனக்கு வேண்டுமென இவன் ஏங்கி நிற்கும் உறவுகள் இவனை விட்டு விலகும் தருணத்தைச் சாதாரணமாகக் கடந்துவிட்டாலும் அதற்குப் பிறகான சில தினங்கள் அதையே நினைத்து உழல்வது, அவர்கள் ஏன் தன்னை விட்டுப் பிரிந்து போனார்கள், அதற்கு எந்த வகையில் தான் காரணம் என்று வீட்டில் யாருமற்ற சமயத்தில் சுவர் முன் நின்று புலம்புவது சிறு வயது தொட்டே ரூபனுக்குப் பழக்கமாகியிருந்தது. ஒரு கட்டத்தில் அதிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள வேறொன்றின் மீது கவனம் செலுத்தி தப்பித்துக்கொள்வான்.

தன்னையும் முதன்முறையாக பதிலுக்குக் காதலித்த, தீவிரமாகத் தன்னிடம் அன்பும் அக்கறையும் காட்டிய கிரண்யா அவனை விட்டுப் பிரிந்துபோன சமயத்தில் அறுவை சிகிச்சை செய்துகொள்ள மருத்துவமனை செல்லும் நோயாளியின் மனநிலையுடனே தினமும் அலுவலகத்திற்குச் சென்றான். வேலை முடிந்து வீட்டுக்கு வந்ததும் தனியாகச் சாலைகளில் சுற்ற ஆரம்பித்தான். ஒருமுறை தனியாக கன்னிமாரா நூலகத்துக்குச் சென்றபோது அங்கு கிள்ளிவளவன் என்பவரின் நட்பு கிடைத்து தன் மனக் கிலேசங்களை அவருடன் பகிர்ந்துகொண்டான்.

அவர் அவனுக்கு வாசிப்புப் பழக்கத்தை அறிமுகப்படுத்தினார். தன்னிடமுள்ள புத்தகத்தைக் கொடுத்து ஒரு வாரத்தில் படித்து முடிக்கச் சொல்லி மறுவாரம் அதைப் பற்றிப் பேசலாம் என்று அவனுக்கு ஒரு அன்பு ஒப்பந்தம் இட்டார். அவர்களின் நட்பு வளர்ந்தது.

கிரண்யாவின் பிரிவைப் புத்தகங்கள் நிரப்பின.

கணிசமான நேரம் புத்தகங்கள் வாசிக்க நேர்கையில் புத்தகம் அதிகம் படிப்பதனால் ஏற்படும் முதல் வியாதியான எழுதும் பழக்கத்திலிருந்து தன்னைத் தப்புவித்துக்கொள்ளத் தெரியாமல் போனான். சரியாய் அந்தக் காலகட்டத்தில் சமூக வலைதளங்கள் விஸ்தீரணம் அடைந்தன. எதை வேண்டுமானாலும் எழுதலாம் என்கிற கட்டற்ற சுதந்திரக் காற்றை மூச்சாய் சுவாசித்து

இணையத்தில் தீவிரமாக எழுத ஆரம்பித்தான். இணையம் என்று ஏன் சுற்றி வளைத்துப் பேச வேண்டும்! பேஸ்புக்கில் எழுத ஆரம்பித்தான். ஆரம்பத்தில் நாட்டில் நடக்கும் அன்றாடச் செய்திகளையெல்லாம் வடிவேல் வசனத்துடன் ஓரிரு வரிகளில் நிலைத் தகவல்களாகப் போட்டுக்கொண்டிருந்தவன் பரிணாம வளர்ச்சியடைந்து சினிமா, இலக்கியம், அரசியல் போன்ற துறைகளில் நடக்கும் நிகழ்வுகளை கவனமாகப் படித்து அதற்குள் தன் சமூகக் கண்ணோட்டத்தைத் திணித்துக் கொத்து கொத்தாக எழுதினான். கடைசி இரண்டு வருடங்களாகத் தொடர்ந்து பேஸ்புக் பயன்படுத்துவது குறித்து அவனுக்கே அவ்வப்போது குற்ற உணர்ச்சியாக இருந்தாலும் அங்கு கிடைக்கும் புகழ் போதையில் எல்லா உணர்வுகளும் மனிதர்களும் அவன் கண்களிலிருந்து மங்கி சமூகத்தைப் பற்றிய போலி ஆவேசத்துடன் வாழ்ந்துவந்தான்.

எங்கேனும் பயணிக்கையில் நேர்ப்பட்ட சாதாரண அனுபவங்களையும் பூதாகரப்படுத்திப் பயணக் கட்டுரைகளும் எழுதினான். “உங்கள் எழுத்து நடை அருமை!, சுஜாதாவைப் படிப்பது போல் இருக்கிறது, “கலக்குறீங்க தல”, “சூப்பர் பாஸ்” போன்ற புகழ்ச்சிகளுக்கெல்லாம் மயக்க பிஸ்கட் தின்ற ரயில் பணியையைப் போல மெல்ல மெல்ல கிறங்கினான். தன்னை ஓர் எழுத்தாளனாக முழுதும் உணர்ந்து இரவு கண் அயரும் முன் அவன் அதிகம் வாசித்த ஜெயமோகன், சுஜாதா, ஆதவன், ஜெயகாந்தன், லா.ச.ரா., போன்றோர்களோடு கூடியமர்ந்து அவர்கள் கொஞ்சம் இடம் கொடுத்ததும் அவர்களின் தோள்மீது கைபோட்டுப் பேச ஆரம்பித்தான்.

ஒரு நாவல் எழுத வேண்டுமெனவும் தீர்மானம் கொண்டான். தீர்மானம் நிறைவேறிய நாள். ஒரு தீபாவளி.

தீபாவளி சம்பந்தமாக பேஸ்புக்கில் எழுதவேண்டிய நிர்பந்தத்தால் விஷயம் கிடைக்காமல் கர்ப்பிணிப் பூனையைப் போல் வீட்டில் அங்குமிங்கும் அலைந்தபடி இருந்தான்.

பேஸ்புக்கைத் தடவிப் பார்த்தால் குடிமக்கள் தீபாவளி வாழ்த்துகளைப் பகிர்ந்த வண்ணமிருந்தார்கள்.

இவனையொத்த பேஸ்புக் எழுத்தாளர்கள் சாரை சாரையாகப் பண்டிகைத் தினச் சிறப்புப் பதிவை எழுதியிருந்தார்கள். தன்னிடம் இன்னும் ஏதும் எழுதுவதற்குச் சிக்கவில்லையே என லேப்டாப்பையே வெறித்துக்கொண்டிருந்தான். “என்ன பாஸ் ஏதாவது தீபாவளி ஸ்பெஷலா எழுதுவீங்கன்னு எண்ணக்குளியல் கூட போடாம வெயிட் பண்ணிட்டு இருக்கேன்” என்று இன்பாக்ஸில் கேட்ட வாசக நண்பனின் எதிர்பார்ப்பு, வெறித்துக்கொண்டிருந்த இவன் கண்களை ரத்தச் சிவப்பாக்கியது. “இல்ல பாஸ் கொஞ்சம் பிஸி. டைம் இல்ல” - பேஸ்புக்கிலிருந்து வெளிவந்து என்ன எழுதலாமென்று திரும்பவும் யோசனை. நடமாட்டம். சுவர் முன்னாடி நின்று எதையோ முணுமுணுத்தான்.

“ஏன்டா, காய்ல்லருந்து பைத்தியம் புச்ச மாரி அங்யுங் இங்யுங் சுத்தினிக்கிற?”

“மோவ், கம்னு போய்டு நானே ஆபிஸ் டென்ஷன்லக்றேங்.”

“மொதல்ல இந்த வேலய வுட்டு நில்லு. கம்யூட்டர குத்தாலுங் குத்தானுங்க எப்பப்பாரு வேலவாங்கி உயிர எடுக்கிறானுங்கோ. ஜெபத்துல வெக்கிறங் பாரு அவ்னுங்கள ...” ரெஜினா சமையல் வேலையில் மும்முரமாய் இருந்தபடியே பொறுமினாள்.

ரூபன் வேலை செய்யும் நிறுவனத்தார் அடிப்படையிலேயே லேப்டாப் தயாரிக்கும் நிறுவனம் என்பதால் அங்கு பணிபுரியும் பெரும்பாலோனோருக்கு லேப்டாப் கொடுத்திருந்தார்கள். வேலைக்குச் சேர்ந்த புதிதில் லேப்டாப்புடன் வீட்டுக்கு வந்ததும் “ஆபிஸ் வேலய அப்பப்போ வீட்ல இருந்தே செய்றதுக்கும் குத்துக்கிறாங்கோ” அவன் சொன்னபோது அவனுக்குக் கொடுக்கப் பட்டிருக்கும் வேலைப்பளுவை யாரும் பொருட்படுத்தாமல் ‘லேப்-டாப்’ கொடுத்த மகிழ்ச்சியில் திளைத்தார்கள். குணசீலன் இந்தச் செய்தியைக் கேட்டதும் தன் நண்பர்களிடம் எப்படிச் சொல்லலாமென வார்த்தைகளைக் கோர்த்துக்கொண்டிருந்தார். பிள்ளைக்கு வேலை இலகுவாக மாற வேண்டும், மாறினால் தேவனுக்கு சாட்சியாக நிற்பேன் என்றும் தான் ஏற்கனவே ஜெபித்ததாகவும் அதற்கு பிரதியுத்திரமாக கர்த்தர் என்

பிள்ளைக்கு ‘லேப்டாப்’ கொடுத்தார் என்றும் ரெஜினா வரும் வாரம் இதைப் பற்றி சபையில் சாட்சி சொல்ல மனதிற்குள் ஒத்திகை பார்த்திருந்தாள்.

நாட்கள் செல்லச் செல்ல அவன் லேப்டாப்பும் கையுமாக இருக்கும்போது ரெஜினாவுக்குக் கோபம் வந்தது. வீட்டில் பெரும்பாலும் லேப்டாப்பைத் திறந்து பேஸ்புக்கில்தான் புதைந்திருப்பான். “ன்னா இப்டி வேல வாங்குறானுங்களே! பாதி கெதில போறவனுங்கோ, அவனுங்கள ஜெபத்துல வெக்கிறேங் பாரு” என்று ரெஜினா சாபம் கொடுக்கும் போதெல்லாம் இவனுக்கு விஷாலின் முகம் நினைவிற்கு வரும்.

சுவரைப் பார்த்துப் பினாத்திக்கொண்டிருந்தவன் அங்கிருந்து சடாரென்று விலகி லேப்டாப் முன்னமர்ந்தான்.

“சிறு வயதில் நாம் தீபாவளியை எவ்வளவு மகிழ்ச்சியாகக் கொண்டாடினோம், இப்போது ஏன் யாரும் அப்படிக் கொண்டாடி மகிழ்வதில்லையென சிந்தித்துப் பார்த்ததுண்டா?? என்னுடைய சிறு வயதில் தீபாவளித் துப்பாக்கிக்கு நான் ஆசைப்பட்டு அதை வாங்கித்தரக் காசில்லாமல் என் அப்பா என்னை எப்படியெல்லாம் சமாளித்தார் தெரியுமா?” என்று பச்சிளம் வயதில் தனக்கு நேராத அனுபவத்தை நெகிழ்ந்து நெக்குருகி சிறுகதை மாதிரி ஒருவழியாக எழுதிப் பதிவு செய்துவிட்டான். எழுதியதைப் படித்து முடிக்கவே சில நிமிடங்களாகும் என்றாலும், அவன் பதிவு செய்த சொற்ப நேரத்திற்குள் லைக்ஸ், கம்மென்ட்ஸ் வர ஆரம்பித்தன, அதைப் பார்த்த பிறகுதான் காலையிலிருந்து கொலைப் பட்டினியாய் இருந்தவனுக்குப் பசிப்பது போலிருந்தது.

ரெஜினாவிடம் சாப்பாடு கேட்டுத் தட்டில் வாங்கி வலது கையால் சாப்பிட்டபடி, இடது கையால் பேஸ்புக்கைத் தடவிக்கொண்டிருந்தான். அவன் எழுதியதற்கு வந்த பாராட்டுகளையும் கருத்துகளையும் படிக்கப் படிக்க மனதுக்குள் ஆனந்தக் கூத்தாடினான். அவன் எழுதிய கதையைப் பற்றிப் புளகாங்கிதம் அடைந்தவர்களுள் முத்தாய்ப்பாக அரபு நாட்டில் வேலை செய்யும் இந்தியாவைச் சார்ந்த நண்பரொருவர் “உங்க கதையைப்

படித்தேன். கண்கள் கலங்குகிறது நண்பா! உங்களுக்கு நிஜத் துப்பாக்கியே வாங்கித்தர விரும்புகிறேன், உங்கள் முகவரியை அனுப்புங்கள்‘‘என்றார்.

அரபுவாழ் நண்பர் சொன்னதைப் படித்ததும், இவன் விழிகளிலிருந்து உகுந்த நீர் முத்துக்கள் அவன் பிசைந்த சோற்றில் உப்புச்சுவையை அதிகமாக்கின. சாப்பிட்டு முடித்ததும் பேஸ்புக் போதையில் கட்டிலில் சாய்ந்தான். கிடந்து முடியவில்லை. இன்னும் என்னென்ன மாதிரி பாராட்டு வந்திருக்கிறது எனப் பார்ப்பதற்காக அலைபேசியை எடுத்து பேஸ்புக்கைத் திறந்தான்.

அதில் புதியதாய் ஒரு பாராட்டு! பெண் தோழி ஒருத்தி “Hey, Ruban you have a Flawless writing Skill, the way you narrating and your style is amazing da. why can”t you write a novel then …” என்றிருந்தது. தோழியின் கருத்துக்கு நிமிடத்தில் 13 பேர் லைக் செய்திருந்தார்கள். நாவல் எழுதும் அளவுக்கு மிகப் பெரிய எழுத்தாளர் ஆகிவிட்டானென்று ஏற்கனவே அவன் மனதில் உதிரி உதிரியாய் எண்ணங்கள் வந்து போனாலும் தோழியின் பாராட்டு மூலம் அவனின் ஆசை திரண்டு வந்து ஓர் உச்சத்தில் நின்று நாவல் எழுதுவதற்கான முடிவை எடுத்தது.

தோழியின் வாசிப்புப் புலனைப் பற்றி எந்த விசாரணையு மின்றியும், நீ ஏன் நாவல் எழுதக் கூடாது எனத் தோழி கேட்டதற்கு லைக் செய்தவர்களெல்லாம் தோழிக்காகச் செய்தார்களே அன்றி ரூபனுக்காக - நாவல் எழுத வேண்டுமென்கிற பிரயாசையில் - செய்யவில்லை என்பதை புரிந்துகொள்வதற்குத் தனக்குத் தானேகூட அவகாசம் கொடுத்துக்கொள்ளாமல் எழுத்தாளனாய்த் தன்னை உருவகித்துக்கொண்டவன் நிச்சயம் நாவல் எழுதிட வேண்டுமென ஆசைப்பட்டு செல்போனை எடுத்து வேகவேகமாக வேகவேகமாக டைப் செய்து ஒரு ஸ்டேட்டஸ் போட்டான். “நண்பர்களே விரைவில் நான் ஒரு நாவல் எழுதப் போகிறேன்” என்று பதிவு போட, தமிழ் இலக்கியம் அவன் பின்னால் நின்று கோரைப்பற்கள் தெரியச் சிரித்துக்கொண்டிருந்தது.

~

சௌமியன் இறந்துபோனதற்குத் தானும் ஒரு வகையில் காரணம் என உணர்ந்த யோசேப்பு, ரூபனிடம் மன்னிப்பு கேட்கலாம் என செல்போனில் தொடர்புகொண்டு ரெபெக்காவிடம் கொடுத்துப் பேசச் சொன்னான். ரெபெக்காவிடம் கொடுத்துப் பேசச் சொன்னதற்குக் காரணம், யோசேப்பு தன் சொந்த வாயை வைத்துப் பேச முடியாத நிலையை அவனுடைய முன்பற்கள் ஏற்படுத்தியிருந்தன.

இவ்வருடம் வேளாங்கண்ணியில் ஏற்பட்ட தகராறில் இவனிடம் சண்டை போட்டவன், யோசேப்பின் வாயை நோக்கித் தன் கைகளைக் குவித்து குத்தியதால், யோசேப்பின் முன் இரண்டு பற்களும், ஈறுகளோடு சிதிலமடைந்துவிட்டன.

குற்றம் யோசேப்பு மீதும் இல்லை. திரளான பக்தர்கள் வந்து மொய்க்கும் திருவிழா சமயத்தில், வேளாங்கண்ணி திருத்தலத்திற்கு அண்மையில் இருக்கும் ஒயின் ஷாப்பில் கடை மூடும் நேரம் மட்டுமில்லாது நித்தமும் கூட்டம் ஒருவர் மீது ஒருவர் சரியும்படி இருக்கும். ஆகையினால் திருவிழாவுக்கு வரும் பெருங்குடிகாரர்கள் முன்னேற்பாடாக நாகப்பட்டினத்திற்கு அருகிலிருக்கும் வாஞ்சூர் என்கிற சிற்றூருக்கு ஆட்டோ அல்லது பேருந்து பிடித்துச் சென்று தேவையான அளவுக்கு மதுப் புட்டிகளை வாங்கி வருவார்கள்.

அங்கு நிறைய கடைகள் இருப்பதோடு காரைக்காலை ஒட்டிய ஊர் வாஞ்சூர் என்பதால் மதுவும் சகாய விலைக்குக் கிடைக்கும்.

வாங்கிக்கொண்டு வரும்போது வழியில் இருக்கும் செக்போஸ்ட்டில் அகப்படாத வகையில் புட்டிகளைக் கொண்டுவருதல் அவரவர் சாமர்த்தியத்தைப் பொருத்தது.

வேளாங்கண்ணி கடற்கரைக்குச் சென்று கால்களை நனைத்துவிட்டுப் பொருத்தனைத் தட்டில் மெழுகுவர்த்தி, தேங்காய், பூ சகிதம் மாதாவுக்குப் படைத்ததும் தன் குடும்பத்தாரைத் தாஜா பண்ணிவிட்டு ரூபன், சய்சு என்கிற சதீஷ், அண்டா உருட்டி, ஆகிய நண்பர்களோடு வாஞ்சூர் சென்று புட்டிகள் வாங்கிவருவது

யோசேப்புக்கு வாடிக்கை. இம்முறை, வேலைப் பளு, இன்னபிற காரணங்களால் யோசேப்பு மட்டும் வேளாங்கண்ணிக்குச் செல்ல வேண்டியிருந்தது. பொருத்தனை முடித்ததும், மொட்டைபோடும் தலத்திற்குச் சென்று மயிர்தானம் செய்து தலையில் சந்தனம் வழியப் பூசிக்கொண்டு வந்தான். அவன் வரும் வரைக்கும் ஓர் உணவுக் கட்டிடத்தின் நிழல் படர்ந்திருந்த இடத்தில் ரெபெக்கா, யோசேப்பின் அம்மா, அப்பா சொந்தக்காரர்கள் உட்பட ஒரு கும்பல், மூட்டை முடிச்சுகளோடு காத்துக்கொண்டிருந்தார்கள். ஆரோக்கிய மாதாவின் தீவிர பக்தர்கள் கொடியேற்றம் ஆரம்பிக்கும் ஆகஸ்ட் 29ஆம் தேதி முதல் கொடியிறக்கம் செய்யப்படும் செப்டம்பர் 9ஆம் தேதிவரை வேளாங்கண்ணியில் வாசம் செய்வார்கள். ஆகவே, தங்கும் விழாக்காலம் முழுதும் வெளிச் சாப்பாடு வயிற்றுக்கும், பணத்திற்கும் சரிப்படாது என்பதால் சொந்த ஊரிலிருந்து கிளம்பும்போதே ஸ்டவ் மற்றும் தேவையான பாத்திரப் பண்டங்களைச் சுமந்து வருவார்கள். தூரதேசமான கோவாவிலிருந்து, அன்னையை தரிசிக்க வரும் பக்தர்களும் இதில் விதிவிலக்கில்லை.

யாருடைய நிர்பந்தமும் இல்லாமல், யோசேப்பு தன் சொந்த விருப்பத்தின் பேரில் ஒவ்வொரு வருடமும் வேளாங்கண்ணி திருவிழாவுக்கு வந்து மொட்டை போடுவான். அன்னை மேரி மாதாவின் மீது அவனுக்கு அளவு கடந்த அன்பும் பக்தியும் இருக்கின்றன ஆகையினாலேயே வேண்டுதல்களையெல்லாம் முடித்த பின், வாஞ்சூர் செல்லலாமா, அல்லது இங்கிருக்கும் ஒயின்ஷாப்பிலேயே சரக்கு வாங்கி வைத்துக்கொள்ளலாமா என்று அவன் யோசித்துக் கொண்டிருக்கையில் ரபெக்கா அவனுக்குக் கட்டளை விதித்தாள். “தெபார், எப்பியும் உன் ப்ரெண்ட்ஸ்ங்கதாங் குடிக்கக் கூப்டானுங்கன்னு ரீசன் சொல்லுவ, இந்த வாட்டிதாங் யாரும் உங்கூட இல்லல. மகன, வேற எதுனா காரணங் சொல்ட்டு, சர்க்கு அச்ச, ஸ்டெய்ட்டா இங்கந்து பஸ் புச்சி இப்போவே எங்கம்மா வீட்டுக்குப் போய்டுவேங்.”

“உங்கம்மா வீட்டுக்கு இங்கந்து ஸ்டெய்ட் பஸ்ஸுக்தா? உங்கம்மான்னா அவ்ளோ பெரிய ச்சிலாக்கியா?” யோசேப்பு அவளைக் கேட்க, “தெபார் எங்கம்மா பேச்செல்லாம் வல்ச்ச அப்றம் நல்லா வண்டவண்டயா கேப்பேங்.” இருவரும் சண்டை போட்டு ஆலய வளாகத்திலிருந்து தாங்கள் பதிவு செய்திருக்கும் அறையை நோக்கி ஒட்டிஒட்டி நடந்து வர அவர்கள் பின்னே யோசேப்பின் அம்மா முனகியபடி கால்தாங்க நடந்து வந்தாள்.

குடும்பம், தட்டு முட்டுச் சாமான்கள் எல்லாம் ஓர் இடத்தில் அமுங்கி ஓய்வெடுக்கப் படுக்கும் வேளையில் யோசேப்பு பிடியில் நிலையில்லை. ரபெக்கா குளியலறை சென்றதும் நழுவி வெளியே வந்துவிட்டான்.

குறைந்த பட்சம் ஐந்து மணி நேரத்திற்கு ஒருமுறையாவது ஏதேனும் போதைப்பொருள் அவனை ஆட்கொண்டிருக்க வேண்டும். அவ்விதமாகவே தன் உடலையும் மனதையும் பழக்கப்படுத்தியிருந்தான். கோயம்பேட்டில் பேருந்து ஏறியதிலிருந்து இங்கு வந்து சேர்ந்தது வரை பண்ணிரண்டு மணிநேரத்திற்கு மேலாகிவிட்டது. ரெபெக்கா தன் பிடியிலிருந்து விடாமல் அவனை முடிந்து வைத்திருந்தாள். இதற்கு மேலும் அவனுக்குப் பொறுமையில்லை. சென்னையிலிருந்து வரும்போது வாங்கிவந்த மாவாப் பொட்டலங்களையும் ரெபெக்கா கண்டுபிடித்துப் பேருந்து ஜன்னல் வழியாக வீசி எறிந்தாள். வண்டியில் சண்டை வேண்டாம் என்பதால் பொறுத்துக்கொண்டான்.

வாய் நமநமத்தது. வேளாங்கண்ணியில் மாவா விற்குமிடம் எங்கு இருக்கிறது? அண்டா உருட்டி உடனிருந்தால் தலையை அடமானம் வைத்தாவது வாங்கி வந்திருப்பான். என்ன செய்வது? சரக்கு அடிப்பதுதான் ஒரே வழி. “காஸ்ட்லி சர்க்கா ஒரு கோட்ரு மட்டும் வாங்கி அஸ்ட்டு பாஸ் பாஸ் போட்னு போனா யாருக்கின்னா தெரியப்போது?” தனக்குள் பேசியபடி ஆலயத்தின் பின்புறமிருக்கும் ஒயின்ஷாப்பிற்கு வந்தான். கூட்டமான கூட்டம். உள்ளே புகுந்து இடுங்கி இடுங்கித் தவணை முறையில் முன்னேற்றம் கண்டு பணம் கொடுக்கும் ஓட்டையினுள் இரண்டு நூறு ரூபாய்

நோட்டுகளை நீட்டினான். வெகு அருகில், அவன் தோளை ஒரு கரம் பற்றியது.

"ந்தா தம்பி, பாத்து வர மாட்டியா. கண்ணென்ன பொடனியிலயா இருக்கு? அப்டியே கால மிதிக்கீறீங்க?

"ணோவ், சாரிணா தெரியாம மெர்ச்சிட்டேங்"

"என்னப்பா, மிதிச்சிட்டு சாரி சொன்னா ஆச்சா? அப்டி என்ன குடிக்கு அவசரம்?" - கால்மிதிக்கு சம்பந்தமில்லாத நபர் கேட்டார்.

"ஏம்ப்பா, அதான் அவருகிட்ட சாரி சொல்ட்டாங்கள்ல? த்தா நீயாரு ஓவரா தொகுர்ர?"

யோசேப்பு வாயிலிருந்து "த்தா" என்கிற வார்த்தையைக் கேட்டதும் அந்த முரடர் அவன் வாயிலேயே ஓங்கி ஒரு குத்துவிட்டார். இருவரும் மிக நெருக்கத்தில் இருந்ததால் குத்தின் வீச்சு அதிகம் இல்லையென்றாலும். அது அவன் உதட்டைக் குறி வைத்திருந்தது. கூட்டம் சற்றுப் பிரிந்த இடைவெளியில் யோசேப்பு உடனே தன் தலையைக் குனிந்து அந்த மனிதனை ஏறெடுத்துப் பார்க்காமல் இரண்டு கைகளையும் மாறிமாறி வீசினான். வீசியவனின் கைகளை லாகவமாகப் பிடித்து அவன் நடு முதுகிலேயே "மொக் மொக்" என்று குத்தினார். "மெட்ராஸ்கார சுன்னியா இருந்தா ஓத்தா உங்கம்மான்னு கூப்புட்றதெல்லாம் உங்க ஊரோட வெச்சுக்கணும்" என்று அவனை மொக்கிக்கொண்டே நிதானமாகப் பேசினார். குனிந்தபடியே குத்து வாங்கிக்கொண்டிருக்கையில் தன் உதடு ஈரப்பதத்தோடு இருப்பதை உணர்ந்து நாக்கால் தொட்டுப்பார்த்தான். உதடு வீங்கியிருந்தது. சொற்ப நேரத்திலேயே பெரிய ரப்பர் துண்டொன்றை அவன் வாய் சுமப்பது போலிருந்தது. வாயில் ஏதோ வெற்றிடம் இருப்பதாய்த் தெரிய மேற்கொண்டு வேகமாக நாக்கைச் சுழற்றி பரிசோதித்தான். முன் பற்களில் ஒன்று பாதி மட்டுமே இருந்தது. இன்னொன்று முழுதும் இல்லை. "தெவ்டியா புள்ள அயோ என் பல்ல ஒஸ்ட்டான், அயோ பல்ல ஒஸ்ட்டான்" என்று ஓலமிட்டான். அவன் வாய் சிதலமடைந்துவிட்டதால் சொற்கள் சரியாய் ஒலிக்கவில்லை. வாயிலிருந்து இரத்தம் தேன்போல ஒழுகிக்கொண்டிருந்தது.

“தெவ்டியா புள்ள” என்கிற வார்த்தையைக் கேட்டதும் இரண்டு கால் புலியாக உறுமி, குனிய வைத்தவனை நிமிர்த்தி, முகத்தில் இன்னும் அடிப்பதற்கு அவனைத் தயார்ப்படுத்தினார். அதற்குள் சுற்றத்தார் மிகத் தீவிரமாகச் செயல்பட்டு இருவரையும் விலக்கினார்கள்.

யோசேப்பு ஒல்லியான தேகம் கொண்டவன். அவர் பிடியிலிருந்து நழுவ முடியவில்லை. கூடியிருந்தவர்கள் முழு வலிமையையும் கொண்டு அவரிடமிருந்து இவனை விடுவிக்கும் விதமாகப் பின்னோக்கி - இருவர் - இழுக்கையில் சீரான இடைவெளி கிடைத்ததில் தன் வலது காலால் எதிரியின் விதைப்பையை நோக்கி உதைத்தான். எதிரி, வேட்டியை மடித்துக் கட்டியிருந்ததால் யோசேப்பின் நோக்கம் நிறைவேறியது. எதிரி அடிபட்ட இடத்தில் கைகளைப் பொத்திச் சாய்ந்து விழ, மடக்கி விட்டவர்களின் கைகளிலிருந்து நழுவி அங்கிருந்து தப்பித்து ஓடினான்.

பேருந்து நிலையத்தினருகே சென்று, ஒரு ஆட்டோவை அடைந்தான். யார் எப்போது எழுப்பினாலும் தயாராக இருக்கும் வகையில் ஓட்டுநர் ஆட்டோவினுள் அமர்ந்து தூங்கிக்கொண்டிருந்தார். இவன் வேகமாக ஓடிவரும் சத்தம் கேட்டதும் அவரே திடுக்கிட்டு எழுந்து சலவாயைத் துடைத்தார். அவரிடம் அனுமதி பெறாமல் ஆட்டோவில் ஏறி உட்கார்ந்தவன் அருகிலிருக்கும் மருத்துவனைக்குப் போகச் சொன்னான். அவனது முகத்தையும், பதற்றத்தையும் பார்த்த ஆட்டோக்காரர் தான் கண்ட கெட்ட சொப்பனம் இன்னும் முடியவில்லை என்பது போன்ற சாயலோடு அவனை அணுகியவர், வண்டியை ஓட்ட ஆரம்பித்ததும், “எப்படிங்க அடிபட்டுச்சி” என்றார்.

“கீல தடுக்கி உய்ந்து கல்ல மோதிக்னேங்” - பாதி மொழியை உடலும் மீதியை வாயும் பேசியது.

செல்போனை எடுத்துப் பார்த்தான். ரெபெக்கா ஏழு முறை அழைத்திருந்தது தெரியவந்தது. பேசும் நிலையில் மனம் இருந்தாலும், வாய் உதவக்கூடிய நிலையிலில்லை. குறுந்தகவலில் சொல்லலாமென்றால் காதலித்த காலத்திலிருந்தே அவனுக்கது பழக்கமில்லை. Send me some nice ringtones என்று யாரிடமாவது கேட்பதோடு சரி.

விட்டுவிட்டான். பிறகு பார்த்துக்கொள்ளலாம். முதலில் சிகிச்சை.

வீங்கிய உதட்டிற்கு மருந்துபோட்டு, வலி குறைவதற்கு மாத்திரை ஊசியெல்லாம் உடம்பில் செலுத்தியதும் மருத்துவர் சொன்னார் "ரெண்டு பல்லும் போனது போனது தாங்க, செட்டுப்பல்லுதான் கட்டணும்."

யோசேப்பு சைகையிலேயே அவரிடம் சொன்னான் "அந்தப் பல்லையே போயி எட்த்துனு வந்தா கட்டிக்கொடுப்பீங்களா எனுக்கு ஒரிஜினல்தான் வேணுங்."

"உங்க ஊரு எது?" - மருத்துவர் கேட்டார்.

"மெட்ராஸ்."

"சரிதான்" என்றவர் அவன் முகத்தைப்பார்த்தார்.

மருத்துவரின் அமைதியை அவர் கொடுத்த அனுமதி என்று நினைத்துக்கொண்டு கலவரம் நடந்த இடத்திற்கு உடனே போய், பற்களைக் கொண்டுவரலாம் என நினைத்தான். நினைத்த மாத்திரத்தில் போனால் உயிரோடு திரும்ப முடியுமா என்கிற கேள்வி தொக்கி நின்றதால் அந்த எண்ணத்தைக் கைவிட்டு அவர் எழுதிக் கொடுத்த சீட்டை மட்டும் வாங்கிக்கொண்டு வெளியேறினான்.

வேளாங்கண்ணி கோவிலுக்குச் செல்வதற்கு அச்சுறுத்தலாய் இருந்தது. அவன் தாக்கியவனது ஊர் இங்குதான் பக்கத்தில் இருக்கக்கூடும், தவிர, உயிர்த் தடத்தில் கால் பதித்துவிட்டு வந்திருப்பதால் எதிரி என்ன நிலையில் இருப்பான் என்கிற பீதி மேலும் கவலையை உண்டாக்கியது. பயம், கவலை, ஊர் பார்க்க அடிவாங்கிய அவமானம் எல்லாம் சேர்த்து அவன் தலையை அழுத்தின. போதாக்குறைக்குப் பற்கள் இருந்த இடம் விறுவிறுவென்றது. இதற்கெல்லாம் உடனடி தீர்வு "குடி" அதுதான் சரி. அங்கிருந்து ஒரு ஆட்டோ பிடித்து நாகப்பட்டினம் ஒயின்ஷாப்புக்குள் நுழைந்து குடிக்க ஆரம்பித்தான். இரண்டு சுற்று முடிந்ததும் ரெபேக்காவை அழைத்தான். மறுமுனையில் அவள் பேசியதைக் கேட்கத்

தயாராய் இல்லை. சொல்ல வேண்டியதை மட்டும் சொல்லிவிட்டு அடுத்த சுற்றுக்குத் தயாராக வேண்டும்.

“ரெபேக்கா வேசார்பாடில புட்பால் ஆட்ற பசங்கள பாத்தேங். எல்லாங் ஒன்னா சேந்து பூண்டி மாதா கோயிலுக்குப் போறோங். காய்ல்லதான் அங்க வேளாங்கண்ணிக்கு வருவோங், எங்கம்மா கிட்டயும் சொல்று.” இணைப்பைத் துண்டித்தான்.

போதை ஏறிய மாதிரி தெரியவில்லை. ஆகவே, நிறைய குடி. ஒயின்ஷாப்பிலிருந்து வெளிவரும்போது அவன் தலை நான்கு பக்கமும் சுழன்றது. எச்சிலைக் காறிக் காறி உமிழ்ந்தான். ஆள்காட்டி விரலால் மேலுதட்டை அழுத்தித் தொட்டுப் பார்த்தான். வலிக்கவில்லை, போதை.

நாகையிலிருந்து பூண்டிக்கு ஒரு ஆட்டோ பிடித்து அங்கு இறங்கினான். யாரோ நம் தலையைப் பிடித்து உரலாட்டுவது போல ஆட்டுகிறார்களா என்று அவன் கண்கள் மேலும் கீழும் கவனித்தபடி இருந்தன. நடக்கக்கூடிய நிலையில் கால்கள் அப்போது இல்லை. எங்கேனும் படுத்துவிடு என்று மூளை கட்டளையிட்டது. வெளிச்சம் தன் வேலையை முடித்துக்கொண்டு கிளம்ப ஆயத்தமான அந்தி வேளையது. மாடுகள் பூட்டப்படாத வண்டியொன்று முன்பக்கம் சாய்ந்து வரப்பினோரம் நின்றிருந்தது. கோணல் மாணலாக அதனை நோக்கி நடந்தான். ஒரு சக்கரம் மீது உடம்பைச் சாய்த்துக் கால்களைப் பரப்பித் தலை தொங்கினான். கண்கள் தானாக மூடிக்கொண்டன. உதட்டிலிருந்து பிதுங்கி வர வேண்டிய சில துளி ரத்தம் காய்ந்து அங்கயே நின்றிருந்த இடத்தை ஒரு ஈ கவனித்து இவனை நோக்கி வந்தது.

# -10-

வேலைக்குச் சென்று இயல்பு நிலைக்குத் திரும்பினாலும் சௌமியன் பற்றிய எண்ணங்களிலிருந்து அவனால் மீள முடியவில்லை. அவனாகவே விலகிச் சென்றிருந்தாலும் கூட நாம் விட்டிருக்கக் கூடாது. அலுவலக வேலை, பேஸ்புக் என்று அதிலேயே தீவிரமாக இருந்துவிட்டோமே என்று வருந்தினான். இரவு நேரங்களில் தனக்குள் எழும் அலைக்கழிப்பிலிருந்து தன்னை வேறு பக்கம் திசை திருப்பவதற்காக வழிகளை யோசித்துப் பார்த்தபோது சிந்தனைக்கு எட்டிய தூரம் சூன்யமயமாகவே இருந்தது. அதை நினைக்கையில் மனச்சோர்வே உண்டானது. எதற்காக நம்மை நாமே திசைதிருப்ப வேண்டும்? அவன் இறந்ததால் அலைக்கழிப்பு என்று பெரிதாக இல்லைதானே. அதைத் தானே வலிந்து தனக்குள் கொண்டு உழலுவதாக அவனுக்குத் தோன்றியது. ஆனாலும் இதிலிருந்து விடுபட்டாக வேண்டும். நம் எழுத்தைத்தான் நிறைய பேர் புகழ்ந்து தள்ளுகிறார்களே அதில் கவனம் செலுத்தினால் என்ன என்று மங்கலாக தீர்மானம் செய்து ஒரு கட்டத்தில் உண்மையாகவே நாவல் எழுதிவிட வேண்டுமென முடிவு செய்தான். அதன் பொருட்டு நடு ராத்திரியே அலைபேசியை எடுத்து “நண்பர்களே நாவல் எழுதும் பணி ஆரம்பாகிவிட்டது. விரைவில் ...” என்று பதிவிட காலையில் தூங்கி எழுந்ததும் கண்களைக்கூடச் சரியாய்த் திறக்காமல் எத்தனை லைக்ஸ் வந்திருக்கிறது எனப் பார்த்தபோது நானூற்றுப் பத்தொன்பது லைக்ஸ், முப்பத்தி நான்கு கம்மென்ட்ஸும் பார்த்ததும் அவன் முகத்தில் புன்சிரிப்பு.

நான்காயிரத்தி நூற்றிப் பன்னிரெண்டு ப்ரெண்ட்ஸ். எழுநூற்றி இருபத்தி இரண்டு பாலோவர்ஸ். இரு தரப்பினரையும் கூட்டிக்கழித்துப் பெருக்கி அவன் போட்ட கணக்கு அவனை மகிழ்ச்சியிலாழ்த்தியது. தூங்கி எழுந்த வாயுடன் நகோமி ஆயாவிற்கு ஒரு முத்தம் கொடுத்தான்.

அலுவலகத்திற்கு வந்ததும் அவனைப் படித்துத் தமிழார்வம் வளர்த்துக்கொண்ட இளங்கோ “கங்க்ராட்ஸ்

ரூபன். நாவல்லாம் எழுதப்போறீங்க போல” என்று கைக்குலுக்காமல் அவனிடம் வாழ்த்துத் தெரிவித்தார். ரூபனின் நிலைத்தகவலுக்கு விருப்பம் தெரிவிக்கவில்லை என்பதால் ஷைலேந்தர் அதைக் கேட்டும் கேட்காததுபோல் காது குடைந்து கொண்டிருந்தார். உபாசனா வந்து “சூப்பர்டா. ஜெப்ஃரி ஆர்ச்சர், எரிக் செகல் மாதிரி ஆய்டுவ போல இருக்கே? எதப்பத்தி எழுதலாம்னு இருக்கடா” என்று தன் இலக்கிய ஞானத்தை வெளிக்காட்ட வாய்ப்பு கிடைத்த பூரிப்போடு கேட்டாள். “அதுலாம் சஸ்பென்ஸ்” என்றான். அந்த ‘சஸ்பென்‘ஸுக்கு’ பின்னால் ஒன்றுமே இல்லை என்பது அப்போதைய நிலைப்படி அவனுக்கு மட்டுமே தெரியும். மூன்று பேருக்கு மேல் கூடி நின்று பேசியதும் விஷால் எழுந்து வந்து விஷயத்தைத் தெரிந்துகொண்டார். கேள்விப்பட்டதும் “ஹே கங்க்ராட்ஸ் ரூபன்” என்று அவனுக்குத் தலைப்பிள்ளை பிறந்ததுபோல கைகுலுக்கி வாழ்த்தினார். வாழ்த்திவிட்டு வேலை சம்பந்தமான ஒரு மின்னஞ்சலைப் பற்றிப் பேசி அவர்களை மடைமாற்றிய திருப்தியுடன் தன் கேபினுக்கு அமரப்போனார்.

எதைப் பற்றி எழுதுவதென்றுகூட யோசிக்காமல் நாவல் எழுதப்போகிறேனென்கிற அவனது அசட்டுத்தனமான அறிவிப்புக்குக் காரண கர்த்தாக்களாக விளங்கியது சௌமியனின் நினைவுகள், பேஸ்புக் தோழி, பேஸ்புக் நண்பர்கள் ஆகியோர் ஒரு பக்கமென்றாலும், எழுதிவிடலாம், எழுதிவிட முடியும் என்று துணிந்ததற்கு ரூபனின் ஒரே இலக்கிய நண்பரான, அவனுக்குப் புத்தகங்களை அறிமுகப்படுத்திய கிள்ளிவளவனும் ஒரு காரணம்.

கிள்ளிக்கு வயது ஐம்பதின் வாசலில் நின்று கொண்டிருக்கும் தோற்றம். முதுமையை மறைக்கப் போராடுகிறார் என்பது அவரின் ஆடை அணிகலன்களில் தெரிந்துவிடும். கிள்ளிக்கு இன்னும் திருமணம் ஆகவில்லை. இலக்கியக் களப்பணிகளில் மிகுந்த ஈடுபாட்டுடன் செயல்படக்கூடியவர்.

இலக்கியம் மட்டுமில்லாது கிள்ளி கலந்துகொள்ளும் திரை விழாக்களில் சிறப்பு விருந்தினரே பேசத் தயங்குவார். ஷங்கருக்குப் போட்டியாக இயக்குநராகக்

களமாட வேண்டுமென திருநெல்வேலியிலுள்ள சங்கர் நகரிலிருந்து இருபது ஆண்டுகளுக்கு முன்பு சென்னை வந்தார். சினிமாவுக்காக அலைந்த உபரி நேரத்தில் கன்னிமாராவில் புத்தகங்கள் வாசிக்க ஆரம்பித்தார். விதவிதமான நூல்கள் கிள்ளியைத் தன்பால் வாரிக்கொண்டன. குறிப்பாக, சினிமா சம்பந்தமான நூல்கள் அவரின் அறிவுத்தளத்தை கொரியா, பிரான்ஸ், ஈரான் போன்ற நாடுகளுக்கு எல்லை பரப்பின. அதற்கு இணையாக அவர் விரும்பியபடி இந்திய நாட்டில் படமெடுக்க முடியாதென்கிற கருத்துச் சுதந்திரத்தின் நிலவரத்தை உணர்ந்ததும் சினிமா எடுக்கும் ஆசையைக் கை கழுவி கட்டுரையாகப் படித்த படங்களையெல்லாம் பார்க்க வேண்டுமெனப் பிரயத்தனப்பட்டார். அயல்நாட்டுத் தூதரங்களில் ஒளிபரப்பப்படும் ஐரோப்பிய நாடுகளின் திரைப்படங்கள் அனைத்தையும் தவறாமல் பார்த்தார்.

ஆழ்வார்பேட்டையில் இருக்கும் ரஷியன் பண்பாட்டு மையம், நுங்கம்பாக்கத்திலிருக்கும் மேக்ஸ் முல்லர் பவன், அல்லியான்ஸ் பிரான்ஸே, மிக்லைன் ஆடிட்டோரியம், வடபழனியில் இருக்கும் ஆர்.கே.வி. ஸ்டுடியோ போன்ற இடங்களில் மாதந்தோறும் திரையிடப்பட்டும் உலக சினிமாத் திருவிழாக்களுக்கு உப்புக்கடலையைக் கொரித்தபடி ஜோல்னா பை சகிதம் ஆஜராகிவிடுவார். படம் முடிந்த பிறகும் கூட வீட்டுக்குப் போகாமல் தன்னையொத்த சிந்தனையாளர்களுடன் அங்கிருக்கும் புல்வெளியில் அமர்ந்து படத்தைப் பற்றியும் அதன் இயக்குநரின் அரசியல் பின்னணிப் பற்றியும் ரத்தம் கொதிக்க விவாதிப்பார். இது தவிர, வருடாவருடம் டிசம்பர் இறுதியில் சென்னையில் நடைபெறும் சர்வதேசத் திரைப்பட விழா சமயத்தில் விழாவைத் தானே ஏற்று நடத்துவது போல உட்லண்ட்ஸ், காசினோ ஆகிய திரையரங்க வளாகங்களில் பரபரப்புடன் செயல்படுவார்.

ஊரில் நிலபுலன்கள் அபரிமிதமாக இருந்ததால், சென்னையில் இவர்தம் உணவு, உடை, உறைவிடத்திற்குப் பிரச்சினை இல்லாமலிருந்தது. சினிமாவிலிருந்த அதே ஆர்வத்துடன் நவீனத் தமிழ்

இலக்கியத்தின் பக்கம் தாவி அதில் ஈர்க்கப்பட்டுப் புதுமைப்பித்தனிலிருந்து பேஸ்புக் எழுத்தாளர்களின் படைப்புகள் வரை விடாமல் வாசித்தும் விமரிசனமும் செய்யக்கூடியவர்.

உறவுகளின் மீது நம்பிக்கை அற்றுப் போய் தளர்ந்துபோயிருந்த காலத்தில் ரூபனுக்கு இலக்கிய வாசலைத் திறந்து அவனைத் திசைதிருப்பியவர் கிள்ளிவளவன் என்பதால் அவரின் அபிப்ராயங்களின் மீது இவன் பெருமளவு மரியாதையும் நம்பிக்கையும் வைத்திருந்தான்.

பேச்சுவாக்கில் அவனிடம் ஒருமுறை சொன்னார், “எதாவது கத எழுதனும்னு முடிவு பண்ணிட்டா, மொதல்ல ஒக்காரணும், கதை மத்தத எழுதிக்கும்.”

“இந்தக் கதையை நான் எழுதவில்லை, அது தன்னைத்தானே எழுதிக்கொண்டது” என்கிற வாக்குமூலத்தைச் சில புத்தக முன்னுரைகளில் இவனும் கண்டிருப்பதால் கிள்ளி சொன்னதை ஆத்மார்த்தமாக நம்பினான். அந்தக் கூட்டு நம்பிக்கையினாலேயே நாவல் எழுதப்போவதாய்க் கித்தாப்பாக அறிக்கைவிட்டான். இருந்தாலும், எதை மையமாக வைத்துக் கதை சமைக்கப் போகிறோம் என்கிற கேள்வி அவனுக்குள் குமைந்து கொண்டிருந்தது. அலுவல் நேரத்தில் அதைப் பற்றி அவன் மேற்கொண்டு யோசிக்காத வண்ணம் ஜனக சந்திரஜித் அவனைப் பத்திரமாகப் பார்த்துக்கொண்டான்.

~

நாவல் எழுதப் போவதற்காகத் தன்னை வாழ்த்தியவர்களின் முகங்களை நினைவில் சுமந்தபடி அலுவலகத்திலிருந்து வீட்டுக்கு வந்ததும் கதவைச் சாத்திக்கொண்டு, எதைப் பற்றி எழுதப் போகிறோமென்று தன் நாவலைப் பற்றி மட்டுமே சிந்தித்தான். பிடி சிக்கவில்லை. கிள்ளிவளவனைத் தொடர்பு கொண்டு ஆலோசனை கேட்காலாமென்று அவரை அழைத்தான்..

“கிள்ளி …”

“சொல்டா, எப்டி இருக்க?”

“நல்லாகிறங் தல. ஒரு நாவல் எழுதலாம்னு இருக்கேங்.”

“பேஸ்புக்ல பாத்தேன், என்னடா திடீர்னு?”

“இல்ல கிள்ளி. க்ளோஸ் ப்ரெண்டு ஒருத்தன் செத்தது பயிங்ரமா டிஸ்டப் பண்ணினு இருக்கிது அதுலந்து டைவட் ஆவ்ணும். எனுக்கும் கொஞ்ச நாளா நாவல் எழ்தினன்னு ஒரு இதுவாவே இருக்கிது. ப்ரெண்டுங்ககூட …” என்று அவன் முடிக்கும் முன்னரே..

“ரை … ட்டு முடிவு பண்ணிட்டு, காரணந் தேடுறது மாதிரி இருக்கேடா நீ சொல்றது …”

“அட நீங்க வேற …”

“ரைட்டு … எதப் பத்தி எழுதலாம்னு இருக்க?” என்றார்.

“தெர்ல கிள்ளி, அதுக்குத்தான் ஒரு ஐடியா கேக்க உங்களுக்கு கால் பண்ணேங்.”

“எதுக்குன்னு தெரியாமயே ஸ்டேட்டஸ் போட்டுட்டியா!”

“நீங்கதான சொன்னீங்க, உக்காந்து எழுத ஆரம்பிச்சா போதும், மத்தத கத எழுதிக்கும்னு.”

“சரியாப்போச்சுப் போ. லேய் மொதல்ல ஒன்ட்ட ஆதாரமா ஒரு சம்பவம் இருக்கணும். அந்தச் சம்பவம் உன்ன பாதிச்சதா இருக்கணும். ஒன்ன தொந்தரவு பண்ணணும். அதுல வாற பாத்திரங்கள்லாம் ஒண்ணா ஒரு குவிமையத்துல ஒம் மூளக்குள்ள சேந்து ஒருத்தர் மாத்தி மாத்தி ஒருத்தர் ஒன்ட்ட பேசிட்டே இருக்கணும். என்னய எழுது எழுதுன்னு அவனுவோ ஒன்ன தொரத்தணும். அப்டி ஒன்ன தொரத்தித் தொரத்தித் தவிப்புத் தாங்க முடியாம நீ எழுத ஒக்காருவ பாத்துக்க, அப்பதாம் அந்தக் கத, அதையே தானா …”

“ன்னா கிள்ளி, இப்டி பேசுறீங்க. ஏதாவது ஒரு கத கெடைக்காதா!! அதப்பத்தி டிஸ்கஸ் பண்ணத்தாங் உங்களுக்குக் கால் பண்ணேங்.”

“மச்சி” என்று ஆரம்பித்தார் கிள்ளி. அப்படி அழைப்பதன் மூலம் தலைமுறை இடைவெளியைக் குறைக்கும் திருப்தி அவருக்கிருந்தது.

“மச்சி நம்ம எழுதறத பேஸ்புக்ல நாலு பேரு பாராட்டுறாங்கன்னு நாவல் எழுத ஆரம்பிக்கேன்னு ஒன்னய மாரியே இப்போ ஒரு செட்டு கெளம்பிட்டு வருது பாத்துக்க. நாவல் எழுதறது சாதாரண விஷயம்னே வெச்சிக்கிடுவோம். ஆனா அது இலக்கியத் தரமா இருக்க வேண்டாமா? சொல்லு” என்றார்.

” … … …”

“இங்க பாரு, நாவல் எழுத மொழி செறிவா இருக்கணும். அதுக்கு வார்த்தையளு உன்கிட்ட சரம்சரமா பொதஞ்சி கெடக்கணும். நல்ல வாசிப்பனுபவமும் இருக்கணும். நீ எந்த அனுபவத்த பத்தி எழுதுனாலும் அத படிக்கவனுக்கு சொல்லக் கூடாது அந்த அனுபவத்த அவனுக்கும் ஒணர வைக்கணும். நீ ஐஸ் மலையில ஏறுனத பத்தி எழுதுனா படிக்கிவனுக்கு குளுரணும் கேட்டியா? இதெல்லாம் எப்ப கைகூடும்னு நெனக்க?”

அவன் பதிலுக்காக அமைதி காத்தார்.

“தெர்ல கிள்ளி நீங்களே சொல்லிடுங்க.”

“தொடர்ந்து வாசிக்கணும், எழுதணும், ஊர் சுத்தணும், இலக்கியக் கூட்டத்துக்கெல்லாம் போயி …”

“கிள்ளி, போதும் விடுங்க. நாவல் எழ்திற ஐடியா இப்போதைக்கில்ல.”

“அப்டி இல்ல மச்சி, பயப்படாத. நீ நேர்ல வா உனக்கு நெறைய சொல்லுறேன்” இப்பம் நீ ஃப்ரீதானே உங்க வீட்டு பக்கத்துல இருக்க எக்மூர் பீமாஸ்க்கு வந்துரு.”

மறுநாள், அலுவலகம் செல்ல வேண்டுமென்பதால் அவன் குடிக்கவில்லை, கிள்ளி இரண்டாவது பீரை கண்ணாடிக் குடுவையில் ஊற்றிப் பருகுகையில் தன்னைத் தாண்டிப் போய்க்கொண்டிருந்த பணியாளரைக் கூப்பிட்டு “ன்னொரு பேபிகார்ன்” என்றார். பியர், தொடுகறி போன்றவற்றைக் கிள்ளிவளவன் ஆர்டர் செய்த அதிகாரத் தோரணையை வைத்து, அவர்தான் பணம் செலுத்துவார் என்று நினைத்தான். சர்வர் வந்து ரசீதை நீட்டுகையில் “இருங்க கிள்ளி நா தரேன்” என்று இவன் சம்பிரதாயத்துக்குப் புட்டத்தைத் தூக்கி பர்சை

எடுக்கும்போது தொங்கிய கழுத்துடன் கிள்ளிவளவனால் இவனை பார்க்க மட்டுமே முடிந்தது.

வீட்டுக்கு வந்து சாப்பிட்டுப் படுத்தவன், கிள்ளிவளவன் கண்கள் சொருக குடியரங்கில் சொன்னதையும் அவரோடு இவன் பேசியதையும் கண்களால் யோசித்துப்பார்த்தான்.

மூன்றாவது பியரில் அவர் சொன்னது: ‘‘என்னல பெரிய இலக்கியம், நாகர்கோயிலு, தஞ்சாவூர்ல பொறந்தவங்க மட்டுந்தான் எழுதணுமா? நீ பேண்டு மோண்டு பொறண்டதெல்லாம் இந்த மெட்ராஸ்லதான, அப்றமென்ன. இங்க இருக்கிற ஒங்க ஜனங்கள பத்தி எழுது, நீங்கதான இந்த ஊரோட பூர்வீகம், ஒங்களுக்குன்னு ஒரு வாழ்க்க இருக்குல்ல? இருந்திருக்கும்ல? அதப்பத்தி எழுது.’’

அவனருகே முகத்தைக் கொண்டுபோய் சத்தம் குறைத்துச் சொன்னார்: ‘‘மச்சி கேட்டுக்க. இந்த மாதிரி மக்கள எலக்கியத்துல கொண்டு வர்றம்தாம்ல இப்பப் பேஷனு.’’

‘‘கரெக்ட்தான் கிள்ளி, ஆனா நா எழ்திற மொழிநடலாங் நீங்க சொல்ற மாதிரிலாம் இலக்கியத் தரமா இருக்காது’’ என்றான். அதைக் கேட்ட கிள்ளிவளவன் நான்காவது பீரைத் திறப்பதற்கு பணியாளர் வரும்வரை காத்திருக்காமல் நல்லெலும்பு கடிப்பது போல மூடியைப் பற்களால் திறந்து பியரை மேசையில் வைத்துச் சொன்னார்:

‘‘என்ன புளுத்தி, இலக்கியத் தரம் ... நாவல்ல கத சொல்ற மொற, உத்தி, அந்த மொழி இதெல்லாம் காலத்துக்கு காலம் மாறிட்டே வரும். அந்த அந்த சூழல்ல அவன் அவன் எதப் பத்தி என்னத்த எந்த நடையில எழுதுறானோ அதான் இலக்கியம். சமஸ்கிருதம் கலந்து எழுதுனா அது இலக்கியங்கற காலமெல்லாம் ஏறிப்போயாச்சி. நீ மொதல்ல எழுத ஒக்காரு. நீ எழுத எழுத ஒனக்குன்னு ஒரு நட தகவமைஞ்சிடும் கேட்டியா?’’ என்று கேள்வி முகத்துடன் அவனைப் பார்த்தவர் ஏதோ ஞாபகம் வந்தவராகச் சடாரேனே தன் கையிலிருந்த பியர் புட்டியை வாய்க்குள் திணித்தார்.

“ரைட்டு, ஆனா நான் இன்னும் நெறைய படிக்கணும்னு சொன்னீங்களே …”

புட்டியை மேசையில் வைத்து “யாஆஆவ்” என்று ஏப்பம் விட்டவர்,

“ஒனக்கு ஜோடி க்ரூஸ் தெரியுமா?” என்றார்.

“ஹாலிவுட் ஆக்டரா?”

“நாசமாப்போச்சு போ”

இப்ப ‘கொற்கை‘ன்னு ஒரு நாவல் எழுதி சாகித்ய அகாடமி வாங்குனாரே, அவரெல்லாம் ‘ஆழி சூழ் உலகு‘ங்கற நாவல் எழுதறதுக்கு முன்னாடி எந்த இலக்கிய நூலையோ இலக்கியப் பத்திரிகையையோ வாசிச்சுதில்ல பாத்துக்க, ஆனா நம்பிக்கையா எழுதினாரா இல்லயா?” தாண்டிப்போன பணியாளரைக் கூப்பிட்டு “ஒரு ரசவட ரசம் இல்லாம” என்றார். முகம் சற்று வேர்த்திருந்தது அவருக்கு.

“ஓக்கே கிள்ளி, டன்” எழுதுறோம். எங்க ஊர் ஜனங்கள வெச்சே ஒரு கத எழ்திறோம். ஆனா மெய்னா எதையாவது வெச்சிதானே ஆரம்பிக்கணும்?”

“ஒன்ன பாதிச்ச ஒரு சம்பவம்கூட இல்லயா? உன் ஊர்ல ஜாதிக் கொடுமைலாம் நடக்கலையா?!!” என்று உக்கிரமாகப் பொங்கிய கிள்ளிவளவனை அவர் குடலில் ரொம்பிய பீர் “ஹுவ்வாஆக்” என்கிற சத்தத்துடன் வாந்தியாக வெளியே வந்து அவரைக் கவிழ்த்துப்போட்டது. உலக வரைப்படத்தை நவீன ஓவியமாக மேடை மீது தன் வாய் வழியாக வரைந்த கிள்ளிவளவன் அதன் மீதே சாய எத்தனிக்கையில் அவரைப் பிடித்துக் கழிவறைக்கு அழைத்துச் சென்று அவரைச் சுத்தப்படுத்தி, திருவல்லிக்கேணியில் அவர் தங்கியிருக்கும் அறைக்குக் கொண்டுபோய் சேர்த்துவிட்டு அவன் வீட்டுக்கு வருவதற்குள் மணி பதினொன்னரை ஆகியிருந்தது.

நாவல் எழுதுவது குறித்து கிள்ளிவளவன் குடியரங்கில் சொன்னதையெல்லாம் யோசித்துப்பார்த்து முடித்ததும் குழப்பமாக இருந்தது, இதே கிள்ளியிடம் காலையில் தொடர்புகொண்டு பேசினால் “நாவலாவது கீவலாவது

வேலயப்பாருடா” என்று தலைவலியோடு அறிவுறுத்துவார். கிள்ளி முன்பு சொன்னதுதான் சரி. முதலில், நிறைய புத்தகங்கள் படிக்க வேண்டும். எழுதுவதையெல்லாம் பிறகு பார்த்துக்கொள்ளலாம். அவன் நெற்றியில் ஒரு விரல் சிலுவைபோட்டது, கண்களை மெல்லத் திறந்தான், ரெஜினா நடந்து போய்க்கொண்டிருந்தாள். சபையில் வழங்கப்பட்ட ஜெப எண்ணையை “இயேசுவின் இரத்தம்” என்று சொல்லி தினமும் இரவு அவன் நெற்றியில் வரைந்துவிடுவது ரெஜினா செய்யும் சுவிசேஷக் காரியங்களில் முக்கியமானது.

குடும்பம் அயர்ந்த பின்னும் தூக்கம் வரவில்லை. கிள்ளிவளவன் கேட்ட கேள்விகளுலொன்று, அவன் தூக்கத்தை ஒத்திப்போட்டுக்கொண்டிருந்தது. தனக்கு அல்லது தனது சுற்றுப்புறமான ராமர் தோட்டத்தில் இதுகாறும் என்ன ஜாதிக் கொடுமை நிகழ்ந்திருக்கிறது என்று யோசித்தான். எதுவும் நினைவுக்கு வரவில்லை. நாவல் எழுத முடியாமல் அசிங்கப்பட்டு விடுவோமோ என்று பாயில் புரண்டும் நெளிந்தும் இருந்தான்.

மாலை ஐந்து மணி இருக்கும். ரூபனின் ஆபிஸ் கேப் பிரதான சாலையில் அவனை இறக்கிவிட்டுச் சென்றது. இப்போதைக்கு நாவல் எழுதவேண்டாமென யோசித்து வைத்திருந்தாலும் அதைப் பற்றிய திட்டம் மனதில் உதித்ததிலிருந்தே சாலையில் தன்னை கடந்துபோகும் மனிதர்கள், தன்னைச் சுற்றி நடக்கும் சம்பவங்கள் எல்லாவற்றையும் விசேஷமாக கவனிக்க ஆரம்பித்திருந்தான். சற்று விசித்திரமான முகபாவனைகளுடன் சேஷ்டைகள் செய்யும் மனிதர்களைச் சந்தித்தால் கதைக்குள் அந்த நபரை எப்படியாவது கொண்டுவர வேண்டுமென அவனுக்குள் ஓர் எண்ணம் சுடர்ந்தபடியே இருந்தது. ஆனால் சாலையில் போவோர் வருவோரெல்லாம் இயல்பான நடத்தையுடன் தன்னைக் கடந்துபோனது மனச்சோர்வைக் கொடுத்தது.

கிள்ளிவளவனிடம் ஆலோசனை பெற்றதற்குப் பிறகு நாவல் சமாச்சாரத்தை ஒத்திப்போட்டு முதலில் நிறைய வாசிக்க வேண்டுமென்று நினைத்தான். கதைகளை வாசிக்கும்போதே அது காட்டும் படிமங்களையும் குறியீடுகளையும் உள்வாங்கிய பிறகே அடுத்த வரிக்குப் போக வேண்டிய அளவுக்கு மனத்தயார் செய்துகொண்டான். அதன்படி, கதைகளை வாசித்து முடித்ததும் கண்களை இறுக மூடி அக்கதைகளின் மூலம் ஏதேனும் உள்ளொளி தரிசனம் கிடைக்கிறதா என தியானத்தில் தேடினான். இனி தீவிர இலக்கியமென அடையாளப்படுத்தப்பட்ட ஆக்கங்களைத் தவிர பிறவற்றை வாசிக்கக் கூடாது என்கிற தடத்தில் பயணித்தான். இன்னொரு பக்கம் அவன் எண்ணம் முழுக்கத் திருமணத்திற்கு பெண் கிடைக்குமா என்பதை ஒட்டியே இருந்தது. “நமக்கு மட்டும் ஒரு ஃபிகரு கூட உசாராவமாட்டேங்குதே” என்கிற புகைச்சல் அவனுக்குள் இருந்தது. ஆனால் அதை அலுவலகத்தில் நடைமுறைப்படுத்துவதற்கு கிரண்யா என்கிற பிம்பம் பெரிய மனத்தடங்கலாக இருந்தது. ஏதாவது பெண் தானாக வந்து நம்மை விரும்புவதாகச் சொன்னால்

எவ்வளவு நன்றாக இருக்குமென நப்பாசைக்குக் கற்பனைச் சிறகுகளைக் கட்டி நடந்து வந்தான்.

வந்துகொண்டிருந்தவனுக்கு தூரத்தில் கூட்டம் தென்பட்டது. கூட்டம் நின்றிருக்கும் இடத்திற்கு அருகில் ஒரு ஒயின்ஷாப் இருக்குமாதலால் சண்டை சச்சரவுகள் அந்த ரோட்டிற்கு வாடிக்கையானது. நடையைத் துரிதப்படுத்திக் கூட்டத்தின் அருகில் சென்றவனுக்கு அதிர்ச்சி! தன் நண்பன் சௌமியனின் மாமா பூபாலனை ஆமோஸ் தன் பிடிக்குள் கொண்டுவந்து அடித்துக்கொண்டிருந்தான். ஆமோஸ் தன்நிலை தெரியாத போதையிலிருந்தான். அவனுக்கு வயது இருபதுக்குக் குறைந்து இருக்கும். சதை இறுகிப்போய் திண்டு திண்டாகிப் போன உடம்பு. சுற்றியிருந்தோர் சேர்ந்து மடக்கியும் பூபாலனை அடிப்பதிலேயே குறியாய் இருந்தான். எல்லோரையும் மீறி அவன் அடித்ததில் அவர் கையில் வைத்திருந்த நைலான் கூடையும் அதிலிருந்த சிறு பாத்திரமும் தூக்குச் சட்டியும் வெவ்வேறு பக்கம் சென்று சிதறின. தூக்குச் சட்டியிலிருந்து கவிழ்ந்த உணவைத் தின்பதற்குத் தெருநாய் ஒன்று தயக்கத்துடன் ஓடி வந்தது.

போலிஸ் ஜிப்ஸி வருவதை கவனித்ததும் ஆமோஸும் இன்ன பிறரும் ஒயின்ஷாப்பிற்குள் நுழைந்து விட்டார்கள். மனசாட்சி உள்ளவர்களில் சிலர் பூபாலனைக் கைத்தாங்கலாக நடைபாதை ஓரமாய் உட்கார வைத்திருந்தார்கள். ரூபன் குளிர்ச்சியான வாட்டர் பாக்கெட்டை வாங்கி வந்து அவர் நெற்றியைக் காட்டச் சொல்லி ஒத்தடம் வைப்பதற்காகக் கேட்டான். இல்லை நானே வைத்துக்கொள்கிறேன் என்று சைகை காட்டி அவராகவே வைத்துக்கொண்டார். ஜிப்ஸி வந்து இவர்களருகில் நின்றது. ஒயின் ஷாப்பைச் சுற்றி அடிக்கடி இது மாதிரி நடக்குமென்பதால் ஜிப்ஸியிலிருந்து இறங்காத இன்ஸ்பெக்டர், குழுமியிருந்தவர்களை வார்த்தைகளால் கொச்சைப்படுத்திவிட்டு வண்டியை எடுக்கச் சொல்லிப் புறப்பட்டார். பூபாலன் நெற்றியின் வலதுபுறம் புஸ்ஸென்று வீங்க ஆரம்பித்தது. மூக்கினுள் சுண்டுவிரலை விட்டு இரத்தம் வருகிறதா எனப் பார்த்தார். ஒடிசலான தேகம் கொண்ட ஐம்பது வயது

மதிக்கத்தக்க அரைக் கிழவனை ஆமோஸ் தாக்குவதற்கு அவனுக்கு ஒரு காரணம் இருந்தது. “ங்கோத்தா உனுக்கு சாவு எங் கைய்ல தாண்டா கெழபாடே” என்று சொல்லிவிட்டு அவன் ஒயின்ஷாப்பிற்குள் உள்ளே சென்றதை நினைத்துச் சற்றுக் கலவரத்துடனேயே இருந்தார். அவன் மிரட்டலுக்கு பூபாலன் நிச்சயம் தகுதியானவர் அல்ல.

~

எம்.ஜி.ஆர்., கலைஞர், ஜெயலலிதா இவர்களின் முகங்களைச் சிந்தாதிரிப்பேட்டை சுற்று வட்டாரத்தில் பூபாலனைப் போல வேறு யாராலும் வரைந்து விட முடியாது. அதே ஏரியாவில் பூபாலனுக்குப் போட்டி என்றால் இருதயராஜைச் சொல்லலாம். போட்டி என்று சொல்வதைவிட பூபாலனைப் போல ‘ஆர்டிஸ்ட்’ வேலையைச் செய்பவன் இதயா என்றழைப்படுகிற இருதயராஜ் மட்டுந்தான். இருவரும் கட்சிப் பாகுபாடு இல்லாமல் தி.மு.க, அ.தி.மு.க., காங்கிரஸ் ஆகிய மூன்று கட்சிகளுக்காகவும் சுவரில் எழுதுவார்கள், வரைவார்கள். இதயாவுக்கு வரைவதை விட எழுதுவதுதான் நன்றாக வரும். ழ, த, க இதெல்லாம் அவன் கை வண்ணத்தில் எழுத்துகள் போல இருக்காது பறவைகள் மரக்கிளையில் வரிசையாக அமர்ந்து வைத்த கண் திருப்பாமல் லட்சியமாக எதையோ பார்த்து ரசிப்பதுபோல இருக்கும். அவ்வளவு அழகாய், நேர்த்தியாய்ச் சுவரில் எழுதத் தெரிந்த இதயாவுக்கு ஏனோ அதன் பாதியளவுக்குக்கூட உருவங்கள், முகங்கள் வரையத் தெரியாது. தலைவர்களின் முகங்களை சில நேரங்களில் அஷ்ட கோணலாக்கிவிடுவான். ‘பொன்னுக்கு வீங்கி’ வந்ததைப் போன்று எம்.ஜி.ஆர். முகத்தை வரைந்துவிட, சிந்தாதிரிப்பேட்டை 79வது வார்டு கவுன்சிலர் தேடி வந்து அவனை அடிக்காத குறை. இதனாலயே இதயாவுக்குத் தெரிந்தவர்கள் உட்படப் பெரும்பாலானோர் பூபாலனிடமே சென்றார்கள்.

பூபாலன் படித்தது நான்காம் வகுப்புவரை! பள்ளியில் படித்த நான்கு வருடங்களிலும் ஓவியப் போட்டியில் முதல் பரிசு அவனுக்கு மட்டுமே சொந்தம். அவன் வரைந்த கிருஷ்ணன் படத்தைப் போன்று இன்று

வரைக்கும் எந்த மாணவரும் அந்தப் பள்ளியில் வரையவில்லை. தலைமை ஆசிரியையின் அறையில்கூட அந்த வரைபடம் சட்டம் செய்யப்பட்டு மாட்டப்பட்டிருக்கிறது. ஓவியம் அளவுக்கு ஏட்டுப் படிப்பில் பிள்ளை சோபிக்கவில்லை என்கிற ஆதங்கம் அவன் அம்மா மச்சகாந்திக்கு இருந்தது. நான்காவது வகுப்பு படிப்பவனுக்கு ஒண்ணு ரெண்டுகூட வரிசையாகச் சொல்லத் தெரியவில்லை ஆனால் அதையே எழுதிக்காட்டச் சொன்னால் சிலை வடிப்பது போல் சிலேட்டில் எழுதிக் காண்பிக்கிறான். ஒருமுறை மச்சகாந்தி அவன் தொடையில் ஊதாங்குழலால் சூடுகூட வைத்தாள். பேருக்காகப் பள்ளிக்கூடம் போய் வந்தவன் அம்மா சூடு போட்ட காரணத்தைக் காட்டி “இனிமே ஸ்கூலுக்கே போவ மாட்டங்” என்று முரண்டு பிடித்து வீட்டிலேயே இருந்துவிட்டான்.

அப்பா துரைசாமி சென்னைத் துறைமுகத்தில் சூப்பர்வைசர். வீட்டில் வசதிக்கு ஒன்றும் குறைவில்லை தவிர துரைசாமிக்கு பூபாலன் என்றால் உயிர். முதலில் பெண் பிறந்துவிட்டதால் 7 ஆண்டுகள் கழித்துப் பிறந்தவன் பூபாலன். ஆகவே, எல்லாம் அவன் பிரயாசைக்கு உட்பட்டுத்தான். படிப்பை விட்டுவிட்டு பூபாலன் வீட்டிலேயே இருந்துவிட்டான். தெருவில் அவன் ஈடு பிள்ளைகள் எல்லாம் ஏழாங்கல், ஐஸ்பாய், கல்லா மண்ணா என்று விளையாடிக்கொண்டிருக்க அவன் மட்டும் வீட்டிலேயே முடங்கிக்கொண்டு எப்போதும் கையில் ‘சிலேட்டும் சாக்பீஸுமாக’ யாரிடமும் அவ்வளவாகப் பேசாமல் பார்ப்பதையெல்லாம் வரைந்துகொண்டே இருப்பான். மகனின் அசாத்திய ஓவியத் திறமையை அறிந்த துரைசாமி தனக்குத் தெரிந்த நண்பர் மூலமாக ஓவியர் ஒருவரிடம் சேர்த்தார். நான்கு நாட்கள் தொடர்ந்தாற்போல் சென்றவன் அடுத்த நாள் காலையில் கிளம்பாமல் “எனுக்கு புடிக்ல அவர் டீ கடிக்கு அனுப்றாரு, கடிய பெருக்க சொல்றாரு நான் போவ் மாட்டேங்” என்று தீர்க்கமாகச் சொல்லிவிட்டான்.

“ங்கோத்தா இஸ்கூலுக்கும் போவ மாட்டன்ட்ட. ஒய்ங்கா போயி இதியாவது கத்துக்கோ. ன்னா மயிறு

உனுக்கு” என்று கோவத்தில் பளார் என்று ஒரு அறை விட்டுச் சட்டையை மாட்டிக்கொண்டு வெடுக்கென்று வெளியேறிவிட்டார் துரைசாமி. அப்பாவிடம் அடி வாங்குவது அது தான் முதன்முறை. கதி கலங்கிப்போனான். இருந்தாலும் தன் முடிவிலிருந்து பின் வாங்கவில்லை. இரவு வேலையிலிருந்து வரும்போது பிராட்வேயில் நிறுத்தி அவனுக்குப் பிடித்த “அத்தோ” உணவை வாங்கி வந்து பூபாலனைச் சமாதனப்படுத்தி “கோய்ச்சுக்காதடா பாலா” என்று நெப்போலியன் வாசனையோடு துரைசாமி கொஞ்சிக் கொஞ்சிப் பேசிக்கொண்டிருந்தார்.

பூபாலனுக்கு 20 வயதிருக்கும். அப்போது ஆர்பரிலிருந்து வீட்டுக்கு ஆள் வந்தது. “கிரேன் கொக்கி பின்னந்தலையில அடிச்சி தொர்சாமி ...” என்று வந்தவர் தகவல் சொல்ல ஆரம்பித்ததும் மச்சகாந்தி போட்ட ஓலத்தைக் கேட்டு வீட்டு வாசலில் படுத்திருந்த நாய் “ழவ்வ்வ்வ்வ்” என்று தெறித்து ஓடியது. துரைசாமி நல்ல சோக்காளி என்பதால் சேமிப்பு என்று வீட்டில் ஏதுமில்லை. மச்சகாந்திக்குக் கிடைக்க வேண்டிய துரைசாமியின் ஆர்பர் வேலையைப் பணம் கொடுத்து அவர் வைத்திருந்த தொடுப்பு தனக்கு வாங்கிவிட்டாள். மச்சகாந்தி கட்டுப்பெட்டியான பெண் என்பதால் எல்லாவற்றிற்கும் சேர்த்து அழுதழுது தன் முந்தானையை ஈரமாக்கிக்கொள்ள மட்டும் அவளால் முடிந்தது. திருமண வயதில் ஒரு பெண்பிள்ளை வேறு. வெளியுலகம் தெரியாத அம்மாவையும் அக்காவையும் வைத்துக்கொண்டு இனியும் தான் வீட்டில் முடங்கிக் கிடப்பது நியாயமில்லை என்று எண்ணிய பூபாலன் கட்சி, சினிமாவுக்காக பேனர்களில் வரைவது, சுவரில் எழுதுவதென்று தனக்குப் பிடித்த, தனக்குத் தெரிந்த ‘ஆர்டிஸ்ட்’ வேலையை (ப்ரஷோடு) கையில் எடுத்துக்கொண்டான்.

வெளியில் வந்து வரைவது, சாலையில் வியர்வையொழுக நின்று மெனக்கெடுவது, வேலை கற்றுக் கொடுப்பவர் அடிக்கடி கெட்டவார்த்தையில் திட்டிக்கொண்டே இருந்ததெல்லாம் அவனை ரொம்பவும் கலக்கப்படுத்தியது. “சேடு ஹூட்ல வீட்டு வேலைக்கு

போறேங்” என்று துணிந்த அம்மாவிடம் “நா மட்டும் வேலிக்குப் போறேன் நீயெல்லாம் எங்கியும் போவ் வேணாம்” என்று இவனே உறுதியோடு சொன்னது அவ்வப்போது நினைவில் மோதுவதால் தான் எடுத்துக்கொண்ட வேலையை அர்ப்பணிப்போடு செய்ய ஆரம்பித்தான். இடையில் அவன் அக்கா பூங்கொடி லாரன்ஸ் என்பவரைக் காதல் திருமணம் செய்துகொண்டாள். லாரன்ஸ் வீட்டில் திருமணத்திற்கு ஒப்புக்கொள்ளவில்லை. அவருடைய பெற்றோர் லாரன்ஸ் சிறு வயதாய் இருக்கும்போதே காலமாகிவிட்டதால் அவரை இதுகாறும் வளர்த்ததற்குப் பலாபலனாக அவர் திருமணத்தில் அறுவடை செய்துகொள்ளலாம் என்கிற எண்ணம் வைத்துப் பெரிய இடத்தில் வரன் பார்த்துவந்தனர் லாரன்ஸின் மாமாவும் அத்தையும். அவர்களின் எண்ணத்துக்கு மாற்றாக லாரன்ஸ் தன் காதலில் உறுதியாக நின்றார். பிறகு, குடும்பத்திற்குத் தெரியாமல் பூங்கொடியை அழைத்துக்கொண்டு பெசன்ட்நகர் அன்னை வேளாங்கண்ணி மாதா திருத்தலத்தில் மணமுடித்தார்.

எழுதுவது, வரைவது என இரண்டிலும் முன்பே சொன்னது போலச் சிந்தை சுற்றத்தில் பூபாலனுக்கு நிகர் அவனேதான். கட்சிப் புடவையில் ஜெயலலிதா சிரித்த முகத்தோடு குத்து விளக்கு ஏற்றுவது போல பெரிய பேனரில் அவன் வரைந்த ஓவியம் எழும்பூர் பகுதியில் மற்றவர்களுக்கு பூபாலன் மீது கவன ஈர்ப்பை ஏற்படுத்தியது. ஒரே நாளில் வெளியாகப் போகும் குணா, தளபதி இரண்டு படங்களுக்கும் அவர்களின் ரசிகர்கள் முந்திக்கொண்டு பூபாலனிடம் முன்பணத்தைத் திணித்தார்கள். தேவியில் குணாவுக்கும், ஆல்பர்ட்டில் தளபதிக்கும் வழிய வழிய பாலாபிஷேகம் நடந்தது பூபாலன் வரைந்த பேனர் மீதுதான். இதன் மூலம் அவன் பெயர் இன்னும் பரவத் தொடங்கியது.

தன்னுடைய வாய்ப்பை இவன்தான் வேண்டுமென்றே தட்டிப் பறிக்கிறான் என்கிற எண்ணம் இருதயராஜ் மனதிற்குள் மண்ட ஆரம்பித்தது. வேலையில்லாததால் இருதயராஜ் “சிவனடி” ஆகியிருந்தான்.

பூபாலனும் அவன் உதவியாளன் ஜானாவும் ‘மூர் மார்க்கெட்’ போய்விட்டு பார்க் ரயில்வே ஸ்டேஷனின் தண்டவாளத்தைத் தாண்டி வந்தார்கள். மணி சாயுங்காலம் ஏழு இருக்கும். புதர் மண்டியிருக்கும் அந்தப் பகுதியில் ஒரு பக்கத்திலிருந்து ஓடிவந்த மூன்று பேர் இவர்களைச் சரமாரியாகத் தாக்கினார்கள். முகத்தில் வாங்கிய பூரான் வெட்டுடன் பூபாலன் அங்கிருந்து ஓடி கூவத்தில் குதித்துத் தப்பித்துவிட்டான். சீரான கத்திப் பாய்ச்சலொன்று ஜானாவின் தொண்டைக் குழாயைப் பதம் பார்த்ததில் இரத்தம் கொப்பளிக்க அவன் அங்கேயே சரிந்து விழுந்தான். டி.பி. சத்திரத்திலிருந்து நண்பர்களைக் கூட்டி வந்து இருதயராஜ் செய்த காரியமது. பூபாலனுக்குப் போட்ட ஸ்கெட்ச் ஜானாவின் உயிரைப் பறித்தது. இருதயராஜும் கூட்டாளிகளும் ஆந்திராவின் நெல்லூரிலுள்ள நாயுடுப்பேட்டைப் பக்கம் தப்பிவிட்டார்கள் என்று செய்தி பரவியது.

ஜானாவின் ப்ரேதம் பரிசோதனைக்குச் சென்று வீட்டிற்கு எடுத்து வரும்வரை ராமர் தோட்டமே பதற்றத்திலிருந்தது. தன் தம்பியைக் கொன்றவனைப் பழி வாங்கியே தீர வேண்டுமென ஜானாவின் அண்ணன் ரஜினிசிவா கனன்றான். இருதயராஜ் வீட்டிற்கு ரஜினிசிவா சென்றான். வீடு பூட்டப்பட்டிருந்தது. அங்கு வாசலில் நாஸ்டா கடை வைத்திருக்கும் சவுரி ஆயாவின் தொழிலை எட்டி உதைத்துக் களேபரம் செய்தான். பக்கத்தில் மளிகைக் கடை வைத்திருக்கும் தங்கவேல் நாடாரைக் கடையிலிருந்து வெளியே கூட்டி வந்து உதைத்தான்.

அவன் சென்னையின் பிரபல ரவுடி ஒருவரின் அடியாள் என்பதால் தன் தம்பி கொலையுண்டது தனக்கு நேர்ந்த அவமானம் என நினைத்தான். பூபாலனின் அம்மா, அக்கா, மாமா இன்னும் சிலர் பூபாலன் அட்மிட் ஆகியிருக்கும் வார்டின் வாயிலில் நின்றுகொண்டிருந்தார்கள்.

ஜானாவின் பூத உடல் மறுநாள் காலை பதினொரு மணிக்கு அரசு பொது மருத்துவமனையிலிருந்து கொண்டுவரப்பட்டது. சந்துக்குள் பிணவூர்தி வரும் சத்தம் கேட்டதுமே உட்கார்ந்திருந்தவர்கள் புட்டத்தைத் தூசி தட்டி எழுந்திருக்கலானார்கள். பெண்கள் அழுகைச்

சத்தத்தை உயர்த்தினார்கள். எதிர்வரும் ஊர்தியை மறித்துக்கொண்டு ஜானாவின் அம்மா இரு கைகளையும் விரித்து ஓலமிட்டாள். வீட்டு வாசலில் உடல் கிடத்தப்பட்டது. பிணத்தின் முன்னே கொஞ்ச நேரம் மூக்கு சிந்தி அழுதவர்கள் தங்களுக்கு வாகான இடத்தைத் தேடி அமர முற்பட்டார்கள். ஜானாவின் அம்மா அவனின் தலைமாட்டிலேயே உட்கார்ந்து முனகிக்கொண்டிருந்தாள்.

பறையடிப்பவர்களைச் சுற்றி ஒரு சிலர் மட்டும் நடனமாடியபடி இருந்தார்கள். ஜானாவின் நண்பர்கள் குழுக் குழுவாக வந்து அவனுக்கு ரோஜாப்பூ மாலையிட்டார்கள். பிணம் கிடத்தப்பட்டிருக்கும் இடத்திலிருந்து சற்று தூரத்தில் சிறு சலசலப்பு உண்டானது. ரஜினிசிவாவின் தலைவனான பிரபல ரவுடி தன் கூட்டாளிகளோடு ஆளுயர மாலையோடு நிற்க, பறையடிப்பவர்கள் அவர்களை நோக்கிச் சென்று பறையடிக்க ஆரம்பித்தார்கள். பிரபல ரவுடிக் குழு மாலையை ஒரு கொம்பில் சொருகிப் பல்லக்கில் தூக்கி வருவதுபோலச் சுமந்து வந்து பிணமிருக்கும் இடத்திற்கு மேள தாளத்தோடு மெல்ல நடந்து வந்தார்கள்.

ஜானாவின் உடலுக்கு மாலை அணிவித்ததும் பிரபல ரவுடி இரண்டடி பின்நகர்ந்து கைகளைக் கட்டிக்கொண்டார். “ணோவ் அந்தத் தெவ்வ்டியா புள்ள மவ்ட்ரு எங் கைலதாணா” என்று ரஜினிசிவா தன் தலைவனை நோக்கிக் குரலெடுத்து அழுதான். அவர் பெருமூச்சு விட்டார்.

~

ஓராண்டு சிறைவாசத்திற்குப் பிறகு இதயா ஊருக்குள் நுழைந்தான். ஜெயிலில் தனக்கு ஏற்பட்ட அனுபவங்களைக் காலவரிசையாக எண்ணிப்பார்த்தவன், சட்டம் “தவறு” என்று சொல்லுகிற காரியங்களை இனி ஒருபோதும் தப்பித் தவறிக்கூட செய்யக்கூடாது என்று உறுதி பூண்டான். ஜெயிலுக்குப் போன புதிதில் இதயாவின் ஆசனவாயைப் பயன்படுத்துவதற்கு அங்குள்ள சிறைவாசிகள் அடித்துக்கொள்ள நேர்ந்ததையும், தினமும் அவன் வலியால் துடித்ததையும்

நினைக்கையில் அவனுக்கு ஒரு கழிவிரக்கம் உண்டானது.

பூபாலனும், இதயாவும் நேரில் சந்திக்கக்கூடிய சந்தர்ப்பம் ‘கோட்டிசா சைக்கிள் ஸ்டாண்டில்’ உருவானது. பேசிக்கொள்ளவில்லை என்றாலும் இருவர் முகத்திலும் வஞ்சனையில்லை. அவனுடன் சண்டை போடுவதற்கு பூபாலனுக்கு நேரமும் இல்லை. இருதயராஜ் சிறையிலிருந்த காலத்தில்தான் பூபாலனுக்குத் திருமணம் செய்துவைக்கப்பட்டது. தொழிலில் முன்பு காட்டிலும் அதி தீவிரமாக இருந்தான்.

வீட்டிற்கு வந்ததும் தன் அப்பா துரைசாமி வாங்கிக் கொடுத்த பரீட்சை அட்டையை மரஅலமாரிக்குக் கீழிருந்து எடுத்து அதில் வெள்ளைத்தாள்களைச் சொருகி அடுத்த நாள் தான் வரையப்போகும் உருவங்களை வரைந்து வரைந்து பார்ப்பான். மனைவி அமலோற்பவத்துக்கு இதையெல்லாம் பார்த்தால் சற்று விசித்திரமாக இருக்கும். “சின்ன வயசுலருந்து வரயறன்ற … எதுக்குப் பய்ந்து பய்ந்து இத்தினி வாட்டி வர்ஞ்சி பாத்துணுகிற?” என்று ஒருமுறை அவனைப்பார்த்து கேட்டாள். “அடிங் … இது பயல்லாம் ஒன்யுல்ல. நா அவ்ட்டுர்ல நின்னு வரையும்போது பத்து பேரு சுத்தி நின்னு பாப்பானுங்கோ. அந்த எட்த்துல அவனுங்க முன்னாடி ஜெர்க் ஆனா ஏறுக்கு மாறா வர்ஞ்சிட்டு அப்புறம் அதை அய்ச்சிட்டு டபுள் வேலை செஞ்சா எவ்ளோ அசிங்கங்?” என்று அமலோற்பவத்திடம் விலாவரியாக சொல்லத் தோன்றும். ஆனால் அதற்கெல்லாம் பூபாலனிடம் நேரம் இருக்காது. அவள் கேட்டதற்கு பதிலேதும் சொல்லாமல் குனிந்த தலை நிமிராது படம் சரியாக வரும்வரை வரைந்து முடித்துவிட்டு வண்ணத் திரவங்களைக் கலவை செய்யப் பெட்டியை தூக்கிக்கொண்டு நண்பன் கோட்டிசா சைக்கிள் நிலையத்திற்குச் சென்றுவிடுவான். “எம்மா, எதும் நென்ச்சிக்காத அவன் ஆளே அப்படித்தாங் எதுக்கும் மடக்குன்னு வாய தொறந்து பேச மாட்டாங் … கோவம் மட்டுங் சுருக்கு சுருக்குனு வருங். தெரிஞ்சதெல்லாம் படம் போடறது மட்டுந்தாங். பெயிண்ட் வாசனையை ஒரு நாள் மோர்லனா கூட தூங்க மாட்டாங். படம்

போடறதுதாங் மொத, அப்புறங்தாங் மத்ததெல்லாங்” என்று அவன் போய்விட்ட பிறகு, புது மருமகளுக்கும் மகனுக்கும் பிணக்கு உண்டாகாதவாறு பொறுமையாக மச்சகாந்தி எடுத்துச் சொல்வாள்.

இருதயராஜுக்கு முன்புபோல கஞ்சா, குடி என எதுவுமில்லை. வீட்டருகில் இருக்கும் தேவகிருபையின் பெந்தகொஸ்தே சபையில் மனைவின் வற்புறுத்தலின் பேரில் பாஸ்டரய்யாவிடம் ஞானஸ்நானம் எடுத்தவன் வாரம் தவறாது சபைக்குப் போகவர இருந்தான். நான் எவ்வளவு மோசமானவன், ஜெயிலுக்கெல்லாம் கூட போய் வந்தவன். ஆனால், தற்போது கிறிஸ்துவுக்குள் இரட்சிக்கப்பட்டு பரிசுத்தமாய் இருக்கிறேன் என்று பாஸ்டரய்யா சொல்லிக்கொடுத்தது மாதிரி ஆரம்பிக்கும் அவனுடைய சாட்சி பெந்தகொஸ்தே சபையுலகில் பிரபலமாகிவந்தது.

சாட்சி சொல்லுவதையே தொழிலாகக் கொள்ளாமல் புதுப்பேட்டையிலிருக்கும் ஒரு கட்டிட மேஸ்திரியிடம் வார்னிஷ் அடிக்கும் வேலையில் சேர்ந்தான். தினக்கூலி. குடும்பத்தின் வயிற்றுப்பாட்டிற்குக் குந்தகமில்லாமல் இருதயராஜின் வாழ்க்கை சீராகப் போய்க்கொண்டிருந்தது.

பூபாலனும் தொழிலில் முன்னேறிக்கொண்டிருந்தான். தன் அக்காவின் குழந்தை சௌமியன் பிறந்த நேரம் பூபாலனுக்கு பி.பி.எல்., கண்ணன் தேவன் டீ போன்ற பெரிய பெரிய நிறுவனங்களிடமிருந்து ஆர்டர் கிடைத்தது. வரைய ஆரம்பித்த காலந்தொட்டே படம் வரைந்து முடித்த பின் கடைசியாக அதன் அடியோரத்தில் வெத்தலை அளவில் ‘Art By Boopalan’ எனப் போட்டு வந்தவன் அக்கா குழந்தை பிறந்து பெயர் வைத்த பிறகு ‘Art By Sowmi’ என்று மருமகன் பெயரைப் போட ஆரம்பித்தான். தன் பிள்ளையின் பெயர் விரைவில் போடப்பட வேண்டுமென்பதற்காகவே இராத்திரியில் அமலோற்பவம் அவனை அதிகம் சீண்டச் செய்தாள்.

காலப்போக்கில் சினிமா, அரசியல் சம்பந்தமான பதாகை ஓவியங்கள், சுவரோவியங்கள் வரைவதை பூபாலன் குறைத்துக்கொள்ள விரும்பினாலும் சம்பந்தப்பட்டவர்கள் விடுவதாய் இல்லை. கண்ணன்

தேவன் டீ, டயனோரா, பி.பி.எல். போன்ற கம்பெனிகளுக்கு வரைந்து கொடுக்கையில் பணம் சொன்ன தேதியில் கிடைத்துவிடும். ஆனால் சினிமா மற்றும் கட்சிக்காக வரையச் சொல்பவர்கள் வேலையை வாங்கிவிட்டு “நம்ம கட்சிக்குதான பூபாலா செஞ்ச” என்று டிமிக்கு கொடுத்துவிடுவார்கள். ரஜினி ரசிகர்களும் அதே மாதிரிதான். “நம்ம தலைவரதான பூபாலா வரிஞ்ச” என்பார்கள். மேற்கொண்டு கேட்டால் மூர்க்கத்துடன் தாக்கிய சம்பவங்களும் உண்டு. ஒன்பது ஆட்களை வைத்து வேலை வாங்கிக்கொண்டிருக்கும் பூபாலனுக்குச் சொற்ப கூலிக்காக சினிமா / அரசியல் காரர்களிடம் பஞ்சாயத்து பண்ணிக்கொண்டிருக்க நேரம் இல்லை. அதே சமயம் அவர்களைப் பகைத்துக்கொண்டு ஏரியாவில் தொழில் செய்வதும் சாத்தியமற்றது என்பதால் வரைந்து கொடுப்பதுண்டு.

காட்பாடி பிரதான சாலையில் நடைபெற இருந்த ஒரு கூட்டத்திற்காகத் தலைவர் வர இருப்பதால் ஐம்பது அடி பேனரில் தலைவரை வரைய வேண்டுமென்று தெரிந்தவர் வழியாக துரைமுருகனிடமிருந்து ஒரு ஒப்பந்தம் வந்தது. பெரிய இடம் என்பதால் பூபாலன் குழுவில் முக்கியமானவர்கள் என மொத்தம் நான்கு பேர் காட்பாடிக்குச் சென்று கலைஞர் கையில் குண்டு பேனா ஒன்று வைத்து யோசிப்பது போல அவரின் நெற்றிச் சுருக்கம் உட்படத் தத்ரூபமாக வரைந்து குடுத்தார்கள். விழாவிற்கு வந்து அதைப் பார்த்துக் கலைஞரே வியந்து போனார். “இனி தமிழகத்தில என் படம் எந்த பேனரில் வரையப்பட இருந்தாலும் சௌமியாவையே கூப்பிடுங்கயா” என்று பி.ஏ. சண்முகநாதனிடம் வாஞ்சையோடு தெரியப்படுத்திக் கொண்டதாக பூபாலனிடம் வேலை செய்பவர்கள் ஊருக்குள் வந்து பெருமையடித்துக்கொண்டார்கள்.

கலைஞரின் கட்டளை மூலம் சினிமா விளம்பரம், அரசியல், மற்றும் நுகர்வுப் பொருட்கள் போன்றவற்றிற்கு வரைவதற்காக ஒப்பந்தங்கள் நிறையக் கிடைத்ததால் பூபாலன் பெரிய தனவந்தன் ஆனதோடு தொழிலைச் சமாளிக்க இன்னும் சிலரை வேலைக்குச் சேர்த்துக்கொண்டார்.

இருதயராஜ் தமிழகத்தில் சாட்சி சொல்லாத பெரிய சபைகளே இல்லையென்று ஆனது. அவரின் சாட்சி அடங்கிய ஒலிநாடா அற்புத சுகமளிக்கும் கூட்டங்கள் நடக்கும் வளாகங்களில் புழக்கத்திற்கு வந்து ஆட்டோ சங்கர் மனைவியின் சாட்சிக்கு நிகராக விற்பனையில் போட்டி போட்டது.

வார்னீஷ் வேலையை விட்டு முழுநேர வெள்ளை உடையுடன் தேவ பணிகளுக்கு இருதயராஜ் தன்னை ஒப்புவித்தார். இஸ்ரவேல் இருதயராஜ் என்கிற பெயரை சுவிசேஷச் சுவரொட்டிகளில் பரவலாகப் பார்க்க முடிந்தது.

ஓவியத் தொழிலில் ஏற்கனவே, பிரபலமாய் இருந்த மோகன் ஆர்ட்ஸ், பாலு பிரதர்ஸ், பாபா ஆர்ட்ஸ் போன்றவர்களுக்கு இணையாகச் சவால் விடும் அளவுக்கு எல்லீஸ் சாலையில் ‘சௌமி ஆர்ட்ஸ்’ என்கிற பெயரில் ஒரு கடையை ஆரம்பித்து, பிரபல சினிமா விளம்பர போஸ்டர் டிசைனர் திரு. உபால்ட் அவர்களைத் திறப்பு விழாவிற்கு அழைத்து வந்து கடையைத் திறந்து ஆடம்பரமாக பூபாலன் தொழிலைத் தொடர்ந்தார்.

பெரியார் திடலில் நடைபெற்ற போதகர் சாம் ஜெபதுரையின் கூட்டத்திற்கு சாட்சி சொல்லிவிட்டு இஸ்ரவேல் இருதயராஜ் அவர் பிள்ளை ஆமோஸ் மற்றும் சக ப்ரதருடன் மூவரும் டிவிஸ் பிஃப்டியில் எழும்பூர் மேம்பாலத்திலிருந்து கீழே இறங்கிக்கொண்டிருந்தனர். அப்போதுதான் ரஜினிசிவா சொன்னதைச் சாதித்தான். பாம்பேயிலிருந்து சில தினங்களுக்கு முன்பு சென்னைக்கு வந்தவன் கூட்டாளிகளுடன் திட்டமிட்டது மாதிரி ஒழுக்கமாகக் காரியத்தை முடித்தான். மேம்பாலத்திலிருந்து வண்டி இறங்கிய வேகத்தில் குறுக்கே புகுந்து வழிமறித்து இருதயராஜைப் பிடித்துக் கீழே தள்ளி பாளம் பாளமாக அவரை வெட்டியதோடு அவர் குறை உயிரில் துடித்ததும் ஓடிப்போய்ப் பெரிய கல்லைத் தூக்கி வந்து அவர் வயிற்றின்மீது தூக்கிப் போட்டான். மலம் மொத்தமும் ரத்ததுடன் குழைந்து விநோதப் பிராணியைப் போல வாய் கோணி மரித்துப்போனார். அதைப் பார்த்த ஆமோஸ் ஒரு வாரத்திற்கும் மேல் பேச்சு சரிவரமால்

புத்தி சுவாதினமற்றுக் கிடந்தான். முழுப் பைத்தியம் என்று சொல்லும் அளவுக்கு இல்லையென்றாலும் அவன் எந்த நேரத்தில் எதைச் செய்வான் என்று யூகிக்க முடியாத ‘அரை லூசாக’ ஊரில் சுற்ற ஆரம்பித்ததற்கு நேரில் பார்த்த தகப்பனின் மரணம் உந்துசக்தியாக இருந்தது.

சௌமி ஆர்ட்ஸில் வேலை செய்யும் அனைவருக்கும் தீபாவளிக்கு மறுநாள் அவர் வீட்டிலேயே கறி விருந்து குடுப்பதாய் ஒரு வாரத்திற்கு முன்னரே திட்டமிடப்பட்டு இருந்தது. அதே போல் தீபாவளி மறுநாள் மதியம் பூபாலன் வீட்டு மொட்டை மாடியில் பந்தல் போட்டு விருந்து வெகு ஜோராய் நடந்தது. முகப்பறையில் பூபாலனும் சைக்கிள் ஸ்டாண்ட் கோட்டிசாவும் பேசிக்கொண்டிருந்தார்கள். மச்சகாந்தி யாரையோ திட்டிக்கொண்டு பரபரப்பாக வாழை இலைகளைத் தேடி உள்ளே நுழைந்தாள். நிறைமாத கர்ப்பிணியான அமலோற்பவம் அவர்கள் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டவாறு தயிர்ப் பச்சடி தீர்ந்துவிட்டதால் அடுத்த பந்திக்காக மூச்சுவிட சிரமப்பட்டுக்கொண்டே தயிரைக் கடைந்துகொண்டிருந்தாள். பேச்சினூடே கோட்டிசா பூபாலனிடம் சொன்னார், “ன்னா பூபாலா புதுசா ஏதோ மிஷின் வந்திக்தாமே ட்ராயிங், பெய்ண்டிங், பேனர் எல்லாங் அதே பிரிண்ட் போட்டுக் குத்திருதாமே அது ன்னானு கேள்விப்பட்டியா?” என்றான். அது “ன்னா வோணா வர்ட்டும் நீ மொதுல்ல போயி சாப்டு” என்று, கோட்டிசா சொன்னதை அலட்சியப்படுத்தி அவனை சாப்பிடச் சொல்லி எழுப்பினார்.

~

நான்கு ஆண்டுகள் கழித்து, தொழில்முறைக் கொலைக்காரர்களுக்கு இடையே ஏற்பட்ட கோஷ்டி வன்மத்தில் ரஜினிசிவாவின் உடலை ஆவடி மார்கெட்டில் வைத்து சர்பத் ரவியின் ஆட்கள் துண்டாக்கினார்கள்.

தன் அப்பா இருதயராஜின் உடல் வெட்டுப்பட்டு அதிலிருந்த உயிர் துடிதுடித்து அவர் இறப்பதை நேரில் பார்த்த ஆமோஸ் இந்தப் பிரச்சினையை ஆரம்பத்திலிருந்து முழுதும் தெரிந்துகொண்டான்.

அவனின் கிறுக்குப் புத்தி அவ்வப்போது விபரீதமாக சிந்திக்க வைத்தது. பூபாலன் மீது எந்தத் தவறும் இல்லை எனத் தெரிந்துகொண்ட பின்னரும் அவன் பழி வாங்குவதற்கு பூபாலனைத் தவிர யாரும் உயிருடன் இல்லை என்பதால் - தொழில் முடங்கிக் கையறு நிலையில் இருக்கும் - பூபாலனை எங்குப் பார்த்தாலும் “கெழபாடு உன்னாலதாண்டா எங்கப்பன் செத்தாங்” என்று அவரை அடிப்பதற்கு எம்பிக்கொண்டு வருவான். ‘போர்ட்ரூம்’ சித்திரைவேல் தனக்கு எதிராக எழும்புவர்களை அடிக்க வேண்டுமென்றால் ஆமோஸ்க்குக் குடி வாங்கிக் கொடுத்து அவனை உசுப்பிவிட்டு தனக்குத் தேவையானதைச் சாதித்துக்கொண்டிருக்கிறார். ராமர் தோட்டத்தில் “லூசாமோஸு” என்றால் தெரியாதவர்களில்லை.

‘டிஜிடல் பேனர்’ யுகத்தினால் தன் ஆர்டிஸ்ட் தொழில் நொடிந்து, யாரிடத்திலும் கூலி வேலைக்குச் செல்வதற்கும் கூச்சப்பட்டுக்கொண்டு வெகு நாட்களாக வீட்டிலேயே இருந்த பூபாலன் நெட்டுக்குத்தாக வளர்ந்திருக்கும் தன் ஒரே மகளான பிலோமினாவை ஞாபகத்தில் வைத்து ரிச்சி தெருவில் இருக்கும் ‘க்ளாசிக் டிஜிட்டல் பேனர்’ கடையில் மாதச்சம்பளத்திற்குச் சிலகாலம் வேலை செய்தார். “பழைய ஆர்டிஸ்ட்” என்று கருணையின் அடிப்படையில் அவரை வேலைக்கு வைத்திருந்தவனும் நைசாக அவரை அனுப்பிவிட்டான். பிறகு ஒரு ஏ.டி.எம். அறைக்கு செக்யூரிட்டியாகச் சேர்ந்தார். மருத்துவமனையில் சேர்க்கப்பட்டிருக்கும் தன் மாமாவுக்குத் துணையாகக் கிடக்கும் அக்காவிற்கு நைலான் கூடையில் சாப்பாடு கொண்டுபோகும்போதுதான் ஒயின்ஷாப் வாசலில் நின்றிருந்த ஆமோஸ் பூபாலனைப் பார்த்தான்.

“ன்னாப்பா நீ சாப்பாடு எத்துனு வந்துக்ற …

பாலெங் வர்ல?”

“ட்யூட்டிக்கு சீக்கிரம் போணுன்னு எங்கிட்டே குத்தம்ச்சார்மா” - பொய் சொன்னான்.

பூங்கொடிக்குத் தனியாய்ச் சாப்பிட மனமில்லை.

“ந்தா எப்பா நீயும் சாப்டு.” தட்டில் சோற்றைக் கொட்டி குழம்பு மிதந்த பூஸ்ட் பாட்டிலை அவனிடம் நீட்டினாள்.

“வேணாமா இப்போதான் சாப்ட்டு வந்தேங்.”

இரண்டு முறை கேட்டுப் பார்த்துவிட்டுத் தட்டைக் கையிலேந்திச் சாப்பிடத் தொடங்கும் முன் சில பருக்கைகளைத் தரையில் போட்டுவிட்டு “சௌமிக்குப் பா” என்று மூக்கை உறிஞ்சிவிட்டுத் தின்ன ஆரம்பித்தாள். அவளால் அமைதியாய்ச் சாப்பிட முடியவில்லை. சாப்பாட்டை வாயில் வைத்ததும் பூங்கொடி அழ ஆரம்பித்தாள். “எ … ப்பா என் புள்ள அநியாயமா போய்ச்சேப்பா … உங்கூடலாங் பழகினுருந்தப்போ நல்லா இருந்தானேப்பா … வூட்டான்டயே வராமா ஆய்ட்டியேப்பா … உம் பேரியே தானப்பா வாய்க்கு வாய் ஒப்பிச்சினு இருப்பாங் … எம்புள்ளியே அநியாயமே வுட்டியேப்பா …” என்று தேம்பித் தேம்பி அழுதாள்.

ரூபனுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. அவள் அழுவதையே மூக்கு விரியப் பார்த்துக்கொண்டிருந்தான். பிறகு அவளே சுதாரித்து முந்தானையால் முகத்தை அழுந்தத் துடைத்து சாப்பாட்டைத் திரும்பவும் பிசைந்தாள். அவள் சற்று ஆசுவாசப்பட்டதுபோல் தெரிந்ததும் …

“நா ன்னாமா பண்றது. எவ்ளோ வாட்டி அவங்கிட்ட வலிய வலியமா போய் பேசுனேங் … அவங் பழயமாரி மூஞ்சுக்குத்து பேசவே இல்லியேம்மா” என்று தன் தரப்பை அவளிடம் சொன்னான்..

அவள் அமைதியாகவே இருந்தாள்.

“செரி … நீ சாப்டுமா ன்னா பண்றது …” என அவன் ஆறுதல் சொன்னதும் கீழ்ப்படிந்து சோற்றைப் பிசைந்து சாப்பிட்டாள். அவள் அழுததற்கும் சட்டென சாப்பிட ஆரம்பித்தற்கும் இடையேயான வேகம் அப்படியொரு ஆறுதலுக்குக் காத்திருந்த மாதிரி இருந்தது.

சாப்பிட்டுக்கொண்டே பூபாலனைப் பற்றி விசாரித்தாள்.

“அப்டி ன்னாவாம்ப்பா அவனுக்கு வேல?”

“இன்னிக்கு அவுங்க சூப்பர்வைசரு ரவுண்ட்ஸ் வருவாராங். டைமுக்கு அங்க இருக்கணுன்னு எங் வீட்டுக்கு வந்து சாப்பாடு குத்துட்டுப் போனாருமா.”

பிசைந்த சாப்பாட்டை உருட்டிக் கொண்டே “எப்பா … உனுக்குத் தெரிமா பாலங் எப்டி சம்பாரிச்சவன்னு. அவன் நே … ரம் … ன்னாடான்னா பத்து ருபாய்க்லாங் இப்போ பதங்கொல்ஞ்சின்னுகிறாங்” - பிசைந்த உருண்டையை வாய்க்குள் லபக்கென்று தள்ளினாள்.

“தெரியுங் சௌமி சொல்லிக்கிறாம்மா.”

“லாரன்ஸ் அட்டண்டர், உன்ன எங்கலாம் தேட்றது? டாக்டரு கூப்புர்றாரு” - செக்யூரிட்டியின் குரல் கடுகடுத்தது.

“எப்போவ், சொல்ட்டுதான வந்தேங் கேண்டினுக்கு சாப்ட போறேன்னு” சத்தமாக பதிலைச் சொன்னதும். குரலைத் தாழ்த்தி ரூபனிடம் சொன்னாள். “தங்கமான மன்சென். காதுதாங் செரியா கேக்காது.”

இருவரும் மேல சென்றார்கள்.

“எப்பா நீயும் உள்ள வா. டெய்லி தின்சு தின்சா சொல்றானுங்கோ.”

தீவிர சிகிச்சைப் பிரிவு அறையின் உள்ளே சென்றான். கனத்த மௌனம் வியாபித்திருந்த அறை. ஒவ்வொரு கட்டிலிலும் படுக்க வைத்திருந்தவர்களைச் சுற்றிக் கடல் நீலத்தில் திரைச்சீலை. காற்றில் திரைச்சீலை மெல்லச் சிணுங்கியபோது அதன்வழி நோயாளிகளைப் பார்த்தான். உயிரோடு இருக்கிறார்கள் என்பதற்கு எந்த அத்தாட்சியும் இல்லை. பிணங்களின் முகத்துவாரங்களில் பிளாஸ்டிக் குழாய்கள். ஒரு நோயாளிக்கு ஒரு சொந்தம்

என்கிற விதிமுறையில் கட்டிலொன்றுக்கு சவக்களையோடு ஒவ்வொருவர் அமர்ந்திருந்தார்கள்.

“வாப்பா, தோ பத்துனுக்றாரு பாரு.” அருகே அழைத்துச் சென்றாள்.

நாட்கள் கழித்து அவரை அப்போதுதான் பார்க்கிறான். அறுவை சிகிச்சைக்காக மொட்டை அடித்திருந்தார்கள். மண்டையில் முள்ளு முள்ளாக வெள்ளை முடி. மீசையும் இல்லை. சௌமியனின் அப்பாவா இவர்!!

“உங்கப்பா ஆக்டர் ப்ரதாப் போலக்றாருடா.”

“ஆமாண்டா, அவ்ரு சின்ன வய்சு போட்டோ காட்றேங் பாரு அப்டியேருப்பாரு.” பர்ஸிலிருந்து சௌமியன் ஒரு புகைப் படத்தைக் காட்டினான். கையில் கிட்டார் மட்டும் இல்லை. “என் இனிய பொன் நிலாவே” முகம்.

“தெபார்றா ரூபனு, இந்த வயசுலயும் அந்த இமேஜ மெயின்டயின் பண்ணுவாப்ல, டெய்லி சேவிங்கு, ரெண்டு வாரத்துக்கு ஒருவாட்டி ஹேர்டைன்னு த்தா பக்காவா இருப்பாப்ல. ன்னும் கேரேம் மேச்சிக்கு ரெப்ரி பாக்க போவ சொல்ல நீ பாக்ணுமே பார்மல் பேன்ட்டுக்கு ஸ்போர்ட்ஸ் ஷூ போட்டுக்கினு”

“தெபாரு, சௌமி ப்ரெண்ட் வந்துகிறான் பாரு” - பூங்கொடி அவர் காதருகே ஓதினாள்.

அவர் கருவிழிகள் கிடுகிடுவென ஆடின. சௌமி என்கிற சொல்லைக் கேட்டதால் வந்த துடிப்பு அது. பாதங்களால் ஏதோ பேசினார். அவருக்கு மட்டுமே புரிந்த பாஷை. நினைவு இருக்கிறது. சில கேள்விகள் அவருக்குக் கேட்க வேண்டும். ஆனால் மூளைக்கும், வாய்க்கும் இடையே தகராறு. வாயைத் திறந்துத் திறந்து மூடினார். அவருக்குப் பேச்சு வராதிருத்தலே நலம். பேச ஆரம்பித்தால் கேட்கப்படும் முதல் கேள்வி “சௌமியன் ஹாஸ்பிடலுக்கு என்ன பாக்கவே வர்றது இல்ல. அவ்னுக்குன்னா கோவம்?” எல்லோரும் சௌமி என்று அழைத்தாலும் லாரன்ஸ் மட்டும் சௌமியன் என்று முழுப் பேரைச் சொல்லியே அவனை அழைப்பார். தன் தலைவர் பேரறிஞர் அண்ணாவின் செல்லப்பெயரைப் பிள்ளைக்குச் சூட்டியவராயிற்றே. அவர் செல்லமாக

அவனை அழைப்பதே முழுப் பெயரையும் சொல்லித்தான். உள்ளே நுழைவதற்கு முன்பே பூங்கொடி அவனிடம் சொல்லியிருந்தாள்: “எப்பா சௌமி செத்துது அவ்ருக்குத் தெரியாதுப்பா. எதும் சொய்ல்றாத.”

“ஆங் செரிமா” என்றான்.

“அம்மா, உங்கள டாக்டரு பாக்கணும்னு சொன்னாங்க. வந்துட்டாரு பாருங்க. இங்க என்ன பண்ணிட்டு இருக்கீங்க? இதாரு?”

“இது என் பய்யன் ப்ரெண்டும்மா. சாப்பாடு எத்துனு வந்துந்தாரு.”

அவ்விடத்தில் ‘ரெக்ஸோனா’ வாசனை. அப்போதுதான் பணிக்கு வந்திருக்கிறாள். அவளைப் பார்த்தான். “எப்பா … செம்ம கலயான மூஞ்சி. ஆனா இந்த மூஞ்ச எங்கயோ பாத்துக்கிறனே …” மேற்கொண்டு யோசிப்பதற்கு அவள் கால அவகாசம் தரவில்லை.

“பேஷன்ட்டு கிட்ட வரும்போது கையில க்ளோசு போட்டுக் கிடணும். இப்டி வாங்க” என்று அவனை ஓரம் அனுப்பினாள்.

பூங்கொடியைப் பின்தொடர்ந்து இவனும் மருத்துவரிடம் சென்றான்.

பேச ஆரம்பிப்பதற்கு முன் மருத்துவர் பூங்கொடியைக் கேட்டார், “இவரு யாரும்மா?”

ரூபனுக்கு ஞாபகம் வந்துவிட்டது. லாரன்ஸை மருத்துவமனையில் சேர்த்த முதல்நாள் “மொதல்ல நீங்க வெளியில போங்க” என்று ஒரு மருத்துவர் இவனை அவமானப்படுத்தியதும் அவன் வெளிநடப்பு செய்கையில் அவனைப் பார்த்துக் கண்களால் சிரித்த அதே யட்சி! அங்கு பார்த்தவள்தானா? அல்லது இவள் வேறா? திரும்பிப் பார்க்க வேண்டும்போலிருந்தது. பேசிக்கொண்டிருக்கும் மருத்துவரை அவமதிப்பது போல் ஆகிவிடும் எனக் கட்டுப்படுத்தி நின்றான்.

“எங்க சொந்தக்கார பய்யந்தாங்க.”

மருத்துவர் சம்பிரதாயமாகத்தான் கேட்டாரே ஒழிய பூங்கொடியின் பதில் அவருக்கு முக்கியமாய்ப்

படவில்லை. அதைவிட முக்கியமான விஷயத்தை அவர் சொல்ல வேண்டியிருந்தது. “லாரன்ஸோட ஹெல்த் நல்லா தேறிட்டு வருதுமா. ஆனா, இப்போதைக்கு கிட்னி மட்டும் செரியா பங்க்ஷன் ஆகுறதில்ல, யூரின் ட்ரபுள் இருக்கு. சோ ஒரு டயாலசிஸ் மட்டும் பண்ணனும். நர்ஸ் ஒரு டாக்குமென்ட் தருவாங்க அதுல சைன் போட்டுடுங்க” என்று மூக்குத் தண்டில் சரிந்த கண்ணாடியை மேலே ஏற்றி விட்டு “இவாஞ்சலின் அங்க என்ன பண்ணிட்டு இருக்கீங்க? இங்க வாங்க” என்று முகத்தை ஏறிட்டு அழைத்தார்.

பேரழகியின் பெயர். இவாஞ்சலின்!!!

திரும்பிப் பார்ப்பதற்கு அவனுக்கு வாய்ப்பு கிடைத்தது. அவள்தான். நல்லவேளை இந்த முறை அவமானப்படவில்லை!! வேகமாக மருத்துவரை நோக்கி வந்து நின்றாள். டயாலிசிஸ்க்கு முன்கூட்டி செய்ய வேண்டிய காகித வேலைகளை மருத்துவர் அவளுக்கு விளக்கினார். அவர் சொல்லச் சொல்ல கர்நாடக இசையை முன்வரிசையில் உட்கார்ந்து ரசிப்பதுபோலத் தலையாட்டினாள். அருகில் நின்றவாறு அவளைப் பார்த்தான். முகத்தில் தொழில்பக்தி தாண்டவமாடியது. அவனுக்குச் சிரிக்க வேண்டும் போலிருந்தது. இவாஞ்சலினின் உள்ளுணர்வு அவளுக்கு விதித்த துரிதக் கட்டளையை மதித்து மூன்றாவது மனிதன் என்ன எதிர்வினை ஆற்றுகிறான் என்று மருத்துவரின் பேச்சைக் கேட்டவாறே கருவிழியை ஓரத்திற்குக் கொண்டுவந்து அவனை ஒரு கணம் பார்த்துவிட்டு விழியை நேர்ப்படுத்தினாள்.

பேச்சுவார்த்தை முடிந்தது. மருத்துவர் அங்கிருந்து நகர்ந்தார்.

பூங்கொடியைப் பார்த்து இவாஞ்சலின் சொன்னாள்: “ம்மா, இப்போ சீஃப் டாக்டர் ரவுண்ட்ஸ் வருவாங்க. இவர போகச் சொல்லணும்.”

“ர்” என்கிற விகுதி அவனுக்குள் ஒரு கதகதப்பை உண்டாக்கியது.

“செரிமா நான் வரேங்” நைலான் கூடையுடன் புன்முறுவலோடு அவன் வெளியேறி நான்கைந்து

படிக்கட்டுகள் இறங்க …

முழு உடம்பையும் உள்ளே வைத்துக்கொண்டு வெறும் தலையை மட்டும் நீட்டி … “ஹல்லோ” என்ற குரல் கேட்டுத் திரும்பினான்.

இவாஞ்சலின்!

“…”

“விசிட்டர் புக்ல சைன் பண்ணனும். தெரியாதா?”

பிரபஞ்சத்தில் பலவற்றைத் தெரியாதிருப்பது நல்லது எனத் தன் அறியாமையினால் கிடைத்த அனுகூலத்தில் பெருமிதமடைந்து அவளை நோக்கிச் சென்றான்.

# -13-

“ஹலோ ணோவ் … பூபால்ண்ணா … சௌமி ப்ரெண்டு ரூபன் பேசுறண்ணாங்.”

“அலோ ஆங் சொல்லுப்பா.”

“இன்னிக்குங் நானே ஆஸ்பிட்லுக்கு சாப்பாடு எத்துனு போறன்ணா.”

“இருக்கட்டுங் வாணாப்பா உனுக்கெதுக்கு கஷ்டங்?”

“இதுல ன்னாருக்துணா. பாவம் நீ வேலமேல பர்மிசின் கேட்னு வர்ணுங். நாந்தான் வீட்டுக்கு சீக்கிரங் வந்துர்றேல்ல, டெய்லிகூட நானே எத்துனு போறேங். அக்காவ இல்லாட்டி பிலோமினாவ சாப்பாடு மட்டும் கட்டி மட்டுங் வெக்க சொல்ணா.”

தயக்கத்துடன் “செரி ன்னாவோப்பா” என்றார்.

“ரைட்ணா வெச்சிற்றேங்.”

“ஆங் ரைட்டு … பா.”

தன்னுடைய மகளை தினமும் வந்து பார்ப்பதற்குத்தான் காரணம் தேடுகிறான்போல என்று பருவப் பெண்ணை வளர்க்கும் அப்பாவின் கூர்மை புத்தியுடன் கவனமாக அவதானித்த பூபாலனுக்கு அந்த அவதானிப்பு ஆறுதலாகவே இருந்தது. டபுள் டிகிரி படித்து பெரிய கம்பனியில் வேலை செய்யும் இவனைப்போல ஒருவன் வீட்டருகில் அதுவும் சொந்த ஜாதியில் தேடினாலும் கிடைக்காது. தேடினாலும் எதை ஆதாரமாக வைத்து வரன் தேடுவது? இருந்த ஒரு வீட்டையும் விற்றுக் குடித்தாகிவிட்டது. நகைகளென்று குண்டுமணிகூடச் சேர்த்து வைக்கவும் இல்லை. அமலோற்பவம் பவானியிடம் சீட்டுப்போட்டு நகைக்குப் பணம் சேர்ப்பதாகத் தெரிந்து மட்டும் வைத்திருந்தார். ரூபன் குடும்பத்திற்குப் பெண் கொடுக்க வேண்டி வந்தால் அவன் அம்மா ரெஜினா சொத்து நகைக்கு ஆசைப்படாதவள் என்று ஹவுசிங் போர்டு ஏரியாவுக்கே தெரியும். எனவே பூபாலனுக்கு அப்படியொரு ஆசை வந்தது நியாயம்தான்.

தனக்கு மருமகளாக வர வேண்டியவள் எப்படி இருக்க வேண்டுமென ரெஜினாவே ‘டாங்கித் தண்ணி’ பிடிக்கும் இடத்தில் அடிக்கடி சொல்வதுண்டு. “எங்க வீட்டுக்கு மருமகளா வரப்போறவ சொத்து பத்துலாங் எத்துனு ஒஸ்தியாத்தான் வர்னுன்னு இல்ல. ஆனா அவ அழகுள்ள ரூபவதியும் புத்தியுள்ள கன்னிகையுமாய் சௌந்தர்யமான பக்தி வைராக்கியமுள்ள குணசாலியான ஸ்த்ரியாக இருக்கணுங்” என வர வேண்டிய மருமகளின் பிரதாபத்தைச் சொல்லி முடிக்கும் முன் கூட்டம் சிதறிவிடும்.

பூபாலன் நினைத்த மாதிரி ஒருவேளை ரூபன் மனதில் “அந்த மாதிரி” எண்ணம் ஏதும் இல்லையென்றாலும் தினமும் மருத்துவமனைக்குச் சாப்பாடு கொண்டு போகும் வேலைப் பளுவை அவன் வாங்கிச் சுமக்க முடிவெடுத்திருப்பது அவருக்குப் பேராறுதலாகவே இருந்தது.

ரூபனின் உதவி மூலம் அவரால் இன்னும் இரண்டு மணி நேரம் கூடுதலாக நல்ல உறக்கம் கொள்ள முடியும். எழும்பூரில் இருக்கும் ஐ.ஓ.பி. வங்கிக்கான ஏ.டி.எம். ஒன்றில் பூபாலன் செக்யூரிட்டியாக வேலைபார்த்துக் கொண்டிருக்கிறார். இரவு நேர வேலை. காவல் நேரத்தில் கண் மூடலாம். தூங்க இயலாது.

நிம்மதியற்ற புறச்சூழல். வாசலில் படிக்கட்டுகளில் படுத்தாரென்றால் கொசுக்கடி, வாகனங்களின் இரைச்சல், நாய்களின் ஊளைச் சத்தம் ஆகிய கலவையான துன்பங்கள் அவரை உறங்கவிடாது. இயந்திரம் இருக்கும் அறையில் குளிர்சாதனப்பெட்டி வெளியிடும் காற்று எலும்புகளைத் தொட்டுக் குளிரும். எக்காரணத்தைக் கொண்டும் அதன் குளிர்நிலையைக் குறைக்கக்கூடாதென்பது சூப்பர்வைசரின் கட்டளை. கொசுக்கடிக்குக் குளிர் பரவாயில்லை என்பதால் ‘மப்ளர்’ கட்டிக்கொண்டு உடலைக் குறுக்கி உள்ளேயே படுத்துக்கொள்வார். ஆனாலும் பத்து நிமிடத்திற்கொரு முறை முழிப்பு நிச்சயம். காரணம் உயிர் பயம். பூபாலனின் ஏ.டி.எம். இருக்கும் தெருவிலுள்ள உள்ள ஐசிஐசிஐ ஏ.டி.எம்மில் கொள்ளையர்கள் புகுந்து அதன் வயிற்றைப் பிளந்து செலவுக்காகப் பணத்தைக் கொண்டு

சென்றார்கள். வந்தவர்கள் திருடர்கள் என்றுணர்ந்த செக்யூரிட்டி அவர்கள் மேற்கொண்டு திருட்டு வேலை செய்ய இடையூறாக இருந்து வாக்குவாதம் செய்ய அறுபது வயது மதிக்கத்தக்க முதிர்ந்த செக்யூரிட்டியின் மண்டையைப் பெரிய இரும்புக் கருவியைக் கொண்டு உடைத்ததில் பின் மண்டையில் அடிபட்டு அவர் கபால மோட்சமடைந்தார். பூபாலன் அந்தச் சம்பவத்தை வீட்டில் சொல்லவில்லை. சொன்னால் அமலோற்பவமும் பிலோமினாவும் அன்பின் நிமித்தமாய் வேலைக்குப் போக வேண்டாம் எனச் சொல்லிவிடுவார்கள். பிலோமினா விடவே மாட்டாள்.

பன்னிரண்டு மணி நேரம் வேலை. எட்டாயிரம் ரூபாய் சம்பளம். அதில் மூவாயிரத்தை மாதமாதம் ‘ஏஜென்சி’ எடுத்துக்கொண்டு ஐந்தாயிரம் ரூபாயைச் சம்பளமாக இழுத்தடித்துக் கொடுப்பார்கள். காலை ஆறு மணிக்கு ட்யூட்டி முடிந்ததும் பொடிநடையில் ஏழுமணிக்கு வீட்டிற்கு வந்து சேருவார். காலை யன்றாடங்களை முடித்துக்கொண்டு ஒன்பது மணிக்குப் படுத்தார் என்றால் மதியம் ஒரு மணிக்கு எழுந்து மதிய உணவு. திரும்பவும் மூன்று மணிக்குத் தூக்கம். நாலரை மணிக்கு எழுந்து வேலைக்குக் கிளம்ப வேண்டும். கடந்த சில நாட்களாக ஒரு மணிக்கு எழுந்ததற்குப் பிறகு தூங்க முடியாத நிலை. மருத்துவமனையில் இருக்கும் அக்காவுக்கு ராத்திரிச் சாப்பாடு கொண்டு செல்ல வேண்டும். சாப்பாடு கட்டிக்கொண்டு வீட்டிலிருந்து மூன்று மணிக்குக் கிளம்பிவிடுவார். பஸ் பிடித்து கொண்டுபோய்க் கொடுத்துவிட்டு அங்கிருந்து ட்யூட்டிக்குச் சென்றுவிடுவார். அவரின் சமீபத்திய அலைச்சலைப் போக்குவதாய்த்தான் அவன் வாக்கு கொடுத்திருக்கிறான். அந்த வாக்கு அவர் மீதான கரிசனத்தினால் அல்ல. அவளைப் போய்ப் பார்க்க வேண்டும்; பார்த்தே ஆக வேண்டுமென்கிற துடிப்பு. அவளைப் பார்க்க வேண்டுமென்றால் அவளின் முகத்தை அல்ல. அவளின் அண்மையை உணர வேண்டும். அவள் இவன் மீது தற்செயலாகத் தொடுக்கும் பார்வையைத் தனக்காகத்தான் பார்க்கிறாள் என்கிற வெற்றுப் பெருமிதத்தில் பூரிக்க வேண்டும். சீருடையிலுள்ள இரண்டு பாக்கெட்டுகளிலும் அவள் கை விட்டுக்கொண்டு நடக்கும் ஒய்யாரத்தை

இன்னொரு முறை கண்களால் படம்பிடிக்க வேண்டும். பார்த்த முதல் கணமே இவள் மீது உண்டான மையலின் காரணம் என்னவாக இருக்கும்? காதல்!!! காதல் என அதற்குப் பெயர் வைத்தான். அவள் மீது தனக்குக் காதல் வந்திருக்கிறது என நம்பினான். அப்படி நம்பினால் மட்டுமே ஒரு உத்வேகத்துடன் கிரண்யாவையும் மீறி அவளைப் பற்றிக் கற்பனை காண முடிகிறது. தைரியமாக அதில் சஞ்சரிக்க முடிகிறது.

அவளுடன் எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது, என்னென்னவெல்லாம் பேசுவது என்று ராத்திரி முழுக்க ஒத்திகை செய்து பார்த்தான். ஒத்திகையின் அயர்ச்சியினால் கிடைத்த இடைவேளையில் அவளைத் தன் வீட்டுக்கு அழைத்து வந்து அப்பா, அம்மா, நகோமி ஆயா மூவருக்கும் அறிமுகம் செய்து வைத்தான். வீட்டில் நால்வரும் ஒன்றாக அமர்ந்து சாப்பிட்டார்கள். சாப்பிட்டு முடித்ததும் வீட்டு மாடியிலிருந்து இறங்கும்போதும் தெருவில் நடந்து வரும்போதும் எல்லோரும் இவர்களேயே பார்த்தார்கள். அந்தப் பார்வைக்காகத்தான் அவன் காத்திருந்தான். அதுவே தற்போது நடந்துகொண்டிருக்கிறது. அவள் வெட்கத்தால் முகம் சிவந்து அவன் விரல்களை இறுகப் பற்றிக் கொண்டாள். இருவரும் நடந்து போகையில் டி ப்ளாக் ஹவுசிங் போர்டிலிருந்து சொக்கமாயாவின் குரல் கேட்கிறது …

“ரூ … பனு யார்ரா அது”

அவள் கைகளைப் பற்றிக்கொண்டே திரும்பிப் பார்த்தான். இவாஞ்சலின் திரும்பவில்லை.

“ஆயா, இந்த பொண்ணத்தாங் மேரஜ் பண்ணிக்கப்போறேங்” அதைச் சொல்லும்போது அவன் குரல் சந்தோஷத்தில் உதற லெடுத்தது.

“மல்யாள்ச்சி போலக்கிறா அப்டியே உன்ன கொத்தினு போய்ட போறா.”

“அய்ய ஆயா போயா கம்னு.”

“அந்தப் பாட்டி என்ன சொன்னாங்க?”

“நம்ம ரெண்டு பேரோட ஜோடிப் பொருத்தம் செம்மை யாக்தாங்.”

“ஓ!”

கற்பனையிலிருந்து மீண்டு ஒத்திகைக்குத் தாவினான்.

சந்தித்து ஒருநாள்கூட ஆகாத நிலையில் அவளிடம் போய் வழிவது கீழ்மையாக இருக்கும். காதலில் அசிங்கத்தைப் பார்த்தால் காரியம் நடக்காது. தனக்கு வந்ததற்குக் காதல் எனப் பெயர் வைத்தது சரிதான்! பூங்கொடிக்கு முன்பாக அல்லது மற்றவர்களின் முன்னால் அவள் ஏதேனும் சலிப்பாக நடந்துகொண்டால்?! காரணபூர்வமாக அவளை எப்படி அணுகுவது என்று ஒருவழியாய் முடிவு செய்துவிட்டுத் தூங்கினான். அன்று ராத்திரி தூக்கம் அவனின் தற்செயல் நிகழ்வாக மாறியது.

அலுவலகத்தில் தன் நம்பிக்கைக்குரிய நண்பரான சைலேந்தரிடம் லன்ச் ப்ரேக்கில் சொன்னான்.

“ஜி நேத்து என் ஃப்ரெண்ட் சௌமியன் அவங்க அப்பாவுக்கு சாப்பாடு குடுக்க ஹாஸ்பிட்டல் போனேங் ஜி.”

“ன்னா லவ்வா?” என்றார் சைலேந்தர்.

எச்சிக்கையும், இடது கையும் ஒட்டாதவாறு கரம் கூப்பி “எப்டி ஜி?” என்றான்.

“மேட்டர சொல்டா.”

“நர்ஸ் ஒன்ன பாத்தேன்ஜி, பாத்ததுலந்தே அந்தப் பொண்ணு ஞாபகமாகவேக்து. ப்பா ன்னா அழகு தெர்மா. நாங்க ரெண்டு பேரும் ரொம்ப வர்ஷமா பழக்கம் மாரியும் இப்போ ரீசன்ட்டா ஒரு சண்டையில பிரிஞ்சி அந்தம்மா எங்கிட்ட மூஞ்ச திருப்பிக்கினு போற மாரி ஒரு feeling.”

“அவ்ளோ அழகான பொண்ண கண்டிப்பா விட்டு வெச்சிருக்க

மாட்டானுங்களே! அந்தப் பொண்ணுக்குக் கல்யாணம் ஆகி இருக்கானு மொதல்ல தெரிஞ்சிக்கிட்டியா? கால்ல மெட்டி இருக்கான்னு பாத்தியா?”

“வாய பீச்சிங் பவ்ட்ரு போட்டு கழுவுப்பா. கால்ல மெட்டி இருக்குதான்னுலாங் தெர்ல. ஷூ போட்னுருந்தது.

ஆனா சத்திமா கல்யாணல்லாம் ஆய்ருக்காது.''

``எப்டி சொல்ற?''

``பேக் சைடப் பாத்தா அப்டிதான் தெரியுது.''

``ப்த்தூ ...''

``ஜி, ஏதாவது ஐடியா இருந்தா சொல்லுங்கஜி. லவ் பண்ணி ரொம்ப நாள் ஆச்சி.''

``உனுக்கா சொல்ணும்?''

``ஜி, நா லவ் மட்டுந்தாங் பண்ணேங். நீங்க லவ் பண்ண பொண்ணயே மேரேஜும் பண்ணிக்கிணிங்ளே சும்மாவா ... சொல்லுங்க ஜி.''

``அட. சொல்லுங்க. சொல்லுங்கன்னா? அந்தப் பொண்ணு கிட்ட நல்லா பழகுறதுக்கு முன்னாடி, உன் ஃபேமிலி பேக்ரவுண்ட்ட சொல்லிடு. அப்புறம் லாஸ்ட்ல கழட்டி விட்டுடுச்சின்னு ஆபிஸ் ரெஸ்ட் ரூம்ல உக்காந்து அழுதுட்டு இருக்காத.''

``வுடுங்க ஜி பழசலாம் ஞாபகப்பத்தினு.''

``இங்கப் பாருடா ரொம்ப நாளா, லவ் பண்றதுக்கு பொண்ணு கெடைக்காத காஜில, எடுத்த உடனே நான் உங்கள லவ் பண்றேன்.

நீங்க இல்லாத வாழ்க்கய என்னால நெனச்சிக்கூடப் பாக்க முடியல. நீங்க இல்லன்ன செத்துடுவேன்னுலாம் போயி அந்தப் பொண்ணுகிட்ட சொல்லாத. தெறிச்சி ஓடிடுவா. மொதல்ல போயி ப்ரெண்டா பழகு, பொய்யா அக்கற காட்டாத. தெனமும் பேசு. அவ மேல அக்கற தானா வரும். நீ அவகிட்ட உண்மையா இருந்தா உனக்கு முன்னாடி அவ உன்மேல அக்கற காட்ட ஆரம்பிச்சுடுவா. ஒரு கட்டத்துல ரெண்டு பேர் அக்கறையும் தாங்க முடியாம வழிஞ்சி லவ்வுதான்னு காட்டிக்கொடுக்கும். அத சொல்றதுக்கு டைம் பாத்துட்டு ஏங்கும். அவ பொண்ணுங்கறதால கொஞ்சம் back அடிப்பா. அந்த மாதிரி ஒரு சிச்சுவேஷன்ல நீ இனிஷியேட்டிவ் எடுக்கணும். ஸ்பெஷலா அவள எங்கயாவது ஒரு எடத்துக்கு கூட்டிட்டுப் போகணும். நீ அந்த எடத்துக்கு அவளக் கூட்டிட்டு வந்தப்பவே அவளுக்கு தெரிஞ்சிடும்

இவன் ப்ரபோஸ் பண்ணத்தான் கூட்டிட்டு வந்திருக்கான்னு. அந்த சந்தோஷத்துல அவளுக்கு மேல்மூச்சு வாங்கும். அப்போ அவகிட்ட சிரிச்சிக்கிட்டே கேளு. சிரிச்சிக்கிட்டேனா ஈஈனு இல்ல.

லைட்டா சிரிச்சுக்கிட்டே கேளு. நாம கல்யாணம் பண்ணிக்கிட்டு இன்னும் comfortஆ லவ் பண்லாமான்னு. கேட்டுட்டு அவ என்ன பதில் சொல்றான்னு அவ உதட்ட பாக்காத கண்ணப் பாரு. அக்கம்பக்கதுல யாரும் இல்லனா சத்தியமா உன்ன hug பண்ணுவா. இல்லாட்டி அழுவா. இது ரெண்டுத்துல எது நடந்தாலும் உன் லவ் சக்சஸ் …"

"ஜி, காலக் காட்டுங்க ஜி … தெய்வங்ஜி நீங்க. ப்ராசஸ்லதாங் கில்லின்னு நெனச்சேங். தாறுமாறு தக்காளி சோறுஜி நீங்க."

"ம்க்கும் போடா … இதெல்லாம் நா எடுக்கப்போற ஒரு ரொமாண்டிக் சினிமாவுக்காக யோசிச்சி வெச்ச விஷயன்டா … டைரக்டரா ஆகணும்னு எவ்ளோ கற்பனையோட இருந்தேன், இப்ப இன்னடான்னா டப்பர்வேரும் கையுமா டெய்லி ஆபிஸ்க்கு வந்து விஷால் அடிக்கிற மொக்க ஜோக்குக்குலாம் சிரிக்க வேண்டி இருக்குது.."

இருவரும் சாப்பிட்டு முடித்து ப்ளோர்க்கு வந்துகொண்டிருக்கையில் சைலேந்தரை உள்ளே போகச் சொல்லிவிட்டு லிப்ட் அருகே நின்று பூபாலனைத் தொடர்புகொண்டான்.

"ணோவ் பூபாலண்ணா …"

"சொல்லுப்பா"

"இன்னிக்குங் நானே வீட்டுக்கு வந்து ஹாஸ்பிட்லுக்கு சாப்பாடு எத்துனு போறண்ணா."

பூபாலன் மலர்ந்த முகத்துடன் "ஆங் செரிப்பா" என்றார்.

~

சாப்பாட்டுக் கூடையை வண்டி கைப்பிடியில் மாட்டிவிட்டு வண்டியிலமர்ந்து அதை உதைக்கையில்

ஒரு குரல் “ரூபன்” என்றது. திரும்பிப் பார்த்தான். யோசேப்பு!

போதைத் தள்ளாட்டம் தெரிந்து விடக்கூடாது என லுங்கி அவிழாதவாறு அதைப் பிடித்து அவனை நோக்கி வேகமாக நடந்து வந்தான். அல்லது மெதுவாக ஓடி வந்தான். அவனை இடைமறித்து மன்னிப்பு கேட்டான்.

“ஏ ஒத்துரா. நாங் போனோன்டா” - யோசேப்பின் முகத்தைப் பார்க்காமல் சொன்னான்.

“த்தா காண்டு மாரி பண்ற. சத்திமடா ரூபனு, அன்னிக்கு நாங் மட்டடா. என்னியே ஒருத்தங் வேளாங்கண்ணில அஷ்டான்டா. தெபார்ரா, பல்ல பார்டா. நீ போன் பண்ண நைட்டு பூண்டில எங்கியோ ஒரு எத்துல கொயகொயனு உய்ந்துந்துக்றேங். பசங்க சொல்லிர்பானுங்ளே” மூச்சடைக்கப் பேசிவிட்டு அவன் முகத்தைப் பார்த்தான். அவன் இன்னும் ஏறிடவில்லை. தொடர்ந்தான்.

“ன்னா ரூபனு பேசமாட்டியா?”

” …”

“மச்சாங் நம்ம தவுடாசோறு பாலு வேர்ல்ட் டைட்லு ரன்னர் அஷ்டான்டா தெரிமா தெரியாதா?” என்று அவன் முகத்தருகே வந்து சிரித்தான்.

ரூபனுக்கு அந்தச் செய்தி மகிழ்ச்சி அளித்தது. மேற்கொண்டு அதைப் பற்றி தெரிந்துகொள்ள விருப்பப்பட்டான். ஆனால், யோசேப்பு அதற்குச் சரியான தேர்வாக இருக்காது என்றும் அவன் மீதுள்ள கோபத்தினாலும் மீண்டும் அமைதியைக் கடைபிடித்தான்.

“ன்னாடா காண்டு மாறி பண்ற? மேட்டர நம்ப அண்டா உருட்டி சொன்துகப்றங் எங்க தாத்தாவ ன்னா பச்ச பச்சயா கேட்டாங் தெர்மா. அந்தாள் கோய்ச்சிகினு ரெண்டுநாள் சோறுகூட துன்ல. நம்ப்ளனா ரபக்காவகூட வந்து கேளு.”

ரூபனும் எல்லா விஷயத்தைக் கேள்விப்பட்டான். யோசேப்பு தெரிந்து தவறு செய்பவனல்ல. தெரியும். அம்மணமாகச் சுற்றியதிலிருந்து இருவரும் நண்பர்கள். ஆனால் யோசேப்பு, செய்த தவறின் தீவிரத்தின் உணர வேண்டும் என்பதற்காக அவனுடன் பேசாமல்

இருந்தான். ஆனால், எதையும் உணரக் கூடிய நிலைகளை யோசேப்பு கடந்துவிட்டான். குடி. குடி. குடி. காலை ஐந்து மணிக்கு வெளியே சென்று ப்ளாக்கில் குடிக்க ஆரம்பித்தால் இராத்திரி ஊரடங்கும் வரை குடி. சுரணையே இல்லாத உயிருள்ள வெறும் சதைப்பிண்டமாகத்தான் ஊரில் அவன் சுற்றிக்கொண்டிருக்கிறான்.

ஆனால், உயிர் நண்பன் தன்னுடன் பேசாமல் இருப்பது இதுவரை நடக்காத ஒன்று! அது யோசேப்பை உருத்திக்கொண்டு இருந்தது. மனைவி ரெபேக்காவிடம் ரூபன் பேசாதிருக்கும் காரணத்தைச் சொல்லித்தான் குடித்துக் கொண்டிருக்கிறான். இன்று ரூபனைத் தேடி வந்து மன்னிப்பு கேட்கிறான். ரூபனுக்கு யோசேப்பு மீது தன் செல்போன் அழைப்பை எடுக்காத கோபமெல்லாம் நீர்த்துப் போய்விட்டது. சௌமியன் புதைக்கப்பட்ட இடத்தில் புல்கூட முளைக்க ஆரம்பித்திருக்கும். இனி இவன் மீது கோபப்பட்டு என்ன? எதற்காக இப்படிக் குடிக்கிறான் என்கிற அக்கறையான கோபம் மட்டுமே யோசேப்பு மீது இருந்தது.

“எனுக்கு டைம் ஆவுது ஒத்துரா. நா ஹாஸ்பிடல் போணுன்டா” என்று ரூபன் கீழே குனிந்துகொண்டே சொன்னான்.

“நீ எதுக்கு சாப்பாடு எத்துனு போற? எங்கிட்ட குடு டெய்லி நா எத்துனு போய் குத்துட்டு வரேங்.”

“அதுலா வேணாம் நானே எத்துனு போறேங்.”

“செரி நானுங்கூட வரேங்” - முன்னால் நின்றிருந்தவன் பின்னால் வந்து லுங்கியைத் தூக்கிக் கட்டிக்கொண்டு ஒரு காலை மேலே தூக்கி வண்டியில் உட்கார ஆயத்தமானான்.

“த்தா, நீ எனுக்கு உண்மையான ஃப்ரெண்டா இருந்தா எங்கூட இப்போ வராத.”

யோசேப்பு ஏற்றிய காலை மிதவேகத்தில் இறக்கினான்.

“ஓக்கே மச்சி, நீ எங்கூடோ பேசுவியா பேச மாட்டியா?”

“பே … சின்தாண்டாக்றேங்” அலுப்புடன் சொன்னான்.

“ஓகே, அப்போனா எனுக்கு ஒரு முத்தா குடு” முகத்தை ரூபன் வாய்க்கருகில் கொண்டு போனான். மாவாவும், பிராந்தியும் கலந்த ஒரு தினுசான வாசனை.

“இப்போ நீ தாண்டா யோசு காண்டு மாரி பண்ற. சௌமியன் அவுங்கோ அம்மா அங்க சாப்பாடுக்குக் காத்துனுருப்பாங்கோ. நீ ஒத்து. சாப்பாடு குத்துட்டு உங்க வீட்டுக்கு வரேங்.”

“ரைட்டு மாமா” - சல்யூட் அடித்து அவனை வழி அனுப்பி வைத்தான்.

தனக்கு வந்தது காதல்தான் காதலேதான். அதில் மட்டுமே இவ்வாறு இடையூறு நிகழ்வது சாத்தியம். இதில் எப்படியாவது வெற்றிபெற வேண்டும். இவாஞ்சலினைப் பார்த்துப் பேச வேண்டியதைத் தனக்குள் பேசியவாறு வண்டியோட்டியபடி மருத்துவமனையை வந்தடைந்தான்.

~

பூங்கொடிக்குத் தன் துயரம் பழகிவிட்டது. “ன்னா சொன்னாரு டாக்டரு? சீக்ரம் இங்கந்து கூட்னு போய்டுங்க. எட்டு மணிக்கு மேல சுட்த்தண்ணி வராது” என்று வருவோர் போவோரிடமெல்லாம் குசலம் விசாரித்து மனிதம் பழகிக்கொண்டிருந்தாள். ரூபன் சாப்பாடு கொண்டுவருகையில் மட்டும் அவள் கண்கள் கலங்க நேரிடும். தினமும் சாப்பாடு தந்துவிட்டுப் போவதோடு மேலே வந்து கணவனையும் பார்த்துவிட்டுச் செல்வதாய் அன்பு பேசுகிறான். தன் பிள்ளை இருந்து செய்ய வேண்டியவைகளை எல்லாம் அயலான் வந்து பரிவுடன் செய்கிறான். அதை நினைத்து மகிழ்வதா? மகன் இல்லாததை எண்ணிக் கசிவதா? அவனைப் பற்றி நலம் விசாரிப்பாள். “உனுக்கு எப்பப்பா கல்யாணங்? உங்கப்பாவுக்கு இப்போ ஒடும்பு பர்வால்லியா”? என்று அனுசரணையாக கேள்விகளைக் கேட்டு அவன் செய்யும் உதவிக்கு ஈடு செய்ய முடியுமா என்று பார்ப்பாள்.

“எங்கப்பாலாம் நறுக்குன்னுக்றாருமா, அவர வுடுமா. வாம்மா அப்பாவ போயிப் பாக்கலாங்.”

மேலே படிக்கட்டுகளில் ஏறி தீவிர சிகிச்சைப் பிரிவின் உள்ளே சென்றதும் கண்களால் நாலாபுறமும் வேட்டையாடினான். இவாஞ்சலின் இல்லை. அவள் அமர்ந்திற்கும் இடத்தில் வேறொரு உயிர்ச் சடலம். இவாஞ்சலின் மூக்கு நுனியைப் பார்த்துப் பதினாறு மணி நேரத்திற்கு மேல் ஆகிறது. எப்போது வருவாள் என்று அவளுக்குப் பதிலாக அங்கமர்ந்திருந்தவளின் தோள்களை உலுக்கிக் கேட்க வேண்டும்போல் இருந்தது. லாரன்ஸின் நிலைமை முந்தைய தினத்தைக் காட்டிலும் மோசம். அவர் உடம்பில் எவ்வித அசைவுமில்லை. டயாலிசிஸ் செய்தோம் என்பதற்கு அறிகுறியாக உடம்பில் கூடுதலாகச் சில ஓட்டைகளைப் பொருத்தி குழாய் சொருகி வைத்திருந்தார்கள். அவருக்கு அருகில் கைகட்டி நின்று எதேச்சையாக தலையைத் திருப்புவது போல இவாஞ்சலின் வருகிறாளா என்று பார்த்தான்.

அறையிலிருந்த கடிகாரத்தின் பெருவிரல் ஆறை முத்தமிட்டது.

கண்ணாடிக் கதவைத் திறந்து இவாஞ்சலின் உள்ளே வந்தாள். அவளைப் பார்த்ததும் இவள் ஏன் வந்தாள் எனத் தோன்றியது.

அவள் வந்துவிட்டதால் பேசியே ஆக வேண்டிய கட்டாயம்.

இல்லாவிடில் தானொரு பயந்தாங்கொள்ளி என்று மனசாட்சி எள்ளல் செய்யும். தன் வேலைநேரம் முடித்துப் போகும் பெண்ணுடன் இவாஞ்சலின் சிரித்துப் பேசினாள். தன் வேலைநேரம் முடித்துப் போகும் பெண் வீட்டுக்கு கிளம்புவதால் அவளின் சிரிப்பில் வாய் அதிகமாய் விரிந்தது. ஆனால் சத்தமில்லாத சிரிப்பு. மருத்துவமனையின் ஒழுங்குக்கு உட்பட்ட சிரிப்பு.

நோயாளிகளைப் பார்க்க வந்த அக்கறையாளர்களையெல்லாம் தன் வேலைநேரம் முடித்துப் போகும் பெண் அன்புடன் கடிந்துக்கொண்டு பிறகு அவளும் சென்றாள்.

அவன் அங்கிருந்து கிளம்ப வேண்டிய நேரம். அதற்கு முன் இவாஞ்சலினுடன் கட்ட வேண்டிய நட்புப் பாலத்திற்கான முதல் செங்கலை என்னவென்று பேசி

நடுவது? யோசித்தபடி தரையில் வைக்கும் ஒவ்வொரு அடியையும் அர்த்தபுஷ்டியாக வைத்து நடக்கையில் …

“சார், நேத்து மாதிரி போய்டாதீங்க சைன் போட்டுட்டு போங்க” என்றாள் தொழில் தீவிரத்துடன்.

கும்பிடப் போன தெய்வம் ஒரமாக நின்று கூப்பிட்டது.

“அதுக்குத்தாங்க வறேங்.”

“நீங்க சைன் போடாம போய்ட்டீங்கன்னா அப்புறம் டாக்டர் வந்தா என்னத்தான் வைவாரு.”

“எங் சைன்னா அவ்ளோ முக்கியமா, நான்னா ஜனாதிபதியா” என்று சொல்ல வாயெடுத்தான். “ஹ்யூமரா பேசினா பொண்ணுங்க உஷாரா ஆகிடுவாங்கன்னு நெனச்சி, பேசுற எல்லா டயலாக்கயும் காமெடியாக்க ட்ரை பண்ணாத. பொண்ணுங்க இரிடேட் ஆய்டுவாங்க” என்று ஒரு முறை ‘டீம் மீட்டிங்’ நடந்து முடிந்ததும் சைலேந்தர் அந்தரங்கமாகச் சொன்னது அவன் நினைவுக்கு வந்தது.

திறந்த வாயிலிருந்து வெளியே செல்லவிருந்த சொற்களை அப்படியே விழுங்கினான்.

அது வேறு விதமாக மறுஉருவம் பெற்று விழுந்தது.

“புரியுதுங்க. வேணுன்னா ஒரு சைனுக்கு ரெண்டு சைனாக் கூட போட்டுப் போறேங்”.

சிரிப்பு வந்தாலும் யாரென்றே தெரியாதவன் செய்யும் நகைச்சுவைக்குச் சிரிக்க அவள் மனம் ஒப்பவில்லை. அடக்கிக்கொண்டாள். அவளின் மூக்கு மட்டும் மிதமாக விரிந்து காட்டிக் கொடுத்தது.

“சார் சீக்கிரம் கெளம்புங்க சார். டாக்டர் வந்தா என்னத்தான் வைவாரு.”

அவளின் சிரிப்பைச் சலுகையாக எடுத்துக்கொண்டு அவளிடம் மேற்கொண்டு பேசினான்.

“அவ்ரு பக்காவா ரெடியாய்டுவார்லங்க?”

“லாரன்ஸ் பேஷன்ட்டுக்குத்தான வந்துருக்கீங்க?”

“ஆமாங்க, அட்மிட் பண்ணதுலந்து இம்ப்ரூமென்ட்டே காணோங்” என்றான்.

“ட்ரீட்மெண்ட் போய்ட்ருக்கு. மேக்கொண்டு தெரியணும்னா டாக்டர்ட்ட பேசிக்ங்க.”

“ஓ, ஓக்கேங்க, இதுவெரிக்குங் எவ்ளோ அமவுன்ட்டுங்க செலுவாய்ருக்குங்?”

“கீழ பில்லிங் செக்ஷன்ல பேஷன்ட் நேம் சொன்னீங்கன்னா அவங்க சொல்லிடுவாங்க.”

இதற்கு மேல் அவன் கேட்கும் கேள்விகளுக்கு பதில் சொல்லத் தயாராய் இல்லையென்பது அவள் உடல் மொழியில் தெரிந்தது. இருக்கையிலிருந்து எழுந்து வலது பக்கமாகப் படுத்திருக்கும் நோயாளியின் கட்டிலை நோக்கிச் சென்றாள். அவனுக்கு ஏமாற்றம். சென்றவள் தலையை மட்டும் பாம்பு மாதிரி சடுதியில் திருப்பி அவன் கையிலிருந்த பேனாவைப் பார்த்து …

“சார் போகப்பாத்து பேனாவ மட்டும் வெச்சிட்டுப்போய்டுங்க சார். ஏன்னா …”

“தெரியுங்க. டாக்டர் வந்தா அப்புறங் உங்களத்தாங் வைவாரு.”

திரும்பவும் சிரிப்பை அடக்கிக்கொண்டாள்.

இவாஞ்சலினை சிகிச்சையறையில் நான்காவது நாளாகத் தொடர்ந்து காண முடியவில்லை. ஆறு மணி ஷிப்ட்டிற்கு அவள் வருவாளென மருத்துவமனையின் வரவேற்பறையில் இருக்கும் நாற்காலியில் ஒவ்வொரு நாற்காலியாக மாறி மாறி இரவு பதினொரு மணிவரை உட்கார்ந்திருப்பான். எதாவது ஒரு கணத்தில் அவள் வரலாம். யதேச்சையாக இவனைப் பார்க்கலாம். அவளிடம் சென்று உனக்காகத்தான், உன்னைப் பார்ப்பதற்காகத்தான் காத்திருக்கிறேன் என்று சொல்லத் தேவையில்லை. இவனைப் பார்த்தாலே புரிந்துகொள்வாள். இன்னும் ஒருநாள் பார்க்கலாம். வரவில்லை என்றால் சிக்லீவ் எடுத்து அவள் வீடு எந்த ஜில்லாவில் இருந்தாலும் தேடிக் கண்டுபிடித்து நேரில் பார்த்துவிட வேண்டியதுதான். அப்படிச் செய்தால் அது காதலாக மாறிவிடக் கூடிய சாத்தியக்கூறுகள் நிறைய இருக்கின்றனவென்று கௌதம் மேனன் சொல்லிக் கொடுத்திருக்கிறார். பிரச்சினையில்லை. பார்க்கலாம்.

அடுத்த நாளுக்காகக் காத்திருந்தான்.

வேலை முடித்து சாயுங்காலம் வீட்டுக்கு வந்ததும் நொடி நேரம் கூட ஒய்வெடுக்காமல் துணிகளை அயர்ன்செய்து, பல் துலக்கி, குளித்துவிட்டு, உடையுடுத்தி ஜரூராக வண்டியை எடுத்துக்கொண்டு பக்தி சிரத்தையோடு கிளம்புபவனை ரெஜினா இதுவரைக்கும் என்ன ஏதென்று கேட்டதில்லை.

இருவருக்கும் பேச்சு வார்த்தை முன்புபோல இல்லாதது ஒரு காரணம். தவிர, லாரன்ஸைப் பார்ப்பதற்குத்தான் செல்கிறானென்று தெரியும். பூங்கொடிக்குச் சாப்பாடு கொண்டுபோகிறானென்றும் தெரியும்.

என்றபோதிலும் நாளுக்குநாள் அதிகமாகும் இவனின் பொறுப்புணர்வு ரெஜினாவுக்கு சந்தேகத்தைக் கொடுத்தது. “ஒருவேள அப்பம் புத்தி வந்துச்சோ” என்று விசனப்பட்டு “ச்சே இருக்காது. நா வள்த்த புள்ள” கேள்வியும் பதிலுமாய்த் தனக்குள்ளே பேசிக்கொண்டிருந்தாள். இன்று அவன் கிளம்பினால் இதுபற்றி வேறு விதமாகக் கேட்டுவிட வேண்டியதுதான்.

ஒரு பாரம் குறையும். அவன் கிளம்பி வெளியே செல்கையில் பேச்சை எடுத்தாள்.

“ஏன்டா உங்கப்பங் ஆஸ்பிட்டல்ல இர்ந்தாகூட இப்டி அவ்திபவ்தியா போய்கினுங் வந்துக்னுங் இருக்க மாட்ட போலக்தே?”

அவளுக்கு பதில் சொல்வதை விட, வண்டிச் சாவியைக் கண்டுபிடிப்பது முக்கியமெனத் தேடிக்கொண்டிருந்தான்.

“ன்னாதான் ப்ரெண்ட் அவங்க அப்பான்னா கூடா டெய்லியா போய்னுருபாங்கோ? ஏங் ஒருநாள் அவ்ரு பூபாலன சாப்பாடு எத்னு போவ சொல்ட்டு தொர ரெஸ்ட் எடுக்க வேண்டித்தான?”

சாவி கிடைத்துவிட்டது.

“மோவ், பாவங் அந்த மன்ஷங். தூக்கல்லாம நைட் ஷிப்ட் வேல செய்ஞ்சிட்டு தூங்குறாப்ல. போமா கம்னு. சௌமி இர்ந்தா நா ஏங் போறேங்?”

“ன்னாமோ … ஆனா தெபார் நீ கையிட்டு செய்ற ஒருஒரு காரியத்தையுங் ஆண்டவர் பாத்துந்தான்க்றாரு. ஞாயத் தீர்ப்பின் நாளப்போ அவ்ருக்கு நீ பதில் சொல்லியே ஆவ்ணுங். உன்ன ஜெபத்துல வெச்சாத்தான் நீ அடங்குவ.”

~

சிகிச்சையறைக்குச் சென்றதும் அவன் கண்கள் இவாஞ்சலினின் இருக்கையை நோட்டமிட்டது. உட்கார்ந்திருந்தது இவாஞ்சலின்தான். முதுகுப்புறம் இருந்து பார்த்ததால் அவள்தான் என்று துல்லியமாக ஒரு முடிவுக்கு வர முடியவில்லை. அப்படிக் கண்டுபிடிப்பதற்கு இன்னும் நாட்களாகும் என நினைத்துக்கொண்டான். இதயம் படுத்திய அவசரத்தில் நடையை வேகப்படுத்தி அவளைக் கடந்து செல்வது போலப் பார்த்தான். திட்டவட்டமாகத் தெரிந்தது முகம். அவள்தான் என்று உறுதியாய் தெரிந்ததில் அவனுக்கு வருத்தமே மிஞ்சியது. இன்று மட்டும் இவாஞ்சலின் வராமலிருந்தால் சக செவிலிகளிடம் விசாரித்து அவள் நாடு எங்கே வீடு எங்கே என்று ஓடியாடிக் கண்டுபிடித்து அவள் முன்னே துணி மூட்டையுடன் மூச்சு வாங்க

நின்றிருக்கலாம். அந்தப் புனிதப் பயணம் காதலுக்கு ஒரு துருப்புச்சீட்டாக மாறியிருக்குமே. எல்லாம் வீண். குத்துக்கல் மாதிரியல்லவா உட்கார்ந்திருக்கிறாள். முகத்தில் அரும்பிய சோகத்தை இன்னும் அதிகப்படுத்தி லாரன்ஸ் படுத்திருக்கும் கட்டிலுக்கு முன் சம்பிரதாயத்திற்குக் கொஞ்ச நேரம் நின்றிருந்தான். அவரிடம் உயிர் இருக்கிறதென்று கண் இமைகள் மெதுவாக அம்பலப்படுத்திக்கொண்டிருந்தன.

“மூண் நாளா சுத்தமா ஒடும்பே அசிக்கிறதிலபா” பூங்கொடி அவனிடம் சொல்லி விசனப்பட்டாள். அவளின் துக்கத்தில் முழுமையாகப் பங்கெடுக்க முடியாததை நினைத்து அவனுக்குக் குற்ற உணர்ச்சியாக இருந்தது. இங்கிருந்து கிளம்ப வேண்டும். பதிவேட்டில் கையொப்பமிட வேண்டும். இவாஞ்சலினைப் பற்றி விசாரிக்க வேண்டும். அதுதான் முக்கியம்.

“செரிமா. எங் ப்ரென்ட் ஒருத்தங் டாக்டாரக்றாங். அவங்கிட்ட போன் அச்சி இன்னா ஏதுன்னு கேக்றேங்.”

“செரிப்பா. முஞ்சா நாளிக்கு பாலன வரசொல்லுப்பா.”

“ஆங் செரிமா.”

இவன் பதிவேடு இருக்கும் மேசை நோக்கிச் செல்லும் முன் தன் இடத்திலிருந்து கிளம்பி சிகிச்சையறைக் கதவைத் திறந்துகொண்டு அவள் வெளியே சென்றாள். அவள் செல்வதைப் பார்த்தவன் வேகமாகப் பதிவேட்டில் கையொப்பமிட்டுப் பின்னாலேயே ஓடினான். பேசிவிட வேண்டியதுதான்.

படிக்கட்டில் மெதுவாக இறங்கி கொண்டிருந்தாள். அவளுக்குப் பின்னால் இறங்கியபடியே “ஹெலோ ஏங்க … என்னங்க நால்நாளா ஆளியே காணோங்?” என்றான்.

“லீவுங்க.”

அவள் பதிலளித்த உற்சாகத்தில் அவள் நடக்கும் அதே படிக்கட்டில் வந்து அவளை ஓரக்கண்ணால் பார்த்தான். அழுத முகம் அல்லது அழப்போகும் முகம்.

“என்னங்க, பேஸ்லாம் ரொம்ப டல்லாய்ட்டுக்து?”

அவளிடம் பதிலில்லை. தன்னைப் பற்றிய அந்தரங்கக் கேள்விக்கு அவனிடம் பதில் சொல்லும் அளவுக்கு அவசியம் இன்னும் ஏற்படவில்லை என்பதால் அமைதி காத்தாள்.

“டே ஷிப்ட் மாறிட்டீங்க போல? மாசத்துக்கு ஒருவாட்டி ஷிப்ட் மாறுமா?”

இதுவும் தனிப்பட்ட கேள்வியாய் இருந்தாலும் வேலை சம்பந்தப்பட்டது தானே என்று தன்னைத் தானே சமாதானப் படுத்திக்கொண்டு “ஆமாங்க” என்றாள்.

“ஒடம்பு சரி இல்லையாங்க?”

“ஆமாங்க”

மேற்சொன்ன “ஆமாங்க” அவள் ஆத்திரத்தில் சொன்னது. கேட்டவன் மீதுள்ள ஆத்திரத்தினால் அல்ல. தனக்கு ஏன் உடம்பு சரியில்லை என்பதையும், கடந்த நான்கு நாட்களாக நடந்ததையெல்லாம் விரிவாகச் சொல்ல ஒருவர் வேண்டும். அப்படி ஒருவர் இல்லாததினால் “ஆமாங்க” என்றாள் ஆத்திரமாக.

“ஆமாங்க” என்றவள் தொடர்ந்து “ஹல்லோ தயவுக்குக் கொஞ்சம் தள்ளி நடங்க.”

“சாரி சாரிங்க … “ன்னா ஆச்சிங்க ஒடம்புக்கு?”

“இங்கருங்க. தெரிஞ்சிட்டு என்ன பண்ணப் போறீங்க?”

ஹவுசிங் கீப்பிங் அக்கா ஒருவரை வழியில் சந்தித்ததும் அக்காவுடன் பேசிக்கொண்டே அவள் வேகமாக நடந்து சென்றுவிட்டாள்.

படிகளில் மெதுவாக ஒவ்வொரு அடியாக வைத்து வந்தான். இவாஞ்சலின் உதாசீனப்படுத்தியது பற்றி அவனுக்குக் கவலையில்லை. அவளுடன் நடத்திய உரையாடலே திருப்தியாக இருந்தது. ஆயினும். தன் காதலியின் முகம் சோர்வுற்று இருப்பதற்குக் காரணம் என்னவாக இருக்குமென்று யோசித்தான். காதலனோடு சண்டை போன்ற காரணம் மட்டும் எக்காரணம் கொண்டு இருக்கக் கூடாது. மற்றபடி அவளுக்கு வேறு எந்த பிரச்சினை இருந்தாலும் அதைத் தீர்த்துவைப்பதற்கு

சைலேந்தர் உதவிக்கரம் நீட்டுவார் என்பதை எண்ணி நிம்மதிப் பெருமூச்செறிந்தான்.

~

ஒரே அறையில் மூன்று பேர் உடனிருந்தும், ஒருநாள் முழுக்கப் படுக்கையில் குழம்பு இறாலைப்போல் சுருண்டு இருந்தவளை ஒருவரும் விசாரிப்பாரில்லை. முன்பு தங்கிருந்த ஹாஸ்டலில் அறையைப் பகிர்ந்துகொண்ட பெண்களெல்லாம் சகோதரித்துவத்துடன் பழகி வந்தார்கள். புதிதாய்த் தங்க நேர்ந்த அறைத் தோழிகளுடன் அவளால் பொருந்திப்போகவே முடியவில்லை. அவர்களின் உணவு, பழக்கவழக்கம், தூங்கும் முறை போன்றவை இவாஞ்சலினுக்கு முற்றிலும் வேறாக இருந்தது. அவர்கள் மூவரும் ஒரே ஊர். ஒரே அலுவலகம். ராமானுஜம் தொழில்நுட்பப் பூங்காவிலுள்ள வெளிநாட்டு நுகர்வோரின் குறை தீர்க்கும் ஒரு அலுவலகத்தில் சல்லிசான சம்பளத்திற்கு இரவு நேர வேலை செய்கிறார்கள். இவாஞ்சலினைக் காட்டிலும் தாங்கள் செய்வது உலகத்தரம் வாய்ந்த வேலை, அதிகச் சம்பளம் என்கிற நினைப்பிலாக இருக்கலாம். அவளை இளக்காரமாக நினைத்தார்கள். குறிப்பாக ஒரு விஷயத்தில் இவாஞ்சலின் மீது அவர்களுக்குப் புகைச்சலாக இருந்தது. அதை நேரடியாகவும் உணர்ந்தாள். ஒரு ஞாயிறு நடுராத்திரி மூவரும் பேசிய ஊர்க் கதைகளில் இவாஞ்சலின் தூங்கிவிட்டாள் என்று நினைத்து தீபா மற்ற இருவரிடமும் சொன்னாள் “ஸ்டரக்ச்சர் இருந்தா தாண்டி வந்து தொங்குறானுங்க. தப்பா எடுத்துக்காதீங்க. ஒப்பனா சொல்லணும்னா இங்க நம்ம மூணு பேரு அந்த விஷயத்துல ஜீரோ. ஆனா இந்தா படுத்திருக்கிது பாரு.”

சத்தம் குறைத்து இன்னொருத்தி கிசுகிசுத்தாள். “ஹே, அவளுக்கு இந்த அளவுக்கு ஷேப்பாலாம் இருக்காதுடி, பேடட் ப்ரா யூஸ் பண்றான்னு நெனக்கிறேன்.”

இன்னொருத்தி சொன்னாள்: “அப்டிலாம் அவகிட்ட ஒன்னும் இல்லடி, அன்னைக்கு அவ குளிக்க போறப்ப சும்மா அவ பேக ஒரு க்ளான்ஸ் விட்டேன்.”

இன்னொருத்தியின் கிசுகிசுப்பு: “ம்கும். இருந்தாலும் இந்தம்மா வாங்குற சம்பளத்துக்கு ...”

இன்னொருத்தி சொன்னாள்; “ஹே, நர்சிங் ஃபீல்ட்லலாம் இப்டி மதமதன்னு இருந்தாத் தாண்டி ஆபரேஷன்ஸ் சக்சஸ் ஆகி அடுத்த லெவலுக்கு போய்ட்டே இருக்கலாம்.” மூவரும் வாயை மூடி நிசப்தமாகச் சிரித்தார்கள்.

போர்வையிலிருந்து எழும்பி மூவரையும் பளார் பளார் என்று அடிக்க வேண்டும் போலிருந்தது, ஆத்திரத்தை அடக்கிக்கொண்டாள். அவர்கள் மூவர். இவள் ஒருத்தி. கட்டுப்படி ஆகாது. விரைவில் இந்த ஹாஸ்டலை விட்டு, இந்த அறையை விட்டுக் கிளம்பப் போகிறோம். எதற்கு பிரச்சினை என்று நாவடக்கினாள். மேற்கொண்டு மூவரும் தன்னைப் பற்றிப் பேசாதவாறு அவர்களுக்குத் தன் உடலசைவின் மூலம் சமிக்ஞை செய்து திரும்பிப் படுத்தாள். அவர்கள் விதிர்விதிர்த்துப் பேச்சை மாற்றினார்கள்.

ஆறாம் வகுப்பு படிக்க ஆரம்பித்ததிலிருந்தே ஹாஸ்டல் வாழ்க்கையில் உழலும் இவாஞ்சலினுக்கு அதில் கிடைக்கக்கூடிய தனிமையுணர்வு, தேவையில்லாத கோபம், எதையும் சண்டையிட்டு அடையும் போராட்ட குணம் போன்றவற்றையெல்லாம் கடந்து வந்திருந்தாலும் சமீபத்தில் இந்த மூவரும் கொடுக்கும் உபத்திரவம் தாங்க முடியாததாக இருந்தது. அதிலும் இவாஞ்சலினின் அங்க லாவண்யங்கள் மீது அதீத காழ்ப்பு கொண்ட தீபாவின் பங்கு அளப்பரியது. காழ்ப்பு தீபாவின் மனதில் உறைந்து போய்த் தன்னை அறியாமலேயே வெவ்வேறு விதமாக இவாஞ்சலின் மீது பிரதிபலித்தாள்.

ஆபிஸ் கேப் வீட்டையடைவதற்கு வெகுநேரம் முன்னரே “எவா கேட் தொறந்து வெய்ப்பா கேப் நம்ம ரூம் கிட்ட வரப்போது” என்று அவளைத் தொடர்பு கொள்வாள். நள்ளிரவு இரண்டு மணியிலிருந்தே இவாஞ்சலினின் ஆழ்நித்திரை காவு வாங்கப்பட்டுவிடும். காலையில் வேலைக்குக் கிளம்புவதற்காக இவாஞ்சலின் குளித்துவிட்டுத் தலைசீவிக் கிளம்பும்போது தன் தூக்கம் கெடுகிறது என மின்விளக்கை அணைக்கச் சொல்லி அவளுக்கு அழுத்தம் கொடுப்பாள். தீபா செய்யும்

காரியங்களில் உடன்பாடு இல்லையென்றாலும் மற்ற இரண்டு பெண்களுக்கு தீபாவை விட்டுக்கொடுக்க மனமில்லை. ஊர்ப்பாசம்.

ஒருநாள் காலையில் வேலைக்குப் போக வாசலுக்கு வந்து செருப்பை மாட்டுவதற்காகக் வலதுகாலை நுழைத்தாள். செருப்பு அறுந்திருந்தது. ராத்திரி கழட்டிவிடும்போது சரியாக இருந்த செருப்பு அறுந்திருந்த விதத்தைப் பார்த்து இதை இவர்களில் யாரோதான் அறுத்திருக்கக்கூடும் என வெதும்பித் தூங்கியிருப்போரை எழுப்பினாள்.

“இங்கருங்க, எழுந்தரிங்க. யாரு எஞ்செருப்பு வார அத்துவிட்டது?”

எதிர்பார்த்த கேள்விக்கான பதிலைத் தயார்படுத்தி இருந்தாலும் எழுந்தரிப்பதற்கு ஆயத்தம் இல்லை. போர்வைக்குள்ளேயே முணுங்கல்கள்.

கேள்விக்கு பதிலாக மூவரும் நிச்சலனமாக இருப்பதனால் ஆத்திரத்தில் அறையை விட்டுச் சென்றாள். அவளரவம் இல்லாததை உணர்ந்து போர்வைக்குள் இருந்து எட்டிப் பார்த்தனர். அவள் கையில் பக்கெட்டுடன் நடந்து வருவதை உணர்ந்ததும் வினா முகத்தோடு முந்தைய நிலைக்குள் புதைந்தனர்.

கழிவறைக்குச் சென்று அங்குள்ள பிளாஸ்டிக் பக்கெட்டைத் தண்ணீரோடு தூக்கிவந்து அவர்கள் மேல் இரைத்தாள்.

மூவரும் ஒன்று போலப் போர்வையை விலக்கி எழுந்தார்கள். தீபாவின் அலைபேசியின் மீது நீரபிஷேகம் நடந்ததால் அதிக சினங்கொண்டவளாய் அதைத் துடைத்துக்கொண்டே கேட்டாள்.

“ஹே லூசு முண்ட, எதுக்குடி தூங்கிட்டு இருக்கவங்க மேல தண்ணிய ஊத்துற?”

“என் செருப்பு வார எவடி அத்துவிட்டது”

“உன் செருப்ப அறுக்கிறதுதான் எங்களுக்கு வேலபாரு”

-

இன்னொருத்தி

“நானும் பாத்துட்டுதான்ருக்கேன், இஷ்டத்துக்கு பண்ணிக்கிட்டு இருக்கீங்க, எனக்கு இப்போ என் செருப்பு வந்தாகணும்.”

“எல்லாம் பெருத்துப் போய்தான இருக்க? எவன்கிட்டனா போய் நல்ல அறாத செருப்பா வாங்கிப் போடு எங்க கிட்ட கேக்காத.”

தீபா சொன்ன வாக்கியத்தைக் கேட்டதும், தனக்கு பின்னால் திரும்பி அங்கிருக்கும் அலமாரி மீதிருந்த சென்ட் பாட்டிலைத் தூக்கி அவள் மேல் எறிந்தாள். குடுவை தீபாவின் முகத்தில் போய் இடிக்கும் வேகத்துக்கு நிகராக அவள் மீது பாய்ந்து முடியைப் பற்றி கட்டிலிலிருந்தவளைக் கீழே தரதரவென இழுத்தாள். மற்ற இருவரும் இவாஞ்சலின் மீது பாய்ந்து அவளைத் தாக்கினர்.

சத்தம் கேட்டு அக்கம் பக்கத்து அறையிலுள்ள பெண்டிர்களெல்லாம் ஓடி வந்து விலக்கிவிட்டனர். போஷாக்கு இல்லாத தீபாவின் கூந்தல் இவாஞ்சலின் கைகளில் நூல் நூலாக வந்தது. மேற்கொண்டு தீபாவை மொட்டை அடிக்காதவாறு இவாஞ்சலினை அக்கம் பக்கத்துப் பெண்கள் பிடித்துவைத்தனர். அவர்களின் பிடியிலிருந்து தளராமல் அழுதபடி இவாஞ்சலின் முறையிட்டாள்.

“இந்தப் புள்ள எப்பப்பாரு என்னய வெச்சி வெச்சி சாடப்பேச்சு பேசுது. அப்டிதான் போன சனிக்கெளம குளிச்சுட்டு இருக்கேன். லைட் ஆப் பண்ணிட்டு உள்ளருந்து நான் கூப்புட கூப்புட பெசமா போய்ட்டு பெறகு வந்து தெரியாம ஆப் பண்ணிட்டேன்னு சொல்லுது.”

இன்னொருத்தி சொன்னாள்; “எதுக்குடி சும்மா பழி போட்ற. ஒனக்கு எங்கக்கூட இருக்கப் பிடிக்கலனா வேற ரூம பாத்துட்டு போயிட்டுரு.”

மடக்க வந்த நியாயஸ்தர்களில் ஒரு மூத்த பெண்மணி, “செரி விடுங்கடி, அவ வேற ரூம் போய்டுவா” மூத்த பெண்மணியின் வியாக்கியானத்தைத் தாண்டி ஒலிக்கும் வகையில் தீபாவின் குரல் ஓங்கரித்தது.

“ஏய் தேவ்டியா … என் மேலயா கை வெச்ச? இருடி நீ எங்க போனாலும் ஒன்ன என்ன பண்றேன் பாரு.”

“யாரடி சொல்ற நீ தாண்டி அந்த மாதிரி இருப்ப” என்று நடுங்கும் குரலில் சொன்னாள். தீபா அளவுக்குக் கெட்ட வார்த்தையால் அவளுக்கு பதில் சொல்ல தைரியம் வரவில்லை. சண்டையில் சுவாரசியமில்லாததால் இவாஞ்சலினைப் பிடித்த நியாயஸ்தர்கள் ஏமாற்றம் அடைந்தார்கள். பிடி தளர்த்தினால் அடிக்கவாவது பாய்கிறாளா என்று நியாயஸ்தர்கள் இறுக்கத்தைத் தளர்த்தியதும் தீபா சொன்ன முறைகேடான வார்த்தையை எண்ணி ஒரு கையால் முகம் கழுவும் விதமாக முகத்தைப் பொத்தி இவாஞ்சலின் அழுதாள்.

பக்கத்து அறையிலிருந்த வட இந்தியப் பெண் தன்னிடம் உபரியாக இருந்த ஒரு ஜோடி செருப்பைக் கொடுத்து இவாஞ்சலினை வேலைக்கு அனுப்பினாள். பேருந்து நிலையத்தில் நின்று, இந்த ஹாஸ்டலிலிருந்து சீக்கிரம் புலம்பெயர்வதற்கான ஆயத்தப் பணிகளை மனதளவில் பட்டியலிட்டாள். ஒரு தெளிவு பிறந்தது போல் இருந்ததும் பேருந்து வருகிறதா என்று கழுத்தை எக்கிப் பார்த்தாள். ஏற்கனவே தாமதமாகிவிட்டது. ஓர் ஆட்டோ பிடிக்கலாமா? ஓடும் ஆட்டோவை கைகாட்டியோ, கை தட்டியோ அழைப்பது பெரிய மனுஷித்தனமாக தெரிந்தது. அது ஏதோ தகாத செயல் என பொதுப்புத்தி அவளுக்குப் புகட்டியது. ஆட்டோவை அழைக்கும்போது பேருந்து நிறுத்தத்தில் இருப்பவர்களுள் தனக்குத் தனித்துவம் ஏற்பட்டு சில கணங்கள் எல்லோரும் தன்னையே கவனிப்பார்களே! அந்த அசௌகரியம் வேண்டாமென்று பேருந்துக்காகக் காத்திருந்தாள். காலைவேளை என்பதால் எல்லாரும் அசுர வேகத்தில் செல்ல விரும்பினாலும் வாகன நெரிசல் தடையாக இருந்ததனால் வண்டி எடுக்கும் விக்கல்களை ஓட்டுநர்கள் முகஞ்சுளித்து சமாதானம் செய்துகொண்டிருந்தனர். பேருந்து நிலையத்திலும் நல்ல கூட்டம். எதிர்சாலையில் கழுகு வடிவ இருசக்கர வாகனத்தில் ஓர் இளைஞன் வண்டியை உறுமவிட்டுக் கொண்டிருந்தான். அவன் ‘U’வாக வளைந்து சாலையைக் கடந்து வண்டியை “புர் புர்” என்று முறுக்கி நேரடியாக

இவாஞ்சலினை நோக்கி வந்தான். தோள்பட்டைக்கும், காதுக்கும் இடையில் அலைபேசியைப் பொருத்தி பேசிக்கொண்டே தலை சாய்த்து அவளை நோக்கி வந்தான். முக்கால் ட்ரவுசரும் அடர் ஊதா நிறத்தில் வட்டக் கழுத்து பனியன் அணிந்திருந்தான். ஒரு காதில் மட்டும் வெள்ளைக் கல் கம்மல் ஜ்வலித்தது. தலையின் நடுப்பகுதியிலுள்ள முடிகள் அனைத்தும் செங்குத்தாக வானம் பார்த்தன. உயர் அழுத்த மின்சாரம் தாக்கி உயிர் பிழைத்தவன் போலிருந்தான். இவாஞ்சலினின் அருகில் நின்றவர்கள் முனகிக்கொண்டே அவனுக்கு வழி விட்டார்கள். அலைபேசியை, டவுசர் பையில் போட்டவன் … அவளை முட்டும் நெருக்கத்திற்கு வண்டியைக் கொண்டுபோய் சடாரென நிறுத்தி …

“ஏய் நீதான் எவாஞ்சலினா”

“ஆமாம்” என்று தலையாட்டிச் சற்றுப் பின்னகர்ந்தாள்.

“த்தா உனுக்கு ன்னா தைரியந்தா தீபா மேல கை வெப்பே? ன்னொரு வாட்டி அவ மேல கை வெச்சே த்தா டாரா கீச்சிடுவேங்” இவாஞ்சலினின் இடுப்புக்குக் கீழே கை காட்டி எச்சரித்துவிட்டு வண்டியை ‘புர்ர்ர்ர்ர்’ என்று முறுக்கிச் சென்றுவிட்டான். அவள் பதில் பேசுவதற்கு அவன் அவகாசமே தரவில்லை. கடமை முடிந்துவிட்டதுபோல அவன் சென்றான்.

அணிந்திருந்த தன் துப்பட்டா கூட்டம் பார்க்க காற்றில் எங்கோ அதிவேகத்தில் பறந்து சென்றது போல உணர்ந்தாள். மூக்கு விரிந்து முகம் அழுகைக்குத் தயாரானபோது கட்டுப்படுத்தி செல்போனை எடுத்து யாருக்கோ டயல் செய்து கூட்டத்திலிருந்து வேகமாக நழுவினாள். இவாஞ்சலின் பக்கத்தில் நேர்முகத் தேர்வுக்குச் செல்வது போல நின்றிருந்த இளைஞன் “யாருங்க அவன்” என்று பூனை நடையில் அவளுடன் நடந்து பேச்சுக் கொடுத்தான். அவள் பொருட்படுத்தாமல் பேருந்து நிலையத்தைவிட்டுச் சற்று தூரம் நடந்து வந்து நின்றுகொண்டாள். எல்லோரும் தன்னையே பார்க்கிறார்கள் என்பதை உணர்ந்ததும் என்ன மாதிரியான பாவனைகள் கொடுப்பதென்று தெரியாமல் தடுமாறினாள். ஆட்டோ ஏதாவது வருமா என்று எதிர்நோக்கினாள். மஞ்சள் தெய்வமாக ஒரு ஆட்டோ

வர, கை போட்டாள். பேரம் ஏதும் பேசாமல் சட்டென உள்ளே ஏறிக்கொண்டாள்.

~

"என்ன இவாஞ்சலின்? டே ஷிப்ட் பஸ்ட் டேவே லேட்டா?" என மலர்ந்த முகத்துடனேயே டாக்டர் கேட்டார். ஆனாலும் அவள் சிகிச்சையறையில் உள்ளே நுழைந்ததும் அவர் கேட்டிருக்கக் கூடாது. குரலைச் சற்று உயர்த்தியிருக்கக் கூடாது. காலையிலிருந்து தனக்கு நிகழ்ந்த அவமானங்களோடு ஒப்பிடுகையில் இது ஓரளவு நியாயமானது என்று ஆசுவாசங்கொண்டு பதில் சொல்லாமல் மையமாக நின்றாள். அவரும் "நோ ப்ராப்ஸ், யு கேரியான்" என்று நகர்ந்துவிட்டார்.

அவர் அங்கிருந்து சென்றதும் "என்ன ஆச்சுங்க? ஃபேஸ்லாம் ஒரு மாதிரி ரெஸ்ட்லசா இருக்கு?" என்று உடன் பணிபுரியும் செவிலி கேட்பாள் என நினைத்து - அவளிடம் சொல்லிக் குமுறும் அளவுக்கு ஆழமான நட்பு இல்லாததால் - "ஒண்ணுல்ல பிரவீனா, மேலுக்குக் கொஞ்சம் முடியல்ல தூங்கிட்டேன்" என்று பதில் கூறுவதற்கு இவாஞ்சலின் மனம் தயாராக இருந்தது. ஆனால் பிரவீனா அதற்கான தேவையையே வைக்கவில்லை. இவளாகவே சொல்லட்டும் என்கிற தன்னகங்காரம் பிரவீனாவைக் கட்டிப்போட்டது. போடியிலும், கோட்டயத்திலும் தங்கிப் படித்தபோது, வேலை செய்தபோது அன்பு சொரிய தன்னுடன் பழகிய தோழிகளை நினைத்துப் பார்க்கையில் இவாஞ்சலினுக்கு அழ வேண்டும் போலிருந்தது. அழுவதற்கு ஏன் எனக்கு மட்டும் காரணங்கள் கிடைத்துக்கொண்டே இருக்கின்றன? அல்லது நானாக காரணங்களை உற்பத்தி செய்கிறேனா? இந்த ஊரில் பேசும் மனிதர்களின் ஒவ்வொரு வாக்கியமும் அதெப்படித் தங்களின் தேவை கருதி மட்டுமே இருக்கிறது! குழப்பமும் ஆச்சரியமும் சரிவிகிதத்தில் இவாஞ்சலினைச் சோர்வடையச் செய்தன.

மெல்லமாக அவளை நோக்கி "எம்மாடி" என்றது ஒரு குரல்.

பூங்கொடி!

லாரன்ஸின் படுக்கையை நோக்கி இவாஞ்சலின் சென்றாள்.

“ன்னா எம்மா காய்ல்ல வந்துக்ற?” - இவாஞ்சலினின் இரு கையையும் ஆதுரமாகப் பிடித்து முகத்தில் ஆச்சரியம் துலங்கக் கேட்டாள் பூங்கொடி.

“மார்னிங் ஷிப்ட் மாறிட்டேன். இனி ரெண்டு மாசத்துக்கு இதான்.”

“மூஞ்சே செரி இல்லியே. ன்னா ஒடும்பு கிடும்பு செரி இல்லியா?” - இவாஞ்சலினின் நெற்றியைத் தொட்டுப் பார்க்கப் பூங்கொடி எழுந்தாள்.

தனக்கென ஒரு குரல். ஒரு கரிசனம். இவாஞ்சலின் லாரன்ஸைப் பார்த்தாள். தொண்டைக் குண்டு மட்டும் மெல்ல துடித்துக்கொண்டிருந்தது. உறுப்புகளெல்லாம் செயலிழந்து உடம்பில் ஆத்மா மட்டும் தங்கி இருப்பதனால் உண்டாகும் ஓர் அசைவு. அல்லது பணம்பறித்து முடிக்கும்வரைக்கும் உடம்பில் உயிர் தங்கியிருக்க வேண்டுமென லாரன்ஸுக்குப் பிரத்யேகமாக ஏதேனும் மருந்து ஏத்தியிருக்கலாம். ஏற்கனவே பிள்ளையை இழந்து தவிப்பில் அழதழுது கண்ணீர் வறண்டுவிட்ட இந்த அம்மாவுக்கு நம்மால் நியாயம் செய்ய முடியுமா என்கிற சந்தேகம் வலுத்தது அவளுக்கு.

“எம்மா ஏதாவது மாத்திர கீத்திர போட்டு கொஞ்சங் ரெஸ்ட்டெடு.”

அவளுக்கு வெட்கமாக இருந்தது. பூங்கொடியின் ஆதுரப் பிடியிலிருந்து தன் கையை மெல்ல விலக்கிக்கொண்டாள்.

## -15-

“என்ன மச்சி உசுரோடத்தான் இருக்கியா?”

“ஆங், சொல்லுங்க கிள்ளி” இருக்கையிலிருந்து எழுந்து தேநீர் அறைக்குச் சென்றான்.

“ஒன்ன ஃபேஸ்புக் பக்கமும் காங்கலியே?

“ஒன்னுல்ல, ஆபிஸ்ல நா ஒக்கான்னுருந்த கேபின் மாறிப்போச்சு, இப்போ ஒக்கான்னுக்ற எடத்துல இர்ந்து ன்னா ஸ்க்ரீன் ஓப்பன் பண்ணாலுங் எல்லார்க்குந் தெரியுங். அப்ரைசல் டைம் வேற. அதான் லைட்டா அடிக்கி வாசிக்கலான்னு …”

“ம்” என்றார் கிள்ளி.

“வீட்டுக்கு போய் பேஸ்புக் லாகின் பண்ணக்கூட தோன்ல. டைமும் இல்ல. என் ப்ரெண்ட் செத்தான்னு சொன்னன்ல? அவ்ங்க அப்பா ஆஸ்பிட்டல்ல சீரிசாக்றாரு. அங்க தங்கி அவர பாத்னுக்ற அவங்க ஒய்ப்க்கு நாந்தாங் டெய்லி சாப்பாடு எத்னு போய் குத்துட்டு வரேங். ஆக்ச்சுவலா அவ்ருதாங் சாவ் வேண்டியது.”

“என்ன ஆச்சி?”

“சொல்றேங் கிள்ளி, அதொரு கத.”

“கதன்னு சொன்னப்பதான் ஞாபகம் வருது. ஏதோ நாவல் எழுதப்போறேன்னு குண்டில கிருமிக் கடி தாங்காம சொல்லிட்டு இருந்தியே - “ஹே ஹே ஹே” என்று சிரித்தார்.

“கலாய்க்காதீங்க. எழுதுற ஐடியா இருக்குது” என்றான்.

“கத கெடச்சாச்சா?”

“கதன்னு பெர்சா ஒன்னுங் கெடிக்கல. ஆனா, எழுதணுன்னு ஆச வந்துச்சி. அந்த ஆச போவாது. சோ எப்டியாவது எழுதிடுவேன்னு நெனக்கிறேங்.”

கிள்ளி திரும்பவும் ஆரம்பித்தார்.

“மச்சி இது கொஞ்சம் விபரீத ஆசதான் பாத்துக்க. ஆனாலும் நாட்டுக்குக் கெடுதி ஒண்ணுமில்ல.

கம்யூட்டர்ல தமிழ் டைப்படிக்கத் தெரிஞ்ச பயலுவெல்லாம் இப்போ எழுத்தாலனாகனும்னு நெனக்கிறாணுவ.''

''ன்னா கிள்ளி கலாய்க்கிறீங்க?''

''ச்ச்சே ச்சே நீ எழுது. ஆனா முடிஞ்ச வரைக்கும் உவ் வாழ்க்கையில நடந்த, நடக்கப்போற கதயா எழுது. அதான் உண்மையா இருக்கும்.''

''ஆமா நானுங் அதாங் யோஸ்ச்சி வெச்சிக்றேங்'' - அவருடன் பேசிக்கொண்டே அங்கிருந்த காப்பி மிஷனில் காகிதக் கோப்பையை நீட்டிப் பொத்தானை அழுத்தினான். அது ''ர்ர்ர்ர்ர்'' என்று சத்தத்தோடு காப்பியைக் கக்கியது.

''என்ன குதிர கனைக்கிற சத்தம் கேக்கு. ஆபிஸ்ல தான இருக்க, இல்ல எதாச்சும் லாடத்துல தட்டி அள்ட்ரியா''

''ஆபிஸ்லதான் இருக்கிறேங்ன். அது காப்பி மிஷனோட சத்தங்.''

அவர் அடித்த ஜோக்கிற்குச் சிரிக்காமல் அவன் சலிப்புடன் சொன்னது அவரை அவமானப்படுத்துவது போலிருந்தாலும் அதைக் குரலில் காட்டிக்கொள்ளாதவாறு அவன் சம்பந்தமான விஷயத்தையே தீவிரமாக ஆரம்பித்துச் சமாளித்தார்.

''என்னெழவோ … சரி கேட்டுக்கோ. முக்காவாசி பயலுவலோட மொத நாவலு அவன் வாழ்க்கையில நடந்ததாத்தான் இருக்கும். அதான் உண்மையாவும் இருக்கும். ஆனா ஒணர்ந்து எழுது. நீ யாரப் பத்தி எழுதுனாலும் அதுவாவே மாறனும். ஒரு விபச்சாரியப் பத்தி எழுதுனா விபச்சாரியாவே மாறனும். ஒடம்பால இல்ல. மனசால. ஒரு கதயப் பத்தி எழுதுனா உன் யோசன முழுக்க அதச்சுத்தி இருக்கணும். நெசமாலுமே நீ கத எழுதணும்னு முடிவு பண்ணிட்டா கொஞ்ச நாளுக்கு இந்த பேஸ்புக் பக்கம்லாம் வாராத.''

''கிள்ளி இத நீங்க அடிக்கடி வேற வேற உதாரணத்தோட சொல்லி இருக்கீங்க செரி உங்களுக்கு இவ்ளோ தெர்தே. நீங்க ஏன் நாவல் எதுங் எழுத கூடாது?''

“கடைசியில எய் கோமணத்த அவுக்கப் பாக்றியா. நா ஒரு வாசகன். அவ்ளோதான். என்னோட இருவது வருஷ இலக்கிய வாசிப்புல ஒரு சில கதைகள படிச்சு முடிச்சதும் நம்மளும் இந்த மாதிரி ஒரு கத எழுதணும்னு மூள அரிச்சிருக்கு. மொத மொற ‘ஒரு புளியமரத்தின் கதை‘ய வாசிச்சு முடிச்சதும். அது மாதிரியே எங்கூரு பஸ் ஸ்டான்ட் கிட்டக்க இருக்கிற அரச மரத்த குறியீட்டா வெச்சி பெரிய கத எழுதணும்னு உக்காந்தேன். ஏதொரு படத்துல ரேவதி சொல்லுவாளே, ‘வெறும் காத்துதான் வருது‘ன்னு அந்தக் கதயா ஆகிப்போச்சு.”

“ஹி ஹி ஹி.”

“எழுத்துங்கறது சொப்பன ஸ்கலிதம் மாதிரி மச்சி. தானா வராதத புடிச்சி உன் ஆசைக்கு வலுக்கட்டாயமா அடிச்சி வெளி ஏத்தக் கூடாது.”

“உசார்தாங் நீங்க. ஆனா என்ன மட்டுங் எழுதுன்றீங்க”

“ஒனக்கு எழுதம்னு ஆச வந்துடிச்சில? எழுது, அவ்ளோதான். அடுத்தவனுக்கு பெருசா தீங்கில்லாம தீத்துக்க முடியும்னு நெனக்கிற ஆசயெல்லாம் தீத்து போடணுன்டா அதாம் வாழ்க்க.”

“கத மொக்கயா வந்தா ஆளாளுக்கு என்ன கலாச்சிடுவாங்களே …”

“இங்க பாரு எலக்கியாவதி எல்லாம் ஒன்னய ஒரு புண்டயும் கண்டுக்க மாட்டான் பாத்துக்க. உன் கத நல்லா இருந்தா உன்ன துதிக்கிறதும், நல்லா இல்லனா உன்ன போட்டு மிதிக்கிறதும் ரெண்டுத்துல எது செஞ்சாலும் அது உனக்கொரு அடையாளத்த கொடுக்கும்ல. அவனுவ அத குடுக்க மாட்டானுவ. எதாவது பதிப்பகத்தானா தெரியுமா? நண்பங்கிற போர்வையில அவங்கிட்ட காலம் முழுக்க அடிமையா இருக்க பளகுவியா? எதாவது சிற்றிதழுக்கு சந்தா கட்டுதியா? எழுத்தாளனுக்கு சரக்கு வாங்கிக்குடுப்பியா? அப்பப்போ அங்கங்க நடக்கிற இலக்கிய விழாவுல கலந்து இலக்கியவாதிகள்ட்ட மொகம் கொடுத்து பேசுறியா? உனக்கு தெரிஞ்சதெல்லாம் பேஸ்புக்கும், அங்க சூப்பர் தல’ன்னு உனக்கு சூடம் ஏத்துற கூட்டம் மட்டுந்தான். நீ அவனுகளுக்காக எழுதுற. எழுது. ஆனா இப்போல்லாம்

அங்கய எல்லாம் மாறிப்போயாச்சி. எல்லோரும் எலக்கியாவதி ஆய்ட்டானுவ. அதையெல்லாம் தாண்டி உன் கத பேசப்படும்னா அதுல சத்து இருக்கணும். போட்டும். அப்டியும் இல்லயா கண்டுகொள்ளப்படாமலே இருப்பது பேரிலிக்கியங்களுக்கே உண்டான இயல்புன்னு செயமோகன் நைசா சொல்லி வெச்சி இருக்காரு. ஒன்னதும் பேரிலிக்கியம்னு நெனச்சி பெசாம விட்டுரு.''

'ன்னா கிள்ளி கொழப்பிறீங்க.''

''செரி விடு நம்ம நேர்ல பேசிக்கலாம். ஆங் எதுக்கு போன் பண்ணன்னே மறந்துட்டேன். நாளைக்கு சாயங்காலம் உங்க வீட்டுக்கிட்டக்க எக்மோர் மியூசியம் இருக்குல்ல, அங்க செயமோகனோட வெண்முரசு நூல் வெளியீட்டு விழா நடக்கு. நீ வாரியான்னு கேக்கத்தான் போனடிச்சன்.''

''ஓ, இல்ல கிள்ளி. டெய்லி சாய்ங்காலங் நாந்தாங் சாப்பாடு எத்னு போவ்ணுங்.''

''கமல்ஹாசன், இளையராஜாவெல்லாம் வாராங்க என்ன சொல்லுற'' - கிள்ளிவளவன் மௌனமாகச் சிரித்தார்.

''இல்ல கிள்ளி நீங்க போயிட்டு வாங்க. நாம ஒருநாள் மீட் பண்ணலாங்.''

''செரி ரைட்டு.''

அவரிடம் வரவில்லை எனச் சொன்ன பதில் அவனுக்கு திருப்தியாகவே இல்லை. வாழ்க்கையில் எதையாவது உருப்படியாகச் செய்வோமா என்கிற கவலைத் தொற்றலுடன் காப்பி குடித்த காகிதக் கோப்பையைக் கசக்கினான்.

தினமும் வந்து போகிறான்.

இருபது நாட்களாக இருக்குமா? இருக்க வேண்டுமென்கிற தகிப்பில் பதிவேடு இருக்கும் மேசைக்கு வந்து அதன் கீழறையைத் திறந்து அலைபேசியை எடுத்து நாட்காட்டியில் கணக்குப் பார்த்தாள். முகத்தில் பெருமிதம். ஹாஸ்டல், பேருந்து நிலையம், மருத்துவமனை. எங்கே போனாலும் வந்தாலும் நமக்கே நமக்காக ஒருவன் வருகிறான்!

அப்பப்பா என்னவொரு சந்தோஷம்!

அவன் செய்யும் ஒவ்வொரு அசைவையும் அவள் கவனிக்க வேண்டும் என்பதற்காகவே வருகிறான். அசைவுகளின் அடுத்த கட்டமாக அவளிடம் பேசுவதற்காக அவன் எடுக்கும் முயற்சிகளை ஜெயிக்க விடாமல் தன் செய்கைகளின் மூலம் தோல்வி முகத்தோடு அவனைத் திருப்பி அனுப்புவதில் அவளுக்கொரு குரூர சந்தோஷமிருக்கவே செய்தது. அவன் மீதுள்ள கோபத்தினால் அல்ல. ஒரு 'நர்ஸ் பெண்'ணை அவ்வளவு எளிதில் யாரும் நெருங்கி நட்பு பாராட்டிவிட முடியாது என்று தன் தரப்பில் சொல்லுவதற்கு அவளுக்கு ஒரு வாய்ப்பு. நர்ஸ் என்றாலே "ஒரு மாதிரி" பேசுபவர்களுக்கு இவன் மூலம் பதில் சொல்லி ஆசுவாசப்பட்டுக்கொண்டாள்.

ஆனாலும் இவாஞ்சலின் மனதில் 'போதுமென்கிற' அயர்ச்சி.

பிடித்தவர்களிடம் அன்பு வேண்டுமென ஏங்கி நிற்கும்போது அது கிடைக்காத அலைக்கழிப்பினால் உழலும் மனதின் வேதனையை ஒன்பது வருடங்களாக ஹாஸ்டலில் வாழும் அவளொன்றும் அறியாதவள் அல்ல. அதே சமயம் இவன் உண்மையாகவே அன்புக்காகத்தான் ஏங்குகிறானா என்கிற சம்சயமும் அவளுக்கு இருந்தது. இன்னொரு பக்கம்; 'அன்பு' என்கிற ஒன்று இவ்வுலகில் இருக்கிறதா என்ன? ஒவ்வொருத்தரும் தங்களின் சுயநலம் வேண்டிச் செய்கிற பாவனையின்றி அன்பென்பது வேறென்ன என்கிற

தத்துவம் எழுத்து மொழியில் இல்லாமல் அவள் மனதில் யதார்த்தமாகப் பதிந்திருந்ததற்கு இதே ஹாஸ்டல் வாழ்க்கையே காரணமாய் இருந்தது. எத்தனை முறை பட்டாலும் திரும்பத் திரும்ப அன்பென்ற ஒன்றுக்காக வேண்டி நிற்கும் பலவீனமான இதயத்திற்கு இவாஞ்சலினும் விதிவிலக்கல்ல. அவளைச் சுற்றி நடப்பவை அவள் இதயத்தை மேலும் பலவீனமாக்க எரிபொருட்களாக விளங்கின. அதன் பொருட்டு அவளின் மனம் தனக்கென ஒருவனை வேண்டி நின்றது.

ஊரிலிருந்து எழும்பூர் ரயில் நிலையத்தில் வந்து இறங்குகையில் நடைபாதையில் அவளுக்காகக் காத்திருந்து “லக்கேஜ கொடு நான் தூக்கிக்கிறேன்” என்று பிடிவாதமாக வாங்கி, அவளுடன் நடந்துவர ஒருவர் வேண்டும். துணிக் கடையில் அவளின் சுவையறிந்து, “இந்தா இத ட்ரை பண்ணிப்பாரு” என்று வகைவகையான ஆடைகளை அவளுக்காகத் தேர்ந்தெடுத்துக் கொடுக்க ஒருவர் வேண்டும். ஒவ்வொரு வகை ஆடையை அணிந்ததும் ஒத்திகை அறையின் கதவைப் பாதி திறந்து அசட்டுப் புன்னைகையுடன் “எப்டி இருக்கு” என்று அவள் கேட்பதற்கு ஒருவர் வேண்டும். உடம்பு சரியில்லை என்றால் மாத்திரை, மருந்து வாங்கித் தர யாரும் இல்லையென்றாலும் நெற்றியைத் தொட்டுப்பார்த்து “இப்போ எப்டி இருக்கு” என்று அக்கறைகொள்ள ஒருவர் வேண்டும்.

தினசரி வாழ்க்கையில் நடக்கும் சம்பவங்களையும், நிராகரிப்புகளையும், மனத்தாங்கலையும் சொல்வதற்கு அதே ஒருவர் வேண்டும். “காலையில இட்லி சாப்டேன். ஹாஸ்டல் சாம்பார் இன்னைக்கு சூப்பர், புதுசா வாங்குன ப்ரா சைசே செட் ஆகல, இன்னைக்கு பஸ்ல வரும்போது ..., எங்க ஹாஸ்பிட்டல்ல செய்ற ஏமாத்து வேலை தெரியுமா?” என்று அவளுக்குச் சொல்லத் தோன்றினவற்றையெல்லாம் கேட்க ஒருவர் வேண்டும். மருத்துவமனையிலும், ஹாஸ்டலிலும் ஒரு சில தோழிகள் இருக்கிறார்கள் என்றாலும் அவர்களுடன் எல்லாவற்றையும் பகிர்ந்துகொள்ள அவளுக்கு விருப்பமில்லை. நெருங்கிய தோழிகளிடம் சொல்லலாமென்றால் மூவரும் தேனி, டெல்லி, கம்பம்

ஆகிய ஊருக்கு மணமாகி இல்லற வாழ்க்கைக்குத் தங்களை ஒப்புக்கொடுத்துவிட்டார்கள்.

புதியதாய் வந்து சேர்ந்த ஹாஸ்டலில் இருக்கும் பெண்கள் என்னவென்றால், ஒருத்தர் பாக்கி இல்லாமல் எல்லாரும் காதில் ‘செல்போன்’ வைத்துக்கொண்டு கிசுகிசுக்கிறார்கள். ஒன்றாக அமர்ந்து சாப்பிடும் நேரத்திலும் முகம் மலர, தலை குனிந்து வாட்ஸ்அப்பில் குலாவுகிறார்கள்.

யாரும் அவளுடன் பேசத் தயாராய் இல்லை. தயாராய் இல்லை எனச் சொல்வதைவிட அவர்களுக்கு நேரம் இல்லை. கழிவறையில், மொட்டை மாடியில், ராத்திரி போர்வைக்குள்ளே என்று ஒருத்தி முத்தமிட்டுக்கொண்டிருக்கிறாள். தூக்கம் கெடுகிறதென்று இவாஞ்சலினுக்கு அவளைத் திட்டவும் முடியாது. “உனக்குப் பொறாமடி” என உண்மையை உடைத்து சங்கடப்படுத்திவிட வாய்ப்புண்டு.

காமம் கொப்பளிக்கும் வயதில் கடவுளுக்கும், கலாச்சாரத்திற்கும் பயந்து அதை அடக்கி அடக்கி மோக உணர்வுகள் சுருள் சுருளாக அவள் தலை முதல் பாதம் வரை சுருண்டுபோய்க் கிடக்கின்றன. அவளைத் தொட்டு நீவி ஒவ்வொரு முடிச்சாக அவிழ்க்க ஒருவன் வேண்டும். “காதல்” என்கிற பெயரில் அது மிக சௌகரியமாக நடக்க வேண்டும். அவசரப்படாமல் முத்தத்தில் ஆரம்பித்து முத்தத்தில் முடிக்கத் தெரிந்த ஒரு ஜாலக்காரன் அவளுக்கு வேண்டும்.

தன் எண்ணங்களையும், ஆசைகளையும், கேள்விகளையும் ஆத்மார்த்தமாகப் பகிர்ந்துகொள்ள யாருமில்லாததால் தனக்குத்தானே சொல்லிப் பார்த்துக்கொள்வாள். தன் கருத்துக்கும் ஆசைக்கும் எதிரபிப்ராயம் சொல்லுவதற்குத் துணையின்றி அப்படியெல்லாம் ஏன் நடக்கிறது, ஏன் அவ்வாறு எதிர்பார்க்கிறோம் என்கிற காரணங்களையும் அவளே தேர்ந்தெடுப்பதால் அவளொரு குழப்பவாதியாகவே காணப்பட்டாள்.

‘நர்ஸிங்’ படிக்கும்போதிலிருந்து தற்போது பணிபுரியும் மருத்துவமனையிலுள்ள ஒரு கிழமருத்துவர் வரை

நிறைய பேர் அவளை அடையப் பார்த்தார்கள். மரியாதைக்காகச் சிரித்து பேசிய ஓரிரு தினங்களிலேயே “என் கூடப் படுக்க வர்றியா” என்கிற கேள்வியைப் பூடகமாகக் கேட்டார்கள். அல்லது அக் கேள்விக்கு அச்சாரமாகச் செய்ய வேண்டியவற்றைச் செய்ய ஆரம்பித்தார்கள். வேண்டுமென்றே அவளின் தேகக்கட்டுகளின் மீது துருத்தலான பார்வையை வீசித் தங்களுக்குத் தேவையானது கிடைக்குமா என்று மௌனமாகக் கேட்கத் துணிந்தார்கள். தேவையைத் தெரிவிப்பதில் கால அவகாசத்தில் ஒருத்தருக்கொருத்தர் முன்னுக்குப்பின் இருந்தார்களேயன்றி ஒருவர்கூட வேறுமாதிரி நடந்துகொள்ளவில்லை. எல்லா ஆண்களும் அவ்வாறு நடந்துகொள்வதை நினைத்துப் பார்க்கையில் அவளுக்கு வியப்பாகவும், வெறுப்பாகவும் இருந்தது. தன் உடல் மீதிருந்த பெருமிதம் காலப்போக்கில் அவளுக்கே எரிச்சலாக மாறிப்போனது.

இவனும் அவர்களுள் ஒருவனாகக்கூட இருக்கலாம். எல்லாரும் ஆண்கள்தானே. ஆனால் அவர்களெல்லாம் இவாஞ்சலினைத் தேடி வந்தவர்கள். அவர்களுக்கு இவாஞ்சலினைப் பிடித்திருந்ததே தவிர இவளுக்கு அதில் ஒருவனிடம்கூட விருப்பம் இருந்ததில்லை. மாறாக ரூபனை அவளுக்குப் பார்த்த உடனே பிடித்திருந்தது. அதாவது அவன் நடையை …

“பேஷன்ட்க்கு நீங்க யாரு?”

“நான் பேஷண்ட்டோட, பய்யனோட …” எனத் தங்களின் உறவுமுறையை நீட்டி முடிப்பதற்குள், “ஜீரீமீணீsமீ ஷ்ணீவீt ஷீutsவீபீமீ” என மருத்துவர் சொன்னதும் தனக்கு எந்த மானக்கேடும் நடக்காததுபோல அவன் நடந்து போன தோரணையில் அவள் சிரித்தாள். அவன் நடந்துபோன விதத்தை அன்று முழுக்க, வேலை முடிந்த பிறகும் நினைத்துச் சிரித்தாள். அவன் நடந்து போனதை உருவகப்படுத்துகையில் உபரியாக அவன் முகமும் அவள் நினைவில் ஒவ்வொரு முறையும் வந்து அது மிகப் பழக்கப்பட்ட முகம்போல ஆகி அவனை இன்னும் ஒரு முறை பார்க்க வேண்டுமென அபிலாஷையை அவளுக்குள் ஏற்படுத்தியது. லாரன்ஸின் உதவியால் அது நடக்கவும் செய்தது. அவன்

வரும் நேரம் நெருங்கியும் அவனைக் காணவில்லை. சிகிச்சையறைக் கடிகாரத்தில் முள் பிரச்சனை இருக்குமென்று தன் கைக்கடிகாரத்தை நொடிக்கொரு முறை பார்க்கும்போது, ‘சை, இதென்ன அலைச்சல்’ என்று அவளுக்குத் தோன்றியது.

அவளுக்கும் அவனைப் பிடிக்குமென்றாலும் அவளாகவா தேடித்தேடிப் போனாள். அவனாகவே இவளைச் சுற்றி வட்டமிட்டான். இத்தனைக்கும் அவனை ஒவ்வொரு முறையும் இடம், பொருள் பார்க்காது கடிந்துகொண்டாள். கண்களாலும், கரங்களாலும் தன் உடலைத் தின்னுவதற்கு நேரம் பார்த்துக்கொண்டிருப்பவர்களுள் ஹாஸ்டலிலுள்ள ஒருசில தோழிகள் உட்பட அவர்களிடமிருந்து தன்னைக் காத்துக்கொள்ள கோபத்தை ஒரு கவசமாக அணிந்தணிந்து அந்தக் கவசம் உடம்போடு இறுகிப்போய் அதுவே ஒரு குணமாக மாறிவிட்ட உடம்புக்காரி. அதனால்தான் தன்னையும் மீறி, தன்னையும் அறியாமல் தாட்சண்யமின்றி அவனைத் திட்டிவிடுகிறாள். அவனும் சுரணையே இல்லாமல் மறுநாள் வந்து சிரித்துப் பேசுகிறான். சிரிப்பு என்றால் சப்தமிட்டுச் சிரிக்கும் சிரிப்பென்று சொல்ல முடியாது. சந்தோஷம் அதிகமாகி அவன் பேசத் தடுமாறிய ஆரம்ப கால அனுபவங்களினால் உண்டான முதிர்ச்சியினால் அவளுடன் பேசுகிற சந்தோஷத்தைப் பேசும்போதே அனுபவிக்கிறோம் என்கிற குதூகலத்தை அடக்கி மிகக் கட்டுப்பாட்டுடன் பேசுவான். வாய் மட்டும் புன்னகையை அடக்கிக்கொண்டு ஒரு வேண்டுதல் புரியும். எதை எதையோ பேசுவான். தயார் செய்ததற்கும் அவன் பேசுவதற்கும் சம்பந்தமே இருக்காது. தாய் தன் மழலையின் நடையை ரசிப்பதுபோல அவனின் தடுமாற்றத்தை ரசித்துக்கொண்டிருப்பாள். குழந்தை விழுவதுபோல தெரிந்தால் தாய் ஓடிப்போய் அணைத்துக்கொள்வாள். ஆனால் அவனுக்கு அது மாதிரி எந்த உபாயமும் அவளிடமிருந்து கிடைத்ததில்லை. அவனும் தடுமாற்றத்திலிருந்து மேலேறி வந்து மையமான ஒரு விஷயத்தை அடைந்து அதைப் பற்றிப் பேசுவான். எதிர்முனையில் பதிலே இருக்காது. அவனுக்கு அதைப் பற்றிய கவலையும் இல்லை.

அவளிடம் பேசினால் மட்டும் போதும். அதிலேயே திருப்தி கண்டுவிடுகிற அல்ப முகத்தோடு அவன் போக, அவனைத் திட்டுவது போல இவாஞ்சலின் ஏதாவது பேசுவாள். “இவ்வளவு சீக்கிரம் போகாதே. இன்னும் கொஞ்ச நேரம் என் எதிரே நில்” என்பதற்கு அவள் தரும் அனுமதிச் சீட்டு அது. ரூபனும் அதெல்லாம் தெரியாத “பப்பா” ஒன்றுமில்லை. கிரண்யா சொல்லிக் கொடுக்காத பாடங்களா?

எனக்குத் தெரியும் இவாஞ்சலின், இது நீ இல்லை. உன்னை விரைவில் தோற்கடித்துவிடுவேனென்கிற வெற்றிப் புன்னகையை அவன் வீச, அவள் “முடிந்த அளவு நான் தாக்குப்பிடிப்பேன் பார்” என்று புன்னகை அமுங்கிய கோபத்தோடு அவனைப் பார்த்துப் பிரகாசிப்பாள். அவள் பொம்மைத் துப்பாக்கியால் சுடுவதும் இவன் குண்டடி பட்டதுபோல மார்பைப் பிடித்துக்கொண்டு கீழே சரிவதுமான விளையாட்டுக்கு முடிவுகட்ட இவாஞ்சலின் விருப்பப்பட்டுத் தன் ஆயுதத்தைக் கீழே போட்டுவிடுவதற்குத் தயாராக இருந்தாள். சரணடையப்போவது மட்டும்தான் பாக்கி.

அவன் வருகைக்காகக் காத்திருந்தாள். அவன் விரித்த நட்புக் கம்பளத்தில் அவனுடன் கைகோத்து நடப்பதற்குத் தானும் தயாரென்பதை அவனிடம் எப்படிச் சொல்வது? குப்புறப் படுத்திருந்தவள் ஒரே அசைவில் மல்லாக்கத் திரும்பிவிடக் கூடாது. சிறு சிறு செய்கையின் மூலம் அவனுக்கு தெரியப்படுத்த வேண்டும். “ரூபன் நீயி எப்ப வருவ? இனி ஒரு நிமிசங்கூட காத்துட்ருக்க முடியாது.” எண்ண ஓட்டத்தில் அவள் கால்கள் தரையில் சற்று நேரம் கூட பாவவில்லை. நோயாளிகளைப் பார்க்க வந்த ஒவ்வொருவரிடமும் தானாகச் சென்று ‘பரிவுடன்’ பேசிக்கொண்டிருந்தாள்.

கேட்பதற்கெல்லாம் பதில் சொல்லாது எனத் தெரிந்தும் கைக்குழந்தையைத் தூக்கி வைத்து உங்க பேரு என்னவாம், என்ன சாப்டீங்களாம் என்று கொஞ்சிப் பேசுவதில்லையா? இவாஞ்சலினைத் தோளிலும் மடியிலும் தூக்கி வைத்துக்கொள்ளவில்லையே தவிர அவ்விதமாகவே தினமும் வந்து அவளுடன் பேசிக்கொண்டிருந்தான் ரூபன்.

அவளுக்கும் தன்னைப் பிடித்துவிட்டது என்றுணர்ந்தவன் சர்வநிச்சயமாய்க் காதல் திருமணம் தான் செய்துகொள்ளப்போகிறோம் என்கிற களிப்பில் தாடி வளர்க்க முடிவு செய்தான்! அவன் நினைத்த வேகத்திற்கு தாடி வளரவில்லை. அது தன் இஷ்டத்திற்கு பொறுமையாகவே வேலையை ஆரம்பித்தது.

அவனுக்குப் பெண் பார்க்க வேண்டிய பொறுப்பு ரெஜினா, நகோமியம்மா, ஜெயசீலன் ஆகியோர்களிடம் இருந்தபோது அவனை அவர்கள் துன்புறுத்தியது கொஞ்ச நஞ்சமல்ல.

“இனிமே உங் இஷ்டத்துக்கு முடி வெட்டாத சைடு கோடு எத்து தல வாரு” - ரெஜினா.

“எப்பா ரூப்னு ஒருத்தங்கிட்ட சொல்லி வெச்சுக்றேங். எப்பவோணா பொண்ணு பாக்கக் கூப்டுவாங்கோ. இந்த ஆட்டுதாடிலாங் வாணா ராஜா” - நகோமியம்மா.

“ரூபனு, புடிப்புலாங் போவோ எவ்ளோ சம்பளங் குடுப்பானுங்கோ உனுக்கு?”

“தே … பார் சித்தப்பா, எத்தினி வாட்டி சொல்றுது உனுக்கு … ரோட்ல பாக்றப்பலாங் கேக்காதன்னு?”

“புள்ள. அது இல்ல. இந்த மாசங் சம்ப்ளங், கிம்ப்ளங் எதுனா ஏத்திருப்பானுங்ளே அதாங் கேட்டேங்.”

“தெபார். அன்னிக்கு சொன்னதுதாங் எங் சம்ப்ளங். வுன்னுங்ஒரு வருஷத்துக்கு ஒர்ரூபா கூட மாறாது. அந்த சம்பள்த்துக்குப் பொண்ணு பாரு.”

“ஏன்டா. தொகுர்ற. நம்ம ஜாதில பொண்ணுங்க முன்னமாரி இல்ல. எல்லாங் டபுள் டிகிரி பட்ச்சி, மாசம் இருவதாயிரங், முப்பதாயிரங்னு சம்பாரிச்சினு வர்துங்கோ, சாமானியத்துல பொண்ணு குடுக்க மாட்ரானுங்கோ.”

“இப்போ என்னன்னா பண்ண சொல்ற அதுக்கு?”

“நீ ஒன்யும் பண்ண வாணா. கம்னு இரு. சூப்பர் பொண்ணு ஒன்னு பாத்து வெச்சிக்கிறேங். பொண்ணு அவங்க அப்பா புளியாந்தோப்பு டேஷன்லதாங் ஏட்டாக்றாரு. செவ்வாப்பேட்டில சொந்த வீடுகிதாங். பொண்ணுங் கம்யூட்டர் பச்சிக்கிதாங். உனுக்கு குதிருடும்பார் அது. ஒருநாள் அவர பாக்கக் கூட்னு போறேங். ஆனா … தெபார், இந்த வித்தகாட்றவங் மாரி சட்டலாங் போட்னு வர கூடாது. நல்லா புல்லா சேவ் பண்ணி, டிப்டாப்பா ட்ரெஸ் பண்ணினு வர்ணுன்னா?”

அம்மா இவாஞ்சலின், உனக்கு நன்றி! இனி இவர்களின் நெறிமுறைகளுக்குக் கட்டுப்பட வேண்டிய அவசியமில்லை. தாடி வளர்க்கலாம். பழையபடி ஒரு காதில் கம்மல் போட்டுக்கொள்ளலாம். வண்ண வண்ணமாக முடிக்குச் சாயம் அடித்துக்கொள்ளலாம். ஆனால் இதையெல்லாம் செய்வதற்கு முன்பாக உன்னிடமிருந்து ஆணித்தரமான நட்பை உறுதிப்படுத்திக்கொள்ள வேண்டும். நட்பு என்ன நட்பு? காதலைச் சொல்லிவிட வேண்டியதுதான். நீயும் அதைத்தான் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறாய். இன்னும் இரண்டு நாட்கள் பொறுத்துக்கொள். உன் பிறந்த நாள் வருகிறது. ஒரு கவித்துவமான அன்பளிப்புடன் நள்ளிரவு …

வேண்டாம் எனக்கு ராத்திரி என்றால் பயம். அதிகாலை உன் ஹாஸ்டல் அருகே வந்துன்னைச் சந்திக்கிறேன். என்ன அன்பளிப்பு? துணி, கைக்கடிகாரம், பூங்கொத்து. ம்ஹூம். கவித்துவமான அன்பளிப்பின் வரிசையில் இவையெல்லாம் எப்படி வரும்? என்னுடைய முதல் அன்பளிப்பைப் பற்றி நீ நம்முடைய பேரன், பேத்திகளிடம் சொல்லும்போது “வாவ்!! வாட்ட ரொமாண்டிக் மேன் அவர் தாத்தா” என்று குழந்தைகள் என்னை நினைத்துப் புளகாங்கிதம் அடைய வேண்டும்.

வைரமுத்து வகை காதல் கவிதையொன்றைச் சொந்தமாக எழுதி, கூகுளின் உதவியோடு எழுத்துருவம் கொண்ட அனைத்துலக மொழிகளிலும் அக்கவிதையை மொழிபெயர்த்து ஒரு நோட்டு முழுக்க வண்ண வண்ணப் பேனா மையினால் எழுதி “ஹாப்பி பர்த்டே இவாஞ்சலின்” எனச் சொல்லிக் கொடுக்கலாமா? …

கிரண்யாவிடம் பயன்படுத்திய அதே பாணி! நினைத்துப் பார்த்தால் அதை வாங்கிய கிரண்யா பெரிதாகப் பரவசமடையவில்லை புரட்டிப் பார்த்துவிட்டு “நைஸ் ஒர்க்டா” எனச் சொல்லி அளவாகச் சிரித்தாள்.

என்ன கொடுக்கலாம்?

இவ்வளவு கற்பனைப் பற்றாக்குறையை வைத்துக்கொண்டு ‘நாவல்’ வேறு எழுதத் துணிந்து விட்டோம் என்று அவன் நினைக்கையில் வானம் பார்த்து எச்சில் துப்பிக்கொள்ள வேண்டும் போலிருந்தது. டீம் மீட்டிங்கில் உட்கார்ந்துக்கொண்டிருந்ததால் செய்ய முடியவில்லை.

~

ராத்திரி பதினொன்றரை மணி இருக்கும். தூக்கத்தை வரவழைக்க முயன்று தோற்றுப்போய் ‘அது வரும்போது வரட்டும்’ என்று தூக்கத்தை அவமதிப்பது போலக் கண்களை விசாலமாகத் திறந்து வைத்துப் படுத்துக்கொண்டிருந்தான். ரெஜினா நடந்து வந்து அவன் நெற்றியில் ‘இயேசு இரத்தத்தால்’ சிலுவை போட்டுவிட்டு …

“இப்ப எப்டிகிறாரு அவ்ரு. எதுனா தேரிகிதா?”

“ம்ச்ச் … இல்ல. அப்டியேதாங்க்றாரு. ஒரொரு நாளிக்கு ஒன்னொன்னு சொல்றானுங்கோ.”

“சபையிலந்து நாங்க வோணா வந்து ஜெபம் பண்ட்டா?”

“மோவ், வேஸ்ட்டா வந்து மொக்க வாங்காத. உங்ளலாங் உள்ளவுட மாட்டானுங்கோ.”

“அதுன்னா … அவ்ளோ பெரும சிலாக்கியம் புச்ச ஆஸ்பிட்டலு. அவ்ளோ பெரிய ஜிளச்சிலேயே வுட்றானுங்கோ.”

படுத்திருந்தவன் எழுந்து உட்கார்ந்து ரெஜினாவைப் பார்த்து மெதுவாகக் கேட்டான்.

“நா ஒன்னு கேக்றேங். அடுத்தவங்களோட பலவீனத்தப் பயன்படுத்தி, உங்க மதத்த திணிக்க பாக்கிறீங்களே. உங்ளுக்கே ஒரு இதுவா இல்ல?”

“எடு தொடப்பக்கட்டய … அதுன்னாது உங்க மதங்? நீ தேவனுக்காக அவருக்கு ஊழியங் செய்றதுக்காக ஒப்புவிக்கப்பட்ட புள்ளங்கிறத மறந்துடாத. துன்மார்க்கரோட சேந்துகினு சபைக்கு வராம அந்தி கிறிஸ்து மாதிரி பேசினுகிற நீ … ரெண்டுநாள் உபவாசங் இர்ந்து உன்ன ஜெபத்துல வெச்சேன்னு வெச்சிக்கோ. மகன … நிர்மூலமாய்டுவ நீ.”

ரெஜினாவின் ஆங்காரத்துக்கு பதில் சொல்ல வெறுப்புற்று லுங்கியைத் துடுப்புக்கட்டி எழுந்தான். சுவராணியிலிருந்து சட்டையை எடுத்து ஒரு கையில் மட்டும் மாட்டிக்கொண்டு வெளியே போகிறவனை தொலைக்காட்சிப் பெட்டியிலிருந்து சத்தம் வராமல் நாடகம் பார்த்துக்கொண்டிருந்த நகோமியம்மா,

“எப்பா, இந்நேரத்துல எங்கடா போற?”

“மகன ஆயா, எல்லாங் உன்னால்தாங்” என்று ஆள்காட்டி விரலால் நகோமியம்மாவைச் எச்சரித்துச் சென்றான்.

~

படிக்கட்டிலிருந்து தொப்பு தொப்பென்று கீழிறங்கும்போது இவாஞ்சலினுக்குப் பிறந்தநாள் பரிசாக என்ன கொடுக்கலாம் என்கிற ஞானம் உதயமாகியது. ஒரு விஷயத்தைச் சிறப்புறச் செய்யவேண்டுமென்று நாளும் பொழுதும் அதைப் பற்றி மட்டுமே யோசித்த பிறகும் வழி பிறக்காமல் விழித்துக்கொண்டிருந்தபோது அச்சிந்தனையிலிருந்து சற்று விலகி வேறொன்றில் கவனம் செலுத்துகையில் நாளும் பொழுதும் யோசித்த விஷயத்திற்கு வழி சொன்ன மூளையின் விந்தையை எண்ணிப் புருவம் உயர்த்தினான். படிக்கட்டிலிருந்து மேலேறி வீட்டுக்கு வந்து பைக் சாவியை எடுத்துச் சென்றான். ரெஜினா, நகோமியம்மாவின்

விசாரிப்புகளுக்கு “தோ வந்துடுவேங்” என்று பதில் சொல்லி பைக்கை எடுத்துக்கொண்டு எழும்பூரில் பூபாலன் வேலை செய்யும் ஏ.டி.எம். நிலையம் நோக்கிப் போனான்.

ஏ.டி.எம். வாசலின் ஓரத்திலமர்ந்து ஐந்து ருபாய் ‘ஓடோமொஸ்’ களிம்பை ட்யூப்பிலிருந்து பிதுக்கிக் கை, கால்களில் பூசிக்கொண்டிருந்த பூபாலன் அருகில் ஒரு வாகனம் வந்து உறுமியதும் ஏறிட்டுப் பார்த்தார்.

“வாப்பா, ன்னா இந்தப் பக்கங் . .?”

அவர் கையிலிருந்த ஓடோமோஸை அவன் பார்த்ததை உணர்ந்தவர் “கொசுக்கடிக்கு” எனச் சிரித்து மேல்மூடியைத் திருகி அதைப் பத்திரப்படுத்தி சட்டைப் பையில் வைத்துக்கொண்டார்.

வண்டியை ஒரமாக நிறுத்திப் பூட்டி அதை யாரும் தன் சொந்த உபயோகத்திற்குப் பயன்படுத்த முடியுமா என்று வண்டியின் கழுத்தை ஒடித்துப் பார்த்துவிட்டு முடியாதென்றவுடன் திருப்தியுடன் பூபாலனிடம் சென்றான்.

“நல்லா பூட்னியாப்பா? முந்தாநேத்துகூட ஒரு பல்சர சூர உட்னு போய்ட்டானுங்கோ.”

“ஆங் பூட்னணாங்”

“ன்னா காசு எடுக்க வந்தியா?” - அவர் அருகிலிருந்த நாய் அவனைச் சுத்திச் சுத்தி வந்து முகர்ந்தது.

“ஏய் …போ … த்சு … போ … ஒன்னியும் பண்ணாதுப்பா. அன்னிக்கு ஒருநாள் ரெண்டு பட்ரு பிஸ்கெட்டு போட்டேங். அவுள்தாங் போ … ராத்திரில இவ்ருதாங் நம்ளுக்கு பாட்னரு.” -

சிரித்தார்.

“உன்ன பாக்கதாணா வந்தேங்.”

நாய் தன் பழைய இடத்திற்குப் போய் நிலைகொள்ளாத அன்பை வால்வழியாக வெளிப்படுத்திக்கொண்டிருந்தது.

“எங் மாமாவுக்கு ஒன்னியுங் இல்லியே” - பூபாலனின் முகம் மாறியது.

“அவ்ருக்கு ஒன்னியுங் இல்லன்னா, அப்டியேதாணா வெச்சினுகிறானுங்கோ.”

“தெவ்டியா புள்ளிங்கோ, புல்லா கறந்துட்டுதாங் வுடுவானுங்கோ போலக்து. டிச்சார்ஜ் பண்ணிகினு ஜி.எச்ல கூட்னு போய் பாக்லானா அது ன்னவோ எங்க அக்கா வாணா வாணான்து” தொண்டையில் சிக்கிக்கொண்டிருந்த சளிக்கு விடுதலைக் கொடுத்துவிட்டுத் தொடர்ந்தார்.

“முன்னமாரி இல்லபா ஜிஎச்சி … சூப்பரா பாக்ரானுங்கோ. பஸ்ட்க்ளாஸ் ட்ரீட்மென்ட்டு. காப்பாத்த முடியுமா முடியாதான்னு க்ளியர் கட்டா சொல்டுவானுங்கோ … ங்கோத்தா இவ்னுங்கமாரி வெச்சினு ஜோக் காட்னிருக்க மாட்டானுங்கோ … நீ ன்னாபா சொல்ற?” என்று கேள்வி கேட்டவர் அவன் பதிலை உடனே எதிர்பார்க்காமல் சூப்பர்வைசர் வரும் நேரமென்பதால் தனக்கு அருகில் பெருச்சாலியைப் போலிருந்த காலணிகளைத் தன் பக்கம் இழுத்துக் கால்களில் பொருத்த ஆரம்பித்தார்.

லாரன்ஸின் உடல்நிலை குறித்த எந்த அக்கறையும் கருணையுணர்வும் அவனுக்கு இருக்கவில்லை. இவாஞ்சலினை அருகில் பார்ப்பதற்காக, அவளிடம் பேசுவதற்காக லாரன்ஸைப் பற்றிய விசாரணையை மேற்கொள்வான். பூங்கொடியை அருகில் வைத்து லாரன்ஸின் தேகநிலையைப் பற்றிய கேள்வி – பதிலை இருவரும் மனதார பகிர்ந்துகொள்ளாமல் உதடுகள் மட்டும் அவரைப் பற்றிப் பேசக் கண்களில் வேறொன்றை எதிர்பார்த்துப் பேசி வழிவார்கள். “அவர் செத்து விட்டார்” என இவாஞ்சலின் சொல்லியிருந்தால் கூட “ஓ அப்டியா?” என்று இழுத்து இழுவையின் இடைவெளியில் அடுத்து என்ன கேள்வி கேட்டு இவளுடன் பேச்சைத் தொடரலாமென்று யோசிக்கும் நிலையில்தான் அவன் தினமும் வந்து போனான்.

இவாஞ்சலினைத் தன்வயப்படுத்த வேண்டுமென்கிற உத்வேகத்திற்கு அவனிடமிருந்த கருணையையும், மனிதாபிமானத்தையும் காவு கொடுத்தான். நாம் ஏன் இவ்வளவு கீழ்த்தரமாக நடந்துகொள்கிறோம் என நினைக்கும்போது நினைப்பின் ஆயுள் சற்று அதிகமாக

இருப்பின் அது அப்படியே குற்ற உணர்ச்சியாக மாறி அவனுக்கு சௌமியனின் முகம் நினைவுக்கு வரும். அது இன்னும் தன்னை ரணப்படுத்தும் என்பதால் வலுகட்டாயமாகச் சிந்தனையை அதிலிருந்து விலக்கி வேறொன்றை யோசிப்பான்.

அவன் சற்று அமைதியாய் இருப்பதை வைத்துத் தன் குடும்பத்தினர் சமீப காலமாக அவனுக்கு நிறைய அலைச்சலும், உளைச்சலும் கொடுத்துக்கொண்டிருக்கிறோம் என்று அவன் மௌனத்திற்கு அர்த்தம் கற்பித்து, ன்னாப்பா … உனுக்கு வேற தேவல்லதா கஷ்டம் குத்துனுகிறோம்பா. எங்க சௌமி இந்தா …"

நினைவிலிருந்து சிரமப்பட்டு அகற்றிய முகத்தை பூபாலன் நினைவுக்குக் கொண்டுவருகிறார்.

"ணோவ், அதுலாங் எனுக்கு பிரச்சினியே இல்லனா … எங்க அப்பாமாறிணா அவ்ரு. டெய்லி நானே போய் பாத்துக்கிறேங்."

"எம்புள்ள அநியாய்மா போய்ச்சேப்பா …" பூபாலன் பேன்ட் பாக்கட்டிலிருந்து தைலத்தை எடுக்க, அது ஏதாவது தின் பண்டமாக இருக்குமா என்று நாய் எட்டிப்பார்த்துத் திரும்பவும் தலை கவிழ்ந்துகொண்டது. சௌமியனைப் பற்றி நினைத்ததால் அவர் மூக்கில் நீர் சுரந்தது. "மிசுமிசுமிசு" என்று மூக்கை ஆள்காட்டிவிரலால் பல் தேய்ப்பதுபோலத் தேய்த்து மௌனமாக நின்றிருந்தார்.

"ணோவ், எனுக்கு ஒரு ஹெல்ப் பண்ணோன்னா நீ."

"சொல்லுப்பா" என்றார். - அவருக்குக் குரலே எழவில்லை.

"ஒன்னுங் இல்லனா, இந்த ஏடிம் மிஷன ஒட்ச்சி எனுக்கு ஒரு ரெண்டு லட்சருபா காசு எத்துக்குண்ணா"

"டமாசுபா நீ" - அவனைப்பார்த்து சிரித்தார்.

இறுக்கமான சூழலைத் தளர்த்திய வெற்றி மிதப்பில் …

"ஒன்னியும் இல்லனா எனுக்கு ஒரு ட்ராயிங் போட்டுத் தரணுண்ணா நீங்க."

“ட்ராயிங்கா …”

பழைய காதலியின் பெயரை யாரோ உச்சரிக்கக் கேட்டது போல “ட்ராயிங்கா?” எனக் கேட்டுப் பரவசமானார்.

“ஆமாண்ணா”

“ன்னா ட்ராயிங்பா” - மீசையின் இரு முனைகளையும் ஒரே நேரத்தில் நீவி விட்டுக்கொண்டு ஆவலானார்.

“இல்லண்ணா நா ஒரு பொண்ண கல்யாணங் கட்டிக்கப் …”

அருகிலிருந்த நாய் சமயத்திற்கு ஏற்றாற்போல் “ழ்ழ்ழ்ழ்ழ்ழ்ழ்” என்றது.

அதற்குப் பிரதியுத்திரமாக, “ஏய் … த்சே … நீ சொல்லுப்பா” என்றார் பூபாலன். அவருக்கு அந்நேரத்தில் உண்டான எரிச்சல் நாய்மீது மட்டும் இல்லை.

“அந்தப் பொண்ணுக்கு நாளன்னிக்கி பொறந்தநாளுணா, அதாங் அந்த பொண்ணியே படமா வர்ஞ்சி கிப்ட்டா குத்தா நல்லா இருக்குன்னு … உங்கிட்ட வந்தண்ணா.”

“அதான் கம்யூட்டரே பக்காவா வரியுதாமேப்பா” - தன் ஜென்ம எதிரியின் திறமையை மதித்து கௌரவத்தோடு சொன்னார் பூபாலன்.

“ணோவ், நீ வேறண்ணா. ன்னாதாங் இர்ந்தாலும் கைல வரியிற மாரி வருமா”

“செரி வுடு … ன்னா இப்போ. வர்ஞ்சில்லாம் … பொண்ணு போட்டோ, கீட்டோ வெச்சிக்கிறியா” - தன் கனவுக்கோட்டை கண நேரத்தில் தகர்ந்த கவலையின்றி வரைய வாய்ப்பு கிடைத்த ஆர்வத்துக்கு மாறினார் அவர்.

“இருக்குதுனா” சட்டைப்பையிலிருந்து செல்போனை எடுத்தான். அருகிலிருந்த நாய் எதிர்த் தாக்குதலுக்கு தயாரான முகத்தோடு அவனை ஏறிட்டுப் பார்த்தது.

செல்போனை பூபாலனிடம் காண்பித்து “ஆனா இதுலகிற மாரி இல்ல. நாங் சொல்ற மாரி வரியணுன்னா.”

மஞ்சள் நிற ஆடை அணிந்த இவாஞ்சலின் செம்பருத்திப் பூவொன்றைப் பறிக்க எத்தனிக்கும் புகைப்படம். அவளின் பேஸ்புக் பக்கத்திலிருந்து எடுத்து, சேமித்து வைத்திருந்த படத்தை பூபாலன் பார்த்ததும்,

“இந்தப் பொண்ண எங்கியோ பாத்த மாரிக்தே?” - என்றார்.

அவள் இன்னும் தன்னை ஏற்காத சூழலில் விஷயத்தை பூரணமாக இவரிடம் சொல்வது உகந்ததல்ல. தன்னை ஒரு பச்சை சந்தர்ப்பவாதி என அவர் நினைத்துக் கொள்ளக் கூடும் என்றுணர்ந்தவன் தோரயமாகச் சிரித்துவிட்டு அவரிடமிருந்து செல்போனை வாங்கிகொண்டான்.

“பொண்ணு எந்த ஏரியாப்பா?”

“கேர்ளா சைடுணா.”

“மலியாளிஸா?”

“இல்லண்ணா தமிழ்காரங்கதாங்” - மேற்கொண்டு அவர் குடையாதவாறு,

“ணோவ், நாளிக்கே வர்ஞ்சி குத்துண்ணா.”

“நாளிக்கேவா?”

“ஆமாண்ணா.”

ஏடிம்மிலிருந்து பணம் எடுத்து வெளியே வந்த ஒருவருக்கு ‘சல்யூட்’ அடித்த கையை இறக்கிவிட்டு பூபாலன் கேட்டார் ...

“எப்டிபா ஒணும் ட்ராயிங்கி?”

“உங் இஷ்டண்ணா, எப்டி வேணா வரி. ஆனா நறுக்குன்னு இருக்குணுங்.”

“அதுலாம் போட்டுல்லாம்ப்பா. ஆன்ட்மேட் பேப்பர் வெச்சி வாட்டர் பெயிண்டிங்ல பண்ணிக்குத்துற்றேங். ஆயில் பெயிண்டிங்னா கொஞ்ச அமவுண்ட்டாவுங்.”

“ணோவ், காசு மேட்ரு இல்ணா, ட்ராயிங் பக்கவா இருக்கணுங் அவுள்தாங்.”

“அய. காசு எனுக்கு இல்லப்பா. சாமா வாங்றுதுக்கு சொல்றேங்.”

“இருக்கிட்டுன்னா. எவ்ளோ வோணா செலுவு ஆவுட்டுங்.”

“அவுசரப்படாதபா. கல்யாணங் ஆன்துக்கு அப்றம் நெறியா செலுவு பண்ணு யாரு வாணான்றா?”

மேற்கொண்டு அவரைக் கட்டாயப்படுத்தி ‘ஆயில் பெயிண்டிங்கில்’ படம் வரைய வைப்பது தொழில்நேர்த்திக்கு பங்கம் விளையும் என்பதால் …

“ஆங் செர்ணா. நீ வாட்டர் பெயிண்டிங்லயே போட்டு குத்துன்னா.”

“எப்பா வூட்ல பொருளு கிருளு ஒன்யுங் இல்ல. காய்ல்ல போயி வாங்கினு வந்து குத்துரு.”

“ன்னான வாங்கினு வர்னுன்னா?”

“சொல்றேன் …”

“இருணா, இருணா நோட் பண்ணிக்கிறேங்.”

“லிஸ்ட்லாங் ஒன்யும் இல்லபா. அப்டியே மன்சுல வெச்சிக்கோ … புஸ்க் புஸ்க்குனு போன எத்துகிற” என்று சிரித்தவர் தொடர்ந்தார் …

“ஆன்ட்மேட் பேப்பர் மூணு வாங்கிக்கோ, பிரெஸ்சு சின்து ஒண்ணு வாங்கிக்கோ, நம்ம வூட்லருந்ததுலாங் கெட்டி தட்டிப்போயிச்சி, அப்றங் வாட்ருகலர் பாக்ஸ் ஒண்ணு வாங்கிக்கோ, கேமல் வாங்கு அதாங் நல்லாருக்குங். அந்த கேமல்ல டப்பா மேல ஸ்டூடன்ட் கலர்னு போட்டுருக்குங். அது வாங்க் கூடாது, கேமல் ஆர்டிஸ்ட் கலர்னு போட்டுருக்குங். அது வாங்கிக்கோ ன்னா?”

“ஆங் செரிணா. பக்கா”

“வண்டிதான வெச்சிக்கிற, அப்போ காய்ல்ல நம்ம ராயப்பேட்ட அஜிந்தா ஓட்லுகிட்ட சீதாராமங் கடைக்குப் போய்டு. அங்கப்போய் யாரக் கேட்டாலுங் கடிய காம்ச்சி வுட்ருவாங்கோ. அவ்ளோ பேமசு. எதுக்கு சொல்றேங் கேளு. ஒரு கண்ணை மட்டும் சுருக்கிச் சொன்னார் “அங்க

தாங் ஹான்ட்மேட் பேப்பரு பஸ்ட் க்ளாஸ் கோலிட்டி கெடிக்குங். பத்து மணிக்குதாங் கட தொறாப்பாங்கோ. நீ செட்டா வாங்கினு ஒரு பயினொரு மணி போல வீட்டாண்ட வந்துடு. இன்னா?"

தன் தொழில் சம்மந்தப்பட்ட வார்த்தைகளைப் பயன்படுத்துவதில் அவருக்கு அவ்வளவு குஷி. இன்னொரு முறைகூடக் கடையின் முகவரியையும், என்னென்ன பொருட்கள் வாங்க வேண்டுமென்பதையும் சொல்லத் தயாராகவே இருந்தார்.

"செரிணா. ம்ச்ச். காலில வேஸ்ட்டா உங்க தூக்கத்த வேற கெடுக்கப்போறேங் போலக்து" - மனதில் குற்ற உணர்ச்சி பெரிதாக இல்லையென்றாலும், இந்த இடத்தில் அவரின் தூக்கத்தைப் பற்றிக் கவலைப்படுவது நாகரிகமான செயல் என்று கருதி அவ்வாறு கேட்டான்.

"அயோ, உனுக்கு செய்றதுக்கு இன்னாப்பா, பாவம் புள்ள நீ எ … வ்ளோ பண்ற?"

"செரிணா ரொம்ப டாங்க்ஸ்ணா" என்று சொல்லிவிட்டு அவன் நகர்ந்ததும் பூபாலன் ஏய் … த்சு என்று நாயை அழைத்தார்.

அது அவர் மீது எகிறி தன் முன்னங்கால்களால் அவரைத் துழாவியது.

"ஏய் … போ போ" என்று புன்முறுவலுடன் அவர் நாயைத் துரத்த அது அவரை விட்டபாடில்லை.

சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். நாயின் நன்றியுணர்ச்சி அவனைச் சலனப்படுத்த, அந்த இடத்திலிருந்து வேகமாக நடந்து வண்டியை நோக்கிச் சென்றான்.

நவம்பர் - 1 இவாஞ்சலின் பிறந்தநாள்.

நீண்ட இரவை நகர்த்திய அசதியின் விளைவாக அவனுக்குப் பல கவிதைகள் தோன்றினாலும் இரத்தின சுருக்கமாக இருப்பதனால் …

“இவாஞ்சலின், எத்தனை பேருக்குத் தெரியும்?

நீ நவம்பரில் பூத்த ஒரு டிசம்பர் பூ என்று!!”

மேற்கண்ட இருவரிக் கவிதையை அவளுக்குக் கொடுக்க வைத்திருந்த அன்பளிப்பு டப்பாவின் முகப்பில் எழுதிக் கொடுக்கலாம் எனத் தீர்மானித்தான். பீரோவைத் திறந்து அன்பளிப்பை எடுக்கும் போது கவிதையிலிருந்த தர்க்கப் பிழை உறைத்தது.

கவிதையின் முதல் வரியில் வரும் “எத்தனை பேருக்குத் தெரியும்?” என்கிற வார்த்தைகளைக் கவித்துவமாக சிந்திக்காமல், “இதுக்கு முன்னாடி எத்தனை பேருக்குத்தெரியும்?” என்கிற சந்தேகக் கண்களுடன் இவன் கேட்கிறான்போல என அவள் சிந்திப்பதற்கு வாய்ப்பிருப்பதால் உறவு ஆரம்பிக்கும் முன்னரே அஸ்தமனம் ஆகும் நிலைமையை உருவாக்கிவிட வழி வகுக்காமல் செய்வதறியாது காலை ஐந்து மணிக்கு இயலாத மௌனத்தில் லயித்திருந்தான்.

மாதத்தின் முதல் நாள் என்பதால் ரெஜினாவும், நகோமியாம்மாவும் அதிகாலை துதி ஆராதனைக்கு விடியல் நான்கு மணிக்கெல்லாம் கிளம்பிவிட்டார்கள். குணசீலன் சுவரோடு சுவராக நித்திரையிலிருந்தார். அறையின் பெரும்பான்மை வெற்றிடமாக இருந்ததால் போர்வையை விசாலமாகத் தரையில் விரித்து வாங்கி வைத்திருந்த புதுத்துணியின் மடிப்புகளைச் சரி செய்ய அவற்றை எடுத்து அயர்ன்பாக்ஸில் ஒத்தடம் செய்தான். ஒரு கையில் சட்டையை இழுத்துப் பிடித்து மறுகையில் ஒத்தடம் செய்தபடியே … அன்பளிப்பைக் கொடுத்துவிட்டு அவளிடம் என்ன பேசுவது … துணியை ஒத்தடம் செய்கையில் சிந்தனையை வேறு விஷயத்தில் ஒருமுகப்படுத்துவது தவறென்பது சட்டையை இழுத்துப் பிடித்துக்கொண்டிருந்த மற்றொரு கையின் கட்டை

விரலும் உள்ளங்கை வெள்ளையும் சங்கமிக்கும் இடத்தில் அயர்ன்பாக்ஸ் சுடச்சுட மோதியபோது உணர்ந்தான். ஆனால் உடனடியாக உணர்ந்தது வலியைத்தான் … “ப்ப்ப்ப்பாஆஆஆஆ …”

குணசீலன் திரும்பிப் படுத்தாரேயன்றி இவனைப் பொருட்படுத்தவில்லை. தூக்க மாத்திரை என்றால் சும்மாவா?? அயர்ன் பாக்ஸ் முனையில் இவன் தோல் ஒட்டிச் சுருண்டிருந்தது.

எழுந்துபோய், அலமாரியில் இருந்த தேங்காயெண்ணையை ரெஜினாவின் தேவ பாஷையில் சொல்வதென்றால் “இயேசு இரத்தத்தை” காயத்தில் தடவி மின்விசிறியிடம் பிச்சை கேட்பது போன்று காண்பித்து நின்றான்.

மின்விசிறிக்காற்று வலி பட்ட இடத்தில் சிறகாய் வருடியது. என்ன சுகம்!! சுகத்தை வெகுநேரம் அனுபவிக்காதவாறு அயர்ன் பாக்ஸ் மேலுமொரு தீய காரியத்தைச் செய்தது. “தீய” காரியம்தான். சட்டையின் வலது பக்க மார்புப் பகுதியைத் தன் உடற்சூடு அதிகமனாதால் அயர்ன்பாக்ஸ் வாரியணைத்துக்கொள்ள தீய்ந்த வாசனை அதிலிருந்துக் கிளம்பியது. தன்னுடைய தவறுக்காக அயர்ன்பாக்ஸின் மீது கோபப்படவோ, சட்டைமீது பரிதாபப்படவோ அவனுக்கு நேரமில்லை. இன்னும் அரைமணி நேரத்தில் இவாஞ்சலினின் விடுதியருகே அன்பளிப்புடன் அஞ்சல்காரப் பையனைப் போல் நிற்க வேண்டும். அவசரக் குளியல், வேறொரு சட்டை, ஒற்றைக் கையின் உதவியினால் ‘ஸ்லிம் ஃபிட் ஜீன்ஸ்’ போடுவதற்கு மரண அவஸ்தை. எல்லாம் முடித்து காயமுண்டான கையில் வண்டிச்சாவி. மறுகையில் தலைக்கவசம், அன்பளிப்பு சகிதம் மாடியிலிருந்து இறங்கி வண்டியை எடுத்துக் கிளம்பிப் போனான்.

பிரதான சாலையிலிருக்கும் ஒயின்ஷாப் அருகே வண்டி விக்கலெடுத்து நின்றது. அதிகாலைக் குடிகாரர்கள் அங்கே இரைந்திருந்தனர். அவர்கள் யாவரும் தினமும் வாடிக்கையாக அங்கே வருபவர்கள். மற்றவர்களைப் போல போதையில் அரை நிர்வாணத்தில் தள்ளாடுவது, வீண்வம்பு செய்வது என இல்லாமல் அதிகாலைக்

குடிகாரர்களுக்கென பிரத்யேகமான சில குணங்கள் இருந்தன. காலையில் பக்தியுடன் குடித்துவிட்டுப் பிழைப்பு பார்க்கப் போகிற இவர்களால் சுற்றுவட்டாரத்தில் எந்தப் பிரச்சினையும் இருந்ததில்லை. விதிவிலக்காக யோசேப்பு போன்ற ஒருசிலர் அதிகாலைக் குடிகாரர்களின் பட்டியலிலும் இருக்கவே செய்தார்கள்.

யோசேப்பு ஓடி வந்து “ன்னா மச்சாங் இவ்ளோ காய்ல்ல.. ன்னா ஆச்சி வண்டி. தள்ளு வழிவுடு” என்றான்.

காலையிலிருந்து ஏற்பட்டுக்கொண்டிருக்கும் கெட்ட சம்பவங்களுக்கு மகுடம் வைத்ததுபோல் யோசேப்பைச் சந்திக்கிறோம் என நினைத்துக்கொண்டான்.

“ஏ ஒன்னியுங் இல்லடா பெட்ரோல் ஆன் பண்ல. வரேங் …”

கிளம்பியவனை வழி மறித்து யோசேப்பு கேட்டான்.

“ன்னா மச்சி, ஒன்னாந் தேதி எதுனா கவ்ன்ச்சிட்டுப் போ.”

யோசேப்பின் கண்கள் குழம்பாய்த் தகதகவென்றிருந்தன. மூக்குத் தண்டில் ப்ளாஸ்திரி ஒட்டியிருந்தான். யாரிடமோ அடி வாங்கியிருக்கக் கூடும்?

“இர்ரா, ஒரு வேலியா போறேண்டா. சக்சஸ் ஆச்சினா உனுக்கு பார்ட்டியே வெக்கிறேங் ன்னா?”

“அது அப்றமா, இப்ப ஒரு பத்ருபானா குத்துட்டுப் போ”

பர்ஸை பின்பாக்கெட்டிலிருந்து எடுத்து காசு கொடுக்கும் நேரம் நீண்டதாகத் தெரிந்தது. போகிற காரியம் தாமதப்பட்டுவிடுமோ என்று எரிச்சல். எரிச்சலின் இன்னொரு பரிமாணத்தை அவனிடம் காசு கொடுத்துவிட்டுக் கேட்டான்.

“ஏ.. ஏன்டா இவ்ளோ காய்ல்ல குடிக்க வர்ற? வர வர நீ ஓவரா போற யோசெ.”

“நீ வேற. இதுக்கப்றங் சர்க்கு அடிக்க மாட்டேங் மச்சி, ப்ரென்ட் ஒருத்தரு அட்த்த மாசங் அய்யப்பாக்கு மால போட சொல்லிக்கிறாப்ல. அவ்ரு செலுவிலியே கூட்னு

போறாராங். சும்மா ஜாலியா போய்ட்டு வர்லாங். ன்னா சொல்ற?''

யோசேப்பிடம் கேள்வி கேட்டதே நிறைவைக் கொடுத்தது. அவனுடைய பதிலோ மேற்கொண்டு அவனுடன் பேசுவதற்கோ இது காலமில்லை. "செரிடா நா வந்து பேசுறேங்'' எனச் சொல்லிக் கிளம்பிவிட்டான்.

"ரைட்டு மச்சி'' என்று சல்யூட் அடித்த யோசேப்பு, ஓய்வூதியத்தில் குடிக்கவரும் அறுபத்தைந்து வயதுடைய சக குடிகாரரிடம் நண்பனைப் பற்றிச் சொன்னான்.

"நம்ம ப்ரெண்டுதாங். பாரின் கம்பெனில வேல செய்றாங். சும்மாயில்ல ஆபிஸ் வண்டியே வீட்டுக்கு வந்து கூட்னுபோய் கூட்னு வந்து வுடுங்.''

பெரியவர் கேட்டார் "அப்போ ஏன் பைக்கில போறாப்ல?''

"அர்ஜென்ட் வேல, அதான் பைக்லியே போறாங். தெபார் நைனா அப்பகூடோ நம்மள பாத்துட்டு வண்டிய சடனா நிற்த்துனாம்பாரு, அதாங் ப்ரெண்டு. பாத்தாங், இந்த மச்சி வெச்சிக்கோன்னு கையில ஒரு காந்தி எத்து குத்தாங். நம்ம ப்ரெண்ட்ஸ்ஸுங்கலாம் பெரிய பெரிய எடம் நைனா ...'' யோசேப்பு எதை எதையோ பேசினான். குடிப் பழக்கத்திற்கு அடிமையாகி குடிநோயாளியாக மாறியவர்களிடம் குடித்ததற்கு முன்பு, பின்பு என்கிற வித்தியாசங்கள் அவர்களின் நடத்தையில் குறைந்துவிடுகின்றன என்பது அவனிடம் தெளிவாகத் தெரிந்தது.

"ஹாய்ங்க, இனிய பிறந்த நாள் வாழ்த்துக்கள்ங்க''

அவனைப் பார்க்காமல் நடந்துகொண்டே "ஓ ரொம்ப தாங்க்ஸ்ங்க'' என்றாள். மேலும் தொடர்ந்து "இங்கருங்க, ஏற்கனவே உங்ககிட்ட சொல்லிருக்கேன்ல, ஹாஸ்டல் கிட்டக்கலாம் வராதீங்கன்னுட்டு?''

"இல்லங்க, இன்னிக்கு உங்க பொறந்த நாளுல? அதான் வந்தேங்.''

"ஹெலோ, என் படே உங்களுக்கு எப்படிங்க தெரியும்?''

“அதெல்லாம் தெரியுங்க. நாட்ல தேவல்லாதல்லாங் எவ்ளவோ தெரிஞ்சி வெச்சிக்கிறோங் உங்க பொறந்த நாளு எவ்ளோ முக்கியமான்து …” சிரித்தான்.

“சொல்லுங்க எப்டி தெரியும்ட்டு?”

“அப்றமா சொல்றங்க. இந்தாங்க மொதல்ல இந்த கிப்ட்ட புடிங்க”

“அயோ, கிப்ட்லாம் வேணாங்க” இவாஞ்சலின் நடையை வேகப்படுத்திச் செல்ல அவளுக்கு நிகராகத் தங்க நிறத்தில் ஜ்வலிக்கும் ப்ளாஸ்டிக் காகிதத்தினால் சுருட்டப்பட்ட செவ்வக வடிவப் பொட்டலத்தைக் கையில் ஏந்திச் சென்றான். பாதசாரிகளில் அவசர வேலையாய் சென்றிருந்தவர்கள் உட்பட இவர்களை வேடிக்கை பார்த்தனர். மஞ்சள் பூதமாய் நின்றிருந்த பொறியியல் கல்லூரிப் பேருந்தில் அமர்ந்திருந்த மாணவர்கள் சிலர் இவர்களைப் பார்த்துக் கிசுகிசுத்தனர். ஒரு மாணவன் அலைபேசியில் படமெடுத்தான். சைக்கிளில் நாளிதழ்கள் கொண்டுபோன பையன் பெடலை மிதிக்கும் வேகத்தை மட்டுப்படுத்தி இவாஞ்சலினின் முகத்தைத் திரும்பிப் பார்த்துவிட்டுப் போனான்.

“எல்லோரும் பாக்கிறாங்க. ப்ளீஸ் போங்க. எனக்கு கிப்ட்லாம் வேணாங்க.”

“எவாஞ்சலின் வண்டியில ஏறு” என்று அதட்டினான். அவள் அசையவில்லை.

“சொல்றேல்ல ஒக்காரு” என்று குரலை உயர்த்தி அதட்டினான்.

என்ன ஒரு அதட்டல்? என்ன ஒரு நம்பிக்கை? அவன் கண்களை மிக நெருக்கத்தில் நேருக்கு நேராகப் பார்த்த அதிர்வில் அவள் தலைகுனிய …

அன்பளிப்பை வாங்கிக்கொண்டு பவ்யமாக வண்டியில் உட்கார்ந்தாள் … அவன் எங்கு கூட்டிப்போகிறான் என்கிற பீதியைவிட எல்லோருக்கும் பார்க்கும் படியாக அமைந்த வெட்கச் சூழலிலிருந்து தப்பித்தது ஆசுவாசமாக இருந்தது.

வண்டி அந்தச் சாலையிலிருந்து விலகிச் சற்று தூரம் கிளம்பியதும் …

“ஹெலோ எங்க கூட்டிட்டுப் போறீங்க?”

“நாங்க ஒரு டீம். வயசு பொண்ணுங்கள கடத்திட்டு போயி துபாய்ல வித்துடுவோம்.”

“இங்கருங்க காமெடி பண்ணாதீங்க. நா ட்யூட்டிக்குப் போகணும்.”

“நா கூடத்தான் ட்யூட்டிக்குப் போகணுங். இன்னைக்கு த்ரி ஹவர் பர்மிஷன் சொல்லிடுங்க.”

“ஹலோ, என்ன வ்ளாடுறீங்களா?”

“ஹலோ, நீங்க ஒழுங்கா அப்பியே கிப்ட்ட வாங்கியிருந்தா நா பாட்னு கம்முனு போய்ட்டிருப்பேங்.”

“யார்னே தெரியாத உங்கக்கிட்ட நா எதுக்குங்க கிப்ட் வாங்கணும்?”

“கொஞ்ச இருங்க ஒருத்தருக்கொருத்தரு மூஞ்ச பாத்துகினே சண்ட போட்லாங்” - நுங்கம்பாக்கம் பிரதான சாலையிலிருந்து இடது பக்கம் திரும்பி ஆட்கள் நடமாட்டம் குறைந்த தெருவில் ஒரு மர நிழலின் கீழ் வண்டியை நிறுத்தினான்.

வண்டியிலிருந்து இறங்கியதும் “இந்தாங்க உங்க கிப்ட்” என்று அவனிடம் கொடுத்தாள்.

“எவாஞ்சலின் இது உன்னோடது. நீ தான் வெச்சிக்கணுங்.”

“இல்ல எனக்கு வேணாங்க. யாருன்னே தெரியாதவங் …”

அவளருகில் சென்றான். அவள் பின்னகர்ந்தாள் …

“உனக்கு என்ன யார்னே தெரியாது?” அவன் ஒரு புருவம் மட்டும் உயர்ந்தது.

“தெரியும். ஆனா கிப்ட் வாங்கிற அளவுக் …”

அவள் கையைப் பிடித்தான். விரல்கள் குளிர்ந்துபோய் அப்போதுதான் சப்பிப்போட்ட ஐஸ்குச்சிகளைப் போலிருந்தன.

அவள் விடுவிக்க முயற்சித்தாள் … தன் கைகளை அவளிடமிருந்து எடுத்து அவளுக்குச் சுதந்திர உணர்வை அளித்தான். அவள் கண்களைப் பார்த்தான். அவனைப் பார்க்க முடியாமல் தலையைத் திருப்பி அன்பளிப்பை வண்டியின் இருக்கையின் மீது பத்திரமாக வைத்தாள்.

“இங்கப் பாரு எவாஞ்சலின். எனுக்கு உன்ன ரொம்பப் புடிக்குங். உன்ன பாக்கத்தான் டெய்லி லாரன்ஸப்பாவ பாக்க வர மாரி அங்க வரேங். அதுவே எனக்கு எவ்ளோ கஷ்டமாக்து தெரிமா … ஆனா உன்ன பாக்காம இருக்கவே முடியல. செம்ம காண்டாக்து. நீ பண்றது எல்லாமே புடிச்சுகிது. நீ என்ன பாக்குறது. பாக்காமயே போறுது. நீ நடந்து போறுது. நீ உக்காந்துனு இருக்கிறது. ப்பா சத்திமா என்னால தாக்குப்புடிக்க முடியல. நா உன்னத் தாறுமாறா லவ் பண்றேங். லைப்லாங் உங்கூடவே இருக்கணுங். உனுக்குங் அப்டி தோணுச்சினா இந்த கிப்ட்ட எத்துக்கோ.”

“என்ன உங்க கையில” - இவாஞ்சலின் கேட்டாள்.

கண்ணீர் பார்வையை மறைத்ததால், கடினத்துடன் அயர்ன் பாக்ஸ் சூட்டை வெறித்துப் பார்த்துச் சொன்னான்.

“காய்ல்ல துணி அயர்ன் பண்ணும்போது தெரியாம சூடு வெச்சிக்கினேங்.”

“ஆயின்ட்மென்ட் எதாவது போட்டிங்களா?”

பார்வையை வேறுபக்கம் திருப்பிக்கொண்டு சொன்னான். “அதுலா இருக்கட்டுங். நீ எங்கூட எப்பியுங் இருப்பியா? என்ன கல்யாணங் கட்டிப்பியா?

“என்ன கிப்ட் இது? இத பிரிச்சிப் பாக்கலாமா? - அடக்கியதையும் மீறி வெளிப்பட்ட பூரிப்பு அவள் முகத்தில். வாயைச் சுற்றிக் குழிகளும், கோடுகளும் பிறந்தன.

அவள் முகத்தில் மகிழ்ச்சியைப் பார்த்தவன் அதற்கு எதிர் வினையாக, நின்ற இடத்திலிருந்தே எகிறி மரக்கிளையைப் பிடித்துத் தொங்கினான்.

அது தனவந்தர்கள் வாழும் தெரு. அங்கு நடமாடிக்கொண்டிருந்த செக்யூரிட்டித் தாத்தா

இவர்களிருவரையும் வெகுநேரமாக கவனித்திருந்தாலும் அவர்களைப் போய் என்ன ஏதென்று கேட்பதற்கு எதுவுமில்லாததால் அமைதி காத்தவர் அவன் மரக்கிளையை பிடித்துத் தொங்கியதை வாய்ப்பாகப் பயன்படுத்தி,

"ஏம்பா யா … ருப்பா நீங்க?" குரலின் ஒலிவேகத்திற்கும் நடை வேகத்திற்கும் சம்பந்தமற்று அவர்களருகில் வந்தார்.

கிளையிலிருந்து கைகளை விடுவித்து தொப்பென்று தரையில் கால் பதித்தவன், "தாத்தா இந்த பொண்ணதாங் தாத்தா நா கல்யாணம் கட்டிக்கப் போறேங்" பர்ஸை எடுத்து மொறுவலான ஒரு நூறு ரூபாய்த் தாளைத் தாத்தாவிடம் கொடுத்து "எங்கள ஆசிர்வாதம் பண்ணுங்க தாத்தா" என்று அவர் கையை கெட்டியாகப் பிடித்தான். தாத்தா முகத்தில் புன்னகையைப் பார்க்க வேண்டுமே … பணம் கிடைத்ததை விட நீண்ட நாட்களுக்குப் பிறகு தனக்கு ஒரு மரியாதை, முக்கியத்துவம் கிடைத்தை எண்ணி தாத்தா திக்குமுக்கடினார்.

"எப்பா ரெண்டுபேரும் நல்லா இருப்பீங்கோ நைனா."

"டாங்க்ஸ் தாத்தா."

"மரத்துல மட்டும் ஏறாத இன்னா?"

"ஆங் செரி தாத்தா."

இவாஞ்சலின், அன்பளிப்பைப் பிரித்தாள்.

"நா வேணா ஹெல்ப் பண்ட்டுமா?"

"வேணா, நானே பிரிக்கிறேன்"

பிரித்துப் பார்த்தவள் விக்கல் பாதியில் நின்றது போல ஏ … க் என்று இமைகளசையாமல் திகைத்தாள்.

இவாஞ்சலின் செவிலி உடையில், சுவற்றில் சாய்ந்து ஒரு கையைப் பின்னால் கட்டிக்கொண்டு மறு கையினால் வாயைப் பொத்தி, தலையை லேசாகத் திருப்பி யாரோ நடந்து செல்பவரை ஓரக் கண்ணால் பார்த்து நமுட்டுச் சிரிப்பு சிரிக்கும் படம். பூபாலன் வரைந்தது. தத்ரூபத்திற்குக் கேட்கவா வேண்டும்?

“நான் உன்ன மொத மொத பாத்தது” - இரு புருவங்களையும் உயர்த்தி அவளைப் பார்த்தான்.

அவனுக்கு பதில் சொல்ல உதடு பிரித்தவள் … மௌனமாகி அவன் கொண்ட பெருமிதத்தில் பங்கெடுத்தாள்.

~

காதலை அவள் ஏற்றுக்கொண்டதற்கு பிறகு ஓயாத பேச்சு பேசினார்கள். அடுத்து என்ன பேச வேண்டும், என்ன கேட்க வேண்டுமென யோசிக்கும் கால அவகாசத்தைக்கூட மௌனமாக நீட்டித்து அந்த நிசப்தத்தில் லயிக்கப் பொறுமையின்றி “அப்புறம்”, “அப்புறம்”, “நீ தான் சொல்லணும்” போன்ற வாக்கியங்களைக் கூட பயன்படுத்தாத ஓயாத பேச்சு பேசினாள் இவாஞ்சலின்.

அவளுக்குப் பிடித்த படங்கள், பிடித்த உணவுப் பொருட்கள், பிடித்த நடிகர்கள் எல்லாவற்றையும் பட்டியல் போட்டுப் பேசினாள். இதையெல்லாம் தனக்கு உகந்தவரிடம் சொல்ல வேண்டுமென நெடுநாட்களாக அடிவயிற்றில் அடைகாத்து வைத்திருந்த உணர்ச்சி வேகம் அவள் பட்டியல் போட்ட குழந்தைத்தனத்தில் அவனுக்குத் தெரிந்தது.

பணிபுரியும் நேரத்தைத் தவிர மற்ற எல்லாப் பொழுதுகளிலும் காதும் கையுமாகவே இருந்தாள். ரூபன் இதில் கரைகண்டவன் என்பதால் நவீன தொழில்நுட்பங்களின் பேராதரவுடன் ‘ப்ளூ டூத்‘தை இடது செவியில் மாட்டிக் கொண்டு இழந்த கௌவரத்தை மீட்டிய திமிர்த்தனத்தில் பேன்ட் பாக்கெட்டுகளில் கைவிட்டபடி அவளுடன் பேசி வளைய வந்தான். பெரும்பாலான மாலை நேரங்களில் பெசன்ட்நகர் கடற்கரையில் சந்தித்துக் காதல் வளர்த்தனர் … கிரண்யா புகைப்படப் பைத்தியம் என்றால் இவாஞ்சலின் பட்டியல் பைத்தியம். எப்போதும் ஒரு பட்டியல் தயாரித்து வைத்திருப்பாள். பிடித்த திரைப்படங்கள், பிடித்த நண்பர்கள், பிடித்த உணவு, பிடித்த பாடல்கள் எல்லாவற்றிற்கும் பட்டியல். அவளுக்குப் பிடித்த முதல் பத்து மட்டுமே பட்டியலில் இடம்பெறும்.

அவற்றையெல்லாம் அவனிடம் சொல்லும்போது அவளின் பாவனை அவனை உறைய வைக்கும். பத்து விரல்களையும் மூடிக்கொண்டு ஒவ்வொரு விரலாக மெல்லத் திறந்து பட்டியலை வெளியிடுவாள். ஓவியருக்குத் தன்னை வரையக் காண்பிப்பது போலக் கன்னத்தில் வைத்த கையை எடுக்காமல் அவள் அபிநயங்களையே பார்த்துக்கொண்டிருப்பான். விரலெடுத்து சொல்லிக்கொண்டே போகிறவள், கடைசி மூன்று விரல்களைத் திறப்பதற்குண்டான கால இடைவெளியை அதிகம் எடுத்துக்கொள்வாள். அதெல்லாம் அதிகமாய்ப் பிடித்ததாம், அவ்வளவு சீக்கிரம் சொல்ல மாட்டாளாம். அவளை எவ்வளவு புரிந்து வைத்திருக்கிறான் என்பதை நிரூபிக்க ரூபன் அந்த இடைவெளியைப் பயன்படுத்திக்கொள்வான்.

முன்புகூட அவர்கள் அமர்ந்திருக்கும் இதே இடத்தில் அவளுக்குப் பிடித்த முதல் பத்து சினிமா நடிகைகளின் பட்டியலை அவள் சொல்ல ஆரம்பித்து, முதல் மூன்று இடங்களுக்கு அருகில் வருகையில் ...

“இரு இரு நானே சொல்றேங்”

தோள்களுக்குச் சிறு அசைவு கொடுத்து அவன் முன்னே நகர்ந்து “ம் ஓக்கே சொல்லு” என்று அவனை வேடிக்கைப் பார்த்தாள்.

அவன் எடுத்தியம்ப ...

“ஈ ஈ ஈ ஈ ஈ ஈ ஈ ஈ ஈ ஈ ஈ” என்று சத்தம் வந்தது.

அவன் தவறாக ஏதும் சொல்லிவிட்டால், அக்கம்பக்கம் யாருமில்லை என்கிற பட்சத்தில் “ஈ” என்று பழிப்பாள். ஆட்கள் இருந்தால் தொடையில் இரகசியமாக ஒரு கிள்ளு.

“ஒருவாட்டிகூட நீ சரியாவே சொல்ல மாட்டியா?”

“கோயிச்சுக்காத அத்த வாட்டி கரெட்டா சொல்லிட்றேங்”

“நல்லா சொல்லுவ பாரு.”

“சரி நீயே இப்போ சொல்லு.”

“சொல்ல மாட்டேன் போ” - அங்கிருந்து கிளம்ப முற்பட்டதை அவனுக்கு உறுத்த கூந்தலை அவசரமாகச் சரிசெய்து, கொண்டை போட எத்தனித்தாள். இவாஞ்சலின் கொண்டை போடுவதற்குத் தன் கைகளைத் தலைக்கு பின்னால் விரிக்கும் போதெல்லாம் அவனுடைய பார்வை அவளின் தனபாரங்களை வேட்டையாடுவது வழக்கமாய் இருந்தது. ஆரம்பத்தில் இதையறிந்தவள் உடனே கைகளைக் கீழிறக்கி அவனை ஒரு தினுசாக பார்ப்பாள். காலம் கடந்த பின்னும் அவன் அவ்வாறே அவளைக் கண்புணர்வு செய்வதால் ‘இவன் புத்தியே இப்டித்தான் போல’ என்கிற அலட்சிய பாவத்துடன் அவனைக் கண்டுகொள்வதில்லை. இவாஞ்சலின், இப்படி அலட்சியப்படுத்துவதுதான் அவனை இன்னும் அவமானப்படுத்துவது போலிருக்கும்.

“ஏய், இரு. இன்னுங் கொஞ்ச நேரம் இருந்துட்டுப் போலாங். உன்ன ஷார்ப்பா எட்டர மணிக்கு ஹாஸ்டலாண்ட கூட்னு போயி உட்டுற்றேங்” எழுந்தவளின் கைகளைப் பிடித்து இழுத்தான்.

“கூட்னு … வந்துனு … ஹிஹி … ஆபிஸ்லயும் இப்டித்தான் பேசுவியா யாரும் கிண்டல் பண்ணமாட்டாங்களா . .?” - அவள் உட்கார்ந்தாள்.

“எதுக்கு காமெடியா இருக்குது உனுக்கு. ஒரொரு ஊருக்கு ஒரொரு ஸ்லாங்கு. சினிமால மெட்ராஸ்காரங்கள அப்டி காட்டிவுட்டானுங்கோ.”

“செரி செரி. உங்க ஆபிஸ்லயும் இப்டிதான் பேசுவீங்ளோன்னு கேட்டேன்.”

“இதுலன்னா இருக்குது. கலாய்ச்சா அவங்க பேசுற ஸ்லாங்க வெச்சி நானுங் கலாய்ப்பேங். அதுலயும் ஒரு சில பொண்ணுங்க இருக்குது … ப்ராமீனாவே இருக்காதுங்கோ ஆனா வந்துடுத்து போய்டுத்துனு ப்ராமீன்ஸ் ஸ்லாங்ல பேசி சீன் போடுங்கோ …”

“ஏன் அப்டி பேசுறாங்க?”

“சும்மா அப்டி ஒரு பேசுனா ஏதோ ஒரு ஹைக்ளாஸ் மாரி ஃபீல் பண்றதா நெனப்பு.”

இந்த அரசியல் இவாஞ்சலினுக்குப் புரியவில்லை. அவள் புரிந்ததுபோல் “ஓ” என்று பாவனையாகச் சொல்லிவிட்டு அவனிடம் கேட்டாள்.

“உங்க ஆபிஸ்ல ப்ராமின்ஸ்லாம் இருக்காங்களா?”

“ஆங்.”

“அவங்கதான டாப்புல இருப்பாங்கலப்பா?”

“அந்த அளவுக்கு இல்ல. இப்போ புல்லா இந்திக்காரனுங்க வன்ட்டானுங்கோ. அவனுங்க ஆளுங்களுக்குத்தாங் செய்றானுங்கோ.”

“அப்படியா? நா பிராமின்ஸ்தான் அப்டின்னு கேள்விப்பட்டு இருக்கேன். நம்ம காஸ்டெல்லாம்கூட ஒருமாதிரி இதுவா பாப்பாங்களாமே.”

“ச்ச்சே முன்னமாரிலாங் இல்ல. ஐய்ரு பசங்க தாங் எனக்கு ஆபிஸ்ல க்ளோஸ் ப்ரெண்டே. எங்க வீட்டுக்கு வந்து கவாப்புலாம் சாப்ட்டு போவானுங்கனா பாத்துக்கோ.”

“கவாப்பா அப்டினா?”

“அப்றமா சொல்றேங் ஃப்ரியா வுடு. ஆனா ஒன்னு. நா காலேஜ் முச்சிட்டு வேலிக்கு சேந்த புதுசுல ஒரு அய்யரு ஒருத்தனாலத்தாங் எங் கேரியரே போச்சி. சூப்பர் ப்ராசஸ்ல இருந்து வெளியே அம்ச்சி வுட்டானுங்கோ.”

“ஓ”

“ஆமா, டீம்லீடர் மேனஜர்ங்கலாங் ட்ரான்சிஷன் போயிட்டு ப்ராசஸ் கத்துனு வந்த அப்புறங் அந்த ப்ராசஸ்க்கு எங்கள வேலைக்கு எத்தானுங்க.”

“ட்ரான்சிஷன்னா?”

“இங்கருந்து, வெளிநாட்டுக்குப் போயிட்டு அங்க இருக்கவங்க கிட்ட ப்ராசஸ் கத்துனு இங்க இருக்கவங்களுக்கு சொல்லி குத்து வேல வாங்கணுங்.”

“ஓ அவங்க எதுக்கு உங்களுக்கு சொல்லிக் கொ …”

“இரு. சொல்லிற்றேங். குறுக்க பேசாத.”

“நாங்க மொத்தம் நூத்தியிருவது பேரு. பைலட் பேட்ச். அதுல ப்ராசஸ்க்கு ஏத்த மாரி ஆளுங்கள பிரிச்சி வுட்டானுங்க. எங்க டீம் லீடர் பேரு ஸ்ரீவட்சன். அவருக்குக் கீழ நாங்க மொத்தம் அஞ்சு பேரு. புஷ்கலா, பிரவீன், ராம், கார்த்தி, நானு. டீம்ல சேந்த மொத நாளே எங்க அஞ்சு பேரையுங் இன்ட்ரோ பண்ண சொன்னாரு. நாங்க எல்லோருங் சேர்ல உக்காந்துனு இருந்தோங். அவரு டேபிள் மேல உக்காந்துனு இருந்தாரு. இன்னா பேசணும்னு ரெண்டு மூணு வாட்டி நானே உள்ளுக்குள்ளே பேசிப் பேசிப் பாத்துகினேங். என் டர்ன் வந்துது. நெறிய க்ராமர் மிஸ்டேக்கோட தத்தி தத்தித்தான் பேசுனேங்.”

“எங்க டாக்டர்கிட்டலாம் நல்லா பேசுவியே?”

“அட, அப்போ வேலைக்கு சேந்த புதுசல செரியா பேசவர்ல …

கே …ளங்.”

“எல்லார் எதிர்க்கயுங். ‘என்ன பாஸ் ஓரல் கம்யூனிகேஷன் இவ்ளோ டவுனா இருக்கீங்க … நாளைக்கு க்ளைண்ட்கூட கால்னா எப்படி பேசுவீங்க? எப்படி ரிசால்வ் பண்ணுவீங்க?‘ன்னு கேட்டாரு. அவ்ரு கேட்டது நியாயந்தாங். ஆனா என்ன தனியா கூப்ட்டு ஒன் டு ஒன்ல பேசிருக்கலாம். ஃப்ளோர்ல அவ்ளோ பேரு முன்னாடி கத்துன ஒடனே எனுக்கு மூஞ்சி, உள்ளங்கைலாம் வேத்துச்சி … ஒக்காந்தினு இருந்தவங்களாம் ச்சேருக்கு முட்டு குத்து எழுந்து பாக்கிறானுங்கோ. பஸ் ஜன்னல்கிட்ட வந்து பிச்ச கேக்குற மாரி சார் ஸாரி சார்ன்னு சொன்னேங்.

“சார்ன்லாங் கூப்ட வேணாங். பேர விட்டே கூப்டலாங். காய்ஸ் நீங்க யாரையுங் இங்க சார் மேடம்னு கூப்புடணும்னு அவசியம் இல்லன்னாரு. அஞ்சு பேரையுங் பாத்து ஓக்கே வான்னாரு … ச்ச்சே நல்ல மனுசன்தாங் போலன்னு நெனச்சிகினேங். ப்ராசஸ் பத்தி ஓவர்வியூ குத்து முச்சதும் காய்ஸ் யார்யார்லாங் வெஜ்? யார்யாரெல்லாம் நான்வெஜ்னு கேட்டாரு. பக்கத்து டீம்ல என் ப்ரெண்டோட டீம் லீடரு அவரு டீம் பசங்களோட பாண்டிங் வர்னுன்னு ஒருநாள் முன்னாடிதான் அவ்ரு

கைக்காச போட்டு ஆபிஸ் பக்கத்துலகிற அஞ்சப்பர்ல கூட்னு போயிட்டு ட்ரீட் வெச்சாரு. அதுபோலத்தாங் இவ்ருங் ட்ரீட் வெக்கக் கேக்குறாருன்னு ரொம்ப ஆசையா நானுங் கார்த்தியுங் மட்டுங் நான்வெஜ்க்குக் கை தூக்கினோங். ஒக்கே நாளைக்கு நம்ம டீம் பாட் லஞ்ச்னு சொன்னாரு. பாட் லஞ்ச்சினா இன்னான்னு பசங்ககிட்ட அப்றமா கேட்டுத் தெரிஞ்சிகினதுக்கு அப்புறங் மறு நாளூ நான் தெரியாத்தனமா எங்கம்மாவ ரசங் மொளூவுக் கறி செய்யச் சொல்லி ஆபிஸ்க்கு எத்துனு வன்ட்டேங். டீமுள்ள எல்லோருங் ஒருத்தர் சாப்பாட்ட ஒருத்தரு பரிமாறி சாப்புட்றது தாங் பாட் லஞ்ச். நா டிபன் பாக்ஸ தொறந்ததுங் அவரு கேட்டாரு, என்ன ரூபன் எடுத்துட்டு வந்துருக்கீங்கன்னு. ரசம் மிளகுக்கறினு கொஞ்சம் டீசன்ட்டா சொன்னேங். என்ன கறின்னு கேட்டாரு. பீப்ன்னு சொன்னேங். கேட்ட ஒடனே எப்டி மூஞ்ச மாத்துணாந் தெரிமா அந்த ஆளூ. ஒரு அஞ்சு நிமிஷத்துல அரைகுறையா சாப்டுட்டு கைகழுவப் போய்ட்டாங். நம்புனா நம்பு எவா. அதுக்கு அப்புறங் அந்தாளூ என்னையுங், கார்த்தியும் ட்ரீட் பண்ண விதத்த கேக்கணுமே. ஒரு மாசமா எங்க ரெண்டு பேருக்கு மட்டுங் பிராசசே அசைன் பண்ணல. பாவங் கார்த்தி இன்னா தப்பு பண்ணான்னுதாங் தெர்ல. எங்கள பேக்கப்புன்னு போட்டாரு. நாங்க ஒர்த் இல்லனா கூட ப்ராசஸ் ட்ரைனிங் குடுக்கிறப்போ அட்லீஸ்ட் எங்க மூஞ்சியாவது பாக்கலால்ல? நாங்க ரெண்டு பேரு அங்க இருக்கிறதாவே காட்டிக்காம அவங்க மூணு பேர மட்டுமே பாத்து எல்லாங் சொல்லிக் குடுப்பாரு. எங்களூக்குங் ஆர்வங் இருக்கிற மாரி காம்ச்சிக்க நாங்களூங் போயி அவர் கிட்ட டவுட்லாம் கேப்போங். ‘ப்ராசஸ் மேன்வல்லயே இருக்கு பாருங்க. போங்க போயி செக் பண்ணுங்க’ன்னு அனுப்பி வுட்டுடுவாரு. ஆனா அந்த பசங்களூக்கு சொல்லிக் குடுக்கிறத பாக்கணுமே. அதுவும் அந்த புஷ்கலா பொண்ணுகிட்ட போடுவாம்பாரு அந்தாளூ மொக்க … எ … ப்பா …”

ரூபன் சொல்லுகிறதெல்லாம் புரிகிறதோ இல்லையோ. அவன் சொல்வதையெல்லாம் காட்சிப் படுத்துவதற்கு எந்த முயற்சியும் எடுப்பதுபோல அவள் இல்லை. அவன் தமிழும் அவன் பேசும் விதத்திலும் அவள் கன்னத்தில்

கைவைத்து அவனை ரசித்துக்கொண்டிருந்தாள். அவனும் இவள் கேட்டு ஆக வேண்டுமென்கிற அத்தியாவசத்திற்காக இடைவெளி விட்டெல்லாம் பேசவில்லை. வெகு நாட்களாக யாரிடமாவது சொல்ல வேண்டுமென இருந்தது. மடமடவென நிற்காது பெய்தான்.

“அப்புறம் கார்த்திக்குக்காவது ஒரு அக்கவுன்ட் குத்தாரு. நானா அவரு கேபினுக்கு போயி எனக்கு ஒரு அக்கவுன்ட் குடுங்க நா பண்ணுவேன்னு கேட்டேங். மூஞ்ச சீரிசா வெச்சிகினே, ‘ஆக்சுவலி, உங்களுக்கு வேற ப்ளான் வெச்சிருக்கேங் ரூபன் நான் சொல்றேங்’ என்று ரூபன் அவன் டீம் லீடர் குரலிலேயே பேசிக்காட்ட இவாஞ்சலின் சிரித்தாள்.

“சிரிக்காத எவா கம்னு இரு. வேலை செய்யற இடத்துல, எல்லோருங் சிஸ்டம் முன்னாடி உக்காந்து வேல செய்றப்போ, நமக்கு மட்டும் வேலை தராம சும்மானா ஒக்கார வெக்கிறது எவ்ளோ காண்டாருக்குங் தெரிமா? ரெண்டு மாசம் அப்டியே ஒக்காந்துனு இருந்தேங். அந்த ஆளு ஒடம்புலகிற கட்டி மாரி என்ன நென்ச்சான் போலக்து. அப்புறம் வேற டீம்க்கு என்ன மாத்தி வுட்டாங். நான் மட்டுங் எஸ்.சி.ன்றதால அப்டி பண்ணறான்லாங் எனுக்குத் தெர்ல. ஆனா நா அப்டிதாங் நென்ச்சிகினேங். மகன அப்போதாங் எனுக்கு செரியா வெறி வந்துச்சி. புது டீம் மொக்க ப்ராசஸ்தாங். ஆனா பயிங்ரமா வேல செஞ்செங். எக்ஸல் கத்துகினு நெறியா ப்ராசஸ சிம்ப்ளிஃபை பண்ணேங். எல்லாம் செட்லான ஒடனே யு.எஸ்.ல இருந்து க்ளைண்ட்ஸ் இங்க விசிட் வந்தாங்கோ. அப்போ றிமீக்ஷீயீஷீக்ஷீனீமீக்ஷ் ஷீயீ tலீமீ ஹ்மீணீக்ஷீ வாங்குனவங்கள்ல நானும் ஒருத்தேங். க்ளைண்ட் நல்லா அண்டர்டேகர் போல இருப்பாங். என்ன கட்டிபுச்சி, எனுக்கு கை குத்து, எங் கையில அந்த அவார்ட குத்தாங். போட்டோல காட்டுறேங் பாரு. அவார்ட கையில வாங்குறப்போ நா அந்த டீம் லீடரத்தான் சைடுல பாத்துனு இருப்பேங்.”

இவாஞ்சலின் அவன் கண்களைத் துடைத்தாள்.

~

புற அழகிலும், காதல் திருமணம்தான் செய்துகொள்ள வேண்டு மென வைராக்கியத்திலும் இவாஞ்சலினுடன் பழக நேர்ந்தவனுக்குப் புத்தகங்கள், சினிமா உள்ளிட்ட பல விஷயங்களில் முரண்கள் இருந்தது. ஒரே அலைவரிசை உள்ளவரோடு பழகுவதில் என்ன சுவாரசியம் இருக்க முடியுமென்று தன்னைத்தானே சமாதானம் செய்துகொண்டு தொடர்ந்தான். அவளுடன் பேசப் பேச நேசப் பிணைப்பு உண்டாகி உள்ளொன்று வைத்து புறமொன்று புளுகாமல் அவளை நேசிக்கத் தொடங்கினான். அதாவது, அவளின் பழக்கவழக்கங்களை மதித்தான். அவளின் ரசனையை மட்டந்தட்டமால் ரசித்தான். நேசிப்பதென்பது அதுதானே? இதுநாள் வரை தனிமையிலேயே உழன்றவளுக்கு உற்ற துணையாக இருக்க வேண்டுமெனப் பிரயாசைப்பட்டான்.

அவளின் நெடுங்கால ஆசையை எப்பாடு பட்டாவது நிறைவேற்ற வேண்டுமென யோசித்துக் கொண்டிருக்கிறான். அந்த ஆசையும் அவ்வளவொன்றும் சுலபமல்ல. இவாஞ்சலின் ஆசையோடு ஒப்பிடுகையில் அம்மா ஆசைப்படும் பிரசங்க மொழிபெயர்ப்பாளன் அவ்வளவு ஒன்றும் கடினமானதல்ல. ஆனால் அது அம்மா. இது காதலி. இவள் ஆசையைத் தீர்த்து வைத்தே ஆக வேண்டுமென இரவும் பகலும் தூங்காமல் அலைக் கழிந்தான்.

அந்த ஆசையை அவன் தெரிந்துகொண்ட நாள் …

பெசன்ட் நகர் கடற்கரை மணற்பரப்பில் இருவரும் அமர்ந்து பேசிக்கொண்டிருக்கையில் ஊடாக எப்போதும் போல இம்முறை தயாரித்து வைத்திருக்கும் பட்டியலின் தலைப்பைச் சொன்னாள்.

“நாம நெறய சம்பாதிச்சதும் தீத்துக்க எனக்கு சில ஆசைங்க இருக்கு. சத்தியதுக்கு அது எல்லாத்தயும் நான் உன்கிட்ட சொல்லப்போறதில்ல. ஆனா என் லிஸ்ட்ல வெச்சுருக்கிறதுல ரெண்டெண்ணத்த மட்டும் நீயி எனக்காக செஞ்சிட்டா போதும்.”

“ஊன்னு சொல்லு எவா. தோ இந்தக் கடல்ல போயி கூட குதிக்கிறேங்.” அவள் அதை பொருட்படுத்தவில்லை. தன்

ஆசை குறித்த தீவிரத் தன்மையை மட்டுமே இவாஞ்சலின் முகத்தில் பார்க்க முடிந்தது.

“செரி மொதல்ல உங் இரண்டாவது ஆசயச் சொல்லு” என்று அவள் தாடையை மீட்டினான்.

“நாம நிறைய காசு சேத்து வச்சதுக்குப் பெறவு நமக்கே நமக்குன்னு சொந்தமா ஒரு அருவி வாங்கணும் ஓகே வா?”

அதைக் கேட்ட மாத்திரத்தில் இம்முறை அவனுக்கு உண்மையாகவே எதிரில் ஆர்ப்பரிக்கும் கடலில் ஓடிப் போய்க் குதித்து விழ வேண்டுமெனத் தோன்றியது. கட்டுப்படுத்திக்கொண்டு “உனுக்கு ஏம்மா அப்டியொரு ஆச?”

அருவி வாங்குவதற்குத் தேவையான பணத்தை வைத்துக்கொண்டுதான் அவனும் ஆசையாய்க் கேட்கிறான் என்பது போல “சொல்லுறேங் கேளு” என்று இன்னும் நெருங்கி பக்கத்தில் வந்தமர்ந்து அவனை ஆழமாக நோக்கினாள்.

வானம் தூறியது.

“வா எவா, மழை பேய்ற மாரிக்து கெளும்ப்லாம்.”

அவனின் கைகளை வெடுக்கென இழுத்துப் பிடித்து “உக்காரு நீயி. அந்த ஆசைக்கான ரீசன கேட் … ட்டுப் போ.”

தூறல் மழையானது.

“செல்லங், துப்பட்டாவையாவது தலயில எட்த்துப் போத்திக்கோ. மழையில நெனியாத.”

“மாட்டேன். அப்டி பண்ண மாட்டேன். அப்புறம் நீயி என் முகத்த பாத்தே பேச மாட்ட.”

அவள் எழுந்திருப்பதற்கான சமிக்ஞைகளே இல்லை.

ரூபன் அவள் அருகில் அமர்ந்தான்.

அவர்களுக்குச் சற்றுத் தள்ளி, பக்கத்திலிருந்த ஜோடியும் மழையை உதாசீனப்படுத்தி அமர்ந்திருந்தார்கள். ஆனாலும் குளுரைப் போக்கும் விதமான காரியத்தில் ஜோடி ஈடுபட்டிருந்ததை உற்றுக் கவனித்தான். தன்னுடன்

வந்திருந்த பெண்ணின் பாலுறுப்புகளை உடன் வந்தவன் பரிசோதித்துக்கொண்டிருந்தான். ரூபனுடன் இவாஞ்சலின் இல்லையென்றால் அந்த ஆடவன் என்ன செய்கிறானென்று இன்னும் ஆழமாக கவனிக்காதது போல கவனித்திருப்பான். பரவாயில்லை, அவனாவது வாழ்கிறான் என்று விட்டுவிட்டு “மனசாட்சி இல்லாத எவா. இந்நேரத்தில போயி அருவி வாங்ணுமாங்” என தன் நிலையை எண்ணி உள்ளுக்குள் புழுங்கினான்.

பார்வையை இவாஞ்சலின் மீது வைத்தான். கோபித்துக்கொண்டு இருக்கிறாளென்று அவளின் வாய் குமிழ்ந்திருந்த விதம் சொன்னது. விடுவதாயில்லை. அவனும் கோபித்துக்கொண்டு சில நொடிகள் பேசமால் அமர்ந்திருந்தான்.

கடல் மணலைத் திட்டுத் திட்டாக நனைத்துவிட்டு மழையும் நின்றுபோனது.

அந்த சூடான அமைதி, அவர்களின் மௌனத்தைக் கலைத்துப் போட்டது. இப்போது ரூபனே ஆரம்பித்தான்.

“சொல்லு எவா ஏங் உனுக்கு அப்டி ஒரு ஆச?”

“சொல்ல முடியாதுடா.”

“வயசுல பெரியவங்கள “டா” சொல்லி கூப்டக் கூடாதுன்னு எத்தினிவாட்டி சொல்லிக்றேங்.”

தொடையைத் திருகினாள்.

“ஏ சொல்லும்மா என்ன ரீசன்???”

“சத்தியத்துக்கு நாம ஒரு அருவி வாங்குறோம் ஓக்கே வா?” என்று தீர்க்கமாகச் சொல்லி, அவன் தொடையை இன்னொரு முறை திருகினாள். அதை முன்னுதாரணமாக எடுத்துக்கொண்டு அவள் கன்னத்தில் முத்தமிட்டான்.

எளிதில் நிறைவேற்ற முடியாதுதான். போதிலும் “ஓக்கே ஒரு அருவி வாங்குறோங்” என்று அவன் சொன்ன விதம் அவளுக்கும் பிடித்திருந்தது. பதிலுக்குச் சிரித்துக்கொண்டே தலையால் அவன் மீது மோதினாள்.

“அட சொல்லு. அப்புறம் நீ கேக்குற அருவிய வேற எவன்னா அட்வான்ஸ் புக்கிங் பண்ட்டா எனுக்குத் தெரியாதுபா.”

மறுபடியும் சிரித்தாள்.

“செரி சொல்றேன். நாஞ்சொல்லும்போது திரும்பவும் மழ பேஞ்சாக்கூட நீ பைய ஒக்காந்து கேக்கணும் ஓகே வா?”

“ரைட்டு.”

“பெறகு நா பேசும்போ ஜோக் அடிக்கிறேன்னுட்டு டிஸ்டப் பண்ணக் கூடாது ஓகேவா?”

“எம்மா தாயே சொல்லு.”

“போடா … சொல்ல மாட்டேன்.”

“இங்கப்பாரு இப்ப நீ சொல்ல சத்திமா இப்டியே ஓடிப் போய் அந்தக் கடல்ல குச்சிடுவேன். பாக்றீயா?”

“வேணாம்.”

“அப்ப சொல்லு.”

அவள் ஆரம்பித்த விதம், சொல்ல வேண்டியதை ஏற்கனவே மனனம் செய்து வைத்தவள் போல இருந்தது.

“ஒனக்கு தெரியும்ல ஒன்ட்ட ஏற்கனவே சொல்லிருக்கேன்ல? அருவியில குளிக்கிறதுனா எனக்கு ரொம்பப் பிடிக்கும். ஏன்லாம் தெரியாது. ரொம்பப் பிடிக்கும். எங்கூர்ல ஓடைங்க நெறைய எண்ணம் இருக்கு. பால்ஸ்ங்க ஒண்ணுகூட கெடயாது.

கோட்டயத்துல நர்சிங் படிக்கிறப்போ காலேஜ் ப்ரெண்ட்ஸோட சேந்து பொள்ளாச்சிக்குப் போனப்ப போற வழியில மங்கி பால்ஸ்ன்னு ஒரு எடத்துல மொத மொத அருவியப் பாத்தேன். யத்தாடி … எவ்ளோ வேகத்துக்குத் தண்ணி மேலேந்து கொட்டுச்சி தெரியுமா. ஆனா குளிக்கல. நின்னு வேடிக்க மட்டும் பாத்துட்டு வந்தோம். அதுக்குப் பெறகு ஒரு மொற குற்றாலம் பால்ஸ்க்குப் போயிருக்கேன். அது இதக் காட்டிலும் பிசாசு வேகம். அங்கின குளிச்சேன். ஆனா நான் நெனச்ச மாதிரி குளிக்கல. மழக்கி ஒதுங்கி நிக்கிற மாதிரி தண்ணி கொட்ற எடத்துல கையைக் கட்டி, அருவியில நனஞ்சேனே ஒழிய குளிச்சது இல்ல. யார், எங்க பாக்குறாங்கன்னு ஒடம்பு முழுக்க கண்ணு வெச்சுட்டே குளிக்க வேண்டியதாப்போச்சி. அதுக்கும் அருவிட்ட

நின்ன ஒரு பத்து நிமிஷத்துலயே எங்க மேடம், ‘கேர்ல்ஸ் போதும் வாங்க வாங்க’ன்னு கூப்ட ஆரம்பிச்சுடுவாங்க. கடுப்பா இருக்கும். எதப் பத்தியும் கவலப்படாம ரொம்ப நேரம் குளிக்கிறவங்கள அப்போ பாத்தேன். எவ்ளோ பொறாமையா இருந்தது தெரியுமா?”

“பொறாமையா இருந்தது” என்கிற வாக்கியத்தை அவள் சொல்லும்போது தலைசாய்த்துக் கண்கள் சுருக்கினாள். - அவளை அள்ளிக் குடிக்க வேண்டும் போலிருந்தது அவனுக்கு.

“அவங்கள மாதிரியே நானும் ரொம்ப நேரம் குளிக்கணும். ஆனா, யாரும் என்னய பாக்கவே கூடாது. எத்தனையோ கிலோமீட்டர் தூரத்திலிருந்து கீழ கொட்டுற தண்ணி எனக்கே எனக்குன்னு எனக்கு மட்டுமே கொட்டணும். தலையை அண்ணாந்து பாத்து, ரெண்டு கைய விரிச்சு நான் நல்லா குளிக்கணும். அப்போ யாருக்கும் அங்க அலோடு இல்ல. தேவப்பட்டா உன்ன மட்டும் சேத்துப்பேன்”

“ஏங் சோப்பு, டவுலு எத்துனு வந்து குடுக்கிறதுக்கா?”

“இங்கரு, பாத்தியா நான் எவ்ளோ சீரியசா சொல்றேன். நிறைய காசு நம்மட்ட சேந்ததுக்கு அப்றம் நல்ல சூப்பரான ஒரு எடத்துல நீயி எனக்கே எனக்குன்னு ஒரு அருவி வாங்கித் தரணும். அவ்வளவுதான் ஓகேவா?”

அருவி வாங்குவதற்கான பேச்சுவார்த்தை ஆரம்பித்ததிலிருந்தே அது சாத்தியமா என்பதைப் பற்றி எள்ளளவும் யோசிக்காமல் திரும்பத் திரும்ப இவாஞ்சலின் தீவிரமாக அதைப் பற்றியே அவனிடம் சொல்லிக்கொண்டிருந்தாள். பிடித்தவனிடம் எல்லா விதமான ஆசையையும் ஒப்புக்கொடுத்துவிட்டு அவன் செய்வான் என்கிற குருட்டு நம்பிக்கையின் நிழலில் அவள் தன்னை ஆசுவாசப்படுத்தினாள்.

ரூபனுக்கு ஆச்சர்யம்! அந்த அளவுக்கா எவா நீயும் நானும் விரும்புகிறோம்? இந்த நம்பிக்கைக்குப் பேர்தான் காதலா? உன்னைப்போல நிச்சயம் எனக்குக் காதல் செய்ய வராது. வாய்ப்பு கிடைத்தால் உன்னிடம் எப்போது என் பெருங்காமத்தைத் தீர்த்துக்கொள்ளலாமென்று ஒரு வேட்டை நாயைப்

போல காத்துக்கொண்டிருக்கிறேன். ஆனால் நீ திரும்பத் திரும்ப என் தலையை வருடிக் கொடுத்து ஒரு முயலாக என்னை வளர்க்கப் பார்க்கிறாய். நம்மைச் சுற்றி என்ன நடக்கிறதென்று கவனித்தாயா? எல்லோரும் அவசரமாக வேட்கையைத் தீர்த்துக்கொள்கிறார்கள். அதே உடல் வேட்கை இங்கு வந்ததிலிருந்து எனக்கும் இருக்கிறது. உனக்கு ஏன் இல்லை? என்னுடன் பேசுவதற்கும், செய்வதற்கும் உனக்கு நிறைய இருக்கிறது. அதையெல்லாம் விட்டு அருவி வேண்டுமென்று வாஞ்சையோடு கேட்கிறாயே எவா? எனக்கும் ஆசைதான். நான் மட்டும் ஒரு மன்னனாக இருந்தால் என் படை வீரர்களோடு குதிரையில் சென்று, நீ கேட்டதுபோல அருவி எங்கிருக்கிறதென்பதைக் கண்டுபிடித்து அருவி பொழியும் சுற்று வட்டார நிலத்துக்காகப் போர்புரிந்து மொத்தத்தையும் கையகப்படுத்தியிருப்பேன். வெற்றியோடு வீடடைந்து கையிலிருக்கும் கலசத்தை உன்னிடம் கொடுத்து …

"என் பேரழகி எவா, இதோ இந்தக் கலசத்திலிருக்கும் நீரை உன் தலையில் ஊற்றுகிறேன். இதன் குளிர்ச்சி எப்படியிருக்கின்றது என்று கூறு. உனக்காக நான் போர்புரிந்து வென்ற அருவியின் நீர்தான் இது. நீ கேட்டது போல ரம்மியமான சூழல் அங்கிருக்கிறது. அர்த்த ஜாமத்திலும், தனியாக நீ மட்டும் ஆடைகளின்றி நிலவின் பிரபையில் நனைந்துகொண்டே குளிக்கலாம். ஆடைகளின்றி நீ குளிக்கும் அழகைப் பார்த்து நிலவானது வெட்கித் தலை குனிந்து அவசரமாக மேகக்கூட்டத்தில் தன்னை ஒளித்துக்கொள்வது நிச்சயம். நீ குளித்து முடித்ததும் தேன் சொரியும் முல்லைக் கொடியும், மல்லிகைச் செடியும் பைங்கொடியுமாகப் படர்ந்த மணி மண்டபம் அண்மையில் இருக்கிறது. நீ அங்கு சென்று ஓய்வெடுத்து மறுபடியும் வந்து குளிக்கலாம். அது உன் அருவி, உனக்கான அருவி. கண்ணே! இன்று முதல் அதற்கு 'எவாராணி அருவி' எனப் பெயர் சூட்டுகிறேன்."

"என்ன? ஏதும் பேசாம வர. யோசிச்சுட்டே வண்டி ஒட்டாதன்னு ஒன்ட்ட எத்தன மொற சொல்லி இருக்கேன்?"

“இல்ல … நீ ஆசப்பட்டமாரி அருவி வாங்குறதப்பத்திதாங் சீரியஸா யோசிச்சுனு இருக்கேங்.”

~

பாலினக் கவர்ச்சியை முன்வைத்துப் பொழியப்படும் அன்பெல்லாம் தற்காலிகமானது. வேண்டியது கிடைத்ததும் முகம்கூட ஏறிட்டுப் பார்க்கத் தயங்குகிற சுயநலத்தின் செயல் வடிவங்களே அதெல்லாம். ஆயினும் சமூக நிர்பந்தத்திற்காக வாழ்க்கையைத் தொடந்து ஜவ்விழுக்கத்தானே வேண்டியிருக்கிறது. நேசிப்பு இருக்கும் இடத்தில் நிர்பந்தங்கள் என்ற அவசியமே இல்லை. அந்த உண்மையான அன்பு எல்லோர் மீதும் வந்துவிடுகிறதா என்ன? ஏன் ரூபனுக்கே வந்ததா என்ன? அலுவலகச் சூழலில் கிரண்யாவைக் காதலித்ததில் பெருமை இருந்தது. ஊர் மெச்ச அவளைக் கல்யாணம் செய்துகொண்டு ஓர் அழகுப் பதுமையைக் கைப்பற்ற வேண்டுமென்கிற ஆசை இருந்தது. சரீரத் தேவைக்காக உந்திய உடற்சூடு இருந்தது. பெருமையும், ஆசையும், உடற்சூடும் முற்றிலும் அன்பு என்பதற்கு வேறானவை அல்லவா? கிரண்யாவுடன் பழகிய நாட்களிலிருந்து பொய்யான ஆடம்பரத்தைப் பூசிக்கொண்டு கடைசிவரை அதை பரமாரிக்க அவளுடன் போராடிக்கொண்டுதானே இருந்தான்.

இவாஞ்சலினுடன் பேச ஆரம்பத்ததிலிருந்தே தன்னைப் பற்றியும் குடும்பப் பின்னணிப் பற்றியும் முடிந்த அளவு தணிக்கை செய்யாமல் சொல்லிவிட்டான்.

அவளின் கடந்த காலத்தை அறிந்த பிறகு அவள் மீது ஆழமான கரிசனம் உண்டாகி நாளைடைவில் அது அன்பாகத் திரண்டு வந்துகொண்டிருந்தது.

ராத்திரி இவாஞ்சலினுக்கு ‘குட் நைட்’ மெசேஜ் அனுப்பிய பிறகு அவனுக்குத் தூக்கமே வரவில்லை. அவளுடனான உறவை சந்தோஷமாக உணர்ந்தவன் அதைத் தத்துவார்த்தமாக நியாயப்படுத்தும் பொருட்டு பேஸ்புக்கில் ஒரு பதிவு போட வேண்டுமென யோசித்தான். ஒருமாதிரி வார்த்தைகள் கோர்வையானதும் மறந்து போவதற்குள் அவசரமாக லேப்டாப் பையைத் திறந்து லேப்டாப்பை

ஜனனேந்திரத்தில் வைத்துக்கொண்டு சுவற்றில் சாய்ந்தபடி பேஸ்புக்கில் எழுதினான்.

‘அன்பென்பது யாதெனில் …’

எவரொருவர் மீதும் ‘அன்பென்கிற’ ஒன்று மழைக்காளான் போல முளைத்து விடுவதில்லை. சொல்லப் போனால் பல வருடங்கள் உடனிருக்கும் ரத்த சம்பந்தங்களின் மீதே அந்த அன்பு வருவதில்லை. ஆனால் யாரென்றே தெரியாத ஒருவரிடம் தினமும் பழக வேண்டிய சூழல் அமையுமாயின் அவருடன் அடிக்கடி சம்பாஷித்து அதன் வழியாய் மன நெருக்கம் உண்டாகி அந்த நட்பு - மேம்போக்கான - சகஜநிலையிலிருந்து அக்கறை காட்டும் நிலைக்குப் பரிமாணம் அடையும். அல்லது அன்பு என்பதை பரஸ்பரம் கொடுத்துக்கொண்டு அதற்கு சமமாக வேறொன்றை அறுவடை செய்துகொள்ளத் துடிக்கிற நரிக்குணம் கொண்ட சமூகச் சடங்குகளைப் பற்றித் தெரியாமல், தெரிந்தும் பொருட்படுத்தாது அன்பையும், அக்கறையும், “கொடுத்துக் கொண்டு மட்டுமே” இருக்கிற வள்ளல் குணம் கொண்டவர்களின் மீது அன்பு வரும். ஊற்றெடுக்கும். அத்தகையோரின் குணாம்ச வழியில் அல்லது அவர்களின் சேஷ்டைகளில் ஈர்க்கப்பட்டு நமக்குள் அந்த நபர் சம்மணங்கால் போட்டு அமர்ந்த பிறகல்லவா அவர் மீது அன்பு காட்ட முடிகிறது? அந்த அன்பும் நிலைக்க பலவீனமான இதயம் இரு தரப்புக்கும் அவசியமாகிறது. சுய நலத்தைக் கவசமாக அணிந்திருந்த இதயம்கூட ஒரு சந்தர்ப்பத்தில், ஒரு சமயத்தில், ஒரு சூழலில் சூடு வாங்கிய நெய்க் கட்டிப்போல இளகத்தொடங்குகிறது … Feeling Loved.”

அறையில் விளக்கு எரிந்ததும் “அதாங் பகலுபூரா வேல வாங்குறானுங்களே ன்னாவாங் அவ்னுங்ளுக்கு?” என்று சொல்லி ரெஜினா திரும்பிப் படுத்துக்கொண்டாள்.

எழுதியதும் தனக்குப் புரிகிறதா என இரண்டுக்கும் மேற்பட்ட முறை படித்துப் பார்த்தான். திட்டவட்டமாகப் புரியவில்லை என அறிந்ததும் அப்பொழுது இந்தப் பதிவுக்கு நல்லதொரு இலக்கிய அந்தஸ்து கிடைக்குமென எழுதியதை அப்படியே பேஸ்புக்கில் பதிந்தான். நாவல் எழுதப்போகிறேன் என போஸ்ட்

போட்டதற்குப் பிறகு அவன் பேஸ்புக் உலகிலிருந்து தலைமறைவு ஆகிவிட்டதால் அது சம்பந்தமாகத்தான் உணர்வெழுச்சி நிலையில் இருக்கிறானென அவனை எழுத்தாளனாக முழு மனதுடன் நம்பியவர்கள் இன்பாக்ஸில் வந்து … நாவல் பணிகள் எந்த நிலையில் இருக்கின்றன, நாவலுக்கு பெயர் என்ன வைத்திருக்கிறீர்கள், இந்த ஜனவரி புத்தகக் கண்காட்சிக்கு வந்துவிடுமா? very eager to read your novel என்று விதவிதமாகக் கேட்டிருந்தார்கள்.

கள்ள மௌனம் சாதித்தான். நாவல் நிமித்தமான யோசனைகள் மங்கலாக வந்துபோனாலும் எல்லா விதமான சிந்தனைகளையும் இவாஞ்சலினே ஆக்கிரமித்திருந்ததால் நாவலைப் பற்றி இன்னும் தெளிவான ஒரு முடிவுக்கு வர முடியாமல் ஒரு வரிகூட எழுதாமல் இருப்பவனை இன்பாக்ஸ்க் கேள்விகள் குற்ற உணர்ச்சியில் குமையச்செய்தன. அவர்களுக்கெல்லாம் ஒரு "ஸ்மைலி" கொடுத்துவிட்டு அங்கிருந்து வெளியேறினான். இடைப்பட்ட நாளில் கிள்ளிவளவனை ஓர் அனுகூல சத்ரு என்று சந்தேகத்திருந்ததால் அவரை ஆலோசிக்கவும் விருப்பமில்லை. மேற்கொண்டு ஆலோசித்தாலும் குழப்புகிறார். அவசரப்பட்டுவிட்டோமோ என யோசிப்பதற்குக்கூடச் சங்கடமாக இருந்ததால் விரைவில் நாமாகவே ஒரு கதையை யோசித்து, பெருங்கதையாக்கி நாவலை எழுத ஆரம்பிக்க வேண்டுமெனப் புரண்டு புரண்டுப் படுத்தான். அந்த ராத்திரி, தூக்கம் உட்பட எதுவுமே அவனுக்கு உதவி செய்யவில்லை.

# -19-

காலை ஒன்பது மணிக்கு இவாஞ்சலினிடமிருந்து அழைப்பு வந்தது. உள்ளுணர்வு தாக்கல் செய்த அதே சம்பவம் …

“ப்பா. அந்த லாரன்ஸ் எறந்துட்டாங்க”

” … … …”

“இப்போதான். ஒரு பதினஞ்சி நிமிஷத்துக்கு முன்னாடி”

” … … …”

“சீக்கிரம் வா. பாவம் அந்த ஆன்ட்டி, அவர் பக்கத்துல தனியா நின்னு அழுதுகிட்டு இருக்காங்க. வரும்போது அவங்க தம்பியிட்டயும் விஷயத்த சொல்லி கூட்டு வருவியாம்”

” … … …”

“ஹல்லோ லைன்ல இருக்கியா”

“ஆங் … … வரேங். வை”

“ன்னா ஆச்சிடா, ஸ்டன்னாயி நின்னுனு இருக்க?” சைலேந்தர் மானிட்டரிலிருந்து தலையைத் திருப்பாமல் கேட்டார்.

“ப்ரென்ட் அவங்க அப்பா அட்மிட் பண்ணிந்தோல்ல அவர் செத்துட்டாராங் தல”

கீபோர்டிலிருந்து விரல்களைப் பின்வாங்கி ரூபனைப் பார்த்து சைலேந்தர் துக்கம் காண்பித்து “ஓ … செரி. நீ விஷால்கிட்ட சொல்லிட்டு கௌம்பு. நா பாத்துகிறேன்.”

” … … …”

“அந்த ஆளுக்கிட்ட உண்மய சொல்ட்டு போடா அப்ரைசல் டைம் வேற.”

‘சைலேந்தர், என் மீது இவ்வளவு அக்கறையாக எல்லாம் இருக்காதீர்கள். அதற்கு நான் தகுதியானவன் அல்ல’ என்று மனதிற்குள் நினைத்தான்.

“எ … ன்னடா யோசிச்னு இருக்கிற?”

“ஆங் … செரி தல. வரேங்”

வீட்டிற்குச் சென்று வாகனத்தை எடுத்துக்கொண்டு பூபாலன் வீட்டிற்குச் சென்றான்.

வீட்டு வாசலில் அமலோற்பவம் பாத்திரங்கள் கழுவிக்கொண்டிருந்தாள். அவளிடம் விஷயத்தைச் சொன்னதும். “அயியோ எப்ப?” என்று பக்கெட் நீரில் கையை அலசி, “தோ எழுப்றேங்” என்று முந்தானையில் கை துடைத்துக்கொண்டு உள்ளே சென்றாள்.

பூபாலனைத் தட்டி விஷயத்தைச் சொன்னதும் முதுகில் தேள் கொட்டியது போல பாயிலிருந்து எழுந்து சட்டையை மாட்டிக்கொண்டு அவனுடன் மருத்துவமனை நோக்கிச் சென்றார். வழிநெடுகத் தன் மாமாவின் பராக்கிரமங்களை நினைவுபடுத்திப் புலம்பியவர் இடையிடையே மருத்துமனையில் குறிப்பிட்ட யாரைத் திட்ட வேண்டுமெனத் தெரியாததால் பன்மையில் கேவலப்படுத்தினார். மீளாச் சோகத்தில் மூக்குச் சிந்திய கை விரல்களை அவன் தோள் மீது வைத்தார் அல்லது துடைத்தார். பயணம் முடிந்து மருத்துவமனையின் வாசலில் இறங்கியதும் லுங்கிப் பிடியின் மீது அவநம்பிக்கை ஏற்பட்டதால் அதை அவிழ்த்து இறுக்கிக் கட்டியபடியே உள்ளே விறுவிறுவென நடந்து சென்றார்.

பூபாலனைப் பார்த்ததும் ஓடிவந்து அவர் கைகளைப் பற்றிக்கொண்டு பூங்கொடி அழுதாள். பிரேதத்தை அனுப்பி வைப்பதற்கு முன்கூட்டி செய்ய வேண்டிய மருத்துவ ரீதியிலான இறுதிச் சடங்குங்களை உள்அறையில் செய்துகொண்டிருந்தார்கள். வாசலுக்கருகிலுள்ள நீள்நாற்காலியில் அமர்ந்து சுவரில் சாய்ந்தவாரு பூங்கொடி அமர்ந்திருக்க, பக்கத்தில் பூபாலன் கைகளைக் கட்டி நின்றிருந்தார். அவர்களுக்கு அருகில் மருத்துவ ஊழியரொருவர் அமர்ந்து அலைபேசியில் சத்தமாகச் சிரித்துபேசிக்கொண்டிருந்தார்.

பூபாலன் எழுந்து கதவுக் கண்ணாடி வழியாக எட்டிப் பார்த்தார். அவர் எட்டிப் பார்த்தற்கு பதிலியாக உள்ளிருந்து ஒரு செவிலி அவரிடம் “லாரன்ஸா” என்றாள். “ஆம்” என்பது போல் தலையாட்டினார். “நீங்க எப்ப அடக்கம் பண்றதா இருக்கீங்க?” என்று கேட்டாள். அவர் சொன்ன பதில் செவிலிக்கு உவப்பானதாக

இல்லை. “மறுநாள் காலையில வெரைக்கும்லாம் தாங்காதுங்க. ஒடம்பு ரொம்ப மெடிசன் கேட்டுருக்கு. எதுக்கும் டாக்டர்கிட்ட பேசிட்டு சொல்றேன்.”

ரூபன் தரைத் தளத்திலிருக்கும் பணம் செலுத்த வேண்டிய இடத்திற்குச் சென்று ரசீது வாங்கப் போனான். போகும் முன் அவனிடம் கையடக்க டைரியைக் குடுத்து அலைபேசியில் தான் கேட்கும் தொடர்பெண்ணுக்குப் போட்டுத்தரச் சொல்லி வாங்கிப் பேசினார் பூபாலன். நண்பர் அந்தோணிக்கு போன் பேசினார். துக்கச் செய்தியைச் சொன்னதோடு இன்னும் ஒரு மணிநேரத்தில் லாரன்ஸின் பூத உடலைக் கொண்டு வருவதால் ஷாமியானா, பிரேதக் குளிர்ப் பேட்டி, நாற்காலிகள், சுவரொட்டி ஒட்டுதல் இன்ன பிறவற்றை ஏற்பாடு செய்ய வேண்டுமென்று அந்தோணியிடம் கேட்டுக்கொண்டார். பேசி முடிக்கும் முன், “எங்க சௌமி சாவதாங் ஒழுங்கா எடுக்க முடில. மாமாவ நல்லா எத்து போண்ணுண்டா” என்றார் அழுகுரலில்.

இறந்துபோன லாரன்ஸ் சிந்தாதிரிப்பேட்டையில் பிரபலம் என்பதால் அவரின் மரணச் செய்தியைக் கேள்விப்பட்டதும் அவர் குடியிருந்த ப்ளாக்குக்குக் கீழே ஜனம் கூடியது. அவரின் குணாதிசயங்களையும், அவருடன் தங்களுக்கு இருந்த சிநேகத்தையும் ஞாபகப்படுத்தித் தொகுத்து ஒருவருக்கொருவர் பரிமாறிக்கொண்டிருந்தனர். அவருடன் சுமாராக ஏற்பட்ட பழக்கத்தையும் இறந்ததன் பொருட்டுப் பெரிதுபடுத்திக் கொண்டிருந்தனர். இடையிடையே ஆம்புலன்ஸ் வருகிறதா எனவும் சந்துமுனையை நோட்டம் விட்டனர். சந்துமுனையிலிருந்து கடைசிவரை ஷாமியானா பந்தல் போடுவதற்கு சம்பந்தப்பட்டவர்கள் எலிப்பொந்து தோண்டிக்கொண்டிருந்தார்கள். வண்ண வண்ண நிறத்தில் பிளாஸ்டிக் நாற்காலிகள் ஒன்றின்மீது ஒன்றாக குவிக்கப்பட்டன. அவற்றை எடுத்துப்போட்டு உட்காரும் அளவுக்கு இன்னும் மனநிம்மதி கிடைக்காததால் பெருவாரியானோர் நின்றிருந்தனர். சத்தமில்லாமல் பிணவூர்தி சந்துக்குள் நுழைந்தது. அவருக்கு நிகழ்ந்தது அகால மரணமில்லை. பல நாட்களாக அவர் மருத்துமனையில் இருக்கிறார் எனக்

கேள்விப்பட்டதுதான். ஆகவே அவர் இறந்தால் அதனால் ஏற்படும் மனத்தாங்கலைத் தங்களுக்குள்ளாகவே வெகு நாட்களாகக் கற்பனை செய்து வைத்திருந்ததால் பீறிட்டு அழும் அளவுக்கு யாரும் தயாராய் இல்லை. ஊர்தி நுழையும்போது கூடியிருந்தோரிடையே எவ்வித ஓலமுமில்லை. அவருக்கு உடன்பிறப்புகளும் சொந்தங்களும் இல்லை. லாரன்ஸ் பூங்கொடியைத் திருமணம் செய்துகொண்டதால் அவரிடமிருந்து விலகிபோன அத்தை, மாமா குடும்பங்களுக்குத் தகவல் சொல்லப்பட்டு அவர்கள் ஆட்டோவில் வந்துகொண்டிருந்தார்கள்.

பிரேதக் குளிர்ப் பெட்டியில் லாரன்ஸைக் கிடத்தி மூடியதும் அவருக்குப் பக்கத்திலேயே பூங்கொடிக்கு ஒரு நாற்காலி போடப்பட்டது. லாரன்ஸுக்கு நேர்ந்ததைவிடப் பிள்ளையையும் கணவனையும் அடுத்தடுத்துப் பறிகொடுத்துவிட்டுத் தனிமரமாய் இருக்கும் பூங்கொடியை நினைத்துத்தான் சுற்றி இருந்தோர் ஆந்து ஆந்து பேசினர். ராத்திரி தங்க வைக்க முடியாத சூழலால் சௌமியனின் பிரேதத்தை ஒரே நாளில் எடுக்க வேண்டியதாகப் போய்விட்டது. ஆனால் மாமாவை ஒரு ராத்திரி தங்க வைத்து மறுநாள்தான் அடக்கம் செய்ய வேண்டுமென பூபாலன் விருப்பப்பட, பூங்கொடியும் ஒத்திசைந்தாள். அதற்கு ஏற்றாற்போலத்தான் அவர் சடலமும் சமைத்து அனுப்பப்பட்டிருந்தது. லாரன்ஸ் என்கிற பெயர் கிறிஸ்தவத்தைச் சார்ந்து இருப்பதால் அவர் அடக்கம் செய்யப்படுவது கல்லறையிலா சுடுகாட்டிலா என்கிற விவதாங்கள் எழ அங்கு வந்து சேர்ந்திருந்த அத்தை, மாமா குடும்பங்கள் தங்களின் குடும்ப வழக்கத்தின்படி சுடுகாட்டில்தான் அடக்கம் செய்யப்பட வேண்டும் இதென்ன புதுக் கதை என்று அலுத்துக்கொண்டு திரும்பவும் அழத் தொடங்கினர்.

உருகியொழுகும் இரண்டு மெழுகுவர்த்திகளுக்கு இடையே லாரன்ஸின் புகைப்படம் அச்சிடப்பட்ட ‘சாவு போஸ்டர்’ சிந்தாதிரிப்பேட்டையில் மட்டுமின்றி புதுப்பேட்டை, சேத்துப்பட்டு, பெரியமேடு, வியாசர்பாடி

என அவர் சென்று கேரம் விளையாடிய ஊர்களிலெல்லாம் ஒட்டப்பட்டன.

"வேர்ல்ட் ப்ளேயர் சிந்தை கேரம் கிங்" லாரன்ஸ் (வயது 54) இன்று காலை ஏழு மணி அளவில் கர்த்தருக்குள் நித்திரை அடைந்தார்.

அமைதி புறாவே
எங்கள் இதய நிலாவே
மறைந்துவிட்டாய் நீ
மறக்கவில்லை நாங்கள்
மண்ணுலகில் வாழ்ந்தது போதுமென்று
விண்ணுலகம் பயணம் போனாயோ!
என்றும் உன் நினைவால் வாடும்
மனைவி பூங்கொடி
மச்சான் பூபாலன்

அன்னாரின் இறுதி ஊர்வலம் நாளை பிற்பகல் 3 மணி அளவில் சிந்தாதிரிப்பேட்டையில் இருந்து புறப்பட்டு கிருஷ்ணாம்பேட்டை இடுகாட்டில் அடக்கம் செய்யப்படுமென வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

இங்ஙனம் குடும்பத்தார் மற்றும் சிந்தை மாசிலா கேரம் நண்பர்கள்.

ஓரமாய் இருந்த கூடைக்குள் எடுத்து அடுக்கி வைக்க வைக்க, பிரேதக் குளிர்ப்பெட்டி மறைந்து போகும் அளவுக்கு லாரன்ஸுக்கு மாலை மரியாதைகள் குவிந்தவண்ணமிருந்தன.

இருதயராஜ் கொலையான சமயத்தில் காவலர்கள் பூபாலனை சந்தேகத்தின் பேரில் நள்ளிரவு வீடுதட்டி அழைத்துச் சென்றார்கள். பூபாலனைக் காவல் நிலையத்தில் இருக்க வைக்காமல் தன் நண்பர் குழாமுடன் வந்து இன்ஸ்பெக்டருடன் சண்டைபோட்டு லாரன்ஸ் மாமா அழைத்துக்கொண்டு போனது. 'ஆர்ட்டிஸ்ட்'டாக வாழ்ந்து நொடிந்த காலத்தில் பண ரீதியாகவும், மன ரீதியாகவும் அவர் உறுதுணையாக இருந்த நாட்களை நினைத்து அவரருகே கைகளைக் கட்டி அழுகையை அடக்கிக்கொண்டு நின்றிருந்த பூபாலனை அந்தோணி அழைத்துக் காதில் கிசுகிசுத்தார். குளிர்ப்

பெட்டியினுள் இருக்கும் லாரன்ஸிடம் இரகசியம் பேசுவது போலப் பூங்கொடி கணவனிடம் பேசி அழுதுகொண்டிருந்தாள். அவளிடம் பூபாலன் கிசுகிசுக்க, அவள் “என்னமோ பண்ணுங்க” என்பது போலத் தலையாட்டியதும் பூபாலன் நிமிர்ந்து சரி என்பதுபோல அந்தோணியிடம் தலையாட்டினார். எல்லாம் செய்கைகளிலேயே நிகழ்ந்தது.

துக்க வீட்டினர் அனுமதித்ததன் பேரில் அன்றிரவு கானா கச்சேரிக்கு அந்தோணி ஏற்பாடு செய்தார். கானா உலகில் ‘எழும்பூர் அந்தோணி‘க்கு செல்வாக்கு அதிகமாதலால் அவர் அழைப்புக்கு மற்ற பாடகர்கள் யாவரும் தவறாமல் கலந்துகொள்வர். அந்தோணியும் சிறந்த கானா பாடகர். கானா உலகம், தேனான கானா, அதிரடி கானா, டிஸ்கோ கானா என்கிற பெயரில் ஒலி நாடாக்கள் வெளியிட்டிருக்கிறார். பெந்தகோஸ்தேவில் சேர்ந்ததற்குப் பிறகு கானா பாடல்கள் பாடுவதை நிறுத்திக்கொண்டார். ஆனாலும் தன் சங்கீத ஞானத்தையும் குரல் வளத்தையும் தொண்டைக்குள்ளே புதைக்காமல் தேவனைப் பற்றிப் பாடுவதில் ஈடுபடுத்திக்கொண்டார். ஞானஸ்நானம் பெற்ற பிறகு கர்த்தரை கனம் பண்ணும் விதமாகப் பதினான்கு பாடல்கள் அடங்கிய ஒலிநாடாவை வெளியிட்டார். அத்தொகுப்பில் அவர் பாடிய “காலங்கள் கடந்து போனதே” என்கிற பாடலை கேட்டுருகாதோர் சொற்பம்.

கானா வைப்பதற்கு ராத்திரி பதினொரு மணியிலிருந்து நள்ளிரவு இரண்டு மணி வரைக்கும் தி1 ஸ்டேஷனில் அனுமதி அளித்திருந்தார்கள். லாரன்ஸ் கிடத்தப்பட்டிருக்கும் இடத்திலிருந்து பத்தடி தள்ளி மாட்டு வண்டியைக் கொண்டுவந்து நிறுத்தி மேடையாகப் பயன்படுத்த, அதில் போர்வைகள் விரிக்கப்பட்டன. சாவுக்கு வந்தவர்களைத் தவிர்த்தும் பத்தரை மணிக்கெல்லாம் மேடையின் முன்பு ஜனம் குழுமியிருந்ததற்கு ‘கானா பாலா’ வருகிறார் என பேச்சுலாவியதும் ஒரு காரணம். அந்தோணி வந்து மேடை அமைத்தவர்களைத் தேடிக் கண்டுபிடித்துக் கூப்பிட்டு மேடையைக் கலைக்கச் சொன்னார்.

தரையிலேயே போர்வை விரித்து “டோலக் ஜெகன்” வாசிக்க …

மண்ணிலே மனித வாழ்வு கொஞ்ச காலமே
மானிடனே உள்ளமதில் எண்ணிப்பாருமே
மன்னன் இயேசு பொன்னடியில் வந்து பாருமே
உன் துன்பமெல்லாம் இன்பமாக மாறிப்போகுமே

கடவுள் வாழ்த்துபோல முதற்பாடலை அந்தோணி பாட, கச்சேரி ஆரம்பமாகியது.

“கலை நிகழ்ச்சிக்காக மலேசியா சென்றிருப்பதால் கானா பாலாவால் வர முடியவில்லை” என்று பாடி முடித்ததும் அந்தோணி சபையில் அறிவித்தார். அதனாலெல்லாம் கூட்டம் கலைந்துவிடவில்லை.

மற்ற ஊர்க்காரர்களுக்குத்தான் கானா என்றால் தேவாவும் பாலாவும். சிந்தாதிரிப்பேட்டையிலுள்ளவர்களிடம் அவர்களை முன்மொழிந்தால் அலட்சியமாகச் சிரிப்பார்கள்.

பாலா தேவாவைக் காட்டிலும் கானா உலகின் பெரிய நட்சத்திரங்களெல்லாம் அன்றிரவு பாடுவதற்கு வந்திருந்தார்கள்.

சிந்தை புண்ணியர், புளியந்தோப்பு பழனி, வியாசர்பாடி உலகநாதன், ஆயிரம் விளக்கு செல்வத்தின் மகன், சிந்தை ரேவ் ரவி ஆகியோர் வந்து உலவிக்கொண்டிருந்தனர்.

மணி நள்ளிரவு இரண்டு ஆனது. “கடைசிப் பாடலை சிந்தை புண்ணியர் பாடுவார்” என்று அந்தோணி அறிவித்ததும் மரண வீடு என்றும் பார்க்காமல் கைத்தட்டலும் விசில் சத்தமும் கேட்க, ஓசை எழுப்பியவர்களை அந்தோணி கடிந்துகொண்டு அமர்ந்தார்.

கானா பாடும் எல்லோர் குரலிலும் டி.எம்.எஸ்.ஸின் பாதிப்பு இருக்கும். அடித்தொண்டையில் ஓர் கேவல் இருக்கும். மாறாக சிந்தை புண்ணியரின் குரல் தனித்துவம் வாய்ந்தது. அவர் ஒலிபெருக்கியை கையில் பிடித்ததும் “இறந்துபோன சிந்தை கேரம் கிங் லாரன்ஸ் அவர்களின் ஆத்மா சாந்தியடைய ஆண்டவனை வேண்டிக்கொண்டு கானா உலகின் தந்தை என் அன்பு

மாமா சிந்தை நாதன் அவர்களின் ஆசியோடு'' என்று முன்னுரையைக் கொடுத்துவிட்டு ஆரம்பித்தார். பாடலுக்குள் முழுதும் செல்வதற்கு முன் எந்தப் திரைப்பாடலின் மெட்டை நகலெடுத்து பாடுகிறோம் என்பதை சபையில் அறிவித்துவிட்டு பாடுவது சிந்தை புண்ணியரின் வழக்கம். அதன்படி அறிவித்துவிட்டுப் பாடினார். ''ராமு படத்திலிருந்து ''கண்ணன் வந்தான்'' என்கிற பாடலைத் தழுவி … என்றதும் அதை அங்கீகரிக்கும் விதமாக டோலக்கில் ஒருமுறை உடுக்கையடி அடிக்கப்பட்டது. அடித்து நிறுத்தப்பட்டதும் …

நம்பினார் கெடுவதில்லை நான்குமறை தீர்ப்பு (உடுக்கையடி)
நல்லவர்க்கும் ஏழையர்க்கும் ஆண்டவரே காப்பு.. (உடுக்கையடி)
பசிக்கு மருந்தாவார் யேசு நோய்க்கு மருந்தாவார் (உடுக்கையடி)
பரமதேவனிடமே … ஏஏஏஏ … … (உடுக்கையடி)

நிறுத்தி நிறுத்தி வாசிக்கப்பட்ட அடி ஒரே தாள லயத்தில் வாசிக்க ஆரம்பித்ததும் பிரவாகமெடுத்தார் புண்ணியர்.

அண்ணன் சென்றார் எங்கள் மன்னன் சென்றார்
இந்த உறவுதனை மறந்துவிட்டு மறைந்து சென்றார்
அண்ணன் சென்றார் … ஆ ஆ ஆ ஆ ஆ (2)

கேரம்போடு கேமினில் நீ கிங்கு தானே …
உனை எதிர்த்து நின்று ஆட வந்தால் சங்குதானே
ஸ்டைகர் தனை சுழலவிடும் கைகள் எங்கே …
இறுக்கமாய்க் கட்டிக்கொண்டு உறங்குது இங்கே
அண்ணா, மன்னா லாரன்ஸ் அண்ணா …

அண்ணன் சென்றார் எங்கள் மன்னன் சென்றார்
இந்த உறவுதனை மறந்துவிட்டு மறைந்து சென்றார்.
அண்ணன் சென்றார் … ஆ ஆ ஆ ஆ ஆ. (2)

பூங்கொடியின் பூவும் பொட்டும் புன்னகை எங்கே
புலம்பவிட்டு விண்ணுலகம் போனாய் அங்கே.
பிள்ளைதனை இழந்துவிட்டு அழுதாள் அன்று
இரு கண்களிலே தண்ணீரில்லை அழுவதற்கின்று
அண்ணா மன்னா லாரன்ஸ் அண்ணா …

அண்ணன் சென்றார் எங்கள் மன்னன் சென்றார்
இந்த உறவுதனை மறந்துவிட்டு மறைந்து சென்றார்.
அண்ணன் சென்றார் … ஆ ஆ ஆ ஆ ஆ. (2)

தாலிக்கொடியும் தொப்புள்கொடியும் தந்தவள் நீயே
இரண்டையும் பறித்துவிட்டு பார்க்கிறாய் தாயே
வேளாங்கண்ணி மாதாவே கருணை இல்லையா
இவள் வேதனையை போக்கிடவே வாருமே தாயே..
அம்மா … தாயே … மரியே … மாதா (2)

அண்ணன் சென்றார் எங்கள் மன்னன் சென்றார்
இந்த மண்ணுலகம் மறந்துவிட்டு மறைந்து சென்றார்.
அண்ணா, மன்னா லாரன்ஸ் அண்ணா … (2)

~

கச்சேரி முடிந்ததும் உட்கார்ந்த இடத்திலிருந்தே கண்ணயர்ந்தவர்களைப் புகை படர்ந்த அதிகாலையில் பறைமேளம் தட்டி எழுப்பியது. பிணத்திற்கு அருகில் அமர்ந்திருந்து இரவு முழுக்கத் துக்கம் அனுஷ்டித்தவர்களுக்கு அமலோற்பவமும், பிலோமினாவும் ப்ளாஸ்டிக் டம்ப்ளரில் காபி வழங்கிக்கொண்டிருந்தனர். கண்ணாடியால் மூடப்பட்டும் லாரன்ஸின் உடலிலிருந்து பிண வாடை வீச ஆரம்பித்தது. ஆனபோதிலும் அந்த இடத்திலேயே மூக்கை மூடியோ, உடலைக் குறுக்கியோ யாரும் யாருக்கும் தர்ம சங்கடத்தைக் கொடுக்க விரும்பவில்லை. இயன்றவரை சொன்ன நேரத்துக்கு எடுத்துக்கொண்டு போய் அடக்கம் செய்ய வேண்டுமென்பதில் பூபாலனும் அந்தோணியும் முனைப்புடன் இறுதிச் சடங்கு வேலைகளில் ஈடுபட்டார்கள்.

பிணம் எடுப்பதற்கு ஒரு மணிநேரமே இருந்த வேளையில் கூட்டம் லாரன்ஸைச் சுற்றி நெருக்கியிருந்தது. அவருடைய அலுவலகத்திலிருந்து வந்தவர்களுள் ஒரு பெரியவர் தேம்பித் தேம்பி அழுது கொண்டிருந்தது சுற்றியிருந்தோரை ஆச்சர்யப்படுத்தியது. பெங்களூரிலிருந்து வந்த கேரம் பார்ட்னர்கள் லாரன்ஸுக்கு ஒரிஜினல் சந்தன மாலை அணிவித்து அவர் முன் கைகட்டிச் சில நிமிடங்கள் நின்றிருந்தனர்.

கூட்டம் முழுக்க திடீரென்று ஒருபக்கம் திரும்பியது. ஐநூறு ரூபாய்த் தாள்களில் செய்யப்பட்ட மாலையை பாலு கொண்டு வர அவனுக்கு முன் பறையடிக்க அதற்கிசைந்தாற்போல் ஒரு கூட்டம் நடனமாடி லாரன்ஸை நோக்கி வந்தது. அதனூடாக பாலு நடந்து வந்தான். பாலுவுக்கு நந்தனத்திலுள்ள ஏ.ஜி.எஸ். அலுவலகத்தில் உயர்பதவி கொண்ட வேலை கிடைத்த நேரம் அது.

லாரன்ஸுக்குப் பண மாலை போட வந்த பாலுவைப் பிடித்து பூங்கொடி ஓவென்று அழுதாள். அவன் கடந்து வந்த வெற்றிப் பாதைகள் தொடங்கிய தினங்களை நினைவுகூர்ந்தான் பாலு. அவன் மாலை போடுவதற்காக பூங்கொடியை அவனிடமிருந்து மெல்ல விடுவித்தார்கள்.

பாலு மூக்கை உறிஞ்சிக்கொண்டே லாரன்ஸுக்கு மாலை போட குனியும்போது அவன் கழுத்தில் ‘மாசிலா’ என்று எழுத்துகள் பொறிக்கப்பட்ட தங்கச்சங்கிலி வெளியே வந்து தொங்கியது.

மரியாதை செலுத்திய பின் ஒரு ஓரமாக பாலு வந்து நிற்க சாவு வீடு என்றும் பார்க்காமல் அவனிடம் மற்ற விஷயங்களைப் பற்றிப் பேச முற்பட்டுச் சிலர் அவனிடம் பேச்சுக் கொடுத்தனர்.

பல்லக்கு ஜோடிப்பு ஓர் ஓரத்தில் நடந்து கொண்டிருந்தது. இன்னொரு ஓரத்தில் பறையடிப்பவர்களைச் சுற்றி இரண்டு வாலிபர் ஆடிக்கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு சவால் விடும்படியாக நடுவில் ஒரு குட்டிப்பயல் நிர்வாணமாக நடனமாட அவனை எல்லோரும் உற்சாகப்படுத்தினார்கள். திடீரெனப் பறையடியையும் ஆட்டத்தையும் நிறுத்தச் சொல்லி அந்தோணியின் குரல் கேட்டது. அக்குரலுக்கு அர்த்தம் கற்பிக்கும்படியாக பாஸ்டர் இடிமுழக்கம் எபினேசர் தன் சபை ஊழியர்கள் நான்கைந்து பேருடன் டிடர்ஜென்ட் விளம்பரத்தில் வருவதுபோலப் பளிச்சிடும் வெண்மையுடன் சந்துக்குள் வருகை புரிந்தார். பிணத்தினருகே அவர் குழுவுடன் சென்றதும் மற்றவர்கள் சற்று பின்னகர்ந்தனர். பறையடியும் ஆட்டமும் நிற்கவில்லை. அந்தோணி ஓடிப்போய்ச் சற்று நேரம் நிறுத்தச் சொல்லி அன்புக்

கட்டளையிட்டார். அன்புக்கு மட்டுமே அடிபணியக் கூடிய சூழலில் அங்கிருந்தவர்கள் அப்போது இருந்ததால் கீழ்ப்படிந்தனர். இல்லாவிடில் பாஸ்டர் மீது அங்குள்ள ஒரு சிலருக்கு இருந்த காழ்ப்புணர்ச்சிக்கு வன்முறை நிகழ்ந்திருக்கக் கூடிய சாத்தியங்கள் அதிகம்.

சில நிமிடங்கள் மௌனித்திருந்த பாஸ்டர் இடிமுழக்கம் எபினேசர், தன் குழுவை அடுத்த நிலைக்குக் கொண்டு செல்ல அருகிலிருந்த ப்ரதரை அர்த்தமுறப் பார்த்ததும் அவர் “ப … ர … லோ … க … மே எ … ன் சொ … ந் … த … மே எ … ன் … று கா … ண் … பே … னோ” என ஒவ்வொரு எழுத்துக்கும் இடைவெளிவிட்டு அழுவது போலப் பாட, கோரஸும் சேர்ந்தது. பாட்டு முடிந்ததும் சில நொடிகள் மௌனம். பாஸ்டர் “எல்லோரும் கண்களை மூடுவோம்” என்றதும் பெந்தகொஸ்தே ஆட்களாக இல்லாதவரும்கூட - கடவுள் நம்பிக்கை உள்ள அனைவரும் - மரியாதைக்காகக் கண்களை மூடினர். கிறிஸ்தவப் பெண்கள் புடவை முந்தானையால் முக்காடிட்டனர். தனக்குக் கிடைத்த கௌரவத்தை அனுபவிக்கும் விதமாக பாஸ்டர் சில நொடிகள் அமைதியாய் இருந்தார். கூட்டமும் அதை வழிமொழிந்தது. ஊதிபத்திகள் மட்டும் சொல் பேச்சு கேட்கவில்லை.

பாஸ்டர் இடிமுழக்கம் எபினேசர் “எங்களை அதிகதிகமாய் நேசிக்கிற அன்பின் தகப்பனே” என்று ஜெபம் செய்ய ஆரம்பித்தார். ஜெபம் செய்யும்போது பாஸ்டரின் முகமொழி நடிகர் அசோகனின் பாவனையை ஒற்றி இருந்தது. ஜெபம் செய்து முடித்ததும், கண நேரத்தில் பாஸ்டர், “ம்மா லேயாள்” என்றதும் குழுவிலிருந்த ஒரு சிஸ்டர் பைபிளைத் திறந்து சத்தமாக வசனங்களை வாசித்தாள். அவள் முடித்ததும் பாஸ்டர் கூடியிருந்தோரைப் பார்த்துச் சொன்னார்: “தேவன் என்ன சொல்றார் பாருங்க. மாமிசமும் இரத்தமும் அவருடைய ராஜ்யத்தை சுதந்தரிக்காது. நாம யாருமே இதோ இங்க படுத்திருக்கிற லாரன்ஸ் உட்பட யாருமே நித்திரை அடையறதில்ல.” கூட்டத்திலிருந்த ஒரு சிலர் முன்னெச்சரிக்கை என எண்ணி நழுவினர். இடிமுழக்கம் எபினேசர் தொடர்ந்தார். “கடைசி எக்காளம்

தொனிக்கும்போது நாம எல்லோரும் ஒரு நிமிஷத்திலே, ஒரு இமைப்பொழுதிலே மறு ரூபம் ஆக்கப்படுவோம். அப்படி மறு ரூபம் ஆக்கப்படுவதற்கு நாம எல்லாம் என்ன பண்ணனும்??" கூட்டத்தை வலமும் இடமுமாக பார்த்துக் கேட்டார். கூட்டத்தின் நடுவில் நின்று முக்காடி அணிந்திருந்த ரெஜினா "இரட்சிக்கப்படணும்" என்றாள் அதிருப்தியாக. அவளின் அதிருப்தி தேவன் மீதல்ல.

பாஸ்டர் சொன்னார்: "ம் எல்லோரும் கர்த்தருக்கு ஒரு அல்லேலூயா சொல்லுங்க." எல்லோரும் சேர்ந்து அல்லேலுயா என்றனர். இறுதியாக "எல்லாமே மண்ணு தானய்யா" என்கிற பாடலைப் பாஸ்டர் குழாமில் இருந்த ப்ரதர் பாட ஆரம்பித்ததும் லாரன்ஸுடன் அலுவலகத்தில் பணிபுரிந்த ஒரு நடுத்தர வயது ஆசாமி ஏற்கனவே "டைம் ஆய்டுச்சி, ஸ்மெல் வேற ஓவரா அடிக்குது போதும்ங்க. சீக்கிரம் எடுக்கணும்" என்று ஆட்சேபணை தெரிவித்தார். நீண்ட நேரமாக இந்த வசனத்தை ஒத்திகை பார்த்து ஒருவழியாய்ச் சொல்லிவிட்ட திருப்தி அவர் முகத்தில் வெளிப்பட்டது. "ஹெலோ கம்னு இருங்க அதெல்லாம் எங்களுக்குத் தெரியுங்" என்று அந்தோணி எதிர்வாதம் புரிந்தார். லாரன்ஸின் அலுவல் ஊழியர்கள் இன்னும் இரண்டு பேர் சேர்ந்து அந்தோணிக்கு எதிர்ப்பேச்சுப் பேச சாவு களை கட்டியது. பாஸ்டர் இடிமுழக்கம் எபினேசர் தன் குழாமுடன் சென்றதும் பிணத்தை எடுப்பதற்கான உச்சக்கட்ட முஸ்தீபுகள் நடந்தன. பூங்கொடி மார்பில் அடித்துக்கொண்டு அழுதாள். அவள் விழாதவாறு அவளைப் பிடித்திருந்த பெண்களும் சோகம் தாளாமல் அழுதனர்.

தைரியமான பெண்கள் மற்றும் குடும்பத்தாரிடம் அனுமதி கிடைத்த பெண்களைத் தவிர மற்ற பெண்கள் ரிச்சி தெரு வரைக்கும் சவ ஊர்வலத்தில் கலந்து கொண்டு வீட்டுக்கு நடையைக் கட்டினார்கள். சில பெண்கள் தெருமுனையோடு கிளம்பிவிடுவதுண்டு. பூங்கொடி தெருமுனை வரைக்கும் அழுது கீழே சாய்ந்தாள்.

தெருவைத் தாண்டியதும் பறையடி வேகம் கூடியது. பொதுவாகவே இளம் வயதில் அகால மரணமடைந்தவர், பிரபலங்களின் மரணம் இந்த வகையறா சாவு என்றால் சிந்தாதிரிப்பேட்டையே அல்லோலகல்லோலப்படும்.

குறிப்பாகப் பிணத்தை எடுக்கும்போது இறந்தவரே பாடையிலிருந்து எழுந்து தோள்களை ஒரு குலுக்கு குலுக்கித் திரும்பவும் படுத்துவிடும் அளவுக்குப் பறை உச்சஸ்தாயில் அடிக்க சிந்தாதிரிப்பேட்டையில் ஆட ஆரம்பித்தவர்கள் கிருஷ்ணாம் பேட்டை எல்லை வரை கால் தொய்வடையாமல் சிறுவர்கள், இளைஞர்கள், பெண்கள், கிழவர்கள் உட்பட பூமியைக் கையாலேயே துளையிடும் அளவுக்குக் குத்து குத்தென்று குத்துவார்கள். ஆடிக் கொண்டிருப்பவர்களும், பறையடிப்பவர்களும் வழியில் தங்களை ஆசுவாசம் செய்துகொள்ள ஒத்திசைந்து செயல்படுவார்கள். இசைக் கலைஞர்கள் மோளத்தில் ஒத்தையடி அடிக்க ஆடுபவர்கள் கால்களை அகலப்படுத்தி அதன் நடுவே தன் முழங்கையினால் காற்றைக் கிழித்து “டங்க்தாக் தாக் டனுக்குதாக்” என்ற தாள நயத்திற்கேற்ப வேகத்தைக் குறைத்து கீழ்நோக்கிக் குத்துவார்கள். இசைக்கு ஏற்றாற்போல் புலிவேஷம், ஆடு கட்டுதல், ரூபாய்த்தாளை தரையில் படுக்கப்போட்டு கண் இமைகளால் அதைக் கொத்தி எடுப்பது போன்ற சாகசங்களும் இடம்பெறும். ஆடுபவர்கள் எவ்வகையிலும் சோர்ந்து போகா வண்ணம் பறையடிப்பவர்களும் ஒத்தையடி, இரட்டையடி, டப்பாங்கடி, புலிவேஷம், பரதநாட்டிய அடி என்று விதவிதமான ஓசைகளுக்கு விதவிதமான பெயர்கள் வைத்து அடிப்பார்கள். ஏற்றாற்போல் ஆட்டமுறையும் ஆட்டத்தின் வேகமும் மாறும்.

லிட்டர் கணக்காக ஊக்க மருந்து உடம்பில் ஏறிய தெம்போடு பெருசுகள் ஆட்டம்போட்டு வருவதைப் பார்ப்பதற்கே வியப்பாக இருக்கும். டேய் எமதர்மா முடிந்தால் என்னை எடுத்துக்கொண்டு போடா என்று எமனுக்குச் சவால் விடுவது போல் வானத்தை அண்ணாந்து பார்த்து நாக்கைத் துருத்தியபடி பத்து விரல்களையும் மேல்நோக்கி விரித்து பாவ்லா காட்டி நடனமாடி வருவார்கள். வழியில் உடல் சோர்ந்து தாகமெடுத்தால் வாயை ஆவெனப் பிளக்க, வாயில் ‘வாட்டர் பாக்கெட்’ பீய்ச்சி அடிக்கப்படுமே ஒழிய ஆட்டத்தை நிறுத்த மாட்டார்கள்.

பூவால் ஜோடிக்கப்பட்ட பல்லக்கில் லாரன்ஸ் ஒரு கைமேல் இன்னொரு கை வைத்து பூரண நித்திரையில் இருந்தார். கையிலிருந்த வாட்ச் மட்டும் ஓடிக்கொண்டிருந்தது. சுமார் நான்கு கிலோமீட்டர் பெரியோர் சிறியோர் என ஆடிக்கொண்டே போனார்கள். சரியாய் கிருஷ்ணாம்பேட்டை சுடுகாடு இருக்கும் தெருவுக்குள் நுழைந்தவுடன் ஆடியவர்கள் அமைதியாய் நடந்து வரத் துவங்கினர். ஆடுவது சம்மந்தமாக ஏற்கனவே சிந்தாதிரிப்பேட்டைக்கும் கிருஷ்ணாம்பேட்டைக்கும் ஏற்பட்ட பல பிரச்சினைகளால் விளைந்த பவ்யம் அது. கிருஷ்ணாம்பேட்டையினுள் புகுந்ததும் அங்கிருக்கும் சிறுதெய்வக் கோயில்களைக் கடந்து போகும்போது மேளம் அடிக்கக் கூடாது என்று அவர்களுக்கொரு மரபு இருக்கிறது. ஒருமுறை அங்காளப் பரமேஸ்வரி கோயிலைத் தாண்டும்போது ஒரு வேகத்தில் பறை மேளத்தை நிறுத்தாமல் போனதால் ஊர்க்காரர்கள் ஒன்றுகூடி சுடுகாட்டில் பெரிய கலவரமே நடந்த வரலாறு உண்டு.

சிந்தாதிரிப்பேட்டை ஆட்களும் கிருஷ்ணாம்பேட்டைக்கு வரும்போது தங்களூர் எதிரியை சொந்த ஊரில் வஞ்சம் தீர்க்க முடியாமல் கிருஷ்ணாம்பேட்டையில் உள்ள தன் நண்பர்களுக்கு ஆள்மூட்டிவிட்டு ஏற்பட்ட வன்முறைகளும் இருக்கின்றன.

பிணக்குழி தோண்டுபவரைச் சுற்றிவளைத்து நின்றுகொண்டு ‘இத்தினி ஆணி அடி அத்தினி ஆணி அடி’ ‘ஒழுங்கா பள்ளந் தோண்டுபா’ என்று அதிகப்பிரசங்கித் தனமாக பேசியும், போதையில் மரியாதைக் குறைவாய் குழிவெட்டியிடம் நடந்துகொண்டதால் ஏற்பட்ட கலவரங்கள் கணக்கிலடங்காதவை.

மாசிலா இறப்பின்போது சாவு நடனம் ஆடிக் கொண்டு வந்தவர்கள் கிருஷ்ணாம்பேட்டை பெண்களைப் பார்த்துத் தவறான செய்கைகளைக் காண்பித்து ஆடிக்கொண்டு சென்றதால் மிகப் பெரிய கோஷ்டி மோதலே உருவானது. நடனமாடியவர்கள் பாதிக்கப்பட்ட

பெண்களின் காலில் விழுந்து மன்னிப்பு கேட்கவில்லை என்றால் புதைக்க விட மாட்டோம் என்று ஊர்க்காரர்கள் பிடிவாதம் செய்ய நடனமாடி தப்பித்துப் போனவர்களைக் தேடிக் கண்டுபிடித்து கூட்டி வந்து மாசிலாவை அடக்கம் செய்வதற்குள் இரவு ஆகிப்போனது. “ஒரு நல்ல மன்ஷன கடிசில இப்டி அடக்கம் பண்ண வேண்டிதாப்போச்சே” என்று சிலர் புலம்பியபடியே ஊர் வந்து சேர்ந்தார்கள்.

கிருஷ்ணாம்பேட்டைக்காரர்களின் கட்டுப்பாடுகளையும் மீறி கூத்தாடி கும்மாளம் போட்டுப் பிரச்சினை செய்வது பெரிய காரியமில்லை. சிந்தாதிரிப்பேட்டையில் வாரம் ஒரு சாவு விழும். அதில் உத்திரிய மாதா கல்லறையில் அடக்கம் செய்யப்படும் பிணங்கள் குறைவு. கீழ்ப்பாக்கம் கல்லறைக்குச் செல்பவர்கள் தவிர மீதி அனைவரும் இங்குதான் வந்தாக வேண்டுமென்கிற தற்காப்பு நடவடிக்கை. ஆனாலும் இந்த பவ்யமெல்லாம் ரொம்ப நாளுக்கு நீடிக்காது.

லாரன்ஸின் தூரத்துச் சொந்தக்காரன் ஒருவனால் அவருக்கு இறுதி மரியாதை செலுத்தப்பட்டு, நல்ல விதமாகக் கடைசி பிடி மண் அவர் குழியினுள் தூவப்பட்டு சுமார் மூன்று மணியளவில் அவர் அடக்கம் செய்யப்பட்டார். எல்லோரும் சுடுகாட்டிலிருந்து வெளியேறி இரு சக்கர வாகனங்களிலும், ஆட்டோவிலும், பேருந்திலும் எனத் தங்கள் பொருளாதார சக்திக்கு உட்பட்ட வழியில் வீடு திரும்ப முயற்சித்துக்கொண்டிருந்தனர். ரூபன் மட்டும் சௌமியன் அடக்கம் செய்யப்பட்ட குழியருகே சென்று தலை குனிந்தபடி நின்றிருந்தான்.

அன்றிரவும் அவனுக்குத் தூக்கமே வரவில்லை.

இவாஞ்சலின் அழைத்தாலும் எடுத்துப் பேசத் தயக்கம். வெறுப்பு.

முப்பத்தெட்டு லட்சத்தை விழுங்கிக்கொண்டு லாரன்ஸைப் பிணமாக அனுப்பியதற்குத் தானும் உடந்தையாக இருந்ததால் இவன் பேசாமல் இருக்கிறானென்றும் அவனின் நிராகரிப்புக்கு அர்த்தம் கொடுத்து அவனின் கோபத்திற்கு மதிப்பளிக்கும் விதமாக மேற்கொண்டு அவனை ஓரிரு நாள் தொடர்புகொள்ள வேண்டாமெனவும் தீர்மானித்தாள்.

ரூபனுக்கும் ரெஜினாவுக்குமான அந்நியோன்யம் விட்டுப்போய் வருடங்கள் ஆகிவிட்டன. ஆனாலும் அவன் நகோமியம்மாவிடம் சகஜமாகப் பேசுவான். இரண்டு நாட்களாக அதுவும் இல்லை. யாரிடமும் கோபம் என எதுவுமில்லை தன் எண்ணங்களுடன் தனியாக இருக்க வேண்டுமென்கிற அந்தரங்க மனோபாவம் அவனை அப்படி இருக்க வைத்தது. எண்ணங்களின் ஆக்கிரமிப்பில் தூக்கமற்ற இரவுகள் விபரீதமான சிந்தனைகளைத் தூண்டின. உன் சிந்தனைகளுக்குச் செயல் வடிவம் கொடு என யாரோ காதில் ரகசியம்போல வந்து சொல்லுகிறார்கள். அந்த ‘‘யாரோ’’ சில நேரங்களில் ரூபமாகவும் அரூபமாகவும் வருகிறார்கள்.

சௌமியன் நீ எதைச் சொன்னாலும் செய்வேன்.

ஆனால் புரிந்துகொள். பூமாவை இந்த நடுஜாமத்தில் எழுப்பி அவளோடு உறவு கொள்ளச் சொல்கிறாய். தாராளமாக அவளும் சம்மதிப்பாள் என்கிறாய். அவமானத்தாலும், துக்கத்தாலும் அவள் தன் உடலில் தீ வைத்துக்கொண்டது உனக்குத் தெரியாதா என்ன? பிழைத்துவிட்டாள் என்றாலும் அவள் முகம் பார்க்கும் நிலையில் இல்லை. என்னால் அந்த விகார முகத்தைப் பார்த்துக்கொண்டே அவளுடன் முயங்க இயலாது. ‘‘நண்பனுக்காக இதைக்கூட செய்ய மாட்டாயா? எனக் கேட்கிறாய். வாஸ்தவந்தான். உனக்காக நான் என்ன

செய்தேன்? நீ இருக்கும்போதும் இல்லாதபோதும் எனக்கான தேவைகளைத்தான் உன் மூலமாக நான் பூர்த்தி செய்துகொண்டேன். ஆனால், நண்பனே இது மட்டும் வேண்டாம். சரி, அவளைப் போய்ப் பார்த்து நான் கேட்டதாகச் சொல்லிவிட்டு வா என்கிற இந்த விண்ணப்பம் நியாயமானது. நேரம், காலத்தைப் பற்றியெல்லாம் ஒரு கவலையுமில்லை. தோ எழுந்து இரண்டு சந்துகளைத் தாண்டினால் 'சி' ப்ளாக்கின் முதல் மாடியில் கணவனுடன் படுத்துக்கொண்டிருப்பாள்.

"இந்நேர்த்துல சட்டய போட்டுகினு எங்கடா போற?"

"தோ வந்துற்றேங் இரு."

"டைம் மூணாவுதுடா."

"ஃப்ரென்ட் ஒருத்தங் சென்ட்ரல் டேஷன்ல ட்ரையின்ல எறங்கி வெயிட் பண்ணினுகிறாங். அவன கூட்னு வரணுங்."

"உங்க அப்பாவ எழுப்பிக் கூட கூட்னு போ."

என் அப்பாவின் மீது உனக்கு நம்பிக்கை இல்லையா. எனக்கும்தான். நான் பூமாவைப் பார்ப்பதற்காக மட்டுமே செல்கிறேன். அவர் உடன் வருவாரேயானால் ம்ஹூம். அவருக்கு முகமோ வயதோ முக்கியமில்லை.

"எப்பா ரூபனு எங்கப்பா நேரங்கெட்ட நேர்த்துல?" - நகோமியம்மா.

இரண்டு நாட்களாக ரூபனின் கனத்த மௌனத்தில் பீதியடைந்தவர்களுக்கு இந்த நடுஜாமக் காரியம் இன்னும் கலவரப்படுத்தியது. ரெஜினா அவசரமாகக் குணசீலனை எழுப்பி விஷயத்தைச் சொன்னாள். எழுப்பிய வேகத்திற்கு அவரால் எழுந்திருக்க முடியவில்லை. உட்கார்ந்த இடத்திலிருந்தே சலனமற்ற முகத்தோடு "இந்நேரத்துல எங்கடா போற?" என்றார்.

"நீ எங்கூட வரியா?"

"வரேன் … அதுக் …"

"நீ வர்றதா இருந்தா நா போல" - சிரித்தான்.

உடம்பில் அரைகுறையாக இருந்த சட்டையைக் கழட்டி சுவராணியில் மாட்டிவிட்டு வந்து பாயில் படுத்துக் கண்களை மூடினான். அவர்கள் மூவரும் தூக்கமற்றுப்போனார்கள். ரெஜினாவும், நகோமியம்மாவும் பைபிளை எடுத்து அவனருகில் வந்து ஜெபித்தார்கள். எதிர்ப்பு தெரிவிக்காமல் அவர்களின் ஜெபத்திற்கு ஒத்திசைந்தான்.

ஏதோ பெரிய அசம்பாவிதம் தனக்கு நிகழப்போகிறது. அதிலிருந்து தடுக்கும் பொருட்டு செய்யும் காரியத்தில் ஏன் குறுக்கிட வேண்டும்? அவர்களின் ஜெபத்தால் இதை நிவர்த்தி செய்ய முடியுமா என்ன? முதலில் நிவர்த்தி செய்வதற்கு என்னிடம் என்ன குறையிருக்கிறது? சௌமியன் போல நானாகவே எனக்குள் பேசிக்கொள்கிறேன். நான் நினைத்தால் நான் பேசுவதைத் தடுக்க முடியும். நான் அப்படி நினைப்பதற்கு ஏதோ ஒன்று என்னை தடுத்துக்கொண்டிருக்கிறது. அந்த “ஏதோ ஒன்று“தான் எனக்குள் புகுந்து கொண்டிருக்கிறதா? ஒருவேளை ஏதோ ஒன்று சௌமியனின் ஆவியா? நிச்சயமாக இல்லை. என்னுடம்பில் யார் புக வேண்டுமென்பதைத் தீர்மானம் செய்ய வேண்டியது நான். எனக்குள் நிகழும் ஒவ்வொரு காரியத்தையும் என் மனமும் உடலும் தீர்மானிக்க வேண்டும். இப்போது நினைத்தால்கூட என்னால் தூக்கத்தை வரவழைத்துத் தூங்க முடியும். பார்க்கிறாயா? “பார்க்கிறாயா” என்கிற வார்த்தையை நான் யாரிடம் சொல்லுகிறேன்? என் மனசாட்சிக்கே விடுத்த சவால். நம்முடைய மெஜாரிட்டியான சவால்கள் நமக்கு நாமே விட்டுக்கொள்கிறதுதானே? தூங்குகிறேன் பார். தூங்குவதற்காகக் கண்களை இறுக்க மூடித் தூக்கம் எப்படி இருக்கிறது என அதன் உருவத்தைப் பார்த்தான். கருப்பு நிறப் போர்வைபோல ஒன்று தெரிந்தது. கொடியில் காயப்போட்ட தடிமனான கருப்பு நிற ஜமக்காளம் காற்றில் சன்னமாக அசைவதுபோல அது அசைந்தது. தூக்கமே வா வா …

அவனருகிலேயே முழங்காலிட்டு அமர்ந்திர்ந்த இருவரில் நகோமியம்மா கேட்டாள்.

“எப்பா ரூபனு இன்னா ராஜா முணுமுணுத்தினுகிற?”

“தூக்கமே வர்ல ஆயா.”

“ஒண்ணு சோத்திரம் ரெண்டு சோத்திரம் மூனு சோத்திரன்னு மன்சுக்குள்ளியே ஆயிரம் சோத்திரங் சொல்லினே இருப்பா. அப்டியே தூக்கங் வந்துடுங் காலிலே எத்தினி சோத்திரங் வரைக்கும் சொன்னன்னு கேப்பேங் சொல்ணுங்” - ரெஜினா அவன் தலையில் கைவைத்துச் சொன்னாள். அவளுக்குப் பழைய ஞாபகங்கள் வந்தன.

உள்ளவர்களை மேலும் ரணப்படுத்தக் கூடாது என்பதற்காக ரெஜினா சொன்னதை மறுக்காமல் ஸ்தோத்திரங்களை சொன்னான். பயம் உடல் முழுக்கப் பரவி நடுக்கத்தைக் கொடுத்தது. தேவனை இத்தனை காலம் அசட்டை செய்ததற்கு அவர் பதிலடி கொடுக்கும் முன் அவரிடம் சரணாகதி ஆவது உகந்தது என்றெண்ணி போர்வையைத் தலை வரைக்கும் போர்த்திக்கொண்டு ஸ்தோத்திரங்களை சொல்லிக்கொண்டே இருந்தான். நாத்திகத்தைக் கழற்றிவிட்டோம் என வெளியுலகத்திற்குத் தெரியவாபோகிறது? ஆயிரம் ஸ்தோத்திரங்கள்கூடச் சொல்லியாயிற்று. பிரதிபலனாகத் தூக்கம் வந்தபாடில்லை. தூக்கத்திற்கு வீடு நிசப்தமாக இருக்க வேண்டும், வெளிச்சம் குறைவாக இருக்க வேண்டும் என்பதைக் காட்டிலும் தூங்க விரும்புவோரின் மூளை எதையும் சிந்திக்காமல் இருக்க வேண்டும். சிந்திப்பதுகூட ஒரே விஷயத்தைப் பற்றி என்றால் மூளை அதே நேர்கோட்டில் பயணித்து சோர்வுற்று தூக்கத்தைக் கொண்டுவந்துவிடும். ஒவ்வொரு ஸ்தோத்திரத்தைச் சொல்லும்போதும் எத்தனை ஸ்தோத்திரம் சொல்கிறோம் என்பதில் ஒருமுகச் சிந்தனை இருந்தால் இந்நேரம் அவன் தூங்கியிருப்பான். விடிந்துவிட்டது. இன்று ஆபீஸுக்குப் போகலாமா? வேலை செய்யும்போது தவறான எண்ணங்களின் கொப்பளிப்பு தாங்க முடியாமல் அலுவலகத்தின் வேறு விதமாக நடந்து கொண்டால் அசிங்கமாகப் போய்விடும். இன்னும் அந்த அளவுக்கெல்லாம் முற்றிப்போய்விடவில்லை. இருந்தாலும் முன்னெச்சரிக்கை அவசியம். விஷாலை அழைத்துத் தற்போதைய சூழலில் உடம்பு செரியில்லை எனச் சொல்லிவிடலாம். அதுதானே உண்மை. இரண்டு

நாட்களாகத் தூக்கம் இல்லை, வயிற்றுக்குள் சாப்பாடு இறங்கவில்லை. உறக்கமும், உணவும் தேகத்துக்கு நியாயம் செய்தால் ஒரு பிரச்சினையுமில்லை. சௌமியன், நீதான் இந்த வேலை கிடைப்பதற்குக் காரணமாய் இருந்தவன், நீயே அதற்குக் கேடு விளைவிக்க மாட்டாய் என நம்புகிறேன். ஐந்தரை மணிக்கு வேலைக்குக் கிளம்பச் சொல்லி ரெஜினா எழுப்பியபோது ஒரு குரலுக்கே போர்வையைக் கலைத்து பதில் சொன்னான். கலக்கமில்லாத தெளிவான குரல். அவனை மேற்கொண்டு வற்புறுத்த மனமில்லை. காலை எட்டு மணி ஆகியிருந்தது. படுக்கையிலிருந்து எழுந்திருக்கத் தோன்றவில்லை. ஆனால் சின்னஞ்சிறிய வீட்டில் மனம் போன போக்கில் படுத்திருப்பது குடும்பம் செய்வதற்கு இடையூறாக இருக்குமென்று எழுந்து பல் துலக்கி, குளித்துச் சாப்பிட உட்கார்ந்தான். ஒரு இட்லிக்கு மேல் சாப்பிட வயிறு இடம் தரவில்லை. வாந்தி வருவதுபோல சேஷ்டை செய்ய, ரெஜினாவும் நிறுத்திக்கொண்டாள். “இன்னாதாங் செய்து உனுக்கு?” என்று கேட்டதற்கு, “தூக்கம் இல்ல அதாங் ஒடம்பு ஒருமாரிக்து செரியாய்டுங்”. அவர்கள் தொடர்ந்து கேள்வி கேட்காதவாறு இடம்பெயர்ந்தான்.

இவாஞ்சலினைத் தொடர்புகொண்டு இந்தந்த மாதிரி இருக்குது எனச் சொல்லலாம் என செல்போனை எடுத்தான். அவளிடமிருந்து ஒரு குறுந்தகவல்கூட இல்லை என்றதும் கோபம் மூண்டது. இறங்கி வர வேண்டியவள் அவள். அவளே பிடிவாதமாக இருக்கிறபோது நானாக வலிந்துபோவது மானக்கேடு. ஆண் நண்பர்களுடன் இந்தப் பிரச்சினையே இல்லை. சைலேந்தரை அழைத்தான். “என்ன பிரச்சனைடா உனக்கு?” என கேட்டவருக்கு பதில் தெரிந்தால் தானே சொல்ல முடியும். சௌமியனின் ஆவி எனக்குள் புகுந்துவிட்டது எனச் சொல்லலாமா? … திட்டவட்டமாகத் தெரியவில்லை! இத்தனைக்கும் அவன் இறந்துபோகிற கடைசி ஓரிரு வருடங்களில் அவனிடம் நெருங்கிப் பழகவில்லை. ஒருவேளை நான் அப்படி பழகாததினால்தான் வந்து என்னை ஆட்டுவிக்கிறானா? ச்ச்சே … ஏதோ ஒருமுறை வந்து அவன் விருப்பத்தைச் சொன்னான். அவன் மட்டுமா வந்தான்? கிள்ளிவளவன்

வந்து கைகொட்டிச் சிரித்துப் பழிப்பு காட்டுகிறார். கிரண்யா ச்சீ வெட்கமாய் இல்லையா என அமிழ்ந்த குரலில் கேட்கிறாள். சென்னைக்கு மிக அருகில் குறைந்த விலையில் அருவி கிடைக்குமென டெல்லி கணேஷ் நரைபூத்த தலையுடன் தோள்தொட்டு அறிவுறுத்துகிறார். லாரன்ஸ் மண்ணிலிருந்து எழுந்து என் குரல்வளையைப் பிடிக்கிறார். இத்தனை நாள் இவர்கள் எங்கிருந்தார்கள்? கூடித் திட்டம்போட்டு என்னை ஒருவழி பண்ண வேண்டும் என நினைக்கிறார்கள் போலும். இவர்கள் ஒரே அலைவரிசையில் இசைந்து போவதற்கு என்ன ஒற்றுமையைக் கண்டார்கள் என்றுதான் யோசித்துக்கொண்டிருக்கிறேன் ... குழப்பத்திலும் ஒரு தெளிவு இருக்கிறது. நிச்சயமாக இது பேய் பிரச்சனை இல்லை. மனக்கோளாறாக இருக்கலாம். இவர்களில் ஆதிக்கம் செலுத்துவது செளமியனாக இருக்கிறபடியால் அவன் இறந்துவிட்டவன் என்கிறபடியால் இது பேய் பிரச்சினையாகவும் இருக்கலாம். லாரன்ஸ் கூடத்தான் இறந்துவிட்டார்! ஆனால் அவரெனக்கு நெருக்கமானவர் இல்லையே!! பிரச்சினை யாருக்கோ என்பதுபோல இவ்வளவு தெளிவாக அலசி ஆராயும் எனக்கா பிரச்சினை? தூங்க முடியவில்லை. சாப்பிட முடியவில்லை.

“எவுள் நேரன்டா பால்கனிலேயே ஒக்காந்துனு இருப்ப? உள்ள வா.”

இப்போது வர மாட்டேன் என முரண்டு பிடித்தால், கூப்பிட்ட அம்மாவை ஓடிப்போய்க் கழுத்தைப் பிடித்து என் விஷயத்தில் ஏன் தலையிடுகிறாய் எனச் சுவரில் இடித்தால் நான் இயல்புக்கு மாறானவன். எனக்கு புத்தி பேதலித்துவிட்டது என்று அர்த்தம். வந்து கூப்பிட்டதும் ஒரு ஆட்டுக்குட்டியைப் போல் பின்தொடர்ந்து செல்கிறேனே? பிறகு எனக்கு என்ன கோளாறு! தூங்கி எழ வேண்டும். அவ்வளவுதான்.

மணி காலை பத்து இருக்கும். குணசீலனிடமிருந்து ஒரு தூக்க மாத்திரையை வாங்கி அவனுக்குக் கொடுத்துப் படுக்கவைத்தாள் ரெஜினா.

எவ்வளவு அன்பானவர்களாய் இருந்தாலும் அவர்களால் தூங்க முடியாத இயலாமைச் சூழலில்

தேற்றுதல் செய்து படுக்க வைக்கத்தான் முடியுமேயன்றி தூங்குவது அவரவர் பாடு.

மாத்திரையின் உதவியோடு தூங்கும் நிலைக்கு வந்ததை எண்ணி வருந்தினான். இந்த வருத்தம் தொடர்ந்தால் இதுவே தூக்கத்தைக் கெடுத்துவிடும் என்பதால் இதைப் பற்றி நினைக்காமல் வேறு எதையாவது யோசிக்கலாம் எனச் சிந்திக்க முயன்றவனை மருத்துவம் ஜெயித்தது.

ஆனால், அதன் வெற்றியின் ஆயுள் முழுதாக ஒருமணி நேரம்கூட நீடிக்கவில்லை.

உடம்பு முழுக்கக் கைகள் அல்லது கைகளே உடம்பாக. பற்பசை விளம்பரத்தில் நடிக்கும் கிருமியைப் போல. அதன் உடம்பிலிருக்கும் ஒவ்வொரு கையிலும் கோணி ஊசி. அது நெருங்கிறது. வந்து எல்லாக் கரங்களையும் ஒருசேர உயர்த்தி என்னைக் குத்துகிறது. சதக் சதக் என்றில்லை. ஊசி முனையால் வெறுமனே என்னைத் தொடுவதுபோல. ஒரே நேரத்தில் உடம்பின் எல்லா பாகங்களிலும் அந்தத் தொடுதலை உணர்ந்து ஆழ்ந்த நித்திரையிலிருந்த நான் மெதுவாகக் கண்களைத் திறக்கிறேன். தூக்கத்தை உருவமாகக் கண்ட அதே இருட்டு. ஒருவேளை கண்களை இன்னும் திறக்கவில்லைபோல என்றெண்ணித் திறந்த கண்களை மறுபடியும் திறந்தேன். இருட்டு. கண்களை மூடினாலும் அதே இருட்டு. இன்னொரு முறை கண்களைத் திறப்பதற்கு பயமாக இருந்தது. அதே இருட்டை நான் பார்க்க நேர்ந்தால் நிச்சயமாக இது மனக்கோளாறாக இருக்காது. சுடுகாட்டிற்குச் சென்றதால் அங்குள்ள பேய் ஏதாவது அன்பின் நிமித்தமாக என்னைப் பின்தொடர்ந்து வந்த வினையாக இருக்கலாம். அது உண்மையாக இருக்கும் பட்சத்தில் அந்தப் பேய் சௌமியனைத் தவிர வேறு யாராக இருக்க முடியும்? அதெல்லாம் ஒன்றுமில்லை. இப்போது நாம் ஆழ்ந்து உறங்கிக்கொண்டிருக்கிறோம். உறக்கத்தின் ஒரு பகுதியாக வரும் கனவாக இருக்கலாம். கண்களைத் திறந்து என்ன ஏதென்று பார்க்கலாம். வேண்டாம். தூக்கம் கலைந்துவிடும்.

“ன்னாப்பா மாத்திர போட்டுமா தூக்கங் வர்ல?”

“ஆயா நான் தூங்கினுதானேகிறேங்.”

“செரி செரி தூங்கு நைனா.”

நடுக்கம் கொண்டு கண்களை மூடினால் உடம்பு முழுக்க அதே ஊசிமுனைத் தொடுதல்கள். இதே போன்ற உணர்வை மெரீனா நீச்சல் குளத்தில் குளித்துவிட்டு சூரியன் உக்கிரமாகப் பொழிய வெற்றுடம்பில் நின்றுகொண்டிருந்தபோது உணர்ந்தேன்.

இவன் எப்போது கண்களை மூடுவான் எப்போது இவனைக் குத்தலாம் எனச் சரியான திட்டமிடுதலுடன் ஊசிமுனைகள் தொடுகின்றன. கண்ணுக்குத் தெரியாத குறுகுறு முட்களால் செய்த போர்வையைப் போர்த்தியிருப்பதுபோல உணர்ந்தான். ஊசிமுனைத் தொடுதல்கள் அவனை ஆக்கிரமித்திருந்தன. சத்தம்போட்டு இவர்களை அழைக்கலாமா? வந்து விசாரித்தால் என்னவென்று சொல்வது? பதிலைத் தயாரித்து வைத்துக்கொள்வோம்.

“கண்ண மூடுனா ஒடம்பு முழுக்க ஊசியால யாரோ குத்துற மாரி இருக்குதுமா” - அழுதேவிட்டான்.

“அயோ யேசப்பா. எம்புள்ளிக்கு ன்னா ஆச்சி?”

ரெஜினா அவனை நெருங்க அவன் பின்வாங்கி சுவரோடு ஒட்டிக்கொண்டான்.

ரெஜினா சத்தம் போட்டு அழுதாள். அவள் ஓலத்தைக் கேட்ட பக்கத்துக்கு வீட்டினர் என்ன ஏதென்று விசாரிக்க வந்தார்கள். “அதெல்லாம் ஒன்யும் இல்ல. புள்ளைக்கு ஒடம்பு செரில்ல” என்று நகோமியம்மா அவர்களை உள்ளே சேர்க்காமல் நயமாகப் பேசிக் கதவைச் சாத்திக்கொண்டாள். கல்யாண வயது வாலிபனுக்குப் பேய் பிடித்ததென்று தெரிய வந்தால் யார் பெண் கொடுப்பார்கள் என்கிற கவலை நகோமியம்மாளுக்கு.

ரெஜினா ஜெப எண்ணையுடன் அவனை நெருங்கினாள். அவன் அனுமதிக்கவில்லை. குணசீலன் செய்வதறியாது அவர்களைப் பார்த்துக்கொண்டிருந்தார்.

“எப்பா, அம்மாப்பா. வாப்பா ஜெபம் பண்றேம்பா.”

“எனுக்கு ஒன்னியும் இல்ல தூங்கினா செரியா போய்டுங்.”

“செரி தூங்கு வா.”

“நீங்கல்லாங் வெளிய போய்டுங்க நான் தூங்குறேங்.”

“செரி தூங்கு.”

“வேணா வேணா. வெளிய போவாதிங்கோ. உள்ளியே இருக்கணுங். ஆனா சவுன்ட்டு குடுக்கக் கூடாது நா தூங்கிடுவேங்.”

மூவரின் அருகில் பாயில் படுத்தான். ரெஜினா ஜெப எண்ணெயை எடுத்து அவன் நெற்றியில் சிலுவை போட்டாள். அவன் மறுப்பு தெரிவிக்காதது குறித்து அவனுக்கே சந்தோஷமாக இருந்தது. எனக்குள் பேய் இருந்தால் இந்நேரம் இத்தகைய தெய்வீக காரியத்தைச் செய்ய பேய் சம்மதித்திருக்காது என்றெண்ணி ஆசுவாசம் செய்து கொண்டான். நகோமியம்மா கையில் பைபிளுடன் முழங்காலிட்டு ஜெபித்தாள். ரெஜினா அவன் படுத்துக்கொண்டிருப்பதை நீர்க்கண்களுடன் பார்த்திருந்தாள்.

“ஆஸ்பிட்லுக்கு கூட்னு போலாமா?” என்றார் குணசீலன்.

“இன்னான்னு கூட்னு போவ. புள்ளைக்கு அதுலாங் ஒன்னியுங் இல்ல. தூங்குனா செரியா போய்டுங்.”

“சவுன்ட்டு குடுக்காதீங்கன்னு சொன்னல்ல சனியங்களா. உங்களால தூக்கமே கெட்டுப்போது” எனச் சொல்லி படுக்கையிலிருந்து எழுந்தான். இனம் புரியாத வெறுப்பு என்பார்களே அதை முழுதும் அனுபவித்தான்.

“எங்கப்பா போற?” என எழுந்தவனின் கையைப் பிடித்து ரெஜினா கேட்டதற்கு “பாத்ரூம் தாங் போறங். நம்புலனா வா பின்னாடி” என்றான்.

சிறுநீர் வருவது போன்ற உணர்வு இருந்ததே தவிர அடிவயிற்றை உந்தித்தள்ளிப் பெரும்பாடு பட்டும் மூத்திரச் சொட்டுகூட வரவில்லை. உடற்சூடு அதிகமானால்தான் இப்படி ஆகுமென்று கேள்விப்பட்டிருக்கிறேன். என்ன இழவோ! என் உடம்பு

ஏன் இன்று காலையிலிருந்து நிறைய அமானுஷ்யங்களைச் சந்தித்துக்கொண்டிருக்கிறது. என் உடம்பை நினைத்தால் எனக்கே பாவமாகவும் இதனால் ஒரு கட்டத்தில் என் உயிரே போய்விடுமோ என்று நினைக்கையில் கலவரமாகவும் இருக்கிறது.

தோல்வி முகத்துடன் கழிவறையிலிருந்து வெளியே வந்தவனை நிறுத்தி ரெஜினா கேட்டாள் ‘‘ப்பா, ஒழுங்கா சாப்டவும் மாட்ற, தூங்கவும் மாட்ற. ஆஸ்பிட்லுக்காவது போய் பாக்லாமா?’’

‘‘ஆஸ்பிட்லுக்கெல்லாங் நா வர்ல. வேண்ணா சபைக்கு போய் ஜெபம் பண்ணினு வர்லாம்.’’

ரெஜினாவுக்கு சோகத்திலும் மகிழ்ச்சி. கணக்கிலடங்கா முறை கெஞ்சியும் வர மாட்டேன் என்றவன் அவனாகவே கூப்பிடுகிறான். கர்த்தர் அவள் விண்ணப்பத்தைக் கேட்டார். ஆனால், அவர் அதை நடைமுறைப்படுத்திய விதம் எதற்கும் உத்திரவாதம் இல்லை என்பதுபோல் இருந்தது.

பேய் பிடித்தவனாக இருந்தால் இந்நேரம் சபைக்குக் கயிறு கட்டி இழுத்தாலும் வர சம்மதம் தெரிவித்திருப்பேனா? நானாகவே கூப்பிடுகிறேன் என்றால் கடவுளுக்கு எதிரான அச்சுறுத்தல்கள் என்னுடம்பிலிருந்தும் மனசிலிருந்தும் கிளம்பவில்லை என்பதை எனக்கு நானே நிரூபித்துக்கொள்கிறேன். இதன் மூலம் எனக்குக் கிடைக்கும் தன்னம்பிக்கை முதலில் என்னை தைரியப்படுத்தும்.

ரெஜினா பாஸ்டர் இடிமுழக்கம் எபிநேசரைத் தொடர்புகொண்டாள். அவரைத் தாமாகத் தேடிப்போகிறோம் என்கிற முகச்சுளிப்பு ஏற்பட்டாலும் தன் சுய கௌரவத்தைவிடப் பிள்ளையின் நலன் முக்கியம் என்பதால் முகச்சுளிப்பு வந்த வேகத்தில் நடையைக் கட்டியது. பாஸ்டர் இடிமுழக்கம் எபினேசர் சபையில் நடந்துகொள்கிற விதங்கள் நாளுக்குநாள் மோசமாகிக்கொண்டே போனதால் ரெஜினா சபைக்குப் போவதையே முழுதும் தவிர்த்திருந்தாள். வருடந்தோறும் ஒரு ஏழைப்பிள்ளையை மேற்படிப்புக்காகப் படிக்க அனுப்பலாம் என்கிற வெளிநாட்டுக்குச் சலுகை

கிடைத்ததிலிருந்து முதன்முறை தன் பிள்ளையை இங்கிலாந்திற்கு அனுப்பியவர் அடுத்தடுத்த வருடங்களில் கணிசமான தொகையை வாங்கிக்கொண்டு கிறிஸ்தவர் அல்லோதோரையும், சபைக்கு வெளியே உள்ள தனவந்தர்களின் பிள்ளைகளையும் அனுப்பிக்கொண்டிருந்ததை ரெஜினா குழுவினரால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. சபை முடிந்த ஒரு ஞாயிறு மதியம் காணிக்கையை முக்கியஸ்தர்கள் தரம் பிரித்துக்கொண்டிருந்தபோது நேரடியாக அவரைக் கேள்வி கேட்ட ரெஜினாவை வாய்க்கு வந்தபடி திட்டிவிட, அஹிம்சை வழியில் கோஷ்டி மோதல் உண்டானது.

இந்தச் சூழ்நிலையிலேயே ரெஜினா இடிமுழக்கம் எபிநேசரைத் தொடர்புகொண்டாள். பேயோட்டுவதில் அவர் பாஸ்டரய்யாவைப் போல வல்லவரொன்றுமில்லை. ஆனால் குடும்பத்தில் நிகழ்ந்த இந்த பிசாசுக் காரியத்திற்கு ஆன்மிக வழியைத் தேடுவது என்றாகிவிட்ட பின் தாய்சபையைப் புறக்கணித்து வேறு இடத்திற்குச் செல்வது தேவனுக்குக் கூடாத காரியம் என்று நினைத்தாள். தவிர, இப்போது ராமர் தோட்டத்திலுள்ள எட்டு சந்துகளில் மொத்தம் ஐந்து சபைகள் உருவாகி ஆத்துமாக்களைச் சேர்ப்பதில் கடும் போட்டி உருவாகும் நிலையில் பேயோட்டுவதற்கு நாமே அடுத்த சபைக்குச் சென்றால் நன்றாக இருக்காது. பொதுமக்கள் தங்களின் சபை மீது நம்பிக்கை இழக்க எந்த விதத்திலும் தான் தூண்டுகோலாக இருக்கக் கூடாதென்பது அவள் விருப்பம்.

எபினேசர் வரச் சொன்னதன் பேரில் மதியம் பன்னிரெண்டு மணிக்கு மூவரும் சபைக்குக் கிளம்பினார்கள். ஹவுசிங் போர்டிலிருந்து வெளியே வந்ததும் அவர்கள் வீட்டுக்குள் ஏதோ அசம்பாவிதம் இருக்கிறது என்று உணர்ந்தவர்கள் மூவரையும் தினுசாகப் பார்த்தார்கள். எதிர் ப்ளாக்கின் மூன்றாவது மாடி பால்கனியிலிருந்து “ஏ நகோமியம்மா எங்க போறீங்கோ?” என்று ராக நயத்துடன் கேட்டாள் மத்திம வயதுடைய ஒரு பெண். மூவரும் திரும்பி மேலே பார்த்தாலும் நகோமியம்மா மட்டும் “ஆங் உம்

புர்ஷனக்கு நீ கவுட்டு விரிக்கிறதில்லையாமே ரெண்டாந்தாரம் பாக்கப் போறோங்'' என்று பதில் சொல்லித் திரும்பிய பின் ''யேசப்பா என்ன மன்ச்சிரு'' என்றாள்.

ரெஜினா, நகோமியம்மா இருவருக்கும் நடுவில் அவன் நடந்து வந்தான். வீட்டிலிருந்து அடுத்த சந்தில் சபை இருப்பதால் போகிற தூரம் ஐந்து நிமிடங்களுக்குக் குறைவு என்றாலும் அதற்கிடையில் அவன் உடல் எந்த மாதிரி இயங்குகிறது என்பதைத் தெரிந்துகொள்ள ரெஜினா அவனிடம் சில கேள்விகள் கேட்டாள்.

அவள் கேள்விகளுக்கு பதில் சொல்லக் கூடாது என்பது அவன் எண்ணமில்லை. அக்கேள்விகள் அவன் சிந்தனைக்கு மிகவும் பாரதூரமானவையாக இருந்தன. எதுவுமே பேசாது அமைதியாக வந்தான்.

சபை வாயிலில் நுழையும்போது சற்றுப் பின்னகர்ந்து, ரெஜினாவைப் பார்த்து தனக்கு உள்ளே வர விருப்பமில்லை என்பதைத் தெரியாத நபரிடம் குடிக்கத் தண்ணீர் கேட்பது போலச் சொன்னான். நகோமியம்மா தன் கரம் கொண்டு அவன் இடுப்பிற்குப் பின்னாலிருந்து அணை போட்டாள். ரெஜினா பிடித்திருந்த அவன் வலது கரத்தின் மணிக்கட்டை இறுக்கினாள். அவர்கள் பிடியிலிருந்து மெல்ல விலகித் தன் விருப்பமின்மையை இன்னொருமுறை நாசூக்காகத் தெரியப்படுத்தினான். அவர்களதை உணர்ந்தாலும் அவனை உள்ளே தள்ளுவதில் முனைப்புடன் பிடியை இன்னும் இறுக்கி இழுத்தனர். அவர்கள் மீது சின்ன உறுமலுடன் அதே சமயம் நிதானத்துடன் பற்களைக் கடித்து ''கைய வுடுங்க நானே உள்ள வரங்'' என்றவன் அவர்கள் விட்டதும் நின்ற இடத்திலிருந்து கீழே உட்கார்ந்து தவளைப் பாய்ச்சலாக ஒரு தாவல் செய்து உடனே எழுந்து ஓடினான்.

கண்ணு மண்ணு தெரியாமல் சந்து சந்தாக ஓடினான். பழைய துணிகளுக்கு மாற்றாக பிளாஸ்டிக் குடங்கள், பக்கெட்டுகள் கொடுத்து பிழைப்பு நடத்துவதற்காக அவற்றை இடுப்பிலும், தலையிலும் சுமந்து வந்த பெண்மணியை இடித்துக் கொண்டு ஓடினான். ஓட்டமென்றால் ஓட்டம் நேர்கோட்டு ஓட்டமல்ல. போலீசாரின் துப்பாக்கிச் சூட்டிலிருந்து தப்பிப்பதற்காகத்

தந்திரமாக ஓடுபவனைப் போல வளைந்து வளைந்து ஓடினான். நீண்ட நாட்களாக இப்படி ஓட வேண்டுமென ஆசைப்பட்டதுபோலவும் அதற்கு சரியான காரணம் இல்லையென்றாலும் சந்தர்ப்பம் கிடைத்ததைப் பயன்படுத்திக்கொள்வதுபோலவும் ஓடினான். அந்த சாகச உணர்வு வடிந்ததும் நாம் ஏன் இவ்வாறு ஓடுகிறோம், இத்தனை வேகத்தில் ஓடுவதற்கு நம்மை யார் மிருக ஆக்ரோஷத்துடன் துரத்துகிறார்கள் என்று பின்னால் திரும்பிப் பார்க்கலாம். ஆனால் வேண்டாம். அம்மாவும் நகோமியம்மாவும் என்னைப் பிடித்துவிடலாம் என்கிற நம்பிக்கையுடன் இன்னும் ஓடி வந்துகொண்டிருந்தால் அந்த காட்சியைப் பார்க்குமளவுக்கு நான் மனசாட்சியற்றவனல்ல. அவனைத் துரத்திய ஒரு சில தெரு நாய்கள் குறிப்பிட்ட தூரத்திற்குப் பிறகு ஈடு கொடுக்க முடியாமல் நாக்கைத் தொங்கப்போட்டு மூச்சிரைக்க நின்று அவனை வெறித்தன.

அவன் ஓடியதைப் பார்த்துப் பீதியடைந்த சந்துவாசிகள் அவனை யார் துரத்தி வருகிறார்கள் என்பதைத் தலை சாய்த்து அவன் வந்த வழியைப் பார்த்தார்கள். வேகத்தைக் குறைக்காமல் ஓடிக்கொண்டே தலையைத் திருப்பி அவர்கள் ஏமாறுவதை எள்ளலுடன் பார்த்தான். ஓட்டத்தில் வேகம் குறையவில்லை. தலையையும் திருப்பவில்லை. எட்டாவது சந்து ஆரம்பிக்கும் இடத்தில் நிறைய சுமையுடன் மெதுவாக அசைந்து வந்த ஒரு நீலநிற ஆட்டோ அவனைத் தொட்டது.

~

கண்களைத் திறக்க வேண்டிய அவசியமில்லை. வாசனையை வைத்தே அறிய முடிகிறது என்னுடைய வீடுதான். கண்களைத் திறக்க வேண்டிய அவசியமில்லை குரல்களை வைத்தே இனங்காண முடிகிறது. பாஸ்டர் இடிமுழக்கம் எபிநேசர், அவர் பக்கத்தில் லேயாள், நகோமி ஆயா, அம்மா, இரண்டு ப்ரதர்கள், பக்கத்துக்கு வீட்டு அக்கா, இவர்களிடமிருந்து சற்று விலகி, கருத்துப் பேதங்களிருந்தாலும் எதுவுமே பேசாமல் மௌனமாக என் அப்பா. கண்கள் மூடிக் கொண்டிருந்தாலும் நான் உறங்காமல் நடித்துக் கொண்டிருக்கிறேன் என்பதை என்

இமைகள் என்னைச் சுற்றியிருந்தோருக்கு தெரிவிக்கிறதென்பது எனக்குத் தெரியும். கண்களைத் திறக்கலாம். திறந்தால் இரண்டு கேள்வியைக் கேட்டுக் கழுத்தறுப்பார்கள். அதுவும் முதல் கேள்விக்கும் இரண்டாவது கேள்விக்கும் நாடகத் தனமான ஓர் இடைவெளி விட்டுக் கேட்பார்கள். 1) "கையி இப்போ எப்டிபா இருக்கு" 2) "அன்னிக்கு ஏம்ப்பா சப வாசல் வரைக்குங் வந்துட்டு திபுதிபுன்னு ஓடுன". இதற்கான பதில் அவர்களுக்கு முக்கியமே அல்ல. அவர்களுக்குத் தேவையானதெல்லாம் எனக்குப் பேய் பிடித்திருக்கிறதா என்பதைத் திட்டவட்டமாக என் தரப்பிலிருந்து நான் தெரியப்படுத்த வேண்டும். பாம்புபோலத் தரையில் ஊர்ந்து செல்ல வேண்டும். பாஸ்டர் இடிமுழக்கம் எபிநேசர் என் தலையில் கை வைத்ததும் குளிர் ஜுரம் வந்தவரைப் போல உறும வேண்டும். சுவரில் கால்வைத்து நடக்க முயற்சிக்க வேண்டும். என்னை யாருடைய ஆவி ஆக்கிரமிப்பு செய்திருக்கிறதோ அந்த நபரின் குரலில் அவர் விருப்பப்பட்ட ஒன்றைப் பிடிவாதமாகக் கேட்க வேண்டும். அநேகமாக என் தொண்டையிலிருந்து சௌமியனின் குரலைத்தான் எதிர்பார்க்கிறார்கள். இதில் ஏதாவது ஒன்றைச் செய்தால்கூட "அப்பாடா" என்று பரிசுத்த ஆவி நிரம்பத் தங்களின் வல்லமையுள்ள ஜெபத்தினால் என்னைப் பிசாசிடமிருந்து தப்புவிக்க கர்த்தரிடத்தில் மன்றாடுவார்கள். அதற்கான வாய்ப்பை நான் அவர்களுக்குத் தரப் போவதில்லை. "நான்" என்றால் நானில்லை. எனக்குள் இருந்து தனக்கு வேண்டியவற்றை நிகழ்த்தக் காத்திருக்கும் சௌமியன். அதனால்தான் பேய் பிடித்ததுபோல என்னைப் பாவிக்கவிடாமல் பைத்தியம் பிடித்தவன்போல நடந்துகொள்ள வைக்கிறான். தனிப்பட்ட முறையில் எனக்குத் துக்கமொன்றுமில்லை. இதன் மூலம் எனக்குத் தேவையானதை அறுவடை செய்யும் விஷய ஞானம் எனக்கு வந்துவிட்டதாக நான் எண்ணுகிறேன். ஆனால் குடும்பத்தாரையும், இவாஞ்சலினையும், என் கார்ப்பரேட் எதிர்காலத்தையும் நினைத்தால்தான் கலக்கமாக இருக்கிறது. ஒருவேளை நிஜமாகவே எனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டால்! அது என்ன "பிடித்துவிட்டால்?" உனக்குப் பைத்தியம்தான்.

அதை உன் உள்மனம் ஏற்றுக்கொள்ள மறுத்து உன்னை ஏதோ பிதற்ற வைக்கிறது. உனக்குள் படிந்த சில குற்ற உணர்ச்சிகள் மூளையிலிருந்து செரிமானம் ஆகாமல் உன் உடல் செய்கையின் மூலம் தங்களின் அஜீரணத்தை வெளிப்படுத்திக்கொண்டிருக்கின்றன. அதில் பிராதன இடத்தை சௌமியன் பிடித்திருக்கிறான்.

அவன் சொற்படி நீ கேட்டாக வேண்டும். அவன் உன்னை யாருக்கும் தெரியாமல் நடு ஜாமத்தில் எழுந்து கூவத்தில் போய் விழுந்து சாகச் சொல்லவில்லை. எல்லாச் செல்வங்களும் பெற்று நீண்ட ஆயுளுடன் நலமாக நீ வாழ வேண்டுமென்பது அவன் விருப்பம். அதற்கு முன் அவன் சுயநல விருப்பமொன்றும் இருக்கிறது. அவனும் பூமாவும் பிணைந்திருந்த அந்தரங்க வீடியோவை யார் வாட்ஸ்அப்பில் முதலில் பரப்பினார்கள் என்பதைத் தெரிந்துகொண்டு அவர்கள் ஒவ்வொருவரையும் நீ பழிவாங்க வேண்டும். 'நீயா' படத்தில் வரும் இச்சாதாரிப் பாம்பு மனித உருக்கொண்டு வஞ்சம் தீர்க்குமே அதுபோல. சௌமியன், கவலை வேண்டாம். இதோ தயாராகிவிட்டேன். கற்சிலை திடீரென கோபம் கொண்டு கண் திறக்குமே அம்மாதிரி படக்கென்று கண்களைத் திறந்தான்.

கருவிழியை மேலும் கீழும் உருட்டினான். அவன் கண்களைத் திறந்த விதத்தையும் கருவிழியில் சாகசம் செய்ததையும் கண்டு உற்சாகமடைந்த இடிமுழக்கம் எபினேசர் "இது அசுத்த கிரியைதாம்மா. ஆனா அட்டகாசம் செய்யாது கள்ளப் பிசாசு" என்றார். அவன் கடந்த நாட்களில் நடந்துகொண்ட விதத்தைப் பார்த்து அதற்கு ஏற்றவாறு அவனுக்குள் இருக்கும் பேயின் குணாதிசயத்தை விவரித்தார்.

தன் ஆன்மிக ஆராய்ச்சியின் முடிவை விரக்தி நிலையிலிருந்த ரெஜினாவைப் பார்த்துச் சொல்லிவிட்டு நகோமியம்மாவிடம் ஒரு தம்ளரில் சுத்தமான நீர் கொண்டு வரச் சொன்னார். லேயாள் பக்கம் திரும்பி ஜெப எண்ணெயைப் பையிலிருந்து எடுக்கச் சொன்னார். ப்ரதர்களுக்கு அவர் எந்த வேலையும் கொடுக்கவில்லை. அவர் வெளியிடங்களுக்குச் சென்றால் ப்ரதர்களை அழைத்துச் செல்வது ஒப்புக்குத்தான். அவர்களைப்

பொருட்படுத்த மாட்டார். அவருடைய ஏவல்கள், கொஞ்சல்கள், கொக்கரிப்புகள் அனைத்தும் சிஸ்டர்களிடம் மட்டுமே. குறிப்பாக லேயாளிடம். ப்ரதர்களுக்கும் இதெல்லாம் தெரியும். என்ன செய்வது, தொழில் கற்றுக்கொள்ள வேண்டும். அதுவரை சகிப்புத் தன்மை அவசியம் என்பதால் அவரின் நிராகரிப்புக்கு அவமானப்படாததுபோல ப்ரதர்கள் தெய்வீக நிலையில் இருந்தனர்.

ரூபனைக் கட்டிலிலிருந்து கைத்தாங்கலாக அவரே எழுப்பி உட்கார வைத்தார். முடிந்தால் அவனை எழுந்து நிற்குமாறும் கேட்டுக்கொண்டார். பாதங்கள் மரத்துப்போய் இருந்ததால் அவனுக்கு மட்டுமே கேட்கிற "ர்ர்ர்ர்" என்கிற அதிர்வுடன் மெதுவாகக் கால்களை கீழே இறக்கி எழுந்து நின்றான்.

அவன் நின்றதும் அவனுக்குப் பின்னால் இரண்டு ப்ரதர்களும் அவன் இரண்டு தோள் முனைகளையும் ஆளுக்கொன்று என்கிற வீதத்தில் பிடித்தும் பிடிக்காதது மாதிரி பிடித்து நின்றனர். போதகர்கள் வியாதியஸ்தர்களைத் தொட்டு ஜெபம் செய்கையில் தேவனின் பரிசுத்த ஆவி அவர்கள் மீது இறங்கி அப்படியே பின்னோக்கிக் கீழே சாய்வார்கள். ஆகவே விழுந்து மண்டை உடையாமலிருக்கச் செய்யும் முன்னெச்சரிக்கை ஏற்பாடாக ப்ர்தர்கள் பின்னால் நிற்பது வழமை.

ஜெபத்தை ஆரம்பிப்பதற்கு முன் பாஸ்டர் இடிமுழக்கம் எபிநேசர் அவனின் தேக சௌகரியங்களைப் பற்றி விசாரித்தார். அவன் சொற்களின் வழியாக பதில் சொல்லாமல் அவர் முகத்தைப் பாராது தலையை மட்டும் பூம்பூம் மாடு மாதிரி ஆட்டினான்.

ஜெப எண்ணெயைச் சில சொட்டுகள் தம்ளரில் விட்டு ஒரு கையில் தம்பளரைப் பிடித்திருந்தார். மறு கையை அவன் தலை மீது வைத்து ஜெபத்தை அவர் ஆரம்பித்ததும் அறையிலிருந்த யாவரும் கண்களை மூடினார்கள். பெண்கள் முந்தானையை எடுத்துத் தலையில் முக்காடிட்டனர். பாஸ்டர் ஜெபத்தின் மீது நம்பிக்கை இல்லையென்றாலும் ஜெப வேளையில் கண்கள் மூடவில்லையென்றால் இவர்கள் போனதற்குப்

பிறகு ரெஜினாவிடம் திட்டு வாங்க நேரிடும் என்பதால் ஓரமாய் நின்றிருந்த குணசீலன் இரு கைகளையும் முன்பக்கம் கோர்த்தவாறு கண்களை மூடினார். ரெஜினா கண்களை மூடியதுமே அழ ஆரம்பித்தாள். சத்தம் வராத அழுகை. "என் பிள்ளைக்கு இவ்வாறு நேர்ந்துவிட்டதே இயேசப்பா" என்கிற வசனத்தை மௌன மொழியாக முகத்தில் பேசிய அழுகை.

பேய் ஓட்டுவதற்கு பாஸ்டரய்யா தேவனிடத்தில் மேற்கோள் காட்டிய அதே வசனங்களையும், வார்த்தைகளையுமே பயன்படுத்திய இடிமுழக்கம் எபிநேசர் இடையிடையே மானே தேனே பொன்மானே போட்டுக்கொள்வது மாதிரி ரூபன், ரெஜினா, குணசீலன் இவர்களின் பெயரைச் சேர்த்துக்கொண்டார். இவர்களுக்குத்தான் ஜெபிக்கிறோம் என்பது அத்தாட்சியாக அவ்வாறு செய்தார். ஆனால் அவருடைய ஜெபத்தின் வேகம், உச்சரிப்பு எல்லாம் பாஸ்டரய்யாவின் சத்தத்தைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமாய் ஒலித்தது. ஜெபம் செய்தவற்கு முன்பாக மின்விசிறியை அவர் நிறுத்தச் சொல்லிவிட்டமையால் அறையில் புழுக்கம் நிலவியதோடு அவர் ஓங்கரிப்பு சுவர்களில் மோதி வீடு அதிர்ந்தது. குறிப்பாகப் "போ" என்கிற வார்த்தையைப் பயன்படுத்தும்போது அடிவயிற்றிலிருந்து தொண்டை வரைக்குமுள்ள காற்றைத் திரட்டி "ப்ப்ப்போ, ப்ப்ப்போ" என்றார். இப்பொழுதே இந்தப் பிள்ளையை விட்டுப் "ப்ப்ப்ப்போ, குடும்பத்தை விட்டுப்ப்ப்ப்ப் போ, இந்த வீட்டை விட்டுப்ப்ப்ப் போ" என்று ஜெபத்தின் பல்வேறு சமயங்களில் சொன்னார். ரூபனின் தலையில் கைவைத்துக்கொண்டு அவன் முகத்தருகே அவர் ஜெபத்தை மேற்கொண்டதால் அவர் "ப்ப்ப்ப்ப்போ" "ப்ப்ப்ப்ப்போ" எனச் சொல்கையில் அவரின் உமிழ்நீர் அருவிப் புகை போல அவன் மீது படர்ந்தது. மட்டுமில்லாது அவரது வாய் துர்நாற்றத்தின் முழு வீரியத்தையும் மிக நெருக்கத்தில் அனுபவித்தான். ஆனாலும் அவன் மயக்கம் போட்டுக் கீழே விழாததைக் கண்டு பாஸ்டர் இடிமுழக்கம் ஜெபத்தினூடாகவே அதை அறிந்து மனக்கிலேசம் கொண்டார். கையை அவன் தலையிலிருந்து எடுத்து இரண்டு விரல்களால் அவன் நெற்றிப் பொட்டில் அழுத்தினார். அவன் ஜம்பமாக

நின்றிருந்தான். அவர் அடுத்த கட்ட முயற்சியாக அவனின் காலைத் தன் பாதங்களால் மிதித்து அவன் சமநிலையை குலையச்செய்து அதே விரல்களால் நெற்றிப் பொட்டில் கைவைத்து இன்னும் உக்கிரத்தோடு தள்ளினார். போட்டி கடுமையாக நிலவியது. அவனால் விழ முடியாது என்றில்லை. விழாக் கூடாதென்கிற வைராக்கியம். அவனால் வெகுநேரம் தாக்குப்பிடிக்க முடியவில்லை. உணவும், தூக்கமும் இல்லாது போதிய ஊட்டச்சத்து இல்லாமல் மெலிந்திருந்தவனால் இடிமுழக்கத்தின் உக்கிரமான தாக்குதலை எதிர்கொள்ள முடிய வில்லை. மூடிய கண்களைத் திறவாது ஸ்லோ மோஷனில் பின்பக்கமாகச் சாய்ந்தான். ப்ரதர்கள் அவன் தரையில் விழாத வண்ணம் தாங்கிகொண்டனர். பாஸ்டர் அவனைக் கீழே கிடத்துமாறு செய்கையாலேயே ஆணையிட்டார். “தாங்க்யு ஜீசஸ் தாங்க்யு ஜீசஸ் ப்ரைஸ் த லார்ட்” என்று முடித்துக் கண்களை முழுதும் திறந்தார்.

ரெஜினா எங்கிருக்கிறாள் எனக் கண்களை அலையவிட்டு அவளைப் பார்த்துச் சொன்னார்: “ரொம்ப திமிர் புடிச்ச பேய்மா.”

“யாருங்கய்யா எங் பேரம்மேல ஏறினுகிற்து?” என்று கேட்டாள் நகோமியம்மா.

பாஸ்டர் சொன்னார் “அதான் அந்தப் பய்யன் பிராந்தில மருந்து குடிச்சி செத்தான்ல?”

கேட்டவர்களுக்கு எவ்வித ஆச்சரியமுமில்லை. எல்லோரும் எதிர்பார்த்ததுதான்.

“ரெண்டு பேரும் சிநேகிதக்காரங்கதாங் பாஸ்டர்.”

“அதான் இவன தேடி வந்திருக்கான்.”

அழுதுகொண்டிருந்த ரெஜினாவுக்கு பாஸ்டர் சொன்னார் “உன் பய்யன் நம்ம சபைக்கு ஒழுங்கா வந்திருந்தான்னா இதெல்லாம் ஆகி இருக்குமா?. இனியாவது ஒழுங்கா வரச் சொல்லு” என்றவர் அவனுக்கு அருகில் அமர்ந்து கையிலிருந்த ஜெப எண்ணெய் கலக்கப்பட்ட நீரை “இயேசுவின் இரத்தம் ஜெயம், இயேசுவின் இரத்தம் ஜெயம்” எனச் சொல்லி அவன் மீது விசிறியடித்தார்.

அவன் கண்களை லேசாகத் திறந்ததும் அவன் உச்சி முடியைக் கொத்தாகப் பிடித்துக் கேட்டார். “சொல்லு யார் நீ? எதுக்காக ஆண்டவருடைய பிள்ளைகிட்ட வந்துருக்க? என்ன வேணும் ஒனக்கு?”

அவன் எதுவுமே பேசவில்லை. முகத்தில் நீரொழுக தலை குனிந்துகொண்டான். திடீரென யாரோ அழும் சத்தம் கேட்க எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள். குணசீலன் கைகளால் முகத்தைப் பொத்திக்கொண்டு குலுங்கினார். அதைப் பார்த்த நகோமியம்மாவும் பெருங்குரலெடுத்தாள்.

ரூபன் அலுவலகத்திற்குச் சென்று பதினான்கு நாட்களுக்கு மேல் ஆகியிருந்தன. கையில் இறுக்கமான தசைப்பிடிப்பு ஏற்பட்டு வேலைக்குப் போக முடியாத இரண்டாவது நாள் விஷாலிடமிருந்து வந்த அழைப்பை ரெஜினா எடுத்துப் பேசினாள்.

பையனுக்குக் கை மூட்டெலும்பு உடைந்திருப்பதாகவும் இன்னும் கொஞ்ச நாட்களில் வந்துவிடுவானென பலவீனமான குரலில் சொன்னாள். வந்து பார்க்கிறேன் எனச் சொன்னவரையும் மறுத்துவிட்டாள். அவனுக்கு வந்த ஒவ்வொரு அழைப்புகளையும் ரெஜினாவே எடுத்துப் பேசினாள். அவனைப் பற்றி விசாரிப்பவர்களிடம் தெளிவான காரணத்தைத் சொல்லத் தோற்றுத் தடுமாறிப் பின்பு, “பய்னுக்கு ஒடம்பு செரில்ல” என்பாள். “என்ன ஆச்சு?” என்று எதிர்முனையில் அவர்கள் கேட்பது காதில் விழாதது போல “அவன உங்களுக்கு ஃபோன் பண்ண சொல்றேங்” என்று இணைப்பைத் துண்டித்துவிடுவாள். அவளுடைய பதிலும் விளக்கமும் பெரும்பாலானோருக்குத் திருப்தி இல்லை என்றாலும் அவள் சொல்லுவதை நம்பாமல் வீட்டிற்கே வந்து பார்க்கும் அளவுக்கு நலம் விரும்பிகளுக்கு ரூபன் மீது அக்கறை வழியவில்லை. அதற்கு இன்னும் கால அவகாசம் இருக்கிறதென்று தன்னைத்தானே சமாதனப்படுத்திக்கொண்டனர் நலம் விரும்பிகள்.

இவாஞ்சலினால் அது முடியவில்லை. லாரன்ஸ் இறந்ததிலிருந்து அவனிடமிருந்து எந்தத் தகவலுமில்லை. அவளாகவே அழைத்தாலும் அவன் அம்மாவே எடுத்துப் பேசுகிறார்கள். “அவனுக்கு ஒடம்பு சரியில்லமா” என்று ஒரே வார்த்தையில் முடித்துவிடுகிறார்கள். இவாஞ்சலின் படுக்கையிலும், கழிவறையிலும் அழதழுது ஓய்ந்துபோனாள். தன் வாழ்க்கையில் யாரும் நிரந்தரமில்லை. தன் மேல் யார் அதிகமாக அன்பு காட்டினாலும் அல்லது தான் யார்மீது அதீத அன்பாக இருந்தாலும் அவர்கள் விட்டுப் போய் விடுகிறார்கள் என்று இறந்துபோன அப்பாவிலிருந்து

பிரிந்துபோன நெருக்கமான தோழிகளின் பட்டியல் வரை நினைவுபடுத்தி, இது தனக்கு சகஜம்தானே என்று அழுகையை நிறுத்திக் கண்களைத் துடைத்துக் கொள்வாள். துடைத்துக்கொண்ட மறுகணம் ரூபனைப்பற்றிய நினைப்பு வந்ததும் அழுவாள். இருவருக்கும் ஏற்பட்ட கால இடைவெளியை அவளால் தாங்கிகொள்ள முடியவில்லை.

அவனுக்கு நிஜமாகவே உடல்நிலை சரியில்லையோ என்கிற வெவ்வேறு விதமான சிந்தனைகளுக்கும் ஒற்றை வெளிப்பாடாக அவளால் அழ மட்டுமே முடிந்தது. தன் விடுதியறையில் யாருமில்லாத நேரம் பார்த்துக் கதவை சாத்திக்கொண்டு …

~~~~ ரூபன், இங்க பாரு. என்னய கழட்டி விடுனும்னு முடிவு பண்ணி இருந்தீனா அத நீயே ஃபோன் பண்ணி சொல்லு. எதுக்கு உங்க அம்மாவ யூஸ் பண்ணுற. நீ தைரியசாலிதான. (சில விநாடி அமைதிக்குப் பின்) சாரிப்பா நா தப்பா எந்த அர்த்தத்துலயும் சொல்லல. நீ ஃபோன் பண்ணீனா அந்த சாக்குல உன் வாய்ஸ கேக்கலாம்ல அதான் சொன்னேன். ப்ளீஸ் எனக்கு போன் பண்ணி எங்கூட சண்டயாவது போடு ப்ளீஸ். எனக்கு ஒரே ஒரு வாட்டி உன் வாய்ஸ கேக்கணும். அதுக்கு அப்பறம் மாதா ப்ராமிஸ் நாம பிரிஞ்சிடலாம். நான் ரொம்ப நேசிக்கிறவங்களும், என்ன ரொம்ப நேசிக்கிறவங்களும் சீக்கிரத்துக்கே என்னய விட்டு பிரிஞ்சி போய்டுவாங்க. தனியா இருக்கிறது எனக்கு ஒண்ணும் புதுசு இல்ல கேட்டுக்க. (சில விநாடி அமைதிக்குப் பின்) ஆனா நீ என் லைஃப்ல வந்ததுக்கு பெறகு ப்ராமிஸா நா தனியாவே இருக்க மாட்டேன் ரொம்பவும் ஜாலியா இருப்பேன்னு நெனச்சேன். நா ஏதாவது தப்பு செஞ்சிருந்தா என்ன மன்னிச்சிடுப்பா ப்ளீஸ். லாரன்ஸ் விஷயத்துல எங்க ஹாஸ்பிட்டல்ல அவ்ளோ அமவுண்ட் வாங்கி அவர வேணும்னே சாகடிச்சாங்கன்னுலாம் எனக்குத் தெரியாதுப்பா. அவங்க சொல்ற வேலையை செய்வோம் அவ்ளோதான். பேஷன்ட்கிட்ட அவங்க சொல்ல சொல்றத சொல்லுவோம். எங்க சீனியர் அக்கா ஒருத்தங்க சொல்லுவாங்க, நாய் வேஷம் போட்டா கொலச்சி
~~~~

ஆகணுங்கிற மாதிரி நர்ஸ் வேஷம் போட்டா பொய் பேசி ஆகணும்ன்னுவாங்க. நான் என்ன செய்யட்டும். என் சேலரிய நம்பித்தான் என் தங்கச்சிய மெடிக்கல் படிக்க வெச்சாங்க. அவ டாக்டராகணும்னு எல்லோரையும் விட எனக்குத்தான் ஆச. அதான் ஹாஸ்டல்ல நாய்ங்க கூடவும் பேய்ங்க கூடவும் ஒண்ணா இருந்து இந்த வேலய கட்டி அழுதுட்டு இருக்கேன். எங்க அம்மா தேலக்காட்ல கெடந்து அழுகுற சம்பளத்துக்கு எதுமே பண்ண முடியாதுப்பா. இப்போ சொல்றேன் கேட்டுக்க. இனிமே நா அந்த ஹாஸ்பிட்டல்ல வேலைக்குப் போக மாட்டேம்ப்பா. மனசாட்சிக்கு விரோதமாக வேல செஞ்சிட்டு ஒவ்வொரு வாட்டியும் சர்ச்ல பாவ மன்னிப்பு கேக்க அசிங்கமா இருக்கு. நீயா எனக்கு வேற நல்ல வேலயாப்பாரு. ப்ளீஸ் எனக்கு போன் பண்ணி ஒரே வாட்டி எங்கூட பேசு. நீ பேசுலன்னா நா எங்க ஊருக்கே ஒரேடியா போய்டுவேன். ப்ளீஸ் ப்ளீஸ் … கால் மீ~~~~

வாட்ஸப்பில் அவனுக்கு அனுப்பிய ஒலித்தகவலை அவன் கேட்டு விட்டான் என்பதற்காக அறிகுறிகள் எதுவும் இல்லாமல் நிமிடத்திற்கு ஒருமுறை செல்போனை எடுத்துத் தடவிப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

~

பாஸ்டர் குழாம் தொடர்ந்து ஒருவாரமாக வந்து ஜெபம் செய்தும் அவன் மன வளர்ச்சியில் நல்ல விதமான மாற்றமில்லை. மாறாக அவன் முன்பைக் காட்டிலும் வீட்டிலுள்ளவர்களிடம் பேசுவதை முற்றிலும் தவிர்த்திருந்தான்.

ஏதாவது கேட்டால் கேட்டதற்கு மட்டும் பதில். அதுவும் வெறும் தலையாட்டுதல்களின் மூலம். ஆனால் சுவரைப் பார்த்தபடி மேடையில் நின்று பேச்சுப் போட்டியில் பேசுவது போலக் கைகளை ஆட்டிச் சத்தமின்றிப் பேசுகிறான். இட்லி, தோசை, அரிசிச் சோறு எதுவாக இருந்தாலும் அதைக் குழப்பி உருண்டைப்பிடித்து வாயில் திணிப்பதன் வழியாகவே அவனைச் சாப்பிட வைக்க முடிந்தது. தூக்கம் என்பது அவனுக்கு அவனை மீறி நடக்கும் தற்செயல் நிகழ்வு.

திடீரென ஒரு நடு ராத்திரி எழுந்து சுவராணியில் மாட்டியிருந்த சட்டையை எடுக்க எழுந்தவனை ரெஜினா பிடித்து "எங்கப்பா போப்போற இந்நேர்த்திக்கு" என்றாள்.

"ஜான்டியை பாக்கணுங். பொய்ட்டு ஒரு காலவர்ல வந்துற்றேன்."

நாட்கள் கழித்து அவன் வாய் திறந்து பேசியது குடும்பத்தா ருக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தாலும் அர்த்த ஜாமத்தில் யாரோ ஒருவனைச் சந்திக்கக் கிளம்பும் அவனின் விவஸ்தையற்ற தனத்தை நினைத்து கவலைகொண்டனர்.

நகோமியம்மா அவன் காலில் விழாத குறையாய் அவனைக் கெஞ்சி மறுநாள் எப்படியாவது ஜான்டியை அவனுடன் சந்திக்க ஏற்பாடு செய்வதாய் சத்தியம் செய்தாள். காலையில் தூங்கி எழுந்ததும் அவன் ராத்திரி கொடுத்த தகவல்களின்படி ஜான்டியைக் கண்டுபிடிப்பதற்கு யோசேப்பு உபயோகமாவான் என்பதை யூகித்து அவன் வீட்டிற்குச் சென்று அவனை வீட்டிற்கு வெளியே வாசலுக்குள் அழைத்து வந்து ரூபனின் சமீபத்திய அமானுஷ்ய நடவடிக்கைகளைச் சொல்லி அழுத நகோமியம்மா, தன் பேரனின் இந்த நிலைக்கு சௌமியனே காரணம் என்று அங்கிருந்து கோபாவேசத்துடன் பூபாலனின் வீடு நோக்கிச் சென்றாள்.

அமலோற்பவம் வீட்டு வாசலில் நிற்பதைப் பார்த்ததும் கூச்சலிட்டவாறே அவளை நெருங்கினாள். பூபாலனும் பூங்கொடியும் லாரன்ஸுக்கு வர வேண்டிய தொகை சம்மந்தமாகப் பாரிமுனையிலிருக்கும் அவர் அலுவலகத்திற்குச் சென்றிருந்ததால் நகோமியம்மாவின் தாக்குதலுக்கு அவள் மட்டுமே பதில் சொல்ல வேண்டியிருந்தது. பிலோமினாவும் கல்லூரிக்குச் சென்றிருந்தாள். வேடிக்கை மட்டும் பார்த்த சந்துவாசிகள் வார்த்தைகள் தடித்து ஒருவர் முடியை ஒருவர் கெட்டியாகப் பிடித்துக்கொள்ளும் நிலைக்குப் போய்விட்டதும் இருவரையும் பிரித்து வைத்துச் சமாதானம் செய்ய முயற்சித்தனர். அமலோற்பவம் "ஏ கெழக்கூதி ...

நா ஒருத்தனுக்கு முந்தி விரிச்சி ஓவியமா வாழ்ந்தவடி'' என்று ஏற்ற இறக்கத்தோடு ஆரம்பித்து நகோமியம்மாவை மிகக் கேவலமாகத் திட்ட ஆரம்பித்தாள். கூர்மையான ஆயுதத்தைத் தன் மீது எய்துவிட்டாள் என்பதால், அபாண்டமாக இருந்தாலும் பரவாயில்லை என்று, "நாத்தனார் புள்ளையவே ஒத்தவதானடி நீ'' என்று ஒரு போடு போட்டாள் நகோமியம்மா. அத்தோடு நகோமியம்மா சொன்னாள். "வேல வெட்டிக்குப் போவாத நம்ச்சல் எத்துனு ஊர் பொம்பளிங்கள ஓத்தவங் அந்த பாய் குடும்பத்தியே நாசனம் பண்ணவங். செத்துதுக்கு அப்றம் எம் பேரெங் மேல எந்த கூதிக்கு ஆசப்பட்டு ஏறிகினுகிறான்னு தெரியலியே ... அயோ இயேசப்பா இதக் கேக்க இங்க யாருக்கும் பவுசி இல்லியே ... நல்லா இர்ந்த எங்க வூட்டுப்புள்ள வேல வெட்டிக்கூட போவாத செவுத்த மொறச்சி மொறச்சி பாத்துனு ஒக்கான்னிருக்குதே ...'' கோபமாகப் பேச ஆரம்பித்தவள் சோகமாக முடித்துச் சுற்றியிருந்தோரின் அனுதாபத்தை சம்பாதிக்க முயற்சித்தாள். பதிலுக்கு அமலோற்பவமும் ஏதேதோ பேச, சண்டை நின்றபாடில்லை.

அந்நேரம் பார்த்து பூபாலனும், பூங்கொடியும் தெருவுக்குள் நுழைந்தார்கள். தனக்கு ஆதரவு பெருகியதையொட்டி அமலோற்பவத்தின் குரல் உயர்ந்தது. நகோமியம்மா சண்டை போட வந்ததன் சாரம்சத்தையும் அவள் பயன்படுத்திய தகாத வார்த்தைகளையும் அமலோற்பவம் இருவரிடம் ஒப்பித்தாள். கேட்ட வேகத்தில் பூங்கொடியாலும் பூபாலனாலும் நகோமியம்மாவை எதிர்த்துப் பேச முடியவில்லை. அவர்கள் நிதானமாகவே ஆரம்பித்தனர். நகோமியம்மாவின் வேகம் குறையவில்லை. அவள் சொன்னாள் "எப்பா, உம் பொண்டாட்டி என்ன தெவ்டியான்னு கேக்குறா. எத்தினி வாட்டி வந்து வெளக்கு புச்சான்னு கேளு. எங்க ஹவ்சிங் போடாண்ட வந்தா அவ மொலய அர்த்து போட்ருவேங்.''

பூபாலன் சொன்னார் "எமோவ் வார்த்தய பாத்து வுடு. ரெண்டு உயிர பறிகுத்துட்டு வயித்தெறிச்சல்லகிறோங்

கம்னு போய்டு. உன் வயிசுக்குத்தாங் மரியாத குடுக்கிறேங்.''

"ஏங் இல்லாட்டி இன்னா பண்ணுவ?'' என்று நகோமியம்மா பூபாலனின் முகத்தருகே கையை கொண்டு போக அவள் மேற்கொண்டு நெருங்காதவாறு அமலோற்பவம் நகோமியம்மாவை ஓங்கி ஒரு உதை விட்டாள்.

"ங்கோத்தா எங்காயா மேலியாடா கை வெக்கிறீங்கோ?'' என்று அவ்வளவு நேரம் அமைதியாக நின்றிருந்த ஆமோஸ் சந்தர்ப்பவாதியாக இவ்வாய்ப்பினைப் பயன்படுத்தி அவன் சாய்ந்திருந்த சுவரின் கீழே இருந்த 'பம்ப் டாப்'பை எடுத்து வேகமாக ஓடிவந்து எல்லோரையும் விலக்கிக் கையை ஒரு சுழற்று சுழற்றி பூபாலன் தலையில் ஓங்கி அடித்தான். அவர் நொடிப்பொழுதில் கீழே சரிந்தார்.

~

யோசெப்பு ஐயப்பனுக்கு மாலை போட்டிருந்ததால் ஒரு வாரத்திற்கும் மேலாகக் குடிக்காமல் கொள்ளாமல் கருப்புச் சட்டை வேட்டியுடன் நெற்றில் மூன்று பட்டை விபூதியின் நடுவில் சந்தனம் துலங்க தெய்வீக மணத்துடன் ஊரை வலம் வந்தான். அவனின் அதிகாலைக் குடிகாரர்களின் கம்யூனிட்டி எடுத்த இந்த ஆன்மிக முடிவுக்குக் குடும்பத்தாரின் எதிர்ப்பையும் மீறி அவன் மாலைபோட்டான். மாலை போட்டு வீட்டுக்குப் போன அன்று ரெபேக்கா "யாரக் கேட்டு மாலபோட்ட'' என்று அவனுக்குப் பூசை வைத்தாள். பாரம்பரிய கிறிஸ்தவக் குடும்பத்தில் பிறந்த அவன் அப்பா அம்மாவுக்கும் யோசேப்பு செய்த காரியத்தில் விருப்பமில்லை. ஆனால் ஐயப்பனுக்கு மாலைபோட்டதால் தொடந்து ஐந்து நாட்கள் யோசேப்பு குடிக்காமல் இருந்து செய்துவரும் சாதனை குடும்பத்தாரை மகிழ்ச்சியில் ஆழ்த்தியது. அதே சமயம் அவனை மனம்விட்டுப் பாராட்டுவதற்கு அவர்கள் இத்தனை காலம் வழிபட்ட ஆரோக்கிய மாதா இடம் கொடுக்கவில்லை. அதிகாலைக் குடிக்காரர் கம்யூனிட்டியில் இருந்த பதினாறு பேரில் நான்கு பேர்

மாலைபோட்ட ஒருநாள்கூடத் தாக்குப்பிடிக்க முடியாமல் ஒயின்ஷாப்பில் தஞ்சம் புகுந்தார்கள். மற்ற யாவரும் திடமனதுடன் உபவாசத்தைக் கடைபிடித்தனர். குழுவின் தலைவரும் குருசாமியுமான முத்துராஜ் யோசேப்புக்கு நெருக்கம் என்பதால் அவனை அவர் நெறி தவறாது பார்த்துக் கொண்டார். யோசேப்பால் குடிக்காமல் இருக்க முடிந்ததே தவிர அவனால் கால்மணிக்கொருமுறை மாவா அரைக்காமல் இருக்க இயலவில்லை. ஆயினும் குடியின்றி அவன் முகத்தில் ஒரு தெளிவு பிறந்தது. வழியில் பார்த்தால் அவன் யாரிடமெல்லாம் காசு கேட்பானோ அவர்களைக் கண்டும் காணாத மாதிரி வேகவேகமாகச் சென்றான். அந்த வகை நடையில் ரூபன் வீட்டை நோக்கி வந்தான்.

~

சௌமியன், இப்போது ஓரளவு நீ திருப்தியுறுவாய் என நினைக்கிறேன். சிந்தித்துக்கொண்டே இருக்கிறாய் செயல்படுத்தவே மாட்டேன் என்கிறாய் என நீ முன்வைத்த குற்றச்சாட்டை உடைக்கும் விதமாக ஜான்டியைப் பார்க்கக் கிளம்பிவிட்டேன். என்ன இருந்தாலும் தாமதம்தான். தவறாக எடுத்துக்கொள்ளாதே. சிந்தனை செய்வதே செயல் வடிவத்தின் ஓர் அங்கமென நினைத்துக்கொண்டு மெத்தனமாக இருந்துவிட்டேன். அது மட்டுமில்லாது எனக்குக் கூச்சலிட வேண்டுமென தோன்றும்போதோ வன்முறையாக நடந்து சுற்றியிருப்போரை அடிக்க வேண்டுமென தோன்றும்போதோ உன்னுடைய குறுக்கீட்டால் நான் தடுக்கப்பட்டு மிகச் சாதுவாக நடந்துகொள்வது என் தற்போதைய இயல்புக்கு மாறானதாக இருக்கிறது. அவ்வாறாக நான் நடந்துகொள்ளும்போது எனக்கு பின்மண்டை வலிக்கிறது. நான் அவ்வாறு நடந்து கொண்டால் எனக்குப் பேய் பிடித்தது உறுதியாகத் தெரிந்துவிடும். பின்னர் எல்லோரும் உன்மீது குற்றம் சுமத்துவார்கள் என்கிற பழியுணர்ச்சிக்கு அஞ்சி உன் காரியசித்தி நிறைவேற என்னைப் பைத்தியம்போல நடத்தைகொள்ள வைக்கிறாய். எனக்குப் பைத்தியமாக நடந்துகொள்வதில் பெரிய அவமானமெல்லாம் இல்லை மிஸீ யீணீநீt பேய்

பிடித்தவனைப் போல நடந்துகொள்வதைவிடப் பைத்தியக்காரனைப் போல நடந்துகொள்வது சற்று கௌரவமானது. புத்திசாலிகளுக்குத்தான் பைத்தியம் பிடிக்கும் என்ற என் நெடுநாளைய நம்பிக்கையின் காரணமாகக்கூட நான் அதை கௌரவமானதென்று நினைக்கலாம். இன்னொரு வீஸீ யீணீநீt சொல்கிறேன் கேள். இவ்வுலகில் பைத்தியம் பிடித்தோர் பைத்தியம் பிடிக்காதோர் என்று வகைப்படுத்துவது தவறு. பைத்தியத்தை வெளிக்காட்டத் தெரிந்தோர், பைத்தியத்தை வெளிக்காட்டத் தெரியாதோர். அவ்வளவுதான். இன்னும் எளிமையாகச் சொல்வதென்றால் நாசூக்கானவர்கள் வெர்சஸ் நாசூக்கற்றவர்கள்.

“ரூபனு … மச்சான் டேய்” மிக மெதுவாக யோசேப்பைத் திரும்பிப் பார்த்தான்.

“இன்னடா எவ்ளோ நேரங் கூப்ட்னுகிறேன். யார்கூடடா பேசினுகிற?”

“இப்டிதாம்பா பண்ணினுகிறாங். பய்ம்மாகிதுப்பா எனுக்கு” - ரெஜினா.

யோசேப்பைப் பார்த்துச் சத்தமில்லாமல் சிரித்துக் கேட்டான். “இன்னா மச்சாங் மாலயா போட்னுகிற? எத்தினாவது வருஷம்?”

“இதுக்கு முன்னாடி எப்படா போட்டுகிறேங்? இதாண்டா பஸ்ட் வருஷங்.”

“அப்டியா? சின்ன பாதயா பெரிய பாதயா?”

“சின்ன பாததாண்டா. செரி என்ன வுடு. நீ இன்னா வேலிக்கே போவ மாட்ரியாங். தனியா நின்னு பெனாத்தினுகிரியாங்.

இ … ன்னடா . .?”

யோசேப்பின் தோளை சிநேகத்துடன் பிடித்து வீட்டிலிருந்து அவனை பால்கனிக்கு அழைத்துச் சென்று சுற்றும் முற்றும் யாராவது கவனிக்கிறார்களா என பார்த்து இல்லை என்றதும் இரண்டு கையையும் விரித்துத் தலைக்கு அருகே கொண்டுபோய் ரூபன் சொன்னான் “மச்சி எனுக்கு ஒன்னுங் இல்லடா. ஆனா நான் நென்ச்சித

பண்ண முடிய மாட்டுது. நம்ம சௌமிகிறால்ல, அவங் காதுகிட்ட வந்து குசுகுசுன்னு எதாவது பேசினே இருக்கிறாங். வேலிக்கு போ. ஆனா அந்த வீடியோ மேட்ர கண்டுபுஸ்ட்டு போடா ப்ளீஸ்டான்றாங்."

யோசேப்பு தொண்டையில் இல்லாத எச்சிலை விழுங்கிக்கொண்டு கேட்டான்

"அவங் சொல்றத ஏங் மச்சாங் நீ கேக்குற?"

"இன்னாடா பேசுற நீ. அவன்தானடா நானு. எங் பேச்ச நானே எப்டிடா தட்ட முடியும்?"

யோசேப்பு வாசலில் நின்றிருந்த ரெஜினாவைத் திரும்பிப் பார்த்தான். அவள் வேறு பக்கமாகத் திரும்பிக்கொண்டாள்.

"மச்சாங் எனுக்கு ஒரே ஒரு ஹெல்ப்டா. நாம போய்ட்டு ஜான்டிய போய் மீட் பண்ணுன்டா. என்ன கூட்னு போறியா?

ரெஜினா 'வேணாம் வேணாம்' என கண்களால் யோசேப்புக்கு அறிவுறுத்தினாள்.

"நா வோணா அவன தேடிக் கண்டுபுச்சி இங்க கூட்னு வரேங் மாப்ள. நீ வீட்லயே இரு."

"இன்னடா யோசு காண்டுமாரி பண்ற. வீட்டுள்ளியே இருந்திருந்து ஒரு மாரிக்குடா. சும்மா வெளிய போய்ட்டு வர்லாண்டா. ப்ளீஸ்டா வாடா."

ரூபனை அந்த நிலையில் பார்ப்பதற்கு யோசேப்புக்கு சங்கடமாக இருந்தது. அணிந்திருந்த வட்டக் கழுத்து அரைக்கை பனியனின் கைகள் இரண்டும் அவன் புஜங்களுடன் பிடிப்பில்லாமல் தளர்ந்திருந்தன. எண்ணெய்போட்டுத் தலைமுடி படிய வாரப்பட்டிருந்தது. கீழுதடு உலர்ந்து வெள்ளை நிறத் தோல் உதட்டிலிருந்து பிரியத் தயாராக வெளியே நீட்டிக்கொண்டிருந்தது. சீரான தூக்கம் இல்லாமல் அவன் கண்கள் கோபித்துக்கொண்டு சற்று உள்ளே சென்றிருந்தன.

அவன் மன்றாடியதைப் பார்த்த யோசேப்பு தாளமுடியாமல் ரெஜினாவைப் பார்த்துக் கேட்டான் "எக்கா இன்னாக்கா ஆச்சி இவ்னுக்கு?"

அவன் இடைமறித்துச் சொன்னான் “ஒன்யுங் இல்லடா. நீ வாடா.” யோசேப்பு ராகம் இழுத்த விதத்தை கேலிசெய்வதுபோல பிரதிபலித்தான்.

“எப்பா அவங் கைய புச்சினே போ. வாணா வாணா. நானும் இல்லாட்டி உங்ககூட வரேங்.”

“மோ … … வ். போ … … மா கம்னு. இன்னா பெத்த பய்யன நம்ப மாட்டியா?” - குணக்கேடு ஏற்பட்ட முதல் நாளிலிருந்து அவன் அதிக ஒலியெழுப்பிய வசனம் இதுவாகத்தான் இருக்கும். ரெஜினா அரண்டுபோனாள்.

லுங்கியும், டி-ஷர்ட்டுமாய் யோசேப்புடன் நடந்து சென்றான். தோட்டத்தினர் இருவரின் மாற்றத்தையும் ஒரே ஆச்சரியத்துடனேயே பார்த்தனர்.

ஜான்டி எங்கு இருப்பானென யோசேப்புக்குத் தெரியும். இருவரும் நேராக எஸ்.ஐ.ஆர். மதுவகம் நோக்கிச் சென்றார்கள்.

~

பூபாலன் வீட்டிற்கு யாரைக் கேட்டு சண்டைக்குச் சென்றாளென நகோமியம்மாவை ரெஜினாவும் குணசீலனும் நன்றாகத் திட்டித் தீர்க்க, பேரனுக்கு நேர்ந்த சோகத்தினாலும் ரெஜினா திட்டிய வருத்தத்தினாலும் நேரு ஸ்டேடியத்தின் பின்னாலிருக்கும் தூரத்துச் சொந்தக்காரரின் வீட்டுக்குக் கோபித்துக்கொண்டு போன நகோமியம்மா திரும்பியிருக்கவில்லை.

~

ரூபனின் உடல்நலம் பற்றி விசாரிப்பதற்காக முன்னறிவிப்பின்றி விஷால், சைலேந்தர், உபாசனா, புவனேஸ்வரி ஆகியோர் அவன் வீட்டிற்கு வந்தனர். ஹவுசிங் போர்டு ஏரியாவுக்குள் நுழைந்ததும் “மெட்ராஸ் படத்துல காட்டுவாங்களே அந்த மாதிரி இருக்கு புவி இந்த ஏரியா” என்றாள் உபாசனா.

“இங்கதான ஷூட்டிங்கே எடுத்துருப்பானுங்க” என்ற விஷாலை உடனடியாக புவனேஷ்வரி மறுத்தாள் “no Vishal, not here. அந்தப் படம் எடுத்தது நார்த் மெட்ராஸ் பக்கம்.”

“Oh! Is this not a north Madras?”

“ஏன்யா, ஹவுசிங் போர்டு ஏரியாவ காட்னாலே நார்த் மெட்ராஸ்தானா?” என்று விஷால் செவிகளில் விழாதவாறு முனகிய சைலேந்தர் ரூபன் வீடு எந்த ப்ளாக்கில் இருக்கிறதெனத் தலையை மேல்நோக்கி இரண்டு காத்தாடிகள் டீல் போடுவதைப் பார்ப்பது போலப் பார்த்துக்கொண்டிருந்தார்.

விஷால் ரூபன் எண்ணுக்கு அழைத்துத் தாங்கள் வீட்டருகில் இருப்பதாகவும், வந்து அழைத்துப் போகும்படியும் அலைபேசியை எடுத்துப்பேசிய ரெஜினாவிடம் தெரிவித்தார்.

அவளுக்கு ரொம்பவும் அசௌகரியப்பட்டது. பிள்ளையின் நிலையை முடிந்த காலம்வரை அடுத்தவருக்குத் தெரிவிக்காமல் குணப்படுத்த வேண்டுமெனப் பிரயாசைப்பட்டதால் அவனைப் பார்க்க விருப்பப்பட்டு வீட்டுக்கு வருகிறேன் எனச் சொன்ன அனைவருக்கும் பொய்க் காரணம் சொல்லியவளுக்கு முகவரி கண்டுபிடித்து வீட்டுக்கு நெருக்கத்தில் வந்து திக்குமுக்காடிக் கொண்டிருப்பவர்களை அலைக்கழிப்பது நியாயமல்ல என்றெண்ணி அவர்கள் நிற்குமிடத்திலேயே நிற்கச் சொல்லி வீட்டிற்கு அழைத்து வந்தாள்.

வீட்டிலிருந்து அவர்களை அழைத்து வர கிளம்புவதற்கு முன் ரூபனிடம் நிலவரத்தைச் சொன்னாள். அவன் உடல்மொழியில் எந்த ஆட்சேபணையும் தெரிவிக்காததன் பொருட்டு தைரியமாகவே அவர்களை அழைத்துக்கொண்டு வந்தாள். ஐவரும் வரும் வழியில் உபாசனா ஒரு போக்காக “என்னதாம்மா டாக்டர் சொல்றாங்க? எப்ப அவனுக்கு கை செரியாகுமாம்?” என்று கேட்டு ரெஜினாவின் முகத்தைப் பார்த்ததும் அவள் பார்வையைத் தவிர்த்து விட்டு “தோ, இந்த பில்டிங்தாம்பா நம்ம வீடு. ரெண்டாவது மாடி. நீ ஏற்கினியே வந்திக்கிறியேபா” என்று சைலேந்தரைப் பார்த்தாள் ரெஜினா. விஷயத்தை உடனே வேறு விதமாகத் திருப்பிய தன் சாமர்த்தியத்தை மெச்சினாலும் பரிவுடன் கேட்ட குழந்தைக்குப் பதில் சொல்ல முடியாத தர்மசங்கட நிலையை எண்ணினாள். நகோமியம்மா உடன் இருந்தாலாவது ஏதாவது சமாளிக்கலாம் என

நகோமியம்மாளின் இல்லாமையை எண்ணி வருந்தினாள்.

அவள் வருத்தத்தின் சுருக்கம் நகோமியம்மா இல்லாததே ஆகும். அதைப் பற்றி நேரடியாக நினைத்து வருந்தும் அளவுக்கு நகோமியம்மாவை ரெஜினா நல்ல விதமாக அனுப்பி வைக்கவில்லை. நால்வரும் வீட்டுக்குள் நுழைய உபாசனா மட்டும் வாசலிலே நின்றாள். வாசலின் தலையில் அட்டையினால் செய்யப்பட்ட பட்டாம்பூச்சியின் முதுகில் எழுதியிருக்கும் “வாதை உன் கூடாரத்தை அணுகாது பொல்லாப்பு உனக்கு நேரிடாது” என்கிற வசனத்தை எழுத்துக் கூட்டிப் படித்தாள்.

“உள்ள வாமா” என்றதும் “தோ ஆன்ட்டி” என ஒரு தாவலில் உள்ளே நுழைந்தாள்.

வீட்டிலிருந்து அவர்களைக் கூப்பிடக் கிளம்புவதற்கு முன்பு கிடப்பிலிருக்கும் நான்கு ப்ளாஸ்டிக் நாற்காலிகளை வந்தவர்கள் உட்காரும் தயார்நிலைக்கு வைத்துவிட்டே ரெஜினா சென்றாள். மூவரும் உட்கார்ந்தாலும் விஷால் மட்டும் உட்காராமல் தன்னால் எந்த மாதிரியான வீட்டிலும் பொருந்திப்போக முடியும் என்பதைப் பிரஸ்தாபிக்க வலுக்கட்டயாமக “இல்ல ஆன்டி தரையிலே உக்காருறேன்” பேன்ட்டை மேலே ஏற்றி சம்மணங்கால் போட ஆயத்தமானர்.

“விஷால் சேர்தான் இருக்கே. மேலய உக்காருங்களேன்” என்றாள் புவனேஸ்வரி.

“இட்ஸ் ஓகே. தரையில உக்காந்து எவ்ளோ நாள் ஆகுது” - தன் முயற்சியில் வெற்றி கண்டார். அவரின் போலி பாவனையைக் கண்டு உபாசனாவுக்கு எந்த வசீகரமும் ஏற்படவில்லை. அவள் அவரைப் பொருட்படுத்தாமல்,

“எங்க ஆன்ட்டி ரூபன்?”

“வீட்லதாம்மா இருந்தாங்” எனச் சொல்லியபடியே வீட்டுக்குப் பின்புறமிருக்கும் பால்கனியில் பார்த்தாள். ஆள் இல்லை. இவர்களைத் தாண்டிப்போய் முன்பக்கமிருக்கும் பால்கனிக்கு ஓட்டமாய்ச் சென்று

பார்த்தாள். அங்கும் அவனைக் காணோம்!! நால்வரும் செய்வதறியாது அவள் செல்வதைப் பார்த்தனர்.

அவன் நடத்தையை வைத்து கணித்ததன்படி, சொல்லாமல் வீட்டை விட்டுப் போகும் பழக்கம் ரூபனுக்கு இல்லை. அதனாலேயே அவனை வீட்டில் விட்டு தைரியமாக வெளியே சென்றாள். இருந்தாலும் இவன் எந்த நேரத்தில் எப்படி நடந்துகொள்கிறான் என்கிற நிலையற்ற தன்மையை எண்ணி முன்பக்க பால்கனியில் நின்று "ரூ … பன் ரூ … பன்" என்று கூக்குரலிட்டாள். குழந்தையை இடுப்பில் வைத்து குழந்தைக்குச் சோறு ஊட்டுகிறேன் பேர்வழி என்று சாப்பாட்டை வெகுநேரமாகக் கொழகொழவென்று பிசைந்துக்கொண்டிருந்த எதிர்வீட்டு இளம்பெண் சொன்னாள். "இல்லியேக்கா கீல எங்கயுங் அது எறங்கி வர்லியே" அவளுக்கு பதில் சொல்லாமல் ரெஜினா அவசரமாக உள்ளே சென்று உட்கார்ந்திருப்பவர்களிடம் பதற்றத்துடன் அனுமதி கேட்கும் தோரணையில் "தோ இருங்கப்பா கீழ எங்கனா போய்கிறானான்னு பாத்துட்டு வரேங்" எனச் சொல்லி முடிப்பதற்குள் விஷால் சாய்ந்திருந்த சுவருக்குப் பக்கத்திலுள்ள பீரோவிலிருந்து ஊளையிடும் சத்தம் கேட்டது. விஷால் ஊளைச் சத்தம் கேட்பது எங்கேவென உடனே கண்டறிந்து அலமாரி முன் வருவதற்கும் அதன் இரண்டு கதவையும் ஒரே நேரத்தில் திறந்து ரூபன் 'தொப்'பென்று வெளியே குதிக்கவும் சரியாய் இருந்தது. அதைப் பார்த்ததும் புவனேஸ்வரி கையில் பிடித்திருந்த சொம்பைக் கட்டுப்பாட்டையும் மீறிக் கீழே விட்டாள். சொம்பு 'ஙண ஙண' என உருண்டோடாமல் 'ம்க்க்கும்' என்கிற அமுங்கல் ஓசையுடன் ஒருக்களித்துப் படுத்து நீரை வாந்தி எடுக்க ஆரம்பித்தது.

"டேய் என்னடா இது?" என்று உடனே யாரும் அவனிடம் கேள்வி கேட்காதவாறு அவன் செய்த காரியம் திகில் நிரம்பிய ஓர் அமைதியை ஏற்படுத்தியிருந்தது. எல்லோரும் அவனை ஒரு கணம் பார்த்தனர். அவன் நடத்தையில் இது சற்றே வித்தியாசமாய் இருப்பதால் ரெஜினாவும் ஆச்சரியமும் அதிர்ச்சியுமாய்ப் பார்த்தாள். உபாசனா வாயை மூடிய கைகளை எடுக்கவில்லை.

விஷால் தனக்காகக் காத்திருந்த நாற்காலியைத் தழுவியவாறு பாதுகாப்பிற்காக அதில் உட்காரலாமா என நின்றிருந்தார்.

“ரூபன் என்ன ஆச்சிடா உனக்கு?” சைலேந்தர் கேட்டார். அவரின் கேள்வி அவன் அலமாரியிலிருந்து எகிறிக் குதித்த காரணத்தைத் தெரிந்துகொள்வதை விட அவன் உடல்நிலை மெலிந்திருந்ததைக் கேட்கும் பொருட்டாகவே இருந்தது.

“சும்மா தல உங்கள பயமுறுத்துனேங்” - குரல் கிளி பேசுவது போல கீ கீ எனும் கீச்சுத்தன்மையுடன் இருந்தது. புவனேஸ்வரி ரூபனையே உற்றுப் பார்த்தாள். அவன் கன்ன எலும்புகள் துருத்திக்கொண்டு நின்றன. வாயின் இரு ஓரத்திலும் தேங்காய் சாப்பிட்டது மாதிரி எச்சில் கோழைக் கட்டியிருந்தது. லுங்கி கட்டியிருந்த விதத்திலும் ஒழுங்கில்லை. டி-ஷர்ட் கழுத்து வளைவில் உட்காராமல் தளர்ந்திருந்தது. தலை முடி மட்டும் கலையாமல் மிகச் சீராகப் பக்கவாட்டில் கோடு எடுத்து வாரப்பட்டிருந்தது. பார்த்த பார்வைக்கு முற்றும் முடிவுமாக, இவனிடமா காதலைச் சொல்லக் காத்திருக்கிறோம் என்று தன்னைத்தானே நொந்து கொண்டாள்.

“Hey, Ruban how is your hand?” என்றார் விஷால்.

“I don’t have any problem in my hand or brain” - அதே கிளிக் குரலில் அவருக்கு பதில் சொன்னான்.

விஷால் அவன் இரண்டு கைகளையும் பார்த்தார். இரண்டு வாரத்திற்கும் மேலாக அலுவலகத்திற்கு வராத அளவுக்குப் பெரிய காயம் எதுவும் இல்லை. பொய் பேசி வீட்டில் இருப்பதோடு பதிலைக் கேலிக் குரலில் சொல்கிறான் என விஷால் அவன் மீது கோபமுற்றார். ஆனால் கோபத்தைக் காட்டக்கூடிய நிலையில் விஷால் இல்லை. அதற்கு நியாயமான முறையில் எதிர்வினை ஆற்றக்கூடிய நிலையிலும் ரூபன் இல்லை என்பதை உணர்ந்தவர் அவன் சொன்ன பதிலைக் கேட்டு தேசிய கீதத்திற்கு மரியாதை செலுத்துவதுபோல நின்றார்.

“எப்பா, ஒழுங்காப் பேசேம்ப்பா” என்றாள் ரெஜினா.

“டேய் என்னடா ஆச்சி ஒனக்கு?” - திரும்பவும் சைலேந்தர்.

“தல நீயிலாம் ஒரு ப்ரெண்டா. இன்னாடா நம்ம பய்யன இவ்ளோ நாளா ஆள் அட்ரச காணமோ, இன்னா ஏதுன்னு ஒரு ஃபோன் பண்ணி விசாரிச்சியா?”

அவன் திரும்பவும் கிளிக்குரலில் பேசியதை விமர்சிப்பதை விட்டு அவன் கேட்ட கேள்விக்கு பதில் சொல்வது முக்கியம் என நினைத்தவராய் “அடப்பாவி அம்மாவ கேளுடா. எத்தன முறை உன் நம்பருக்கு ஃபோன் பண்ணி விசாரிச்சேன்னு.”

ரூபன் சைலேந்தர் சொன்னதை அசட்டை செய்து ரெஜினாவைப் பார்த்து, “மோவ் கூல்ட்ரிங்க்ஸ் எதுனா வாங்கினு வாம்மா போமா.”

“அப்பாவ அம்ச்சிகிறேம்பா.” (மருந்து, மாத்திரைகள் செய்த வேலையினால் குணசீலன் உடம்பு கண்ட நடுக்கம் கணிசமாகக் குறைந்து அவரால் தொய்வின்றி நடமாட முடிந்தது.)

வந்திருந்த ஒவ்வொருவர் கண்களையும் தனித்தனியாக ஆழம் பார்த்ததும் சுவர் அருகில் சென்று அதைப் பார்த்த மாதிரி நின்றுகொண்டு தொண்டைக் குழாய்க்குள் படிந்திருந்த சளியை “க்ற்றாஆஆஆ” எனக் கனைத்து எச்சிலுடன் திரட்டி சுவற்றில் துப்பினான். அது ஒழுக ஆரம்பிப்பதற்குள் ரெஜினா வேகமாக வந்து அவன் முதுகில் அடித்தாள்.

இதற்கு மேல் அவமானப்படுவதற்கு ஒன்றுமில்லை என்கிற வேகத்தில் விஷால் நடந்து வெளியே சென்றார். எங்களை மன்னித்துவிடுங்கள் என்று ரெஜினா வாய்மொழியில் சொல்லாமல் இரு கரம் கூப்பி அவரைப்பார்த்து அழுதாள். “ம்மா அழாதீங்கம்மா” என்று புவனேஸ்வரியும் உபாசனாவும் ரெஜினாவின் தோளைப் பிடித்தார்கள். அவள் அழுகையை நிறுத்தவில்லை. இடையில் அழுகையின் வேகத்தை மிதப்படுத்தி “எம் புள்ள எங்கள வுட்டுப் போய்டுவா போலக்கிதுமா” என்கிற வாக்கியத்தை முழுதும் சொல்லி முடிக்கும் முன்னே அவளின் அழுகை வேகம் முன்பைவிட ஒரு மடங்கு கூடியது. “அம்மா,

என்னதாம்மா ஆச்சி அவனுக்கு?” சைலேந்தரின் கூச்சல் நல்ல நண்பனை இழந்து விடப்போகிறோம் என்கிற அபயக் குரலாக அந்த அறையில் அதிர்ந்தது. ரெஜினா தன் முந்தானையால் மூக்கையும், கண்களையும் துடைத்துவிட்டு அவர்களிடம் எல்லாவற்றையும் சொல்லுவதற்கு முன்பு திரும்பி அவனைப் பார்த்தாள். அவன் சுவற்றில் வெறித்த பார்வையிலிருந்து திரும்பவில்லை. எந்த முகத்தை வைத்துக்கொண்டு அவர்களைத் திரும்பிப் பார்ப்பது? இருபது பேர் கொண்ட டீமில் என் மீது உண்மையான அக்கறை கொண்டதன் பேரில் வீட்டுக்கு என்னைத் தேடி வந்தவர்களை இப்படியா கேவலப்படுத்துவது? பொதுவாகவே இந்த ஐ.டி. கம்பெனியில் வேலை செய்பவர்கள் மீது உனக்கு எப்போதுமே ஒரு வெறுப்பு உண்டு. அந்த வெறுப்பு எதன் அடிப்படையில் உண்டானது என்பதை நான் தெரிந்துகொள்ள விருப்பமில்லை. அவர்களைப்பற்றி நான் “எங்காபிஸ்லல மச்சி” என ஆரம்பிக்கும்போதெல்லாம் ஒரு விதமான வெறுப்பு சூழ்ந்த முகத்துடனேயே நீ கேட்பாய். ஒருவேளை அவர்கள் அதிகம் சம்பாதிக்கிறார்கள் என நீ நினைப்பதால் அதனால் உண்டான காழ்ப்பு. அங்கு வேலை செய்கிற பெண்களெல்லாம் அப்ரோச்சபிலாக இருக்கிறார்கள். ஒழுக்கம் என்பதே அவர்களுக்குக் கிடையாது. தன் இஷ்டத்திற்கு உடைகள் அணிகிறார்கள். நிறைய சம்பாதிக்கிறார்கள். அதனால் இயல்பில் அவர்கள் நடையுடை பாவனைகளில் ஒரு ‘தளுக்கு’ இருப்பதை உன் ஆண்புத்தி ஏற்க மறுக்கிறது. அந்தக் கசப்பை ஒரு அளவுக்கு மேல் உடம்புக்குள் வைத்துக்கொள்ளாமல்தான் இன்று சரியான நேரம் பார்த்து நீ அவர்களைக் காறி உமிழ்ந்தாய். ஆனால் என் புத்தி எங்கே போனது? நண்பன் என்கிற ஒரே காரணத்திற்காக உன்னை எனக்குள் அனுமதித்து யாரும் உன்னை வெளியே அனுப்பிவிடாதவாறு நீ ஆசைப்படும் காரியங்களைச் செய்து முடிக்க வேண்டுமென்கிற முனைப்புடன் ஒவ்வொரு நொடியும் சிந்தித்திருக்கிற எனக்கு, இப்போது நீ செய்திருக்கும் காரியம் எவ்வளவு பெரிய அவமானத்தை எனக்கும் என் அம்மாவுக்கும்

கொடுத்திருக்கிறது என்பதை அறிவாயா? திரும்பிப் பார். வந்திருக்கிறவர்களிடம் எவ்வளவு துக்கத்துடன் என் நிலையை என் அம்மா அழுது புலம்புகிறாள் என்று. திரும்பிப் பார். எனக்காக ஒரே ஒரு முறை திரும்பிப் பார். சரி இந்த எச்சில் சுவரிலிருந்து முழுதும் ஒழுகி முடிக்கட்டுமா? சான்ஸே இல்லை சௌமி. அது சளியுடன் சேர்ந்து கெட்டிப்பட்டிருப்பதால் குறிப்பிட்ட தூரத்திற்கு மேல் அதனால் பயணிக்க முடியவில்லை. முடியவும் முடியாது. ஒழுங்காகத் திரும்பிப் பார். நீ பார்க்கவில்லை என்றால் என்ன? இதோ நான் பார்க்கப்போகிறேன். ஆனால் எந்த முகத்தை வைத்துக்கொண்டு அவர்களைத் திரும்பிப் பார்ப்பது? இருபது பேர் கொண்ட டீமில் என் மீது உண்மையான அக்கறைகொண்டதன் பேரில் வீட்டுக்கு என்னைத் தேடி வந்தவர்களை இப்படியா கேவலப்படுத்துவது? பொதுவாகவே இந்த ஐ.டி கம்பெனியில் …

சைலேந்தர் மெதுவாகத் தன் வலது கரத்தால் அவன் தோளைத்தொட்டு “ரூ … பன்” என்றார். அவன் திரும்பவில்லை. “இங்க பாரேன்” என்றார். அவன் திரும்பவில்லை. அறையில் சற்று நேரம் மனிதர்கள் நிச்சலனமாக இருக்க மௌனம் வியாபித்திருந்தது. மின்விசிறியின் சத்தம் மட்டும் “க்ரிச் க்ரிச் க்ரிச் க்ரிச் க்ரிச்”.

அவர்கள் கிளம்பினார்கள். ரெஜினா தாழ்ப்பாளைத் திறக்கும்போது …

உபாசனா ரெஜினாவைப் பார்த்துச் சொன்னாள், “ஆன்ட்டி, தயவுசெஞ்சி அவன ஒரு சைக்காலஜிஸ்ட் கிட்ட கூட்டிட்டுப் போங்க. பேய் பிசாசுலாம் ஒன்னும் பிடிக்கல அவனுக்கு.”

“ம்மா எனக்குச் சின்ன வயசுலயும் இதேமாதிரி ஆயிருக்குது. ஜெபத்தால மட்டுந்தாமா இத சரி பண்ண முடியும். எங்க பாஸ்டரய்யா இருந்துந்தார்னா இந்நேரத்திக்கு எம்புள்ளய வுட்டு அந்த அசுத்த ஆவி போயிட்டு இருக்கும்மா.”

வாசலில் நின்று அவர்கள் பேச …

விஷால் உபாசனாவைப் பார்த்துச் சொன்னார், “உப்பு, இதுக்கு சைக்காலஜிஸ்ட், சைக்கார்டிஸ்ட்டுலாம்

வேலைக்கு ஆகாது. இது ‘காட்ஸ் ப்ளே‘தான்.”

சைலேந்தர் சொன்னார், “என் காலேஜ் மெட் ஒருத்தனுக்கு இதே மாதிரி ஆகி அவனும் இப்படித்தான் ரியாக்ட் பண்ணான். வயத்துல பாம்பு ஓடுது. வயத்துல பாம்பு ஓடுதுன்னு அப்பப்ப கத்துவான். நெறைய ஆஸ்பிட்டல்லாம் …” என்றவரை இடைமறித்து, “வாங்கப்பா உள்ள நின்னு பேசுலாம்” என்றாள் ரெஜினா கெஞ்சலாக.

கதவைச் சாத்திக்கொண்டு சமையலறைக்குள் வட்டமாக நின்று விவாதித்தனர்.

சொல்லு ஷைலு என்றார் விஷால். அவருக்கு இதுபோல் அமானுஷ்ய கதைகளைக் கேட்பதில் விருப்பம் போலும்.

ரூபன் காதில் விழப்போகிறதென்கிற முன்ஜாக்கிரதையுடன் குசுகுசுவென்றே பேசினார்கள்.

சைலேந்தர் முதலிலிருந்து ஆரம்பித்தார். “என் காலேஜ் மெட் ஒருத்தனும் இதே மாதிரி இப்படிதான் ரியாக்ட் பண்ணான். வயத்துல பாம்பு ஓடுது, வயத்துல பாம்பு ஓடுதுன்னு அப்பப்ப கத்துவான். அவன் எனக்கு ரொம்ப க்ளோஸ் ப்ரெண்டு. நெறைய ஆஸ்பிட்டல்லாம் கூட்டிட்டு போனோம் செரியாவே ஆகல. அப்புறம் தெரிஞ்சவர் ஒருத்தர் மூலமா செங்கல்பட்டுல ஊரு உள்ள அனுமந்தபுரம்னு ஏதோ ஊரு உள்ள இருக்கிற சிவன் கோயிலுக்கு அவன கூட்டிட்டு போனோம். வயசான ஒரு பாட்டி என் ப்ரென்ட் உச்சி முடிய புடிச்சுட்டு சாம்பல் தின்னுட்டே அவன் தலய சொழட்டி சொழட்டி ஏதோதோ மந்திரம் மாதிரி சொன்னாங்க. நம்புவீங்களா தெரியாது இன்னை வரைக்கும் அவனுக்கு அந்த பிரச்சனை எதுவுமே இல்லை.”

இவன் எப்போது முடிப்பான், அடுத்து தன் அனுபவத்தில் பார்த்த கதையைச் சொல்ல ஆவலுடன் விஷால் வாயெடுக்க …

“அயியோ … நாங்க அதெல்லாங் நம்ப மாட்டோம்ப்பா. நாங்க ஆவிக்குரியவங்க. உபவாசங் இர்ந்து ஜெபிச்சா இன்னா மாரி பேயா இருந்தாலுங் ஓடிடுங்.”

“ம்மா டென் டேஸ்க்கு மேலே இப்டி ரியாக்ட் பண்றான்னு சொல்றீங்க. இன்னுமா உங்க எவாஞ்சிலிஸ்ட்ங்க வந்து குணப்படுத்தல” என்றாள் உபாசனா.

“யாருமா?”

“சபையில இருந்து ஊழியக்காருங்க வந்து ஏன் இன்னும் செரி பண்லன்னு கேக்குறாங்க” - புவனேஸ்வரிக்கும் பேசுவதற்கு ஒரு வாய்ப்பு கிடைத்தது.

“மா. தோ நாளன்னிக்கு அமாவாசை முழு இரவு ஜெபக் கூட்டங் இருக்குதுமா. எங்க சபையில இல்ல. ஆல்பர்ட் தேட்டரு பக்கத்துல இம்பீரியல் ஒட்லு இல்ல? அது உள்ளோ. மாசத்துக்கு ஒரு வாட்டிதாங் நடக்குங். சாதுபால் சாலமோன்னு பெரிய பாஸ்ட்ரு. அவ்ரு தொட்டுக்கூட பாக்க மாட்டாரு. அசுத்த ஆவிங்க புடிச்சவங்ள நோக்கி ஒரு வெர்லுதாங் நீட்டுவாரு. தொப்பு தொப்புன்னு கீழ உய்வாங்க பாரு. அதோட உட்டுடுங். அதுக்குதாங் டெய்லி உபவாசங் இருந்து ஜெபிச்சினுகிறேம்மா.”

உள் அறையிலிருந்து எதிர்பாரத விதமாக குரல் கேட்டது. சத்தத்துடன் இழுவையாக, “கா … ய்ஸ். ஒருமாரி நடந்துகிட்டதுக்கு சாரி. நீங்க எல்லோருங் எனக்கு முக்கியங். உங்க எல்லார் பேச்சியுங் கேப்பேங். நீங்க சொல்ற எல்லா எடத்துக்குங் போவேங்.

ஆஸ்பிட்லுக்கு போவேங். அனுமந்தபுரத்துக்குப் போவேங். இம்பீரியல் ஒட்லுக்கு போவேங். எங் தலைவங் விஷால் சொல்ற பேயோட்டுற எடம் பூனேல இர்ந்தாக்கூட அந்த மன்ஷனுக்காகப் போவேங்.”

“நம்ம இவ்ளோ ஸ்லோவா பேசியும் அவனுக்கு கேட்டுருக்கு பாத்தீங்ளா. For sure he is having some bad spirit” என்றார் விஷால். அவர் சொன்னதை நிர்தாட்சண்யமாக அவமதிக்கும் விதமாக உபாசனா வேகமாகக் கதவைத் திறந்துகொண்டு வெளியே சென்றாள். பின்னே, ஒருவர் பின் ஒருவராகச் சென்றார்கள். ரெஜினா சைலேந்தரை மெதுவாகச் சீண்டி, “ஒரு நிமிஷம் இருப்பா” என்று ரூபன் இருக்கும்

அறைக்கு அவன் உணராதவாறு பதுங்கிப்போய் புத்தகங்கள் அடுக்கி வைத்திருந்த இடத்திலிருந்து அவன் அலைபேசியை நைச்சியமாக எடுத்து வந்து சைலேந்தரிடம் கொடுத்தாள். “ப்பா, போன கையில கூட தொடமாட்றாம்ப்பா. ஆனா கரெட்டா சார்ஜ் மட்டுங் போடு போடுன்னு அப்பப உயிர எடுக்கிறாங். எ … த்தினி போனு. எ … த்தினி மேசேஜு. இன்னா ஏதுன்னு கொஞ்சங் பாரம்ப்பா” என்றாள். சைலேந்தருக்கு அந்த வேலை பிடித்திருந்தது.

வாட்ஸப்பை ஒரு தடவு தடவினார். இவாஞ்சலினின் வாட்ஸ்அப் செய்திகளைப் பார்த்தார். அவள் அனுப்பிய ஒலித் தகவலைத் தரவிறக்கம் செய்தார். உடனே அவர் பேன்ட் பாக்கெட்டிலிருந்து ‘ஹியர்போன்’ எடுத்து முழுதும் கேட்டார். ரெஜினா அவர் வாயையே பார்த்துக்கொண்டிருந்தாள். கீழே சென்றுவிட்ட மற்ற மூவரும் சைலேந்தருக்காகக் காத்துக்கொண்டிருந்தார்கள். இவாஞ்சலினின் நம்பரைத் தன் செல்போனில் குறித்துக்கொண்டு வீட்டிற்குச் சென்றதும் அவளைத் தொடர்பு கொண்டு விஷயத்தைச் சொன்ன வாயோடு ரூபன் தற்போது இருக்கும் நிலையில் வந்து அவனைப் பார்க்க வர வேண்டாமெனவும் அவளைக் கேட்டுக்கொண்டார்.

~

என் அசாதாரணத்துவங்கள் நொடிக்கு நொடி நிமிடத்திற்கு நிமிடம் நாளுக்கு நாள் அதிகரித்துவருகின்றன. அது உச்சமடையும் வேளையில் நான் என்னையே கொலை செய்துகொள்ளவும் துணிந்துவிடுவேனோ என்கிற பயம் வருகிறது. என்னையே மாய்த்துக்கொண்டாலாவது பரவாயில்லை. என் அன்புக்குரியவர்களுக்கு ஏதாவது அசம்பாவிதம் செய்துவிடுவேனோ என்பதற்கு எந்த உறுதிமொழியும் நான் இப்போதிருக்கும் மனநிலையில் கொடுப்பதற்கில்லை. நான் கொடுக்கும் இன்னல்கள் அனைத்தையும் எவ்வளவு நிதானத்துடன் புரிந்து கொள்கிறார்கள். அல்லது பெற்ற கடமைக்காக, பழகிய கடமைக்காக அனுசரித்துப்போகிறார்களா? எப்படியோ இந்தப் பொறுமையும், அனுசரித்தலும், நிதானமும்

எனக்கு வருமா என்று யோசித்துப்பார்க்கிறேன். யோசித்துப் பார்க்கையில் என் கதாபாத்திரத்திற்கு மாற்றாக, என் அப்பா வுக்கு என்னைப் போல் பேய் பிடித்திருந்தால் அவரை நான் எவ்வாறு அணுகியிருப்பேன் என யோசித்துப் பார்க்கிறேன். யோசிப்பதற்கு என்ன இருக்கிறது! பேயாவது பிசாசாவது என ஒரு ஆட்டோ பிடித்து அவரை ஒரு சைக்காலஜிஸ்ட்டிடம் கூட்டிக்கொண்டு போயிருப்பேன். என் அப்பாவுடன் பேசி அவருக்கு என்ன ‘எண்ண’ப் பிரச்சினையென்று டாக்டர் ஓரிரு நாட்களில் தெரிந்து கொள்ளுவார். பிறகு என்னைக் கூப்பிட்டுத் தனிப்பட்ட முறையில் பேசி உன் அப்பாவுக்கு வந்திருப்பது ஹிஸ்டீரியா என்றிருப்பார். அல்லது ஸ்கிசோஃப்ரினியா என்றிருப்பார். பைபோலர் டிசாடர் என்றிருப்பார். அவருடன் இனி நானும் என் அம்மாவும் நகோமி ஆயாவும் நடந்துகொள்ள வேண்டிய விதத்தை எடுத்துக் கூறியிருப்பார். நான் அதை என் அம்மாவிடம் சொல்லி எங்களுக்குள் ஓர் உடன்படிக்கையை உண்டுபண்ணி அப்பாவுடன் இணக்கமாக நடந்துகொண்டு அதிகபட்சம் ஒரு மாதத்தில் ஒரே மாதத்தில் அவரை இயல்பு வாழ்கைக்குத் திருப்பியிருப்பேன். இவர்கள் என்னடா என்றால் ஆளுக்கொரு வைத்திய முறை சொல்கிறார்கள். பாஸ்டர் சாதுபால் சாலமோனிடம் கொண்டு போக வேண்டுமாம். மேல்மலையனூர் கொண்டு போக வேண்டுமாம். கோவளம் தர்காவுக்குக் கூட்டிப்போய் மந்திரிக்க வேண்டுமாம். ஓஜா போர்டை வைத்து ஆவியுடன் பேசுபவரிடம் சென்று என்னைப் பிடித்திருக்கும் ஆவி யாருடையது, அதன் நோக்கம் என்னவென்று தெரிந்துக்கொள்ள வேண்டுமாம். அந்த ஓஜா போர்டு ஆசாமி ஹிட்லர், விவேகானந்தர், எம்.ஜி.ஆர்., ஆபிரகாம் லிங்கன் இவர்களுடனெல்லாம் பேசியிருக்கிறாராம். அதாவது அவர்கள் இறந்ததற்குப் பிறகு.

நான் மிகத் தெளிவாகச் சொல்லுகிறேன். இவர்களிடமெல்லாம் என்னைக் கொண்டுபோவது காலவிரயம், வீண் செலவு. எனக்கு இருப்பது மனப் பிரச்சினை அதற்கு யாராவது மனநல ஆலோசகரிடம் கூட்டிச் செல்ல வேண்டும் என்பது என் சிந்தனை. ஆனால்

வாடிக்கையாக நடப்பதுபோல என் சிந்தைனைக்குச் செயல் வடிவம் கொடுப்பதற்கான அனுமதியையும் என் மூளை எனக்குத் தர மாட்டேன் என்கிறது.

சௌமியன், நீ நினைத்தவர்களைப் பழிவாங்க வேண்டுமென ஆசைப்பட்டதற்கு என்னை ஒரு கருவியாகப் பயன்படுத்துவது வாஸ்தவம். ஆனால் நானும் பழிவாங்கப்பட்டுக்கொண்டிருக்கிறேன் என்பதை நீ உணர்கிறாயா? இனியும் நீ எதும் சொல்லியும் நான் கேட்கத் தயாராய் இல்லை. உன் கட்டுப்பாட்டை மீறி நான் நடக்கும் விதமாகச் சிந்தித்தால் நடுஜாமத்தில் என்னை எழுப்பிக் கூவத்தில் போய் விழச் சொல்வாய்? பூமா வீட்டுக்குப் போய் அவள் பாவாடையைத் திருடிக்கொண்டு வந்து அதை ஒரு கையில் பிடித்து முகர்ந்தபடி நீயும், அவளும் பீரோ ஓரத்தில் நின்று அரைகுறை ஆடைத் தூக்கலுடன் அவசரமாகப் பாலுறவுகொள்வதுபோலக் கற்பனை செய்து இன்னொரு கையினால் சுயபோகம் செய்யத் தூண்டுவாய். உனக்குப் பிடிக்காதவர்களை நான் சந்தித்தால் அவர்களை அவமானப்படுத்தும் விதமாக அவர்கள் மீது காறி உமிழச் சொல்வாய். ஆனால் உனக்கு ஆக வேண்டிய காரியத்தில் மட்டும் எவ்வளவு பொறுப்புடன் என்னை நடத்துகிறாய். நீ என்னடா என்னை நடத்துவது? ஏதோ பழகிய பாவத்திற்காகவும், என்னை ஆளாக்கிய பாவத்திற்காகவும், உன் அப்பா உயிர் ஊசலாடிய நிலையில் நான் காதல் என்னும் பலகையில் அமர்ந்து ஊஞ்சலாடியது தவறுதான். அதனால் உண்டான குற்ற உணர்ச்சியினால் உன்னைப்பற்றியே தூக்கமும் சோறும் இல்லாமல் நினைத்து உன் நினைவுகள் என் சுய சிந்தனையை ஆக்கிரமித்துவிட்டன அவ்வளவுதான். நீ என்னுள் இருப்பதும் இல்லாதிருப்பதும் என்னிடம் இருக்கிறது. உன் விண்ணப்பதிலும் நியாயம் இருக்கவே செய்கிறது கொஞ்ச நாள் அமைதியாய் இரு. என்னைச் சொந்தமாகச் சிந்திக்கவிடு. விடு என உன்னிடம் அனுமதி கேட்பதுகூட ஒரு கௌரவத்திற்காகத்தான். உன் மீது நான் வைத்திருக்கும் மரியாதைக்காகத்தான். கொஞ்ச நாள் அமைதியாய் இரு. என் மூளையும் அந்தராத்மாவும் இணைந்து செயல்பட்டு எடுக்கும் முடிவுகளில் குறுக்கிடாதே. ஜான்டியைச் சந்தித்து எல்லாத்

தகவல்களையும் திரட்டிக் குற்றம் செய்தவனைக் கண்டுபிடித்து பழிவாங்குவேன். இது உன் மீது சத்தியம். எனக்கு இப்போது உபாசனாவுக்கு ஃபோன் செய்து அவளுடன் போய் ஒரு மனநல ஆலோசகரைச் சந்திக்க வேண்டும் போல் இருக்கிறது. வருகிறேன்.

~

தொடர்ந்து மூன்று நாட்கள் உபாசனாவுடன் மனநல ஆலோசகரிடம் சென்று வந்த ரூபனின் நடவடிக்கைகளில் மாற்றங்கள் தென்பட்டன. ஆனால் நல்ல விதமான மாற்றமா என்றால் அதுதான் இல்லை. சுவரைப் பார்த்துப் பேசும் அவனின் பினாத்தல்கள் அதிகரிக்கவே செய்தன. தூக்கமும் உணவின் அளவும் குறைந்துகொண்டேபோயின. உடம்பில் சட்டை போடுவதை அறவே வெறுத்தான். மனநல ஆலோசகரிடம் சென்று வந்ததற்குப் பிறகு திடீர் திடீரென யாரையோ திட்டிக் கூச்சல் போட்டான். சில நேரம் கிளிக் குரலில். நான்காவது நாள் வீட்டுக்கு வந்து அழைத்துப்போக வந்த உபாசனாவைத் திட்டி அனுப்பி விட்டான். இது நிச்சயமாக பிசாசின் வேலை என உணர்ந்த ரெஜினா அந்த வார இறுதியில் நடைபெற்ற அமாவாசை முழு இரவு ஜெபக் கூட்டத்திற்கு ரூபனுடன் போராடி அவனுக்குச் சட்டை அணிவித்து அழைத்துச் சென்றாள். உள்ளே பாஸ்டர் ஜெபிக்க ஆரம்பித்ததும் கால்களின் கட்டை விரல்களால் நடந்தான். நடக்க முயற்சி செய்தான். சுற்றியிருந்தோரை ஆச்சரியப்பட வைத்தான். ரெஜினாவை அழ வைத்தான். வீட்டுக்கு வந்த பின்னரும் அதே மாதிரி கட்டை விரல்களால் நடந்தான். கிளிக் குரலில் பேசினான். காட்டுக் கூச்சல் போட்டான். தொடர் கூச்சலினால் தொண்டை இறுகிப்போனதும் கூச்சலின் சத்தத்தைக் குறைத்து வித்தியாசமாக முனகலிட்டான். அக்கம்பக்கம் உள்ளோர் முடிந்த அளவு பொறுத்து ஏதாவது பைத்தியக்கார மருத்துவமனையில் சேர்க்கச் சொல்லி அவர்கள் நல்லதுக்காகவும் ரூபனின் நல்லதுக்காகவும் ரெஜினாவிடம் முறையிட்டனர். அவள் தன்னிடமுள்ள, தான் நம்பிய எல்லா விதமான ஆன்மிக அஸ்திரங்களையும் பயன்படுத்திச் சோர்ந்துபோய் அழுத வண்ணமிருந்தாள். சுற்றத்தாரின் நிர்பந்தம் அதிகமாகவே

என்ன செய்வதெனத்தெரியாமல் நகோமியம்மாவை வீட்டுக்குக் கூட்டிவந்தாள். ரூபனின் தோற்றத்தைப் பார்த்த நகோமியம்மாள் அவனைக் கட்டிப்பிடித்து அழுதாள். அவன் பாதங்களைப் பிடித்து "ன்னாடா அப்பேன் ஆச்சி உனுக்கு?" என்று கெஞ்சினாள்.

"ஆயா. ஒன்யும் இல்லயா. டயாடாக்து. அவுள்தாங்."

நகோமியம்மாவின் அறிவுறுத்தலின் பேரில் ரெஜினா தேவனிடம் மன்னிப்புக் கேட்டு அவனை இந்துக் கோவிலுக்குக் கொண்டுபோய் குணப்படுத்தலாம் என முடிவு செய்து சைலேந்தரை அழைத்து விஷயத்தைச் சொன்னாள். மறுநாள் சைலேந்தர், விஷால், யோசேப்பு, ரெஜினா, ரூபன் ஆகிய ஐவரும் விஷாலின் காரில் செங்கல்பட்டுக்கு பயணம் செய்யத் திட்டமிட்டனர். பயணம் விடியற்காலையில் ரூபன் வீட்டுத் தெருமுனையிலிருந்து ஆரம்பமானது.

"எங்கம்மா வந்தா நா வர்ல. அவுங்க அந்த சாமியெல்லாங் நம்ப மாட்டாங்கோ. அப்புறம் எனுக்கு செரியாவாது. வர வேணான்னு சொல்லு" என்று வீட்டிலிருந்து கிளம்பும் முன் சைலேந்தரிடம் சொன்னான். அவர் "இருக்கட்டும்டா. கெளம்பிட்டாங்க வரட்டும்" என்றார்

"அப்போனா அவுங்கள கூட்டினு போ. நா வர்ல" என்று நகோமியம்மாவின் பக்கம் சென்று அவள் கையை இறுக்கப் பிடித்து நின்றுகொண்டான். கடைசியில் அவன் விருப்பப்படியே பயணம் முடிவானது.

ரூபன் சட்டை அணியாமல் முறுக்கலாக அதைச் சுருட்டிக் கழுத்தில் போட்டுக்கொண்டு ஜன்னல் சீட்டு வேண்டுமெனக் கேட்டமர்ந்து வேடிக்கை பார்த்து வந்தான். அவன் பக்கத்தில் யார் அதற்குப் பக்கத்தில் யார் யார் உட்கார வேண்டுமென அவன் கட்டளையிட்டதன் பேரில் அவரவர் அமர்ந்து பிரயாணித்தனர். அவனுக்குப் பக்கத்தில் யோசேப்பு மரண பீதியில் அமர்ந்து வந்தான். அவன் பீதிக்குத் தற்காலிக முடிவு கட்டும் வகையில் ரூபன் தன்னை அறியாமல் சைதாப்பேட்டை பாலம் தாண்டியதும் தலையை அண்ணாந்து பார்த்து வாய் பிளக்கக் கண்கள் மூடித் தூங்கினான். விஷால் காரில்

ஓடிய பாடலின் ஒலியைக் குறைத்து அவன் இன்னும் நிம்மதியாகத் தூங்க வழிவகுத்தார். தனக்கு வலதுபுறத்தில் அமர்ந்திருந்த சைலேந்தரிடம் மெதுவாக யோசேப்பு கேட்டான்

“தலிவரே உங்க ஆபிஸ் ப்ரெண்ட்ஸ்களுக்லாங் இவங் இப்டி இருக்றது தெரிமா?”

“இல்லங்க. குறிப்பிட்ட ஒரு சிலருக்குத்தான் தெரியும்.”

“இன்னிகின்னா ஆபிஸ் லீவ் போட்டீங்ளா?”

“ம்ஹும். இல்ல.”

“அப்புறம்?” பர்மிஷனா?

“எங்களுக்கு ஆபிஸ் பத்துநாள் லீவு.”

“பத்து நாளா எதுக்கு?”

“க்றிஸ்மஸ், ந்யூ இயர்க்கு ஷட் டவுன் ஹாலிடேஸ்னு ஒரு பத்து நாள் லீவு விடுவாங்க. அந்த லீவ்லதான் எல்லாம் இருக்கோம். அதுக்குள்ள இவன் சரியாய் ஆபிஸ் வந்துட்டான்னா இவன் வேலைக்கும் பிரச்சனை இல்லாம பாத்துக்கலாம்.”

“Yeah, he should I belive” என்றார் விஷால். கழுத்தைத் திருப்பாமல்.

மேற்படி பிரயாண நேரத்தில் ரூபனுக்குள் புகுந்து அட்டகாசம் செய்துகொண்டிருக்கும் ஆவியான சௌமியனைப் பற்றிய தகவல்களை சைலேந்தரிடம் கதை போலச் சுவை குன்றாமல் யோசேப்பு சொல்லி வந்தான். அவனிடம் கதைக்கேட்டுக் கொண்டே சைலேந்தர் ரூபனின் நிலை பற்றிய தகவல்களையும் அவனுக்கு கொடுக்கப்போகும் சிகிச்சை முறைபற்றியும் இவாஞ்சலினுடன் வாட்ஸப்பில் பகிர்ந்தவாறிருந்தார். உணர்ச்சிப் பெருக்கில் அவள் இவர் எண்களுக்கு பலமுறை தொடர்பு செய்தாலும் இவர் இணைப்பைத் துண்டித்துக்கொண்டே இருந்தார்.

வண்டி தாம்பரம் புறவழிச்சாலையைத் தொட்டுப் பாய்ந்ததும் தூக்கத்திலிருந்த ரூபன் திடீரென கண்களைத் திறந்து “விஷாஆஆஆஆல்” என்று கூச்சலிட்டான். “எம்ம்மோவ்” என்றான் யோசேப்பு. அவர் சடக்கென்று

வண்டியை நிறுத்தியபோதும் அவர்களுக்கு எந்த அசாம்பாவிதமும் நிகழவில்லை. ரூபன் கட்டளையின்படி வண்டி ஓரமாக நிறுத்தப்பட்டது. அவன் விஷாலிடம் மிக நிதானமான குரலில், இப்போது போகும் இடத்தில் தனக்குச் சரியாகாது என்றும் தன்னை உடனடியாக பூனேவிலுள்ள விஷாலின் சொந்த ஊரிலிருக்கும் அவர் சொன்ன கோயிலுக்குக் கூட்டிப்போகுமாறும் சொன்னான். விஷால் அதிர்ச்சியடையாமல், “நாளைக்குப் போகலாம். இப்ப இங்க போகலாம்” என்றார்.

அவன் “இல்ல வண்டிய இப்போவே பூனே பக்கங் திருப்புங்க. இல்லாட்டி நா வர்ல. நா வண்டில ஏற மாட்டேங். நீங்க மட்டும் போயிட்டு வாங்க. நா இங்கியே வெயிட் பண்றேங்” என குனிந்த தலை நிமிராமல் சொன்னான். இவர்களுக்குள் பிரச்சினை என்று சாலையோரத்தில் இவர்கள் நின்றிருந்ததற்கு அருகில் தள்ளு வண்டியுடன் நின்றிருந்த இளநீர்க்காரர் ஆர்வமுடன் கவனித்தார்.

சுமார் அரைமணிநேரம் அவனைத் தங்கள் வழிக்குக் கொண்டுவர முயன்று மூவரும் ஃ வடிவத்தில் சோகமே உருவாக நின்றிருந்தனர்.

யோசேப்பு அவனுக்கு அருகில் சென்று அவன் கைகளைப் பிடித்து கெஞ்சிக் கூத்தாடுவதுபோல, ஆனால் கூத்தாடாமல் பேச மட்டும் செய்தான்.

“மாப்ள. பூனேக்கு போலாண்டா. ப்ரெச்சன இல்ல. ஆனா இப்போ கார்ல போர்துக்கு வர்துக்குன்னு நம்ம வீட்டாண்ட ரிட்டன் ஆவுறதுக்கு ஒரு வாரங் ஆய்டுன்டா. நா நாளைக்கு மலிக்குப் போறேங் மச்சி. ட்ரைன் டிக்கெட்லாங்கூட புக் பண்டாங்கடா. ஒரு மாசமா சருக்கு அடிக்காம, கவுச்சி துன்னாம மால போட்னு இர்ந்துக்கிறேங் மச்சி. போலனா எல்லாமே வேஸ்ட் ஆய்டுங். நீ வா. இன்னிக்கு இந்த செங்கல்பட்டு கோயிலுக்குப் போலாம். த்தா உனுக்கு கன்பார்மா செரி ஆய்டும். அப்டி மட்டும் ஆய்ச்சி ங்கோத்தா திருவிழா டைம்ல வருஷாவருஷம் முட்டிக்கால் போட்னே பழைய வேளாங்கண்ணில இர்ந்து புது வேளாங்கண்ணி

கோய்லுள்ள போய் மெழுகுவத்தி ஏத்தி பொருத்தன செலுத்துவன்டா மச்சி. இது ரெபேக்கா மேல சத்தியம்.''

~

ரூபன் தலையில் கொஞ்சமிருந்த உச்சிமுடியையும் கொத்தாகப் பிடித்து உலுக்கி சாம்பல் தின்றபடி உடலுதற மந்தரித்து முடித்ததும் அவன் கன்னத்தைத் தடவிப் பாட்டி சொன்னாள். ''தம்பிக்கு இனி கெடுதி ஒன்னுமில்ல. ராட்சச கணம் ஓடிப்போய் தேவகணம் மாத்தி எழுதியாச்சு'' அருகிலிருந்த சைலேந்தர் இதைக் கேட்டதும் தன் இதயத்தின் டிக் டிக் ஒலியைக் கைகளின் வழியாகக் கேட்பதுபோல வலது கையை மார்பின் மேல் சில வினாடிகள் வைத்துக் கண்களை மூடிக் கடவுளுக்கு நன்றி செலுத்தினார்.

~

மாலை ஏழு மணிக்கு வீடடைந்தார்கள். குளிக்க வேண்டுமென யோசேப்பு பாதி வழியில் இறங்கிக்கொண்டான். செங்கல்பட்டில் காரினுள் ஏறியது முதல் வீட்டுக்குள் நுழையும்வரை ரூபன் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. கூச்சலில்லை. முனகல் இல்லை. இவனின் ஆழ்ந்த அமைதி விஷாலுக்கும், சைலேந்தருக்கும் அதிருப்தியையே கொடுத்தது. என்றபோதிலும் அவன் இன்னும் குரூரமாக நடந்துகொள்ளாதவரை கடவுளின் சக்தி அவனுக்குள் பரவி 'ப்ரொக்ரஸ்' செய்துகொண்டிருப்பதாக அவர்கள் நம்பினார்கள். அந்த நம்பிக்கை அளித்த பிரகாசத்துடன் காலையிலிருந்து நடந்ததையும், அவன் நடந்து கொண்டதையும் ரெஜினாவிடம் விஷால் ஒப்புவித்தார். சாதித்த பெருமையை வெளிக்காட்டிக்கொள்ளாமல் தன்னடக்கத்துடன் பேட்டி கொடுக்கும் சினிமா இயக்குநர் போல அடக்கமாகக் கைகளைக் கட்டி அவருக்கு அருகில் சைலேந்தர் அமர்ந்திருந்தார். கழிவறையிலிருந்து அவன் வெளியே வந்ததும் இருவரும் எழுந்து போய் வருகிறோம் என்பதைத் தங்களுக்கே உரிய சௌகரியமான மொழியில் ஒன்றுபோலச் சொன்னார்கள். அதற்கு அவன் என்ன எதிர்வினை ஆற்றுகிறான் என்று

அவன் முகத்தை அறையிலிருந்த எல்லோரும் பார்த்தனர்.

அவன் அரைகுறைப் புன்னகையுடன் இருவரையும் பார்த்து “கூட வந்துதுக்கு ரொம்ப தாங்க்ஸ்” என்றான். சைலேந்தர் இவாஞ்சலின் தொடர்பெண்ணை அலைபேசியில் தேடியபடியே படிக்கட்டிலிருந்து இறங்கினார்.

அவர்களிருவரும் போன பின், “பசியெடுக்குது ஆயா” என்றான்.

“ன்னா அப்பேன் சாப்புட்ற?”

உள்ளே நுழைந்ததுமே அம்மா மீன் வறுப்பதை நுகர்ந்திருந்த அவன், “எனுக்கு மீன் வறுத்த தவால சோறு போட்டு பெரட்டி குடுங்கோ” என்றான்.

ரெஜினா மீன் வறுப்பதை நிறுத்திவிட்டு எண்ணையும் மசாலாவும் கலந்திருந்த தவாவில் வெள்ளைச் சாதத்தைப் போட்டு

பிரட்டித் தட்டில் கொண்டு வந்து ரூபன் அருகே வைத்தாள்.

அவன் சாப்பிடுவதையே சுற்றி நின்று பார்த்தால் அவனுக்குக் கோபம் வரலாம் என்று நகோமியம்மா டிவி பார்ப்பது போன்று, ரெஜினா மீன் வறுப்பது போன்று குணசீலன் டிவி பார்ப்பது போன்று ஆளாளுக்கு வேறு வேலையில் மும்முரமாக இருப்பதாக கவனம் வைத்தாலும் ஓரக்கண்களால் அவனையே கண்காணித்தனர்.

இரண்டு முறை சாப்பாடு கேட்டு வாங்கிச் சாப்பிட்டதும் தட்டிலேயே கை கழுவி அவனே அதை எடுத்துக்கொண்டு போக, ரெஜினாவும், நகோமியம்மாவும் “வெய்ப்பா வெய்ப்பா” என்றனர். அவர்களுக்குச் செவி மடுக்காமல் தட்டுத் தண்ணீரைக் கொண்டுபோய் ஊற்றிவிட்டுத் தட்டைக் கீழே வைத்து,

“தூங்குணும். டயாடாக்து. மோவ் பாய் போடேங்.”

ரெஜினாவுக்கு சந்தோஷம் தாள முடியவில்லை. “கர்த்தருக்கு ஸ்தோத்திரம்” என்று அவருக்கு நன்றி

கூறியவாறு பாயை விரித்துப் “படுத்துக்கப்பா என்றாள். பாயில் உடல் சாய்வதற்கு முன் “ஆயா டிவி சவுண்ட்ட கம்மி பண்ணேங்”

“நீ தூங்கு ராஜா. ஆயா டிவியே ஆப் பண்ணிற்றேங்.”

சுமார் பதினைந்து நிமிடம் நித்திரைக்குப் பிறகு படுக்கையிலிருந்து எழாமல் “ஆயா” என்றான்.

“ன்னா நைனா தண்ணி வோணுமா” - அருகில் வந்து அவன் தலையைக் கோதியபடி கேட்டாள் நகோமியம்மா.

“ஆயா, அந்த ஜன்னல சாத்துயா” என்று தலைமாட்டுக்கு மேலிருந்த ஜன்னலை ஆள்காட்டி விரலைச் சுட்டிக் காண்பித்தான்.

“தோ அப்பேன்.”

ஜன்னல் கதவு மூடப்பட்டதும் ஒரு ஐந்து நிமிடக் கண் மூடலுக்குப் பின் திரும்பவும் “ஆயா” என்று குரல். நகோமியம்மாள் அவன் தொடும் தூரத்திலேயே அமர்ந்திருந்தாள்.

“சொல்லு அப்பேன்.”

“ஆயா எனுக்கு ஒரு அடுப்புக்கரி துண்டு வேணுயா. நல்லா பெர்சா எத்துனு வரியா?”

“எதுக்குபா இந்நேரத்திலே?”

“இன்னாவாங். இன்னா கேக்குறாங்?” என்று தவா நெடியிலிருந்து விலகி மீன் வறுக்கப் பயன்படுத்திய கத்தியுடன் ரெஜினா உள்ளறைக்கு வந்து சாந்தமாக நகோமியம்மாளிடம் கேட்க, அவள் சொன்னதும் “எதுக்குப்பா” என்று ரெஜினா அவனுக்கு அருகிலமர்ந்து கேட்டாள்.

“வேணுங். எத்துனு வாங்க” என்றான்.

“தே இன்னாமோ கேக்குறாங். எத்துனு வாங்களேங்” என்றார் குணசீலன்.

ஹவுசிங் போர்டிலுள்ள எல்லோர் வீட்டிலும் கேஸ் அடுப்பு என்றாகிவிட்டதன் பிறகு அடுப்பில் விறகு எரித்து யார் சமைக்கிறார்கள்? எங்கே போனால் அடுப்புக் கரி கிடைக்கும் என்கிற யோசனையை விடப் பேரன்

எதற்காக அடுப்புக்கரி கேட்கிறான், அவனுக்கு குணமாகிவிட்டதா, இன்னும் அவனுக்கு என்னென்ன நேருமோ, அவன் எப்படியெல்லாம் நடந்துகொள்வானோ என்று அவன் மீதுள்ள அக்கறையாலும் அதனால் உண்டான சோகத்தாலும் வெம்பிப்போய் தன் ஒரு முழங்காலைப் பிடிமானத்திற்காகப் பிடித்து “அயோ இயேசப்பா” என்கிற வலி முனகலுடன் நகோமியம்மா படியிறங்கினாள்.

நகோமியம்மாவிற்குப் பார்வைக் குறைவும் ஏற்பட்டிருந்தது. உடம்பில் வயோதிகம் தாண்டவமாடும் சூழலில் பேரனின் நடவடிக்கைகள் கிழவியை இன்னும் முடக்கின. செல்வதறியாது பினாத்திக்கொண்டே நடந்தவளை இழுத்துப் பிடித்து விஷயத்தைக்

கேட்ட பரிச்சயமான வழிப்போக்கி அடுப்புக் கரி கிடைக்கும் இடத்தைச் சொல்லி உபாயம் செய்ததன் பேரில் நகோமியம்மா நடையை வேகப்படுத்தி நடந்தாள். ராமர் தோட்டத்திலிருந்து பார்க் ரயில் நிலையம் அருகில் வந்தாள். அங்கே தண்டவாளம் ஆரம்பிப்பதற்கு முன்பிருக்கும் காலி இடத்தில் நரிக்குறவர்கள் எனச் சொல்லப்படுகிற மக்கள் தொழில் முடித்து அந்தி சாய்ந்ததும் குழுக் குழுவாக அமர்ந்து அடுப்பெரித்துச் சமையல் செய்வார்கள். அவர்களிடம் ஒரு துண்டு அடுப்புக் கரி கேட்டால் கிடைக்கும். அங்கு அடுப்புக்கு முன் உட்கார்ந்திருந்த ஒரு பெண்ணை நகோகியம்மா கேட்டதும் அவள் தன் பக்கத்திலுள்ள இரும்புக் கம்பியைச் செங்கல் அடுப்பினுள் நுழைத்து எரியும் துண்டுகள் இரண்டு மூன்றை வெளியே தள்ளி, அதன் மீது தண்ணீர் தெளித்தாள். அது “ஸ்ஸ்ஸ்ஸ்ஸ்க்” என்கிற சத்தத்துடன் தன் உக்கிரத்தை இழந்து நிர்வாணமானது. துண்டுகள் நன்றாக ஆறிப்போன பின் அவற்றைக் கையில் அள்ளிக் கூவாற்றுப் பாலத்தை வழித்துணையாகத் தடவித் தடவி பிறகு பாலம் முடிந்ததும் ஒருவழியாக நடந்து வீடடைந்தாள் நகோமியம்மா.

கரியைக் கையில் வாங்கியதும் பெரிய துண்டை வைத்துக்கொண்டு மீதத்தை நகோமியம்மாவிடம்

கொடுத்து மூவரையும் தன் அருகில் வரச் சொன்னான். அவர்கள் வந்ததும் சுவரருகே போய் நின்று “எனக்கு உள்ள இன்னும் அந்த இது இருக்குது. கோவலம் தர்காவுக்குக் கூட்னு போனா தான் செரி ஆவன்னு சொல்லுது” என்று மூன்று வரிகளில் எழுதினான். அதை எழுதியதும் நகோமியம்மாவிடம் எழுதிய அடுப்புக் கரியைக் கொடுத்து வேறொரு கரித்துண்டை வாங்கி முன்பு எழுதியதை உள்ளங்கையை கொண்டு அழுத்தித் துடைத்து திரும்பவும் அதையே எழுதினான்.

“ப்பா … இன்னாப்பா ஆச்சி உனுக்கு?” என்று எழுதிக்கொண்டிருந்தவனின் தோள் தொட்டுக் கேட்டாள் ரெஜினா. அவளின் தொடுதலுக்கு அசைந்து கொடுக்காமல் தான் எழுத வேண்டியதை எழுதி முடித்ததும் திரும்பவும் நகோகியம்மாளிடம் கரித்துண்டு கேட்டு கையேந்தினான். ஏந்தியவனின் கைகளைப் பிடித்துத் திரும்பவும் கேட்டாள்.

“ப்பா இன்னாப்பா ஆச்சி உனுக்கு. இன்னா பண்ணுது?”

பதில் சொல்வதற்கு முன் அவளின் கையை பதிலுக்கு இவனும் அழுத்தமாகப் பிடித்து தலை குனிந்து கொண்டான். “இங்க பாருப்பா. அம்மாவப் பாருப்பா” எனக்கேட்டும் அவன் தரையையே வெறித்து தலையைத் தூக்காமல் சொன்னான்.

“மோவ், நா கண்டு புஷ்டென். இந்த பூமா வீட்டுக்காரங் ஜியாலுதின் பாய்கிறான்ல அவன் சௌமியனுக்கு முட்டை ஓடுல உருதுல சூனியம் எழுதி வெச்சிக்கிறாங். இப்போ அது எனுக்கு அச்சினு இருக்குது. கோவளம் தர்காவுக்கு போனா கன்பார்மா செரியாய்டும்மா. கூட்னு போமா.”

“ப்பா ஆண்டவர் புள்ளிங்களே சூனியக் கட்டுலாம் ஒன்யும் பண்ணாதுப்பா.”

“ஆயா. அம்மாகிட்ட சொல்லுயா. தர்கா போய் அங்ககிற அவுலியாங்ககிட்ட போய் மந்திரிச்சிகினா செரியா போய்டுயா. நா நார்மலா ஆய்டுவங்யா. எனுக்கு தோணுதுயா.”

“தர்காவுக்குலாம் ஆண்டவர் புள்ளிங்கோ போவக் கூடாதுப்பா. கெல்லிஸ்ல ஒரு பாஸ்டர்கிறாரு. இன்னாமாரி பில்லி சூனியக்கட்டு பிசாசுகிரியையெல்லாங் ஜெபத்துலயே ஓட்டிடுவாருப்பா. நீ வோணா ஒரு வாட்டி … என்று ரெஜினா முடிக்கும்முன் “ஏய் த்தூ. மாதச்சோர். அவந்தாங் சொல்றால்ல தர்காவுக்குக் கூட்னு போன்னு. ங்கோத்தா மயிறு மாதிரி பேசினுகிரிங்கோ. ங்கோத்தா எங் ஒடும்பு நல்லா இர்ந்தா எம்புள்ள எங்க சொல்றானோ அங்க கூட்னுபோய் வைத்தியம் பண்ணி இருப்பேங். ன்னமோ ஆண்டவர் ஆண்டவர்ன்றிங்கோ. ஒரு வாரங் வூட்டுக்கு வந்து டெய்லி ஜெபம் பண்ணிட்டு போனானே அந்த பொம்பள சோக்கு. எம்புள்ளிக்கு எதுனா செரி பண்ணானா? எப்பா … நாளிக்கு நீ உங்க ஆபிஸ் ப்ரென்ட்டுங்கள கூட்னு நீ காய்ல்ல போப்பா …” என்று ஆரோகணமாக ஆரம்பித்து அவுரோகணத்தில் முடித்தார் குணசீலன்.

“ம் செரி” என்று கையிலிருந்த கரித்துண்டை நகோமியம்மாளிடம் கொடுத்து பாயில் படுக்கப்போனவனைக் கேட்டாள், “எப்பா இத சொல்றதுக்குத்தாங் அடுப்புக்கரி வாங்கினு வர சொன்னியா?”

“ஆமாயா”

” … … …”

“ஆயா நா வாய்ல சொன்னா யாருங் நம்ம மாட்றாங்கயா. எதோ ஔரன்னுறாங்கோ. சத்திமா சொல்றேங். எனுக்கு நெக்ஸ்ட் இன்னா பண்ணனுங், இன்னா செய்னுங் க்ளீனா தெரிது ஆயா.”

“ம்ம். ஆயா தலில கை வெச்சி ஜெபம் பண்ட்டாப்பா?”

“வாணாயா. தர்க்கா போய்ட்டு செரி பண்ணினு வந்துற்றேங். ஒரே டைம்ல ரெண்டுத்தியுங் நம்புனா வேலிக்காவாது. இப்போ தூக்கம் வர்து. லைட், பேன்லாம் ஆப் பண்ணுங்கோ” என்று போர்வையைத் தலை வரைக்கும் மூடிக்கொண்டான்.

பிள்ளைக்கு சூனியம் வைத்திருப்பதையும் அதை முன்னிட்டு தர்காவுக்குப் போவதையும் ரெஜினா மனம் ஏற்க விரும்பவில்லை. அவளுடைய அனுபவத்தில் கிறிஸ்தவர்களுக்கு பேய்பிடிக்க வாய்ப்பிருக்கிறதே தவிர பில்லி சூனிய வேலைகளுக்குக் கர்த்தருடைய பிள்ளைகள் பலியாக மாட்டார்கள். அதுவும் என் பிள்ளைக்கு வாய்ப்பே இல்லை என்று நம்பினாள். அவன் தூங்கிவிட்டான் என்பதை உறுதி செய்த பிறகு பால்கனிக்குச் சென்று தாய்ச்சபையின் போதகரான இடிமுழக்கம் எபிநேசருக்குத் தொடர்புகொண்டு ரூபன் அளித்த வாக்குமூலத்தை அவரிடம் சொன்னாள். அவர் எதிர்முனையில் ‘‘என்ன சிஸ்டர் நீங்களும் அத நம்புறிங்க. நீங்க நல்ல ஆவிக்குரியவங்க. உங்க பிள்ளையும் ஞானஸ்தானம் எடுத்தவரு. அவருக்கு எப்டி சூனியம் வேல செய்யும்? அதுவும் நா வந்து அன்னைக்கு ஜெபிச்சிட்டு போனதுக்கு பிறகு! நாமெல்லாம் யாக்கோபின் சந்ததி. இஸ்ரவேலின் குடும்பத்தார் மறந்துட்டிங்களா’’ என்று அவர் கேட்டதற்கு அவர் சொன்ன வார்த்தையை அங்கீகரிக்கும் பொருட்டு ‘‘ஸ்தோத்திரம்’’ என்று சொன்ன ரெஜினாவின் கன்னத்தில் ‘‘பளார்’’ என அறை விழுந்தது.

அரை வாங்கியதில் செல்போன் பால்கனியிலிருந்து கீழே விழாமல் ரெஜினாவின் காலுக்கடியில் விழுந்தது. திருமணம் ஆன புதிதில் அடித்ததற்குப் பிறகு குணசீலன் இப்போதுதான் ரெஜினா மீது கை வைக்கிறார். ‘‘கை வைக்கிறார்’’ எனச் சொல்வது அடிப்பதற்காக மட்டுமின்றி மற்ற விஷயத்திற்காகவும்தான்.

தன் பிள்ளையையே தேவன் ஆக்கினைக்கு உண்டு பண்ணினது ஜெப வீராங்கனையான அவள் உட்பட சபையோர்களுக்கும், சந்துவாசிகளுக்கும் ஆச்சர்யத்தை உண்டு பண்ணியது. ஆச்சரியப்பட்டுக்கொண்டே இருந்தால் பிள்ளை பிழைத்துவிடுமா? ‘‘எம் புள்ள வெளிநாட்டு கம்பெனில வேல செய்றாங். எம் புள்ளிக்கு கம்யூட்டர்லாங் குத்துகிறாங்கோ. ஆபிஸ்ல இருந்து கார் வந்து அவன கூட்னு போவுங். கூட்னு வந்து வுடும். எம் புள்ள இங்க்லீஸ் சூப்பரா பேசுவாங். எம் புள்ளதாங் குடும்பத்தியே பாத்துகிறான்’’ என்று கூவாற்றுப்

பாலத்தில் சகாக்களுடன் அமர்ந்து வாயெடுத்தாலே பிள்ளையைப் பற்றியே வில்லுப்பாட்டு பாடிய குணசீலன் அவன் நிலையைக் கண்டு நொந்துபோய் இருக்கிறார். உடளவில் அவர் தேறி வந்த சமயத்தில் அவனுக்கு நேர்ந்த மன விபத்தில் குணசீலன் படுகாயம் அடைந்திருக்கிறார். பிள்ளை புத்துயிர் பெற்று பழைய மாதிரி துணிமணி அணிய வேண்டும். வேலைக்குச் செல்ல வேண்டும். தினமும் அவர் தூங்கி எழுந்ததும் "ன்னா இப்போ ஒடம்பு பர்வால்லியா" என்று அவரைப் பற்றி குசலம் விசாரிக்க வேண்டும். அவனைக் காப்பாற்ற வேண்டும். அவனை எப்படிக் காப்பாற்ற வேண்டுமென அவனே வழி சொல்லுகிறான். அதைக் கேட்காமல் இவள் திரும்பவும் அந்த பாஸ்டரையே அழைக்கிறாள் என்கிற ஆத்திரத்தின் வெளிப்பாடாகவே குணசீலன் அவளை அரைந்தார்.

ரெஜினா அழைத்ததற்கு இணங்கி சைலேந்தர் அவனைக் கோவளத்திற்கு அழைத்துச் செல்ல சம்மதித்து அவன் வீட்டுக்கு வந்தார். அவன் குளித்து முடித்து, துண்டை இடுப்பில் கட்டிக்கொண்டு தானாகவே அலமாரியைத் திறந்து இருப்பதிலேயே புது சட்டையை எடுத்து அயர்ன் பாக்ஸில் ஒத்தடம் கொடுக்கப் போர்வையைக் கண்ணியத்துடன் விரித்து தரையில் உட்கார்ந்தான். அவனின் சாதாரண நடவடிக்கைகள் எந்த நேரத்திலும் மாற்றமடைந்து சுற்றியிருப்போரைக் கலவரப்படுத்தலாம் என்பதால் அவர்கள் எப்போதும்போல வேறு வேலையில் மும்முரமாய் இருப்பது மாதிரி அவனை கவனித்தனர். அப்படி இருப்பதற்குக் காரணம் இவர்கள் அனைவரும் நம்மைத்தான் கவனிக்கிறார்கள் எனத் தெரியவந்தால். எதற்காக இவர்கள் என்னையே உற்றுப் பார்க்கிறார்கள் எனக்கென்ன ஏதாவது மனநோயா அப்படி இருந்தாலும் எனக்கே அதை எப்படி குணப்படுத்த வேண்டுமென்று தெரிகிற பட்சத்தில் இவர்கள் ஏன் என்னை ஒரு பைத்தியாக்காரனைப் பார்ப்பது போல பார்க்கிறார்கள் என்று கோபமடைந்து பைத்தியக்காரன்போல நடந்துகொள்வான். "ஒரு பைத்தியத்திற்கும் எனக்குமுள்ள வித்தியாசம் நான் பைத்தியம் அல்ல" என எங்கோ படித்ததை அவ்வப்போது நினைவுபடுத்தி அதைத் திடமாக

நம்பினான். ஆனால் அவன் பைத்தியம் இல்லையென்று அடுத்தவர் நம்ப வேண்டுமென அவர்கள் நம்பும் விதமாக இவனால் எதுவும் செய்ய முடியவில்லை. செய்யாமலிருக்கவும் முடியவில்லை. கால் மணிநேரத்திற்கு மேலாக மற்றவர்களைப் போல இருக்க முடிவதில்லை. கோணலான முக சேஷ்டை, சுவருக்கு எதிரில் நின்று பேசுவது, பூமாவைக் கெட்ட வார்த்தைகளைக் கொண்டு திட்டுவது. வயிற்றில் பாம்பு ஓடுகிறதென்று வயிற்றைக் கெட்டியாகப் பிடித்து தரையில் உருளுவது. “அயோ வயிறு வலிக்குதே அயோ வயிறு வலிக்குதே” என்று ஒருநாள் அவன் ஓங்கரித்ததில் அந்த ப்ளாக் மக்களனைவரும் அவன் வீடு முன் திரண்டனர். சுவாரசியம் என்னவென்றால் நோய் என்ன என்பதையும் அது எங்கு போனால் செரியாகும் என்பதையும் அவனே தீர்மானித்தான். “டுவீலரே போதும் பத்திரமா வருவேங்” என்று சைலேந்தரிடம் அவன் கேட்டுக்கொண்டதிற்கிணங்க அவனை அவருடன் அனுப்பி வைத்தார்கள். தர்காவின் வெளி வளாகத்திற்குள் நுழைந்ததும் அங்குள்ள ஒருவரிடம் விஷயத்தைச் சொல்லி யாரைப் பார்க்க வேண்டுமோ அவரைப் போய் இருவரும் பார்த்தார்கள். பிரச்சினை வேறு யாருக்கோ என்பது போல அவன் மிக இயல்பாக இருந்தான். சூனியக்கட்டுகளை உடைப்பவரிடம் கேள்விமேல் கேள்வி கேட்டான். கடைசியாக அந்த மந்திரக்காரர் அவன் தலை மீது கை வைத்து மந்திரங்கள் ஜெபிக்க ஆரம்பித்ததும் அவன் செய்கைகள் மாறியது. ‘பன்’ தின்கிற போட்டியில் கைகளை பின்னால் கட்டிக்கொண்டு பன்னை வாயினால் கவ்வ முயற்சிப்பார்களே அது போலவேச் செய்தான். அவனுக்கு எதிரில் பன்னும் இல்லை. அவன் கை கட்டப்படவும் இல்லை. சிறிது நேரம் கழித்து பன் வாயில் மாட்டிக்கொண்டது மாதிரி “ச்சவ்வு ச்சவ்வு” என்று வெறும் வாயை மென்றான். மெல்லும் வேகத்தை அதிகரித்து வேகவேகமாக மென்றதில் பற்கள் கிடுகிடுத்தது. அப்படியே தரையில் சாய்ந்தான். மந்திரக்காரர் சைலேந்தரிடம் அவனை இன்னும் மூன்று முறை கூட்டி வரும்படியாகச் சொல்லிப் படுத்திருந்த ரூபனின் கைகளில் பச்சை நிறத்தில் நெல்லிக்காய் அளவுள்ள மூட்டைத் துணியை தாயத்துடன் சேர்த்துக்

கட்டினார். அதற்கு பக்கத்தில் மந்திரம் ஓதி எழுதிக்கொடுத்த செம்புத் தகடைக் கறுப்பு நூலின் உதவியுடன் கட்டினார். துஷ்ட ஆவிகள் அவனிலிருந்து நீங்கவும், நோய் நொடிகள் செய்வினை போன்றவை அண்டாமலிருக்கவும் என்னென்ன செய்ய வேண்டுமென சைலேந்தரிடம் சொல்லி தனக்குத் தேவையானதை வாங்கிக்கொண்டு வந்தோரை வழியனுப்பினார்.

தர்காவுக்குப் போய்விட்டு வீட்டுக்குள் நுழையும்வரை சைலேந்தரிடம் அலுவலக அரசியலையும் மற்ற நாட்டு நடப்புகளையும் மிகச் சாதாரணமாகப் பேசி வந்தவன் வீட்டுக்குள் நுழைந்ததும் சைலேந்தரின் சட்டையைப் பிடித்து, “ங்கோத்தா … எங்க அம்மாவ உசார் பண்றதுக்குத்தாங் வீட்டுக்கு அப்பப்ப வரியா நீ? ங்கொம்மால இனிமே உள்ள காலெத்து வெச்ச கால வெட்டிடுவேங்” என்றவன், அவர் சட்டையிலிருந்து கையை எடுத்து சட்டை சுருக்கத்தை அவனே சரி செய்து, “இப்டி உங்கள கேக்க தோணுது தல. ஆனா நீங்க அந்த மாரி டைப்லாங் இல்ல. எனுக்குயாங் அப்டி தோணுணுங்? ஒருமாரி கேராக்து” இந்த தாயத்துலாம் வேஸ்ட்டு தல” என்றவன் தாயத்தின் முடிச்சுகளை விரல்களால் அவிழ்க்கத் தோற்று வாயால் கடித்தான். ஒருகடிக்குமேல் தாயத்தை விட்டுவிட்டுக் கையின் மணிக்கட்டை “வ்வ்வ்” என்று சத்ததுடன் கடிப்பதை உணர்ந்த சைலேந்தரும், ரெஜினாவும் நகோமியம்மாவும், குணசீலனும் அவனை அவனிடமிருந்து காப்பாற்றினார்கள். அடுத்த மூன்று நாள் அவனின் அட்டகாசம் வீட்டையும், சுற்றியிருப்போரையும் அல்லோலோலகல்லோலம் செய்தது. வீட்டுச் சுவர் முழுக்க அடுப்புக் கரியால் எழுதி வைத்திருந்தான். ரெஜினாவுக்குப் படிக்கத் தெரியும் என்றாலும் அவன் எழுதியதை வாசிக்கச் சிரமப்பட்டாள். அவன் என்ன எழுதியிருக்கிறான் என்பதைத் தொடர்ந்து வாசிக்க அவள் முயற்சிக்கவில்லை. அப்படி அவன் எழுதுவதைக் கூர்ந்து என்ன எழுதுகிறான் என்று உற்று நோக்கினால் தூ தூ என்று எழுதியதன் மீது எச்சிலைத் துப்பி அழித்துவிட, அடுப்புக்கரி வீட்டுச் சுவரையெல்லாம் கோராமைப்படுத்தியது.

ஒரு நிமிடம்கூட அவன் வாய் சும்மாயிராமல் கூச்சலிட்டது. ஆனால் அதை வெற்றுக் கூச்சல் என்று சொல்லிவிட முடியாது. மிக அர்த்தபூர்வமாகக் கண்களை மூடி, “இதோ என் தேவனே. இந்த பிள்ளையை நீர் காப்பாற்றும் ராஜா” இது உம்முடைய பிள்ளை ராஜா என்று பைபிள் வசனங்களை மேற்கோள் காட்டி ஜெபம் செய்வான். ஜெபத்தை முடிப்பது போல குரலைத் தாழ்த்தி திடீரென “லிபரிகிலதிபகரிபோ” என்று அந்நிய பாஷை பேசி எம்பி எம்பி குதிப்பான். “ப்ரைஸ் தி லார்ட் தேவனுக்கு மகிமை உண்டாவதாக” என்று ஒரே சொல்லை தமிழிலும் ஆங்கிலத்திலும் மாறிமாறிப் பேசுவான். தமிழில் பேசும்போது இடது கையை மைக் போலவும் ஆங்கிலத்தில் பேசும்போது வலது கையை மைக் போலவும் மாற்றி வைத்துப் பிரசங்கம் செய்வான். தனக்கு முன்னே திரளான மக்கள் அமர்ந்திருப்பது போல இழுத்து சத்தம் போட்டுப் பேசுவான். பிறகு கொஞ்ச நேரம் அமைதியாக எங்கேயோ பார்வையை வெறித்து ரெஜினாவை ஜல்லிக் கரண்டி எடுத்து வரச்சொல்லி அதை வாங்கித் தன் தோளில் சுமப்பான். இயேசு சிலுவையைச் சுமந்து தாங்கித்தாங்கிக் கல்வாரி மலையில் நடந்து சென்றது போல ஜல்லிக் கரண்டியுடன் நடப்பான். அவ்வாறாக அவன் நடக்கும்போது நகோமியம்மாளை, “எங்கு போகிறீர் இயேசு தெய்வமே” என்கிற பாடலைப் பாடச் சொல்லுவான். பாட மறுத்தால் அடி விழும் என்பதால் நகோமியம்மா அழுதுகொண்டே அந்தப் பாடலைப் பாடுவாள். அவள் அழுவது அடிக்குப் பயந்தில்லை. அவள் பாடலைப் பாடி முடித்ததும் சுவரில் ஒட்டி நின்று இரு கைகளை விரித்து ஒரு காலின் மீது இன்னொரு காலை ஒட்டிப் பார்வையை பக்கவாட்டில் திருப்பி, “என் தேவனே என் தேவனே ஏன் என்னைக் கைவிட்டீர்?” என்று மிகுந்த சத்தத்துடன் அழுவான். தேம்பித் தேம்பி அழுது முடித்ததும் அவனின் பேச்சு, நடை, பாவனைகள் சாதாரணமாக இருக்கும். ராத்திரி சாப்பிட்டுப் போர்வையைத் தலை வரைக்கும் போர்த்திக்கொண்டு படுப்பான். பத்து நிமிடங்கள்கூடப் படுக்கையில் இல்லாமல் எழுந்து நகோகியம்மாளைக் கூப்பிட்டு “ஆயா எனுக்கு ராகிமால்ட் வாங்கினு வா. ஆவின்ல போய் பால்கோவா வாங்கயுனு வா, கவாப்பு

வாங்கினு வா, டெரகோட்டா கம்பல் வாங்கினு வா” என்று எதையாவது கேட்பான். ஒருநாள் ராத்திரி பத்து மணி ஆகியிருந்தது. அவன் போர்வையைத் தலைக்கு மேல் போர்த்தி ஒரு மணிநேரம் ஆகியும் அவனிடமிருந்து எந்த அழைப்பும் நகோமியம்மாவுக்குக் கிடைக்கவில்லை. ரெஜினா பயந்துபோய் போர்வையை விலக்கிப் பார்த்தாள். அவன் கண்களைத் திறந்தபடி முணுமுணுத்துக்கொண்டிருந்தான். இவர்களைப் பார்த்ததும் படுக்கையிலிருந்து எழுந்து பைபிள் இருக்கும் இடத்திற்குச் சென்று அதைக் கையில் எடுத்து வைத்து பெர்க்மான்ஸ் பாடிய பிரபல பாடலைச் சத்தம் போட்டுப் பாடினான். “உயிர் நண்பன் என்னை விட்டுப் பிரிந்தாலும் ஊரெல்லாம் என்னைத் தூற்றித் திரிந்தாலும் நான் கர்த்தருக்குள் மகிழ்ச்சியாய் இருப்பேன். என் தேவனுக்குள் களி கூறுவேன். அத்திமரம் துளிர்விடாமல் போனாலும் திராட்சைச் செடி பலன் கொடாமல் போனாலும் நான் கர்த்தருக்குள் மகிழ்ச்சியாய் இருப்பேன். என் தேவனுக்குள் களி கூறுவேன்.” பதினொரு மணிக்குப் பாட ஆரம்பித்தவன் நிறுத்தவே நிறுத்தாமல் அரை மணி நேரத்திற்கும் மேல் சத்தமே குறையாமல் பாடினான். பக்கத்து வீட்டுக் குழந்தை சுஷ்மிதாவின் அப்பா ரெஜினாவின் வீட்டுக்குள் நுழைந்து சண்டைபிடிக்க ஏற்கனவே பேசி வைத்திருந்தது போல கீழ் வீடு, மேல் வீடு ஆட்கள் வந்து இதுதான் நேரம் என்று ரெஜினாவை சண்டை பிடித்தார்கள். இனியும் அவனை வீட்டுக்குள் வைத்திருந்தால் தாங்களாகவே மெண்டல் ஆஸ்பிட்டலுக்கு போன் செய்து பிடித்துக்கொடுத்து விடுவோம் என்பது அவர்கள் சொன்னவற்றின் சாரம்சமாக இருந்தது. ரெஜினாவுக்கும் அது நியாயமாகவே பட்டது. அவன் வயிற்றில் இருக்கும்போது தனக்குப் பேய் பிடித்ததனால்தான் அவனுக்கும் இதுபோல ஒரு நோய் வந்திருக்கிறது என்கிற குற்ற உணர்ச்சியில் அவள் அழுதழுது மாமியார் கிளியாம்பாளையும் நகோமியம்மவையும் திட்டித் தீர்த்தாள்.

ஆனால் தன்னுடைய தொடர் உபவாசத்தால் பிள்ளையை குணமாக்க முடியுமென்று தீர்க்கமாக நம்பி இரண்டு வாரத்திற்கும் மேலாக நாளொன்றுக்கு ஒரு

வேளை மட்டும் சாப்பிட்டு ஜெபம் செய்து வந்தவள் அதைத் தொடர்வேன் என்று தனக்குத்தானே முரட்டுப் பிடிவாதத்துடன் சபதம் போட்டாள். அதுவரைக்கும் தன் பிள்ளை அடுத்தவர்களுக்குக் கேலிப்பொருளாகவும், அவர்களின் வெறுப்புக்கு அவன் ஆளாகுவதையும், அவன் நடந்துகொள்ளும் விதத்தையும் அவளால் சகித்துக்கொண்டிருக்க முடியவில்லை. அன்று ராத்திரி மூவரும் கலந்து பேசி அவனை ஹோமில் சேர்த்துவிடலாமெனத் தீர்மானித்தார்கள். அவர்களுக்கு இந்த "ஹோம்" சமாச்சாரமெல்லாம் உபாசனா மூலம் தெரிந்திருந்தது. இரும்புலியூரில் உள்ள தனியார் மனநலக் காப்பகத்திற்கு அவனைக் கொண்டுபோய் சேர்த்தார்கள். விடியற்காலை ஐந்து மணி அளவில் காப்பகத்திலிருந்து மூன்று பேர் வந்து தூங்கிக்கொண்டிருந்தவனை "அலேக்காக" தூக்கினார்கள். அவர்கள் யாரென்று அறிந்துகொண்ட பின்னரும் அவன் திமிற முயற்சி செய்யவில்லை. அவன் அவர்களிடம் சொன்னான் "ணோவ், எறக்கி உன்னா, இன்னா கொய்ந்தியா நானு. எறக்கி உண்ணான்றலே? நானே வரேங். எறக்கு" என்றான். அவர்கள் அவனை இறக்கி விடவில்லை. தூக்கிக்கொண்டு போவதைப் பார்த்த ரெஜினாவும் நகோமியம்மாவும், குணசீலனும் சத்தம் வராமல் அழுதுகொண்டே பின்தொடர்ந்தார்கள். காப்பகக்காரர்களின் கரங்களில் தவழ்ந்தபடியே அவன் சொன்னான். "மோவ், இத இத இதத்தாங் எதிர்ப்பாத்தேங். சத்திமா எனுக்கு இங்க போனா செரி ஆய்டுங். நீயும் ஜெபம் பண்ணினே இரு. எப்போவ், மகன, டைமுக்கு மாத்திர போடு, பீடி கீடி புச்சன்னு கேள்விப்பட்டேங் மகன வீட்டுக்கு வந்து திரும்பவுங் அமுக்களங் பண்ணுவேங். ஆயா தெபார் எங்க அப்பா அம்மா கூடியே இரு. நீதாங் மெய்னு. எதுனா திட்னாங்கன்னு அன்னிக்கு மாரி கோய்ச்சிகினு போய்ட போற ... இன்னா?" என்றான். விதிமுறைகளை மீறி நகோமியம்மா சத்தம் போட்டே அழுதுவிட்டாள். வேன் கிளம்பியது.

தோராயமாக வெறும் ஐம்பது மனநோயாளிகளைக் கொண்டு நடத்தப்படும் காப்பகம் என்றாலும் இயற்கை எழில் பொழிய விசாலமான இடத்திற்கு நடுவே கட்டிடம்

இருந்தது. அவன் சேர்க்கப்பட்ட நாளிலிருந்து நகோமியம்மா வந்து அவனைப் பார்க்கவில்லை. அவளுக்கு பயமாக இருந்தது. குணசீலனும், ரெஜினாவும் வந்து அவனைப் பார்த்துவிட்டுப் போனார்கள். தையல் வாங்கிய தலையை செக்யூரிட்டி தொப்பியால் மறைத்துக்கொண்டு பூபாலன், அமலோற்பவம், யோசேப்பு மற்றும் பூங்கொடி ஆகியோர் அவனைப் பார்க்க வந்தாலும், நோயாளிக்கும் அவர்களுக்கும் நெருக்கமான உறவு இல்லாததால் காப்பகத்தார் அவர்களை உள்ளே அனுமதிக்கவில்லை. இனியும் இவாஞ்சலிடனிடம் விஷயத்தைச் சொல்லாமல் இருந்தால் தனக்கும் பைத்தியம் பிடித்துவிடும் என்றுணர்ந்த சைலேந்தர் அவளுக்கு ஃபோன் செய்து எல்லாவற்றையும் சொல்லி காப்பக்கத்திற்கு அழைத்து வந்தார். உபாசனா வரும்வரை வளாகத்தில் காத்திருந்தார்கள். அவள் வந்ததும் தலைமை மருத்துவரின் அறையில் நுழைந்ததும் உபாசனா தலைமை மருத்துவரின் குடும்ப நலன்களை புன்னகையுடன் விசாரித்தாள். நால்வரும் நடந்து ரூபன் இருக்கும் அறையை நோக்கி நடந்து வந்தார்கள்.

அங்குள்ள மனநோயாளிகளுக்குப் பிரத்யேகமான பச்சை நிறத்தில் சீருடை என்றெல்லாம் இல்லை. அவரவர் தங்களின் சொந்த உடைகளையே அணிந்திருந்தனர். அவரவர் வேலையை சுயமாகவே செய்துகொள்ளும் பிரக்ஞை அவர்களுக்கு இருந்தது.

காப்பகத்தின் வெளியில் இருப்பவர்களுக்கு எந்த விதத்திலும் குறைச்சல் இல்லை என்றாலும் எந்த நேரத்தில் எப்படி நடந்துகொள்வார்கள் என்பதற்கு எந்த நிச்சயமும் அவர்களிடம் இல்லை. அங்கிருந்த மனநோயாளிகள் யாவரும் தனவந்தர்கள் என்பது அவர்களின் முகக் களையில் தெரிந்தது. சமூக நிர்பந்தத் தினால் ஏற்பட்ட மன அழுத்தம் காரணமாகவோ அல்லது குடும்பத்தினர் செய்யும் காரியங்களில் சகிப்புத்தன்மை குன்றிப் போய் சற்று ஓய்வு எடுக்கவோ வந்திருப்பவர்கள்போலவே காணப்பட்டார்கள். ஒவ்வொருவருக்கென்று தனி அறை. தேவைப்பட்டால் அடுத்தவரிடம் சென்று உரையாடலாம். ஆனால் அதற்கு

அடுத்தவரும் தயாராக இருக்க வேண்டும். பெரும்பாலானோர் அறையை விட்டு வெளியே வராமல் புத்தகம் படித்துக்கொண்டிருப்பார்கள். இணையவசதியுடன் லேப்டாப்பை வெறித்துக்கொண்டிருப்பார்கள். செல்போனை தடவிக்கொண்டிருப்பார்கள். தான் கற்பனை செய்து வைத்திருந்த மனநல மருத்துவமனைக்கு முழுதும் வித்தியாசமாய் இருந்ததனால் இவாஞ்சலின் தனக்கு ஏற்பட்ட ஆச்சரியத்தை வெளியே காட்டிக்கொள்ளாதவாறு ரூபன் நிலையைப் பற்றிய சோகம் அவளை ஆக்கிரமித்திருந்தது. அவளின் முக பாவத்தைக் கண்டு உபாசனா சொன்னாள். “இது ஒரு டைப் ஹோம். நம்மளோட கரண்ட் லைப் ஸ்டைலைக்கு இனிமே இந்த மாதிரி டைப் ஹோம் அதிகமாயிட்டுவரும். இங்க இருக்கவங்கலாம் மெண்டலி இல்னு சொல்ல முடியாது. சோஷியல் பிரஷர் அதிகமாகி, ஆர் தனக்குத்தானே சோஷியல் ப்ரஷர உருவாக்கி அப்நார்மலா பிஹேவ் பண்றவங்க, ஓவர் பீரியட் ஆப் டைம்ல அவங்களோட ஆக்டிவிட்டி அடுத்தவங்கள தொந்தரவு பண்ணுதுங்கிறத தெரிஞ்சி அவங்களா வந்து அட்மிட் ஆய்டுவாங்க. இங்க இருக்கிற முக்காவாசிப் பேருங்க அப்டிதான். பட் ரூபன் மாதிரி ஒரு சில பேரோட இன்டென்ஷன் இஸ் வெரி ஸ்ட்ரேஞ்ச்” என்று சொல்லி அருகில் நடந்து வந்த தலைமை மருத்துவரைப் பார்த்து “இஸ்ன் இட் ஆன்ட்டி?” என்றாள். அவர் “எக்ஸாட்லி” என்றார்.

அவன் இருக்கும் அறையின் அழைப்பு மணிப் பொத்தானை சைலேந்தர் அழுத்தினார். கதவைத் திறந்ததும் “வாவ் வாட்ட சர்ப்ரைஸ்” என்று உபாசனாவைப் பார்த்தவன் அவளிடமிருந்து பார்வையை விலக்காமல் இவாஞ்சலினைச் சுட்டி காண்பித்து “இவுங்க யாரு?” என்றான். இவாஞ்சலின் கண்களைத் துடைத்துக்கொண்டு அந்த அறையிலிருந்து வெளியே செல்ல முற்படுகையில் வேகமாக வந்து அவள் கையை எட்டிப் பிடித்து …

“ஏய் சும்மா வெளான்னேங்.”

அவன் தொடுகையை உணர்ந்ததும் அவள் உடைந்து அழ ஆரம்பித்தாள்.

“தல, கோய்ச்சுக்காம மூணு பேரும் வெளிய இருங்க” என்று இவாஞ்சலினின் கையைப் பிடித்தான்.

அவள் தயக்கத்துடன் சைலேந்தரைப் பார்த்தாள். அவர் உபாசனாவைப் பார்த்தார். உபாசனா தலைமை மருத்துவரைப் பார்த்தாள்.

“ஹி ஹிஸ் ஹாம்லெஸ். அனுப்புங்க” என்று உபாசனாவைப் பார்த்துச் சொன்ன மாத்திரத்தில் ரூபனைப் பார்த்து, “ரூபன் உள்ள கூட்டிட்டுப் போய் பேசுங்க. பட் டோர் லாக் பண்ண வேணாம் ஓக்கே?” என்று கட்டை விரலால் வெற்றிக் குறியீடு காட்டினார் தலைமை மருத்துவர்.

பதிலுக்குத் தலையை ஆட்டினான்.

அவர்கள் மூவரும் அறைக்கு வெளியேயிருந்த நாற்காலியில் அமர்ந்தனர்.

கதவைச் சாத்தினான். இவாஞ்சலின் அழுகையை நிறுத்தவில்லை. அவளை இறுக்கமாகக் கட்டிப்பிடித்து உடனே விடுவித்து அவள் கண்களைத் துடைத்தான். அவள் தாடையைத் தன் கையில் ஏந்தி சொன்னான் “அழாத. இந்த பெட்ல ஒக்காரு.” அவள் அச்சப்பட்டாள். அவள் அச்சத்தின் பின்னணி, அவன் செய்த அட்டகாசத்தையெல்லாம் சைலேந்தர் இவாஞ்சலினிடம் சொல்லியிருந்தார்.

அவள் தோள்களைப் பிடித்து உட்கார வைத்தான்.

“எவா. என்னப் பாரு.” என்னப் பாரு என்று இரண்டாவது முறை சொல்லும்போது மிதமாகப் பற்களைக் கடித்தான். அவள் மிரண்டுபோய் அவனைப் பார்த்தாள்.

“இங்க பாரு எவா. நா சொல்றத பொறுமையா கேளு. இவங்கலாம் நெனக்கிற மாதிரி எனக்கு பேயும் புடிக்கல. பைத்தியமும் புடிக்கல. ஒரு நாவல் எழுதணுன்னு எனுக்கு ரொம்ப நாளா ஆசன்னு சொன்னல்ல. அந்த நாவல எழுதனுங்கிறதுக்காக நானே இப்டி ஆக்ட் பண்ணேங். பேய் புச்ச மாரி பண்ணா என்ன சுத்தி

இருக்கிறவங்க கடவுள் பேர வெச்சி பேய் ஓட்றவங்க ஆவியோட பேசுறவங்க இவங்கெல்லாம் எப்டி ரியாக்ட் பண்றாங்கன்னு எனுக்கு தெரியணுங். அந்த டைடல்ஸ்லாங் ஒரு விக்டிமா நானே அனுபவிச்சி கலெக்ட் பண்ணி வெச்சிருக்கேங். அதுதாங் நம்ம நாவலோட நாட்டே. இன்னா முழிக்கிற? சத்திமா" என்றவன் அவள் என்ன எதிர்வினை ஆற்றுகிறாள் என்று சற்றுப் பின்னால் நகர்ந்து அவளைப் பார்த்தான்.

உடம்பு, குரல், பாவனைகள் முற்றிலும் மாறிப் போய் இருந்த அவன் தோற்றத்தைக் கண்டு அதிர்ச்சியுற்றவள் கண்களில் நீர் திரள அவனையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

"செரி அதுக்கு ஏங் எங்கூட பேசுல"ன்னு தான கேக்குற "உங்கூடன்னு இல்ல. யார் கூடவுங் நான் பேசுல. அப்டி பேசுனாலுங் அப்நார்மலாத்தாங் பேசுனேங். இப்ப இந்த ஆஸ்பிட்டலுக்கு வந்து சேந்ததுகூட இங்க இருக்கிறவங்க எப்டி இருக்கிறாங்கன்னு தெரிஞ்சிக்கத்தாங். இங்க இருக்கிற எவனும் பைத்தியங் இல்ல. பைத்தியன்னா சினிமால பாக்குற மாதிரி யங்யங்யங்னு கத்துறது, காத்துல கோலம் போட்றது, செவ்த்துல கிறுக்கிறதுன்னுலாங் இல்ல. பைத்தியங்கலாங் இப்போ அப்கிரேடா ஆய்ச்சிபோல. இங்க இருக்கிற முக்காவாசிப் பேருங்க ஒருத்தருக்கொருத்தரு பேசிக்க மாட்டானுங்க. எப்பப் பாரு செல்லு, லேப்டாப்பு கையுமா சுத்தினுகிறானுங்க. அப்டி பேசுனாலுங் காதுல ஹெட்போன் வெச்சிகினு தனியா பேசினுகிறானுங்கோ …

"நீயி கத எழுதணுங்கிறதுக்காக இத்தன பேர கஷ்டப்படுத்தினமோ … ன்னுதான கேக்குற? ன்னா பண்றது அத நெனச்சாதாங் கில்ட்டியா இருக்கு. பட் கத நல்லா வர்ணுமே. வந்துடும்னு நம்பிக்க இருக்கிது. இன்னுங் கொஞ்ச நாள்ல இங்க இருக்கிற பைத்தியங்க பண்றதெல்லாங் நோட் பண்ணிகினு வீட்டுக்கு வன்ட்டன்னா ஆபிஸ் போக ஆரம்பிச்சிடுவேங். அப்புறங் வீட்டுக்கு வந்து டெய்லி ஒரு சாப்ட்டர்னு ஒரே மாசத்துல நாவல் எழுதி முடிச்சுடுவேங்."

அவளுக்கு முதுகுப் பக்கமாகத் திரும்பி சுவரருகே சென்று அதன் எதிரில் நின்று பேசுவதைத் தொடர்ந்தான். “எழுதி முடிச்சதுங் பேஸ்புக் லாகின் பண்ணி கெத்தா ஒரு ஸ்டேட்டஸ் போடுவேங். எப்டின்னு சொல்லு” என்று சடாரென அவள் பக்கம் திரும்பிக் கேட்டான். அவள் எவ்வித அசைவுமின்றி அவனைப் பார்த்தாள். பதில் முக்கியம் இல்லை என்பது போல திரும்பவும் சுவர் பக்கம் திரும்பி அவன் பேசலானான்.

“மக்கள் வணக்கம். உலக விஷயங்களில் அக்கறை காட்டுவதில் சற்று ஓய்வெடுத்துக் கொண்டிருந்ததனால் பேஸ்புக் பக்கம் வர முடியவில்லை. ஆனால் என் ஓய்வு அர்த்தபூர்வமானதென்று நான் நாவல் எழுத ஆரம்பித்திருப்பது தெரிந்த நண்பர்கள் அறிவர். படைப்பூக்கம் அதிகமாகி நாவல் சம்பந்தமாக எனக்கு வேண்டிய தகவல்களுக்காக நான் அசாதாரணமாக நடந்துகொண்டிருந்தால் என்னை மன்னிக்கவும். விரைவில் நாவல் பெயர் மற்றும் எந்தப் பதிப்பகத்தில் கிடைக்கும் என்கிற தகவலையும் தெரிவித்துக்கொள்கிறேன்” மேடையில் பேசுவதுபோலப் பேசிவிட்டு அவள் பக்கம் திரும்பினான்.

அவள் கண்களில் குழப்பம், பயம், இயலாமை ஆகிய உணர்வுகள் கண்ணீர் என்ற ஒற்றை வடிவமாகத் திரண்டு கீழே விழுந்துகொண்டிருந்தது.

இவள் நம்பினாளா? அல்லது நான் தற்போது நடந்துகொண்டிருக்கும் விதம்கூட என் பைத்தியக்காரத்தனத்தின் ஓர் அங்கமென அறிந்து என்னைத் தவறவிட்டுவிட்டோம் என்கிற துயரத்தினால் அழுகிறாளா? எது உண்மையென்று எனக்கே குழப்பமாக இருக்கிறது. எவா! எந்த நிலையிலும் நீ என்னை விட்டுவிடமாட்டாய் என்றால் இப்போது சொன்ன உண்மை கலந்த பொய்யை நீ மன்னிப்பாயா? “எவா சாரி சாரி ன்னா” … என்று அவளருகே குழப்பதுடன் சென்றான். மெத்தையிலிருந்து எழுந்தவள் இரு கைகளையும் விரித்து அவனை வந்து அணைத்துக்கொண்டாள்.

ரூபனைப் பார்த்துவிட்டு வந்ததிலிருந்து இவாஞ்சலின் தெளிவாகக் காணப்பட்டாள். அவன் சொல்லியதை நம்புவது நம்பாலிருப்பது என்கிற நிலைகளிலிருந்து விலகி, அவளுக்குள் ஒரு தீர்க்கம் துலக்கம் பெற்றது. அவளுக்கு ரூபன் குடும்பத்தைப் போய் பார்க்க வேண்டுமெனத் தோன்றியது. சைலேந்தரை அலைபேசியில் அழைத்து விஷயத்தைச் சொன்னாள். அடுத்த நாள் மாலை அவர்கள் செல்லத் திட்டமிட்டிருந்தார்கள். சிந்தாதிரிப்பேட்டை பறக்கும் ரயில் நிலையம் அருகே வந்து அவள் நிற்பதாகவும் அங்கிருந்து இருவரும் செல்லுமாறு செய்துகொண்ட உடன்படிக்கையின்படி அவள் மறுநாள் இரயில் நிலையம் வந்து காத்திருந்தாள். ரயில் நிலையத்தின் அருகே ஒரே இடத்தில் நின்று காத்துக்கொண்டிருப்பது அவளுக்கு நெருடலை உண்டாக்கவே வேடிக்கை பார்த்தவாறு அப்படியே ஒரு நடை நடந்தாள். குறுகலான வளைவுச் சாலையை கடந்து மே தினப் பூங்காவின் மதிற்சுவரையொட்டி நடந்தாள். மைதானம் இரும்புக் கதவினால் மூடப்பட்டிருந்தது. ராட்சத இயந்திரங்களின் உறுமல் சத்தமும் தூசி படந்த காற்றும் அவள் நடையை வேகப்படுத்தின. நடந்துகொண்டே சென்றவளுக்கு எதிர்ப்புறம் சீயோன் ஆலயம் தென்பட்டது. அரண்மனையைப் போன்ற அதன் முகப்பை வியப்புடன் பார்த்து உள்ளே போய் சொற்ப நேரம் உட்கார்ந்துவிட்டு வரலாமென சாலையைக் கடக்க எத்தனித்தாள். இந்தப் பெண் தன்னை நோக்கித்தான் வருகிறாள் என அறிந்த முதியவர் யாசகத்துக்காகத் தன்னுடல் மொழியைத் தயார்ப்படுத்தினார். சைலேந்தர் இவாஞ்சலினைத் தொடர்புகொண்டு அவர் ரயில் நிலையத்தினருகே இருப்பதாகவும் அவள் தற்போது எங்கே இருக்கிறாள் என்பததையும் தெரிந்துகொள்ள விரும்பினார். சாலையை முழுதும் கடந்து பர்ஸைத் திறந்து முதியவர் கையில் ஐந்து ரூபாய் நாணயத்தைக் கொடுத்து ரயில் நிலையம் நோக்கி நடந்தாள்.

சைலேந்தருடன் இருசக்கர வாகனத்தில் பயணிப்பதற்கு இவாஞ்சலின் தயங்கியதால் அவரும் அவளை

வற்புறுத்தாமல் “நடக்குற தூரந்தான். இங்கிருந்து ஒரே ரோடு நடந்தே போலாம்” என அவளின் நிராகரிப்பு தன்னைக் காயப்படுத்தவில்லை என்பதற்கான காரணத்தை வலுப்படுத்தினார்.

வண்டியை ரயில் நிலைய வளாகத்தினுள் நிறுத்திவிட்டு இருவரும் ரூபன் வீடு இருக்கும் ராமர் தோட்டத்தை நோக்கி நடந்தனர்.

காலையில் ரெஜினாவுடன் நடத்திய உரையாடலில் அவள் எடுத்த முடிவில் குணசீலன் கொதித்துப் போய் இருந்தார். அவளின் செய்கைகளுக்கு ஒரு முடிவு கட்டவேண்டுமென நினைத்தவர் அதை நடைமுறைப்படுத்த மது தைரியம் கொடுக்குமென நம்பி நீண்ட நாட்களுக்குப் பிறகு ஒயின்ஷாப்புக்குச் சென்றார். வாசலிலேயே நின்றிருந்த ஆமோஸ், குணசீலன் உள்ளே நுழைவதைப் பார்த்து “ப்போவ் நீன்னா இந்தப் பக்கங்?” என்றான். அவர் அவனுக்கு பதில் ஏதும் சொல்லாமல் உள்ளே நுழைய ஆமோஸ் அவர் பின்னாலேயே சென்றான் …

“எப்போவ், ன்னா சருக்கு அடிக்கவா வந்துகிற?” என்று அவரை நெருங்கிக் கேட்டான். அவர் உட்கார்ந்து குடிப்பதற்கு மேசையைத் தேடிக்கொண்டிருந்தார். நேரம் பார்த்து இரண்டு பேர் எழுந்து போனதும் ஆமோஸ் “ஏ பய்யா” என்று குரல் கொடுத்து மேசையைச் சுட்டிக் காட்டினான். வட இந்தியச் சிறுவன் அழுக்குத் துணியுடன் வேகமாக நடந்து வந்து மேசையை வழித்தான்.

குணசீலன் அங்கே உட்கார்ந்தார். ஆமோஸ் எதிர் நாற்காலியில் உட்கார்ந்தான்.

“ன்னாபா திடீர்னு குடிக்க வன்ட்ட்டுகிற?”

“ஒன்னும் இல்லடா.”

“காசு காட்டு நா சரக்கு வாங்கினு வரேங்” என்று அவர்முன் கை நீட்டினான்.

குணசீலனுக்கு அவன் மீது நம்பிக்கை இல்லை. அவர் நாசூக்காக அதை வெளிப்படுத்தினார் “இருக்கட்டுன்டா. நீயேங் போற? பைன வர சொல்லு” என்றார்.

ஆமோஸ் எதற்காக இப்படி பேச்சுக் கொடுக்கிறான் என்பதை உணர்ந்த குணசீலன் அவனை எந்த வகையிலும் திருப்தி செய்யவில்லை என்றால் ஏடாகூடம் செய்வானென அவனுக்கும் சேர்த்தே மதுவை வாங்கி வரச் சொன்னார்.

இருவரும் சேர்ந்தே குடித்தார்கள். அவர் எப்போதும் குடிக்கும் 'ஓல்ட் மங்க்' புழக்கத்திலில்லை என்பதால் அரை மனதுடனேயே புதுச்சரக்கின் முதல் மிடறைச் சுவைத்தார். உடல் சற்றுச் சிலிர்த்தது அவருக்கு.

"மீன் எதுனா சொல்லுடா" என்றார் ஆமோஸிடம்.

"அய்ய கம்னு இருப்பா. ஒயின் ஷாப்ல வந்து மீனு கீனுனு கேட்னுகிற. தெவ்டியா புள்ளிங்கோ நம்ம சிந்தார்பேட்ட மார்கெட்ல கீல கொட்ற மீனுங்கள கம்மி வெலிக்கு வாங்கினு வந்து மசாலா தடவி விக்கிறானுங்கோ. வாணா சாப்டாதா. இந்தா இத சாப்டு என்று தன் பேன்ட் பாக்கேட்டிலிருந்து "கிசான் ஜாம்" பாக்கெட்டை எடுத்து அவரிடம் நீட்டினான்.

"ன்னாடா இது"

"ஜாமுப்பா … சூப்பரா இருக்குங் சாப்டு" என்று மெல்லிதாகச் சிரித்தான்.

"வாணா வாணா காரமா எதுனா இருந்தா சொல்லு" என்றார்.

ஆமோஸ் எழுந்து வாங்கிவரப் போனான்.

நெடுநாட்களாக சைடிஷ் இல்லாமலே குடித்து வந்தவர் குணசீலன். பழக்கம் விட்டுப்போனதால் குமட்டலைச் சமாளிக்க முடியாது என்றெண்ணிக் காத்திருந்தார். ஒரு மிடறைச் சுவைத்த சுகம் அவரின் காத்திருப்பை உடைத்தது. கைகள் உதறக் கோப்பையில் வைத்த வாயை எடுக்காமல் விறுவிறுவென்று குடித்ததும் வாந்தி வருவது போலவும் அதை அடக்குவது போலவும் செய்து அதில் வெற்றியும் கண்டவர் தலையை மெல்லமாக சிலுப்பிச் சிலுப்பினார்.

ஆமோஸ் சிறிய கிண்ணத்தில் முட்டை மசாலா கொண்டு வந்து குணசீலனிடம் கொடுத்தான். அவர் காலி செய்திருந்த கோப்பையைக் கவனித்து 'ன்னாபா'

என்றான். அவர் அவனைப் பொருட்படுத்தாமல் பாதி முட்டையை எடுத்து வாயில் போட்டுக் கண்களை மூடிச் சுவைத்தார்.

அதிக நேரம் எடுத்துக்கொள்ளாமல் அடுத்த சுற்றுக்கான மதுவை ஊற்றச் சொன்னதோடு தண்ணீரைக் குறைவாகக் கலக்கச் சொன்னார்.

“பழய கைனா பழயகைதாம்பா” என்றான் ஆமோஸ்.

அவருக்கு ஊற்றிக் கொடுத்த கையோடு ஆமோஸ் தன்னுடைய பங்கின் முதல்பாகத்தை குடித்து கிஸான் ஜாம் பாக்கெட்டை வாயருகே கொண்டுபோய் அதைப் பிதுக்கிச் சுவைத்தான்.

காலையில் நடந்த சம்பவத்துக்குள் ஆழ்ந்தார் குணசீலன். அவருடைய சிந்தனையில் குறுக்கிட்டு மௌனத்தைக் கலைத்தான் ஆமோஸ்.

“ன்னா ரூபனு எப்டிகிது? வீட்டுக் கூட்னு வன்ட்டிங்ளா?”

குணசீலன் சத்தம் வராமல் ஏப்பம் விட்டார். அந்த ஏப்பத்திலிருந்து ஏதேனும் வாசனை வருகிறதாவென நுட்பமாக முகர்ந்தார்.

“எப்போவ் உன்னதாங் கேக்குறேங்” என்றவனிடம் “ங்கோத்தா எங்கடா அவன வுடுறாளுங்கோ ட்ரீட்மென்ட் போய்னுகிது … எங் சம்சாரங் ன்னாடானா யாரோ தூத்துக்குடிலந்து பெரிய பாஸ்டர் யாரோ வரானாங். நாளிக்கு அந்த ஆஸ்பத்திரிலந்து சைனப் போட்டு ரூபன கூட்னு வர போறேன்னு சொல்லினுகிறா … ங்கொம்மால இப்போ போய்தாங் அவுளுக்கிருக்குது குடிகிடிலாங் வானான்னு டீசன்டா இர்ந்தா ங்கோத்தா நம்ளுக்கே சீன் போட்னுகிறாளுங்கோ …” என்றவர் கோப்பையிலிருந்த மதுவை விறுவிறுவெனக் குடித்துவிட்டு “ங்கோத்தா இந்த பாஸ்டருங்களையும் சூத்த கீக்கனுன்டா ஆமோசு … அவனுங்களாலதா இவ்ளுங்கோ கெட்டுப் போறாளுங்கோ” என்றார்.

இந்த சந்திப்பில் சரியாகத் தனக்கு வேண்டிய இடத்தில் இவன் பெயரைச் சொல்லிக் குறிப்பிட்டது அவனுடைய உதவியை நாடும் பொருட்டு இருந்தது.

யாராவது கொஞ்சம் உசிப்பிவிட்டாலே ஆமோஸ் அதிகம் உணர்ச்சிவயப்படுவான். பின்விளைவுகளைப் பற்றி யோசிக்காமல் அந்த நேரத்தில் தன்னுடன் யார் சிநேகிதமாக இருக்கிறார்களோ அவர்களுக்கு ஒரு துன்பம் என்றால் பிரச்சினையைத் தானும் உடன் அனுபவிப்பதுபோல நினைத்துத் தன்னை ஈடுபடுத்திக்கொள்வான். இப்போ குஸ்ட்டுப் போய் ரெஜினாவ அடிக்கணுன்டா வாடா என்று குணசீலன் அழைத்திருந்தால்கூட யோசனையின்றி அவள் மீது வெறுப்பைச் சுமக்க ஆரம்பித்து சம்பந்தப்பட்டவருக்கு உறுதுணையாக இருப்பான்.

இந்த இடத்தில் குணசீலன் தம் மனைவியின் மீது காட்டும் வெறுப்பை தன்னுடைய பிரச்சினையைப் போல ஆவேசப்பட்டவர், ஏரியாவில் போதகர்கள் மீது இருக்கும் வெறுப்பைத் தீர்த்துக்கொள்வதற்கு ஆமோஸின் பெயரை அழைத்து அவனை நெருக்கப்படுத்தினார். இதையெல்லாம் அவர் திட்டமிட்டுச் செய்யவில்லை. ஆமோஸ் இல்லையென்றால் தனியாகத்தான் குடித்து வீடுபோய் சேர்ந்து ரகளை செய்திருப்பார். அவனைப் பார்த்ததும் தனக்கிருக்கும் நீண்டநாள் ஆதங்கத்தைத் தீர்த்துக்கொள்ள வழிதேடினார்.

அவர் நினைத்தது நடந்தது, ஆமோஸ் சொன்னான் “எப்போவ் ங்கோத்தா எனுக்கே காண்டாதாங் இருக்குது … ங்கோத்தா தெருவுக்குத் தெரு சபை வெச்சுகினு ஓல்ஓல்னு கத்தினுகிறானுங்கோ” என்றான்.

இப்போது அவனை ஒருமுகப்படுத்தும் விதமாக யாரைத் தாக்க வேண்டுமெனத் தெளிவுபடுத்தினார்.

“மொதுல்ல இங்க சப வெச்சானுங்க பார் நம்ம அஞ்சாவது சந்தாண்ட. அவனுங்கள கீச்சா கரெக்ட்டா இருக்குங்” என்று ஆமோஸ் முகத்தைப் பார்த்தார்.

அவன் தன் பங்கின் மீதியைத் தண்ணிர் கலக்காமல் அப்படியே கோப்பையில் ஊற்றி அதை குடிக்கப் போக, “டேய் டேய்” என்று குணசீலன் கொடுத்த குரலைப் பொருட்படுத்தாது குடித்துவிட்டு கிஸான் ஜாமைச் சுவைத்தான்.

அதாவது அவன் ரொம்பவும் கோவமாக இருக்கிறானாம். கோப்பையை வெறியுடன் கசக்கிக் கீழே எறிந்து தன் கோபத்தை நியாயப்படுத்தினான்.

“எப்போவ், எங்கப்பா அவனுங்களால தாம்பா செத்தாரு.. ஒடும்பு செரில்லனு வீட்ல பத்துந்த மன்சன சாட்சி சொல்லவா வா இதியா வா இதியானு கூப்டுதாலதாம்பா என்ன வண்டில ஒக்கார வெச்சிகினு கெளம்புனாரு. இவனுங்காளதாங் எங்கப்பங் செத்தாங் … ன்னொரு கோட்ரு சொல்டாபா ஆளுக்கு பாதி சாப்புல்லாங்” என்றான்.

குணசீலன் சரி என்கிற விதமாகத் தலையாட்டினார். நகோமியம்மாவின் பென்ஷன் பணத்திலிருந்து ஆயிரம் ரூபாய் மருந்து வாங்க வேண்டுமெனக் கேட்டு வாங்கிக் கொண்டுவந்திருந்த ஒற்றைத் தாள் இருக்கிறாதாவெனச் சட்டைப் பையில் பார்த்தார். பணம் இருந்ததைப் பார்த்ததும் அதை எடுத்து அவனிடம் கொடுக்க நிமிர்ந்தால். எதிரே ஆமோஸ் இல்லை.

ஆமோஸ்க்கு அந்த ஒயின்ஷாப்பில் செல்வாக்கு இருந்ததால் பரிவர்த்தனைகள் தொழில்முறையாகவெல்லாம் நடக்கவில்லை. “குடு துட்டுத் தரேங் துட்டுத் தரேங்” என்று வாங்கி வந்துவிடுவான். “இவங்கிட்ட எதுக்குப் பிரச்சன பைத்தியக்காரக் கூதி” என்று இவனைப் பொருட்படுத்த மாட்டர்கள். கோபம் வந்தால் அடுத்தவரை காயப்படுத்துவான் என்பது மட்டுமின்றி தன்னைத்தானே அறுத்துக்கொண்ட வரலாறுகளும் இருக்கின்றன. அவனுடைய கையில் இருக்கும் கத்திச் சிராய்ப்புகள் அவன் தனக்குத்தானே போட்டுக்கொண்டது.

“எப்போவ், இந்தா” என்று குவார்ட்டர் பாட்டிலை அவரிடம் கொடுத்தவன், “நா நெய்ன்ட்டியா ஒரே கல்ப்புல சாப்ட்டுடுவெங் நீ ரெண்டு சிக்ஸ்டியா பொறுமையா அடி ன்னா” என்றவன் அவரை மேலும் ஆற்றுப்படுத்தும் விதமாக “இப்போ ஸ்டெய்ட்டா அந்த சபையாண்டா போயிட்டுகொள்ளக் கேக்லாங். ங்கோத்தா இனிமேல்ட்டு நம்ம ஏரியால ஒரு சப இருக்கக் கூடாது.”

“ஆமாண்டா” என்று கனன்றார் குணசீலன்.

திட்டமிட்டபடி குடித்து முடித்தார்கள். கடையிலிருந்து வெளியே வந்ததும் பின்மாலை வெயில் முகத்தில் அடித்தது. குணசீலன் எச்சிலைத் திரட்டித் திரட்டிக் கீழே துப்பிக்கொண்டிருந்தார்.

"ன்னாபா எதுனா சோடா கீடா வாங்கினு வர்ட்டா?" என்றான் ஆமோஸ்.

குணசீலன் மதுவருந்திவிட்டால் இந்த மாதிரி எச்சில் துப்பிக் கொண்டே இருப்பது எப்போதும் செய்கிற பழக்கம்தான். அதைப் பற்றிய பரிச்சயம் இல்லாததால் ஆமோஸ் அவர் மீது கரிசனம் கொண்டான்.

குணசீலனுக்குப் போதை ஏறியது. நெற்றியில் வியர்வை சுரக்க ஆரம்பித்தது. அவர் ஆமோஸிடம் சொன்னார், "ஆமோசு, பாஸ்டர் பேச்ச கேட்னு எம் புள்ளியே நாளிக்கு இவ்ளுங்கோ அங்கந்து கூட்னு வர ப்ளான் போட்டுகிறாளுங்கடா … ங்கொம்மால" என்று பற்களைக் கடித்தார்.

அவர் சந்தோஷப்படும் அளவுக்கு அவருக்கு சாதகமாக ஆமோஸுக்கு அந்த கணம் கோபப்பட வரவில்லை. "இருப்பா இருப்பா" என்றவன் அவர் தோள்களைப் பற்றிச் சாலையைக் கடந்தான். இருவரும் சாலையின் மறுபுறம் வந்ததும் அவரை அங்கேயே நிற்கச் சொல்லிவிட்டு பக்கத்திலுள்ள ஹார்ட்வேர் கடையில் பழைய குழாய் இருக்கிறாதவென கேட்டான். அவர்கள் இல்லை எனச் சொன்னதும் வாக்குவாதம் செய்து கடையினுள்ளே புகுந்து ஒரு இரும்புக் குழாயை எடுத்து வந்து குணசீலனிடம் காட்டி "எப்போவ் ங்கொம்மால அந்த பாஸ்டர் மண்டைய பொளக்குரேங் பார்" என்றான். தன் அப்பாவைக் கொன்றது தொழில் எதிரியான பூபலான் என்று அவர் மீது அவனுக்கிருந்த வெறி அவர் மண்டையை காயப்படுத்தியதிலிருந்து தணிந்த நிலையில் இப்போது அந்த வெறி சபைகளின் மீது திரும்பியது. குறிப்பாக பாஸ்டரய்யா ராமர் தோட்டத்தில் முதன்முதலில் ஆரம்பித்த இயேசு கிறிஸ்துவின் கிருபையின் சுவிசேஷ ஜெப வீட்டீன் மீது அவன் வெறி நிலைகொண்டது. அதைத் தூண்டிவிட்ட குணசீலனுக்கும் இது ஒருவகையில் ஆறுதலாக இருந்தது. அந்த ஆறுதலை ஆவேசமாக மாற்றி, "த்தா அவ்னுங்ள வுடக் கூடாதுடா"

என்ற குணசீலனை இளநீர் ஓட்டுத்துண்டு காலில் இடறியதில் அவர் தடுமாற ஆமோஸ் அவர் கையைப் பிடித்து ராமர் தோட்டம் நோக்கி நடந்தான்.

ரூபன் காப்பகத்தில் சேர்க்கப்பட்ட நாளிலிருந்து அவன் குணமடைய வேண்டுமென ரெஜினா மேற்கொண்ட இறைப்பணி நாளுக்கு நாள் தீவிரமடைந்துகொண்டே வந்தது. தினமும் நான்கு மணிக்கு எழுந்து அதிகாலை ஜெபம் செய்ய ஆரம்பிப்பவள் விடியும்வரை முழங்காலிட்டு அழுதுகொண்டும் முணுமுணுத்துக் கொண்டும் இருப்பாள். காலையிலிருந்து மாலை வரை வெறும் நீராகார உபவாசம் மட்டும் இருந்து பகல் நேரங்களில் ஜெபித்தும் ஸ்தோத்திர பலிகளை வாசித்துக்கொண்டும் இருப்பாள். இரண்டு மூன்று முறை போதகர்கள் சிலரை ரூபன் இருக்கும் காப்பகத்துக்கு அழைத்துப் போய் தோல்வி முகத்துடன் திரும்பி வந்தவளுக்குத் தங்களை உள்ளே விடாத அவர்களின் நிராகரிப்பு வெறுப்பாக மாறித் தன் பிள்ளையை ஜெபத்தின் மூலமாகவே மீட்டெடுப்பேன் என்று தனக்குத்தானே சபதம் செய்தவள் ஒரு கட்டத்தில் அதை நகோமியம்மாவிடமும் குணசீலனிடமும் சொல்ல ஆரம்பித்தாள். இருவருக்கும் அவளுடன் உடன்பாடில்லை. அவள் இவர்களைப் பொருட்படுத்தவும் இல்லை. தூத்துக்குடியிலிருந்து பெரிய போதகர் ஒருவர் செயின்ட் ஜார்ஜ் பள்ளிக்கு நற்செய்திப் பெருவிழா நடத்த வருவதாகவும் இடிமுழக்கம் எபினேசர் தன் செல்வாக்கைப் பயன்படுத்தி அவரைத் தன் சபைக்குக் கூட்டி வருவதாகவும் அங்கே ரூபனை அழைத்து வந்தால் அவர் அவனைத் தொடுகிற மறு நொடியே அவனுக்குள் இருக்கிற அசுத்த ஆவி வெளியேறி அவன் மறு ரூபமாக்கப்படுவான் என்றும் அவர் சொன்னதைக் கேட்டு அவள் முடிவுக்கு வந்தாள். ரெஜினாவை அணுகி இந்த உதவியைச் செய்வதன் மூலம் தன்னைப் பற்றி அவளுக்குத் தெரிந்த ஒரு சில விஷயங்களில் எப்போதும் மௌனம் காப்பாள் என்று இடிமுழக்கம் எண்ணினார். இடிமுழக்கம் வீட்டுக்கு வந்து போனதிலிருந்து குணசீலன் சினங்கொண்டவராய் மாறி ரெஜினாவிடம் சண்டை பிடித்தார். நகோமியம்மா இருவரையும் சமாதனப்படுத்தி சோர்ந்துபோயிருந்தாள்.

சைலேந்தரும் இவாஞ்சலினும் ராமர் தோட்டத்தினுள் நுழைந்து ஹவுசிங் போர்டு ஏரியாவுக்குள் வந்தனர். இதுவரை பார்க்காத சென்னையின் முகம் இவாஞ்சலினுக்கு சுவாரசியமாக இருந்தது. பழுப்பேறிப் போயிருந்த ஹவ்சிங் போர்டு வீடுகளைப் பார்த்து “ரூபன் வீடு இதுமாதிரிதானே? போட்டோல பாத்துருக்கேன்” என்றாள் சைலேந்தரிடம். “ஆமாங்க” என்றவர் “இந்த ஹவுசிங் போர்டு வீடுலாம் ரொம்ப பழசா ஆய்டுச்சு இதெல்லாம் இந்த வருஷத்துக்குள்ள இடிச்சுட்டு கார் பார்க்கிங்கோட இங்கயே வீடு கட்டித் தரப்போறதா ரூபன் எங்கிட்ட சொன்னான்” என்றார்.

இவாஞ்சலினின் ஒவ்வொரு சொல்லுக்கும் பதிலாக ஒரு தகவல் களஞ்சியமாக செயல்படுவதில் சைலேந்தர்க்கு உள்ளுக்குள் ஒரு கதகதப்பு இருந்தது. அதே சமயம் அது ஒவ்வொன்றிலும் அவர் ரூபனை தொடர்புப்படுத்துவதால் தான் எந்தத் தவறையும் செய்யவில்லை என்கிற உணர்வும் அவரை இலகுப்படுத்தியது. “தோ இந்த பில்டிங்தான் ரூபன் வீடு” என்று கட்டிடத்தின் வாசலில் நின்று அதைக் காட்டி விட்டு இவாஞ்சலினை உள்ளே அழைத்துச் சென்றார். படிக்கெட்டிலிருந்து காலிக் குடங்களுடன் வேகவேகமாக இறங்கி வந்த ஒருவர் இவாஞ்சலினைப் பார்த்ததும் “யார் வீடு?” எனச் சற்று நின்று கேட்டார். இவாஞ்சலின் ஏதோ அசம்பாவிதத்தில் மாட்டிக் கொண்டது போலவும் அவளை உடனே அதிலிருந்து மீட்டெடுப்பது போலவும் துரிதமாகச் செயல்பட்ட சைலேந்தர் யார் வீடு எனக் கேட்ட மனிதருக்குத் தானே பதில் சொல்லி இவாஞ்சலினை மேலே அழைத்துச் சென்றார்.

ரூபன் வீட்டு வாசலில் நின்று தாழ்ப்பாளைத் திருகி கதவோடு உராயச் செய்து சத்தம் கொடுத்தவாறே “அம்மா” என்றார் சைலேந்தர். வாசலின் தலையில் ‘வாதை உன் கூடாரத்தை அணுகாது’ என்று எழுதப்பட்ட வசனத்தின் மீது இவாஞ்சலினின் கண் இருந்தது.

இன்னொரு முறை சைலேந்தர் அதேபோலச் செய்து “அம்மா” என்றார். எதிர் வீட்டுப் பெண்மணி “நகோமி ஆ … யா யாரோ வந்துகிறாங்க பாரு” என்று குரலெடுத்தாள். உள்ளே படுத்திருந்த நகோமியம்மா “எம்ன ஓத்துது எப்டி

கத்துது பாரு'' என்று திட்டிக்கொண்டு மெல்ல எழுந்தாள். எழும்போது யே ...சப்பா என்று பெருமூச்செறிந்தாள்.

அவள் கதவைத் திறந்ததும் இவாஞ்சலின் நகோமியம்மாவைப் பார்த்து, ''தோத்திரம் பாட்டி'' என்றாள். இதைச் செய்ய வேண்டுமென ஏற்கனவே யோசித்து வைத்திருந்தாள் இவாஞ்சலின்.

''ஸ்தோத்திரம்மா ... ஆண்டவர் ஆசிர்வதிக்கட்டுங். யாரும்மா?'' என்றவள் சைலேந்தரைப் பார்த்ததும் ''வா எப்பா உள்ள'' என்று கதவை முழுசாகத் திறந்தாள். இருவரும் உள்ளே நுழைந்தார்கள். டிவியின் எதிரே அமர்ந்து நெடுமுழங்காலிட்டு ஒருகையை மேலே உயர்த்தி 'ஆசிர்வாதம்' சேனலில் ஜெபம் செய்துகொண்டிருந்த போதகருடன் ரெஜினாவும் சேர்ந்து ஒருமனப்பட்டு ஜெபம் செய்த காட்சியை இருவரும் வியப்புடன் பார்த்தார்கள். வீட்டுக்குள் மனிதர்கள் நுழைந்த சத்தம்கூட ரெஜினாவை அசைக்கவில்லை அவள் தேவனுடன் பேசிக்கொண்டிருந்தாள். தொலைக்காட்சியில் ஜெபம் செய்யும் போதகர் ஒவ்வொருவரையும் பெயர் சொல்லி அழைத்து ஜெபிக்கிறார். ஆக்கினைக்கு உண்டான தன் பிள்ளையின் பெயர் அல்லது தன் பெயராவது வர வேண்டுமென மனதுருக்கமாய் மன்றாடினாள். அந்நிய பாஷையில் பேசினாள்.

இவர்கள் வந்ததன் மூலம் அவளை ஜெபத்திலிருந்து விடுவிக்கக் கிடைத்த வாய்ப்பை சிறிய ஆசுவாசத்துடன் நகோமியம்மா பயன்படுத்தத் துணிந்தவளாய், ''ரெஜினா ... இங்க பாரு ரூபனு ப்ரெண்டுங்க வந்துகிறாங்க பாரு'' என்றாள். ரெஜினா உடனே கண்களைத் திறக்கவில்லை. மேலே உயர்த்திய கையை 'வரேங் வரேங்' என்பதுபோல் ஜாடை காண்பித்து ஜெபத்தைத் தொடர்ந்தாள்.

நகோமியம்மா அவர்களிருவரையும் நாற்காலியில் உட்கார வைத்து சைலேந்தரைத் தொட்டுச் சத்தமின்றி வாயசைத்து ''இது யார்ப்பா? இப்பதாங் பாக்குறேங். கூட வேல செய்றவங்களா?'' என்றாள் இவாஞ்சலினைப் பார்த்து.

சைலேந்தரும் நகோமியம்மாவைப் போலப் பேச முயற்சி செய்தார். சரிவராமல் தொண்டை அடைப்பைச் சரிப்படுத்தி குரல் வெளியில் கேட்கும் விதமாகவே சொன்னார் ‘‘பாட்டி, நான் அன்னைக்கு வந்து சொன்னேன்ல அந்த நர்ஸ். ரூபன் கட்டிக்கிறதா இருக்கிற பொண்ணு இவங்கதான்’’ என்று அவர் சொன்னதும் நகோமியம்மா ஏதோ இழவுச் செய்தியைக் கேட்டதுபோல அய்யோ என்று மார்பில் மெல்லமாக அறைந்து, இவாஞ்சலினின் கைகளை இறுகப் பிடித்து அவளையே கொஞ்ச நேரம் பார்த்தாள். ‘‘எம்மா எங் ராஜாத்தி’’ என்றாள். இவாஞ்சலினின் கன்னங்களைத் தடவித் திரும்பவும் அவள் கைகளைப் பற்றி, ‘‘எம்மா பேரன உட்றாதம்மா’’ என நகோமியம்மா சொன்னபோது அவள் கண்களில் நீர் திரண்டிருந்தது. பிரசங்கம் முடிந்ததும் தொலைக்காட்சிப் பெட்டியை அணைத்துவிட்டு வாய்க்கு நீண்ட நேரம் வேலை கொடுத்திருந்ததால் அதன் இரு முனைகளிலும் கெட்டிப்போயிருந்த எச்சிலை நாவினால் அப்புறப்படுத்தித் தலை முக்காட்டை எடுத்து வந்திருப்பவர்களைப் பார்த்தாள் ரெஜினா.

நாற்காலியிலிருந்த இவாஞ்சலின் எழுந்து ரெஜினாவைப் பார்த்து, ‘‘தோத்திரம் ஆன்ட்டி’’ என்றாள். அவளும் பதிலுக்கு ‘‘ஸ்தோத்திரம்மா’’ என்றாள்.

நகோமியம்மா மூக்கை உறிஞ்சிக்கொண்டு ரெஜினாவிடம் சொன்னாள் ‘‘ஏ ரெஜினா … தெபேர்டி நம்ம புள்ள பேச்சுவார்த்தயா இர்ந்தானமே அந்தப் பொண்ணு இதானாங்’’ என்றாள்.

இவாஞ்சலினும் ரெஜினாவும் ஒருவருக்கொருவர் அர்த்தமுறப் பார்த்துக்கொண்டாலும் எவ்வாறு எதிர்வினை ஆற்றுவதென தெரியாமல் மௌனமாக நின்றிருந்தனர். ‘‘உக்காருமா’’ என்றாள் ரெஜினா. இவாஞ்சலினை ரெஜினா ஆழமாக ஊடுருவிப் பார்த்ததால் அவள் நாணமுற்றாள். அவ்விடத்தில் மௌனம் நிலவியது.

‘‘எம்மா கூல்ட்ரிங்க்ஸ் வாங்க்கினு வர்ட்டா?’’

‘‘வேணாம் பாட்டி. அதுலாம் குடிக்க மாட்டேங்.’’

“செரி ராகிமால்ட் குடிக்கிறியா?”

ராகி மால்ட் என்றால் என்னவென்று கண நேரம் யோசித்த இவாஞ்சலினின் சிந்தனையை அவள் கொடுத்த சம்மதம் என நினைத்துக்கொண்டு “இரு வாங்கினு வரேங்” என்று புறப்பட்ட நகோமியம்மாவை … “எதும் வேணாம் பாட்டி” என்று சொன்னவளின் சொல் தடுக்கவில்லை. சமையற்கட்டிலுள்ள சொம்பை எடுத்துப் புறப்பட்டுச் சென்றாள் நகோமியம்மா.

“எப்பா நானே உனுக்கு போன் பண்லான்னு நெனச்சேன்பா” என்று ரெஜினா சைலேந்தரைப் பார்த்துச் சொன்னதும் தனக்கு இந்த வீட்டில் இருக்கும் முக்கியத்துவம் இவாஞ்சலின் முன்பு தெரியவந்தது அவருக்கு ஆறுதலாக இருந்தது.

“சொல்லுங்கமா.”

“ஒன்னுங் இல்லப்பா. என்ன அந்த ஹோமுக்கு கூட்னு போயேங்.”

“ஏம்மா?”

“ரூபன அங்கந்து கூட்னு வந்துல்லான்னு இருக்கிறேங்.”

“என்னமா என்ன ஆச்சு … அவனுக்கு ட்ரீட்மென்ட் போய்ட்டு இருக்கு.”

“அவுங்லாளங் அவன குணப்படுத்த முடியாதுபா. தூத்துக்குடில இருந்து பெரிய பாஸ்டர் ஒருத்தரு வராரு. இந்த வாரம் சனிக்கிழம சேட்பட் ஜார்ஜ் ஸ்கூல்ல அவரோட சுவிசேஷக் கூட்டங். அது முடிஞ்ச ஒடனே எங் பாஸ்டரய்யா தனியா டைம் வாங்கித் தரேன்னு சொல்லிகிறாரு. செரி ஆய்டுவாங்பா ரூபனு. அந்த ஹாஸ்பிட்டல்லாங் வேணாம்பா” என்றாள்.

“இல்லம்மா அவசரப்படாதீங்க. அவன் செரி ஆய்ட்டு வரான்மா” என்ற சைலேந்தரை “ஆமா ஆன்ட்டி” என்று இவாஞ்சலின் வழிமொழிந்தாள்.

“எம்மா நீ இரட்சிக்கப்பட்ட பொண்ணுதான? கர்த்தர மீறி ன்னாமா நடந்துட போவுது. இவ்னுங்ககிட்ட வுட்டா எவ்ளோ நாளூ எம்புள்ளியே அங்க வெச்சினு இருப்பானுங்களோ?”

“கொஞ்ச நாள்ல வீட்டுக்கு வந்துடுவாங்க ஆன்ட்டி. அப்டியே எவ்ளோ நாள் ஆனாலும் அவங்களுக்காக நா வெய்ட் பண்ணுவேன் ஆன்ட்டி. நீங்க எதுக்கும் கவலைப்படாதீங்க” - தான் எதைச் சொல்ல வந்தோமோ அதைச் சொல்லிவிட்டதால் அவளுக்குள் ஓர் ஆசுவாசம் ஏற்பட்டாலும் ரெஜினா அதற்கு என்ன சொல்லப்போகிறாள் என்கிற கலக்கம் இவாஞ்சலினிடம் இருக்கவே செய்தது.

“எம்மா, எம் புள்ளியே நா எவ்ளோ ஆச கனவுகளோட வளத்தேன்மா. அவங் பெரிய ஊழியக்காரனா, ஆண்டவருக்கு முன்னாடி பெரிய சாட்சியா வருவான்னு பைபிள் வசனங்கள சொல்லி சொல்லி வள்த்தேம்மா. அவங் தேவனுக்கு ஒப்புக் கொடுக்கப்பட்ட புள்ள. சேராதவனுங்ககூட சேந்துகினு ஆண்டவர மறுதலிச்சு அந்தி கிறிஸ்துவா வாழ ஆரம்பிச்சவன ஆண்டவர் தொட்டதால வந்த வெனதாங் இது. இத ஆண்டவரேதாங் சொஸ்தப்படுத்த முடியுங். உனுக்கு தெரியாதுமா” என்றாள்.

அடுத்துப் பேச வாயெடுத்த சைலேந்தரை அவர் துவங்குவதற்கு முன் ரெஜினா சொன்னாள், “எப்பா என்ன நாளிக்கே அங்க கூட்னுபோ சைன் போட்டு எம் புள்ளியே கூட்னு வந்துட்றேங்.” இவாஞ்சலின் பதற்றமாக உணர்ந்தாள்.

ராகி மால்ட் ஆறிப்போகாமல் இருக்க சொம்பின் வாயில் ஒரு காகிதத்தை வைத்து மூடி, சொம்பை ஒரு கையிலும், ஒரு கையில் ‘குட் டே’ பிஸ்கட் பாக்கெட்டும் வாங்கி நகோமியம்மா நடந்து வந்தாள். சந்துக்குள் நுழைகிறபோது தெருமுனையில் நின்றுகொண்டிருந்த மரடோனாவைப் பார்த்து நகோமியம்மா கேட்டாள், “ன்னா அருவாமன சூத்தா” எங்க கௌம்பிட்டு நின்னுனுகிற?”

“தேபேர் ஆயா, ன்னொரு வாட்டி அப்டி கூப்ட அவுள்தான் உன்ன” என்றான்.

மரடோனாவுக்கு அந்த வருடந்தான் கல்லூரிப் படிப்பு முடித்து ரூபனைப் போலவே பன்னாட்டு நிறுவனத்தில் வேலை கிடைத்தது. தன்னை அழைத்துப் போகும்

அலுவலக வண்டிக்காக அவன் காத்திருந்த வேளையில்தான் நகோமியம்மா அவனைக் கூப்பிட்டாள். மரடோனாவுக்கு அருவாமண சூத்தன் என்று பெயர் வைத்தது நகோமியம்மாதான். சிறு வயதில் மரடோனா எந்த டவுசர் பேன்ட் அணிந்தாலும் அதை ஓரிரு நாட்களில் கிழித்துவிடுகிறானென்று மரடோனாவின் தாய் நகோமியம்மாவிடம் குறைபட்டுக்கொண்டதும் “அருவாமன சூத்தன்டி இவங்” என்று மரடோனாவைச் சொல்ல ஆரம்பித்து அவனை அப்படியே பேர் சொல்லி அழைக்க ஆரம்பித்தாள். நகோமியம்மா வைத்த பெயர் ராமர் தோட்டம் முழுக்கப் பரவி மரடோனாவை எல்லோரும் அருவாமன சூத்தா என்று அழைக்க ஆரம்பித்து நாளடைவில் மருவி அருவாமன என்றே அவன் அழைக்கப்பட்டான். அஜித் திரைப்படங்கள் வருகிற சமயத்தில் வைக்கப்படும் பேனர்களில்கூட அருவாமன என்கிற மரடோனா என்றே அவன் பெயர் குறிப்பிடப்பட்டு இருந்தது. தன் அபிமான கால்பந்து வீரரின் பெயரைப் பிள்ளைக்குச் சூட்டி அழகு பார்த்த மரடோனாவின் அப்பா வெங்கடேசனின் ஆசையை வெகு சீக்கிரத்திலேயே நகோமியம்மா தகர்த்தெறிந்தாள். இதனால் வெங்கடேசன் நகோமியம்மாவிடம் நிறையமுறை சண்டை போட்ட கதைகள்கூட இருக்கிறது.

மரடோனா பயணம் செய்ய வேண்டிய கார் வந்து அவனருகில் நின்றது. அவன் ஏறுவதற்குத் தயாரான போது நகோமியம்மா அவனைப் பார்த்துக் கேட்டாள், “ன்னாடா கார்லியா வேலிக்கு கூட்னு போறானுங்கோ?”

“ஆமாயா ரூபன் அண்ணா மாதிரி.”

“ஆங் தோ போ. எங்க ரூபன எவ்ளோ பெரிய கார் வந்து கூட்னு போவும். இதுன்னா தம்தூண்டுகிதே” என்று அலுத்துக்கொண்ட நகோமியம்மாவை மரடோனா புன்னகையுடன் கடந்து காரில் ஏறி வேலைக்குச் சென்றான்.

நகோமியம்மா ஹவுசிங் போர்டில் நுழைந்து படியேறி முதல் மாடியின் வளைவைக் கடைக்கையில் கீழிருந்து குரல் வந்தது “நகோமி ஆயா, குண்சீலப்பா இந்த ஆமோஸ் பையங்கூட சேந்துகினு சபையாண்ட ஒரே

அமுக்களம் பண்ணினுகிது. சீக்கிரங் வா'' என்றழைத்தான் ஒரு சிறுவன்.

''எந்த சபையாண்டடா?''

''பழைய சபையாண்ட.''

நகோமியம்மா ''அய்யோ ஏசப்பா'' என்று அதிர்ச்சியடைந்து மாரைப் பிடிக்க நினைத்தாள். ஒரு கையில் ராகி மால்ட்டும் ஒரு கையில் பிஸ்கெட் பாக்கெட்டும் இருந்ததால் அவளால் அதைச் செய்ய முடியவில்லை. ''நீ போடா தோ பின்னாடியே வரேங்'' என்று சொல்லிவிட்டு மேலே போய் இதைக் கொடுத்துவிட்டுப் போகலாமா இப்படியே படிக்கட்டில் இதை வைத்துவிட்டு ஓடலாமா என்று அவள் முழித்தாள். ஒரு சுற்றுப் படிதானே என ஏறி மேலே வீட்டுக்குள் போய் விஷயத்தை ரெஜினாவிடம் சொல்லாமல் ''இந்தா ரெஜினா இதப் புடி தோ வர்றேங்'' என வேக வேகமாகக் கிளம்பிக் கீழிறங்கினாள்.

முதுமைப் பிராயத்தின் பலவீனங்களை அவள் மனம் பொருட்படுத்தியதில்லை. உடல் இதற்கு முற்றிலும் மாறுபட்ட இயற்கை மனப்பான்மை கொண்டதல்லவா! நகோமியம்மாவின் மனம் பட்ட அவசரத்துக்கு இணையாக உடலால் ஈடு கொடுக்க முடியவில்லை. அவள் வேக வேகமாகப் படியிறங்க நினைத்தாலும் மூட்டெலும்புகள் அவளைத் தடுத்தன. சமாளித்து இறங்க முயற்சித்ததால் மூச்சு வாங்க ஆரம்பித்தது. படியிறங்கிக் கீழே வந்ததும் சபை இருக்கும் தெருவை நோக்கி மனதார ஓட ஆரம்பித்தாள். ஆனால் அது ஓட்டமல்ல நடைதான்.

ஆமோஸ், குணசீலன் இருவரும் ராமர் தோட்டத்தினுள் நுழைந்ததும், 'இயேசு கிருபையின் சுவிசேஷ ஜெப வீடு' சபை இருக்கும் சந்துக்குள் நுழைந்ததும், ஆமோஸ் கையில் வைத்திருந்த இரும்புக் குழாயைச் சிலம்பம் சுற்றுவதுபோலச் சுற்றினான். அது தவறிப் போய் கீழே விழும்போதெல்லாம் உடனடியாக அதை எடுத்துச் சுற்ற முயற்சி செய்தால் சிலம்பக் கலையில் தோல்வி அடைந்தவன் எனப் பார்ப்பவர்களுக்குத் தெரியவரும் என்பதால் கீழே விழுந்த இரும்புக் குழாயை அப்படியே தரையைத் துடைப்பத்தால் பெருக்குவது போல வேகமாக

உராயச் செய்து சத்தம் வரவைத்தான். மூன்று முறை அவ்வாறு செய்தான். சந்துவாசிகளுக்கு அவன்மீது கவனம் ஏற்பட்டது. குணசீலன் அவனைப் பின்தொடர்ந்து நடந்து வந்துகொண்டிருந்தார். சபையின் வாசலில் நின்று அதன் தலைக்கு மேல் இருந்த பெயர்ப்பலகையை அண்ணாந்து பார்த்த ஆமோஸ், தன் கையிலிருந்த இரும்புக் குழாயை குணசீலனிடம் கொடுத்து அதன் மீது எறியச் சொன்னான். அவர் உடனே அதை வாங்கி எச்சிலைத் திரட்டித் தரையில் துப்பிவிட்டுத் தூக்கி எறிந்தார். அது பலகையைத் தொடாமல் அதற்குக் கீழ் இருந்த ஜன்னல் கதவைக் குத்திவிட்டுக் கீழே விழுந்தது. ஆமோஸ் அதை எடுத்து இம்முறை குணசீலனிடம் கொடுக்காமல் அவனே பெயர்ப் பலகையை நோக்கி எறிந்தான். இரண்டு சுழற்சியில் பெயர்ப் பலகையின் மீது பட்ட இரும்புக் குழாய் வெற்றியுடன் திரும்பிக் கீழே விழுந்தது. நொறுங்கல் சத்தம் கேட்டு சபையினுள் இருந்தவர்கள் வெளியே வந்தனர். ஆமோஸ் வெறுங்கையிலேயே சிலம்பம் சுற்றுவதுபோலக் கையை வேக வேகமாக சுழற்றி “ங்கொம்மால யாருனா சிங்கிள்ஸ் வாங்கடா” என்று சபையினுள் இருந்தவர்களைப் பார்த்துக் கூப்பிட்டான். “சபியே இருக்கக் கூடாதுடா … ஆமோஸா அந்த கொழாவ எத்து ஒடிறா” என்று குணசீலன் சொன்னதும் கீழே இருந்த இரும்புக் குழாயை எடுத்து சபையின் கதவை உடைப்பதற்கு அவன் திமிறினான். அவன் கொண்ட வேகத்தைக் கண்டு அவனுக்கு வழி விட முடிந்ததே தவிர யாரும் தடுக்க முன்வரவில்லை. இரும்புக் குழாயைக் கொண்டு கதவைக் குத்தினான். அது பழந்தேக்கு. பாஸ்டரய்யா சபை ஆரம்பித்த புதிதில் அவர் பார்த்துப் பார்த்துச் செய்த கதவு. அவன் குத்தலுக்கு அது அசரவில்லை. குழாயைக் கீழே போட்டு, சுற்றியிருந்தவர்களை அடிப்பதற்குத் திமிறினான் ஆமோஸ். அங்கிருந்த ஓர் இளைஞன் ஆமோஸ் கீழே தூக்கிப் போட்ட இரும்புக் குழாயைக் கொண்டுபோய் ஒரு இடத்தில் மறைவாக வைத்ததும் சுற்றி இருந்தவர்களுக்குத் தெம்பு வந்தது. சபைவாசிகளும் ஆமோஸை அடிப்பதற்குத் துணிந்தார்கள். குணசீலன் முடிந்தவரை ஆமோஸுக்கு உதவியாக இருந்தார்.

ஆனால் அவரால் நிலையாக நிற்க முடியவில்லை. போதையின் உக்கிரத்தில் கீழே விழுந்து விழுந்து எழுந்தார். சத்தம் கேட்டு உள்ளே இருந்த இடிமுழக்கம் எபினேசர் வெளியே வந்து பார்த்தார். அவர் உடனே செல்போனை எடுத்து வேகவேகமாகத் தடவினார். அங்கிருந்த ஒரு சிறுவன் குணசீலன் வீட்டிற்கு இதைத் தெரியப்படுத்த ஓடிப் போனான்.

நகோமியம்மா சம்பவ இடத்திற்கு வந்து சேர்ந்தபோது அங்கு நடைபெற்ற வன்முறை ஒரு ஒழுங்கு வடிவம் பெற்றிருந்தது. ஆமோஸைச் சுற்றி இருந்தவர்கள் அவனை மடக்கிப் பிடித்து வைத்திருந்தார்கள். அவர்களிடமிருந்து தப்பிக்க அவன் போராடிக்கொண்டிருந்தான். மனதாரப் போராடியிருந்தால் அவனால் தன்னை விடுவித்துக் கொள்ள முடியும். ஆனால் அவன் எதிர்பார்ப்பது இதைத்தான். நாலு பேர் அவனை பிடித்துக்கொண்டு "டே ஆமோசு கம்னு இர்றா கம்னு இர்றா" என்று அவனை ஆற்றுப்படுத்த வேண்டும். அதை மீறி அவன் திமிற வேண்டும். தன் வீரத்தை அடுத்தவர்கள் புரிந்து அதனால் விபரீதம் ஏற்பட்டுவிடும் என்று அவர்கள் அச்சம் கொள்வதை அவன் ரசிக்க விரும்பினான். ரசித்தான். அவன் விரும்பிச் செய்யும் பிரச்சினைகள் இந்த உச்சத்தைத் தொடுகையில் அவன் உள்ளூரத் தணிந்து போவான். அதுகூட எல்லா நேரத்திலும் என்று சொல்ல முடியாது. போதையைப் பொறுத்தது.

நகோமியம்மா அங்கு வந்ததும் குணசீலனைத் தேடினாள். அவர் ஒரு ஓரமாகச் சுவரில் சாய்ந்தாற்போல் உட்கார வைக்கப்பட்டிருந்தார். அவரைக் கண்டறிந்து நகோமியம்மா வந்து தட்டி எழுப்பியதும் வீராவேசத்துடன் சத்தம் போட ஆரம்பித்தார். "ங்கோத்தா ஏய் ஒரு சபையுங் இங்க இருக்கக் கூடாது மீறி இர்ந்துது நைட்டோட நைட்டா கொள்த்தி போட்றுவெங்" என்று சொன்னவரின் வாயில் நகோமியம்மா ஒரு போடு போட்டாள். குணசீலனை அங்கு யாரும் பொருட்படுத்தவில்லை. ஆமொஸும் அவரும் சேர்ந்து உருவாக்கிய களேபரத்தின் திசை, இடிமுழக்கம் எபினேசருக்கும் அவர் பக்கத்துக்கு வீட்டுக்காரரான

வழக்கறிஞருக்கும் இடையே போய்க்கொண்டிருந்தது. வழக்கறிஞர் சில மாதங்களுக்கு முன்புதான் சபைக்குப் பக்கத்தில் சொந்த வீடு கட்டிக்கொண்டு குடிபெயர்ந்தார். தினமும் சபையிலிருந்து வரும் ஆராதனை ஓசைகளால் அவர் குடும்பம் பாதிக்கப்பட்டு வந்ததற்கான தன்னுடைய எரிச்சலின் உச்சத்தை வெளிப்படுத்த இன்றைய சம்பவத்தைப் பயன்படுத்திக்கொண்டு இடிமுழக்கத்துடன் வாக்குவாதம் செய்ய ஆரம்பித்தார். அவரைப் போலவே சபையாலும், அவர்கள் தினசரி நடத்தும் கூட்டங்களாலும் தங்களின் இயல்பு வாழ்க்கை பாதிப்பதாகக் கருதியவர்கள் வழக்கறிஞருக்குச் சாதகமாக ஒருமித்தனர். இவர்கள் அனைவரும் ராமர் தோட்டத்தில் கடந்த பத்து வருடங்களில் குடி புகுந்தவர்கள். வாக்குவாதம் தடிக்க, வழக்கறிஞர் சொற்களைக் கூராக்கினார் “த்தா ஏதோ வாரத்துல ஒருநாள்னா பரவாயில்லை. எப்பபாரு லபோதிபோன்னு கத்தினு இருக்கீங்களே” என்றவரை நோக்கி இடிமுழக்கம் ஓங்காரமிட்டார். “ஏய் … பாத்துப் பேசு. உன்ன ஜெபத்துல வெச்சேன், ஒண்ணுமே இல்லாம நிர்மூலமாய்டுவ பாத்துக்க” என்றார்.

“யோவ், தூக்கி உள்ள வெச்சுடுவேன் உன்ன ஜாக்கிரத. ஏரியால ரொம்ப வருஷமா சபை வெச்சி நடத்தினு இருக்கீங்கன்னு மரியாத கொடுத்தா என்ன …” என்று இடிமுழக்கத்திற்கு அருகே சென்று கை நீட்டிப் பேசினார் வழக்கறிஞர். இதை இடிமுழக்கத்திடம் ஆன்மிகம் பயின்று வரும் ஒரு ப்ரதரால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. “ஏம்ப்பா ன்னா ஓவரா பேசினு போற?” என்று வழக்கறிஞரின் தோளின் மீது கை வைக்க, வழக்கறிஞரின் மூத்த மகன் ஓடிவந்து அந்த ப்ரதரைத் தாக்கினான். ப்ரதர் ராமர் தோட்டத்தைப் பூர்வீகமாகக் கொண்ட பழைய கை என்பதால் அங்கிருந்தவர்கள் சிலர் மடக்குவது போல மடக்கி வழக்கறிஞரின் மகனைப் பிடித்துக்கொள்ள, ப்ரதர் ஓங்கி அவன் முகத்தில் ஒரு குத்து விட்டார். வழக்கறிஞர் அவர்களை அடிக்கப் பாய, அந்த இடம் வன்முறையின் உச்சத்தைத் தொட்டது. நகோமியம்மா கைத்தாங்கலாக குணசீலனை வீட்டுக்கு அழைத்து வந்துகொண்டிருந்தாள்.

வீட்டு வாசல் வரைக்கும் அமைதியாக இருந்தவர் உள்ளே நுழைந்ததும், நகோமியம்மாவை ஒரு தள்ளுத் தள்ளி ரெஜினாவைப் பார்த்ததும் “ஏ நாராக் கூதி என் வீட்ட விட்டு வெளிய போடி” என்று கூச்சல் போட்டு எச்சில் துப்பினார். தொங்கிய தலையுடன் சைலேந்தரையும் இவாஞ்சலினையும் பார்த்தவர் சைலேந்தரை இனங்கண்டு கொண்டார். இவரைப் பார்த்ததும் அவர்களிருவரும் எழுந்து நின்றார்கள். அவர் இவாஞ்சலினைப் பொருட்படுத்தவில்லை. சைலேந்தரின் இரண்டு கையைப் பிடித்துச் சொன்னார், “எப்பா எம் புள்ளிய இவ சாவடிக்க பாக்குற. இந்தத் தெவ்டியா வீட்ல இருக்கக் கூடாதுப்பா” என்று பற்களை மென்றார். கிடுகிடுவெனச் சத்தம். நகோமியம்மா இவாஞ்சலினின் கையைப் பிடித்து வெளியே கூட்டிக்கொண்டு போனாள். இவாஞ்சலினை வாசலில் நிற்க வைத்து முன்பு சொன்னதையே சொன்னாள் “எம்மா எம் பேரன வுட்றாதமா.” இவாஞ்சலினுக்குச் சற்று முன் நிகழ்ந்த அதிர்ச்சியில் உடனடியாக என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. குணசீலன் சைலேந்தரின் கைகளை விடவில்லை. “எம் புள்ளகிட்ட வர வேணான்னு சொல்லுப்பா. இவளுங்கோ திரும்பவும் அவன ஜெபக்கூட்டத்துக்கு கூட்னு போய் நாசமாக்கிடுவாளுங்கோ” என்றார். சைலேந்தர் “செரிப்பா செரிப்பா” என்று தன் கைகளை அவரிடமிருந்து விடுவித்துக்கொள்வதில் குறிக்கோளாய் இருந்தார். ரெஜினா எதிர்த்து ஒரு வார்த்தைகூட பேசவில்லை. அமைதியாக நின்றிருந்தாள். பயத்தினால் அல்ல. தான் எதிர்வாதம் புரிந்தால் குணசீலன் இப்போது இருக்கும் போதைக்குத் தன்னைப் பற்றி இன்னும் அவதூறுச் சொற்களால் திட்டலாம். இவர்கள் முன், அதுவும் தன் வருங்கால மருமகள் முன் பெயரைக் கெடுத்துக்கொள்ள வேண்டாமென மௌனம் காத்தாள். சைலேந்தர் குணசீலன் சொன்ன அனைத்துக்கும் ஆமோதித்து வெளியே வந்தார். இவாஞ்சலினைக் கூட்டிக்கொண்டு படிக்கட்டுகளில் கீழே இறங்கினார்.

போதையின் உக்கிரம் வலுவிழந்து அது கொடுத்த நிதானம் குணசீலனுக்கு மன வலிமையைக் கொடுத்தது. அவர் ரெஜினாவின் மீது பாய்ந்து அவள் முடியைப்

பிடித்துக்கொண்டார். மடக்க வந்த நகோமியம்மாவை இன்னொரு கையினால் அடிக்க ஓங்குகையில் நகோமியம்மா அவர் கையை இறுகப் பிடித்து ரெஜினாவிடமிருந்து குணசீலனை விலக்க முயற்சி செய்தாள். ரெஜினாவும் தன் பங்குக்குப் போராடினாலும் பிள்ளைக்காக காலையிலிருந்து உபவாசம் இருந்ததினால் உடம்பில் திராணி இல்லை. குணசீலன் ஒரு கையில் நகோமியம்மாளைச் சமாளித்துக்கொண்டும் மறுகையில் ரெஜினாவின் முடியை இறுகப் பிடித்துக்கொண்டும் ரெஜினாவிடம் சொன்னார், “ங்கொம்மால இனிமே சபைக்கு கிபைக்குனு போன, உன்ன சாவச்சிடுவெங் … ஒழுங்கா எங்கம்மா போட்டா மாதா போட்டோலாம் இப்பயே எத்து செவ்த்துல மாட்ற நீ. இல்ல … மகன அவுள்தாங் நீ” என்றவரைச் சரியான நேரம் பார்த்துப் பிடித்துத் தள்ளினாள் ரெஜினா. குணசீலனும், நகோமியம்மாவும் சேர்ந்து போய்த் தள்ளி விழுந்தார்கள். விழுந்த வேகத்தில் குணசீலன் எழுந்து ரெஜினாவைச் சரமாரியாக அடித்தார். அவளும் பதிலுக்கு அடித்தாள். நகோமியம்மா எழுந்து நிற்க சிரமப்பட்டாள். எதிர் வீடு, பக்கத்து வீடுகளிலிருந்து பெண்களும் ஆண்களும் ஓடிவந்து சமாதானம் செய்தார்கள்.

குணசீலன் பிடித்த பிடியாய் இருந்தார். “எங்கம்மா போட்டோவயும், மாதா போட்டோவையும் எடுத்து செவுத்துல மாட்ட சொல்லு இவள. ங்கோத்தா ஏதேதோ பாடுங்க மூஞ்சிலா காலேண்டர்ல தொங்கினு இருக்குது, எங்கம்மா போட்டா இருக்கக் கூடாதா?” என்றார் குணசீலன்.

புதுவருடப் பிறப்பின் நள்ளிரவு ஆராதனை முடிந்ததும் சபையில் கொடுக்கும் காலண்டரில் சபையின் நிறுவனத்தார் குடும்பமாக நின்று சிரிக்கும் போட்டோ இருக்கும் காலண்டர் இரண்டு, மூன்றை ரெஜினா வீட்டில் மாட்டி வைத்திருந்ததைப் பார்த்துதான் குணசீலன் அதைக் குறிப்பிட்டுக் கேட்டார்.

“எத்து மாட்ட சொல் … இல்லாட்டி இவ எங் வீட்ல இருக்கக் கூடாது” என்று எச்சிலை காரி உமிழ்ந்தார் குணசீலன்.

“எக்கா எத்துதாங் மாட்டேங்” என்றாள் நீதி விசாரணை செய்ய வந்த பக்கத்துக்கு வீட்டுப் பெண்மணி.

“ஏ, உனுக்குத் தெரியாதா ஆண்டவர் புள்ளிங்கோ விக்கிரக ஆராதனை செய்யக் கூடாதுன்னு” என்றாள் ரெஜினா.

“ஆங் அப்புறம் எதுக்கு இந்த பாஸ்டருங்க மூஞ்ச மாட்டும் காலண்டர்ல மாட்டி வெச்சுக்கிரியாங்?”

“உன்ன ஒரு நாள் ஜெபத்துல வெச்சாதாங் நீ அடுங்குவ.”

“ஏ, ங்கோத்தா எங்கம்மா போட்டோ எங்கடி?” என்று திரும்பவும் ரெஜினாவை அடிப்பதற்கு ஓடி வந்த குணசீலனைத் தடுத்த நகோமியம்மா …

“ஏ, இன்னாடா பொட்ட பாடு. ன்னொரு வாட்டி அவ மேல கை வெச்ச பூல அறுத்துடுவேங் … நம்ச்சல் எத்துனு பெரிமீட்ல ன்னோர்த்தி சூத்த மோந்துந்தியே போவ வேண்டித்தானே அங்கியே … வன்ட்டாரு அம்மா பாசத்துல போட்டோ வேணுங் போட்டோ வேணுங்னு. அவ சாவப் பொழைக்க இர்ந்தப்பா அவள இன்னான்னு கேட்டு இருப்பியா? ஏங் நீ சாவப் பொழைக்க இர்ந்தியே உம்பீ மூத்திரத்த அள்ளி போட்டுது யாரு” என்று குணசீலன் முன்பு கையை ஆட்டி ஆட்டி நியாயம் பேசினாள் நகோமியம்மா. ஹவுசிங் போர்டே வேடிக்கை பார்த்தது.

“ஏ, அதுலாங் தெரியாது. ங்கோத்தா எங்கம்மா போட்டோ இப்போ மாட்டணுங் … இல்ல மகன” என்று திரும்பவும் ரெஜினாவின் மீது பாயத் தயாரானார் குணசீலன். நகோமியம்மா திரும்பவும் குறுக்கீட்டாள். “டேய், எவ மூத்திரத்த குஷ்ட்டு வந்து இப்டி ஆடினுகிற … போட்டோ எங்கிட்டதான் இருக்குது. எத்து மாட்ரெங் … திரும்வுங் அவ மேல கைய கீய வெச்ச உங்கொலய கலக்கிடுவெங்” என்றாள் நகோமியம்மா. அவளால் பழைய வேகத்துடன் பேச முடியவில்லை என்றாலும் அதீதமான உடல் செய்கையினால் தன் அதிகாரத்தைச் சமன் செய்தாள்.

ஓட்டு வீட்டிலிருந்து ஹவுசிங் போர்டு வீட்டுக்கு மாறும்போது கிளியாம்பாளின் புகைப்படத்தை ரெஜினா, நகோமியம்மாளிடம் கொடுத்து தூக்கிப் போடச் சொல்லி விட்டாள். ஆனால் நகோமியம்மா தன் துணிப் பெட்டியில் அதை பத்திரப்படுத்தி வைத்திருந்ததை ரெஜினா இந்தச் சமயத்தில்தான் அறிந்தாள். அவள் வீட்டில் இல்லாத சமயத்தில் இரண்டொரு முறை ரூபனிடம் "இதாங் உங் ஆயா கிளியாம்பா" என்று அறிமுகப்படுத்தி வைத்துப் பழைய கதைகளை சொல்லி வைத்திருக்கிறாள்.

நகோமியம்மா தன் பெட்டியிலிருந்து போட்டோவை எடுக்கத் துணிந்ததும் பிரச்சினை சுமூகத்தை எட்டி விட்டதென்று நீதி விசாரணை செய்ய வந்த எதிர் வீடு பக்கத்து வீடு ஆட்கள் மெல்லக் கலைந்து போனாலும் ஒரு சிலர் யார் அந்த அம்மா என்று பார்க்கிற ஆவலில் சும்மாவேனும் சமாதானம் சொல்லி நகோமியம்மா கிளியாம்பாளின் போட்டோவை எடுக்கிற வரைக்கும் தாக்குப் பிடித்துக்கொண்டிருந்தார்கள்.

உள்ளே சென்று பெட்டியைத் திறந்து போட்டோவை எடுத்துக் கிளியாம்பாளின் முகத்தை உற்றுப் பார்த்து நகோமியம்மா மௌனமாகச் சிணுங்கினாள். தன் முந்தானையால் படத்தின் மீது படர்ந்திர்ந்த தூசிகளை வழித்தெடுத்து குணசீலனிடம் கொடுத்தாள்.

அவர் அதை வாங்கி நீதி விசாரணை செய்ய வந்து மீதி நின்றிருந்தவர்களிடம் காண்பித்து, "தெபார்மா எங்கம்மா ராஜாத்தி … எமோவ் எமோவ்" என்று அந்த போட்டோவை தலையில் முட்ட வைத்து ஓலமிட்டார். பின்பு சுதாரித்து, "ஏ, ங்கோத்தா ரெண்டு பேருங் வீட்டு உள்ளவே வரக் கூடாது" என்றவர் வாசலில் நின்றிருந்த நகோமியம்மாவையும், எதிர் வீட்டு வாசலில் நின்றிருந்த ரெஜினாவையும் எச்சரிக்கை செய்துவிட்டு வீட்டினுள் சென்று தாழ்ப்பாள் போட்டுக்கொண்டார். குடித்துவிட்டால் இது குணசீலன் செய்கிற வாடிக்கைக் காரியந்தான். உடனிருப்பவர்களை வீட்டை விட்டு வெளியே துரத்தித் தன் அதிகாரத்தை நிலைநாட்டிய ஆணவத்தில் சற்று ஓய்வெடுத்துப் புலம்புவார். அது ஒரு காலம் என்றாலும் நீண்ட நாட்களுக்குப் பிறகு தன் மனக்

குமுறலையும் ரெஜினாவின் ஆன்மிக அட்டகாசத்தையும் ஒடுக்க வேண்டுமென திட்டமிட்டுக் குடித்ததில் சற்று வெற்றி கண்டுவிட்டதாகவே தோன்றியது.

அவர் உள்ளே போனதும் நகோமியம்மா சொன்னாள், “ரெஜினா, காய்ல்லந்து சாப்டமாகிறியே உனுக்கு டீ வாங்கினு வரேங் … போத தெளியட்டும் மகன அவ்ருக்கு வெச்சினுகிறேங் இரு” என்று புடவை முந்தானையைச் சரி செய்தாள்.

குணசீலன் உள்ளே சென்றதும் அம்மாவின் போட்டோவைச் சுவரில் மாட்டுவதற்கு இடம் பார்த்துக்கொண்டிருந்தார். எல்லா ஆணிகளிலும் பைபிள் வசனங்கள் இடத்தை ஆக்கிரமித்திருந்தன. இதனால் எரிச்சலைடைந்த குணசீலன் ஆணியில் மாட்டிருந்த வசனப் பலகைகள், தினசரி ஒரு வசனம் சொல்லும் நாட்காட்டிகள் ஆகியவற்றை பிய்த்துத் தூக்கி எறிந்தார். வீட்டு மத்தியில் இருந்த ஒரு சுவராணியில் கிளியாம்பாளின் புகைப்படத்தை மாட்டினார். நினைத்ததைச் சாதித்ததுபோல் தோன்றிய ஒரு நொடி ஆசுவாசம் சட்டெனக் கலைந்து வெளியே இருப்பவர்கள் செவிகளில் விழுமாறு கத்தினார். “ஏய், எம் புள்ளிய மட்டுங் ஜெபக் கூட்டத்துக்கு கூட்னு போறேன்னு அங்கந்து கூட்னு வந்தீங்கோ … மகன சத்திமா சொல்றேங். ரெண்டு பேரு பொணமுங் கூவாத்துல மெதக்குங் சொல்லிட்டேங்” என்று காரி உமிழ்ந்தார்.

“ஆயா நீ கடிக்கு போவாத. நா டீ வாங்கினு வரேங்” என்று பக்கத்துக்கு வீட்டுப் பெண் சொன்னாள். ரெஜினாவும் “கொஞ்ச நேரங் கம்முனு ஒக்காருமா” என்று நகோமியம்மாவைப் பார்த்துச் சொன்னாள். இருவரும் படிக்கட்டுகளில் அமர்ந்து வெறித்துக்கொண்டிருந்தார்கள்.

டீ வாங்குவதற்கு சொம்பு எடுத்துக்கொண்டு போன பெண்மணி உடனே மேல வந்து “ஆயா குண்சீலப்பாவ கேட்டுகினு போலிஸ் வருதுயா” என்று தகவல் சொன்னாள். இரண்டு காவலாளிகள் சரியாக வீட்டைக் கண்டுபிடித்து வாசலில் நின்றிருந்த இருவரிடமும் விசாரித்தார்கள்.

“ஏம்மா, நீ தான் குணசீலன் பொண்டாட்டியா?”

“ஆமா சார்.”

“உங்க வீட்டுக்காரரு மேல, பாஸ்டர் அட்டம்ட் மர்டர் கேஸ் குடுத்துகிறாரு. எங்க அந்தாளு?”

“சார் அப்டினா?”

“சபைக்கு போய் பாஸ்டர கொலபண்ண ட்ரை பண்ணிகிறாரு” என்று காவலர் சொன்னதும் “சார் அவன்லாங் அப்டி பண்றவங் இல்ல சார்” என்றாள் நகோமியம்மா.

“நீ யாருமா?”

“நா குண்சீலங் அம்மா.”

“ஆ செரி, எங்க அவரு?” என்று போலிஸ் கேட்ட மாத்திரத்தில் “தோ இப்போதான் கீல எறங்கிப் போனாங்” சார் என்றாள் நகோமியம்மா.

உள்ளே இருந்து குரல் கேட்டது “ஏ … ங்கோத்தா எம்புள்ள ரூபனு கிங்கு போல வருவாண்டி … ப்த்தூ ங்கோத்தா ஆண்டவர் பேர சொல்லி ஏமாத்துறானுங்கோ அவனுங்க பின்னாடி போறீங்களா?” என்று கதவை ஒரு உதை உதைத்தார்.

வெளியே நின்றிருந்த போலிஸ் கதவைத் தட்டி “ஏம்பா வெளிய வா” என்றார்.

“ஏ நீ யாருடா என்ன வெளிய வான்னு சொல்றதுக்கு எங்கம்மா சம்பார்ச்ச வூடுடா இது” என்றார்.

உடன் வந்த போலிஸ்க்கு கோபம் மூண்டது. “யோவ் வெளிய வாயா. கதவ ஒடச்சினு வந்தெங் த்தா முட்டிய பேத்துடுவேங்”

“சார் நீங்க போங்க சார் டேஷன்க்கு நா கூட்டினு வரேங் சார்” என்று கெஞ்சினாள் நகோமியம்மா.

“எம்மா பூட்டி வெச்சிட்டு சீன் போட்னு இருக்கீங்ளா? யோவ் தொறயா கதவா.”

கையில் வைத்திருந்த லத்தியால் இரண்டு மூன்று முறை கதவைத் தட்டினார். குணசீலன் திறக்கவில்லை.

“சார் கொஞ்ச ஒத்து” எனச் சொல்லிவிட்டு நகோமியம்மா கதவருகே சென்று பேசினாள் “குண்சீல் போலிஸ் வந்துகிராங். ஏதோ விசாரிச்சுப் போய்டுவாங்லாங் கதுவ தொற.”

“போலீசா எதுக்கு?”

“நீ கதுவ தொற.”

“யோவ் தொறயா கதவ” என்று போலிஸ் சத்தம் போட்டதும் குணசீலனைச் செயல்படுத்திய போதை காணாமல் போனது. அவர் கதவைத் திறந்ததும் காவலர் கையில் வைத்திருந்த லத்தியை குணசீலனின் முட்டிக்குக் கீழ் ஓங்கி அடித்தார் “ஐயோ யேசப்பா யேசப்பா எங் வூட்டுப் புள்ளியே வூடு தேடினு வந்து அடிக்கிறாங்ளே” என்று தன் மார்பில் அறைந்துகொண்டாள் நகோமியம்மா.

“சார் எதுக்கு அடிக்கிறீங் … சார் சார் … சார்”. குணசீலனின் பேச்சுக்கு பதில் மரியாதை இல்லை. “டா போட்டா பேசுற?” என்று அவர் சட்டைக் காலரைப் பிடித்து கீழே இழுத்துச் சென்றார்கள். ரெஜினாவும், நகோமியம்மாவும் பின்னாலேயே “சார் சார் நாங்க கூட்னு வரோங் சார்” என்று மன்றாடியும் அவர்கள் கேட்கவில்லை. ஹவுசிங் போர்டு வாசலில் நின்றிருந்த போலிஸ் வண்டியின் பின்னிருக்கையில் குணசீலனை உட்கார வைத்தார்கள். வண்டி சிந்தாதிரிப்பேட்டை காவல் நிலையம் நோக்கி சென்றது. அதன் பின்னாலேயே ரெஜினாவும் நகோமியம்மாவும் அழுதுகொண்டே போனார்கள்.

காவல் நிலையத்திற்கு எதிரே இருந்த பெட்டிக்கடையில் இடிமுழக்கம் வெள்ளை உடை தரித்த தன் ஆதரவாளர்களுடன் தேநீர் அருந்திக்கொண்டிருந்தார். ஊதி ஊதித்தான் தேநீரைக் குடித்தார் என்றாலும் அவரின் உள்ளச்சூடு தணியவில்லை. ராமர் தோட்டத்தில் இயேசு கிறிஸ்துவின் மனித அவதாரமாக நடமாடிக்கொண்டிருந்தவரை நடுத்தெருவில் கேள்விக்கு உட்படுத்தியதையும், ஊர் பார்க்கத் தன் மீது ஒருவன் கை வைத்துவிட்டான் என்கிற அவலத்தையும் எண்ணிக் குமைந்தார். நமக்கு எதிராக உருவாகும் ஆயுதங்கள் வாய்க்காது போகும்படி நாமெல்லோரும் இன்றிரவு சபையில் ஒருமனப்பட்டு ஜெபிக்க வேண்டுமென உடனிருந்தவர்களிடம் சொல்லியிருந்தாலும் தெய்வம் நின்று கொல்லும் வரையில் பொறுமை காப்பதற்கு அவர் மனம் இடந்தரவில்லை. நேர்ப்பட்ட அவமானத்திற்கு உடனடியாக பதில் செய்ய வேண்டுமெனக் காவல் நிலையத்திற்கு வந்து வழக்கறிஞர், ஆமோஸ், குணசீலன் ஆகியோர் மீது புகார் அளித்தார். அவர்களைக் கொலை முயற்சி வழக்கில் கைது செய்யச் சொல்லித் தன் கழுத்தில் ஏற்பட்ட நகப்பீறல்களைக் காவலரிடம் காண்பித்தார். தானாகவே காவல் நிலையத்திற்கு வருகிறேன் என்று வழக்கறிஞர் சொன்னதற்கிணங்கக் காவல் வண்டி ஆமோஸ் வீட்டுக்குச் சென்றது. அவன் அங்கே இல்லை. குணசீலனை மட்டும் கைது செய்து வண்டியில் அழைத்து வருகையில் தேநீர்க் கடையில் இருந்து அதைக் கவனித்துக்கொண்டிருந்த ப்ரதர் ஒருவர் இடிமுழக்கத்திடம் சுட்டிக் காண்பித்தபோது மீதமுள்ள தேநீரை அவசரமாக உறிஞ்சிவிட்டுத் தன் குழுவுடன் சாலையைக் கடக்கத் துணிந்தார்.

காவல் நிலையத்தினுள் ஓர் ஒரமாக குணசீலன் நிற்க வைக்கப்பட்டிருந்தார். குழுவாக உள்ளே நுழைந்தவர்களை வாசலில் நின்றிருந்த போலிஸ் தடுக்க இடிமுழக்கம் மட்டும் உள்ளே சென்று குணசீலனைக் காண்பித்து “இவன்தான் சார் இவன்தான் மொதல்ல அந்த பையனோட வந்து சபையில கல்லு அடிச்சு இருக்கிறது” என்றார். குணசீலன் அமைதியாக நின்றார். “பாஸ்டர்

மேலயே கை வைக்கிற அளவுக்குத் துணிஞ்சிட்டிங்களாடா?'' என்று பொறுமியவரை, ''சார் நீங்க வெளிய நில்லுங்க விசாரிச்சுட்டு கூப்புட்றோம்'' என்றார் சப் இன்ஸ்பெக்டர். தன் ஆவேசத்தை மதிக்காமல் உடனடியாக வெளிய போகச் சொன்னதை இடிமுழக்கம் விரும்பவில்லை. கனன்றுகொண்டே வெளிய வந்தவர் நகோமியம்மாவும் ரெஜினாவும் காவல் நிலைய வளாகத்தினுள் நுழைவதைப் பார்த்ததும் ரெஜினாவின் அருகில் சென்று ''உம் புருஷனுக்கு அவ்ளோ திமிரா ஆய்டுச்சா. நா நெனச்சன்னா அவனுக்கு தூக்குத் தண்டனையே வாங்கிக் கொடுத்துடுவேன் பாத்துக்க'' என்று ஆள்காட்டி விரலால் எச்சரித்தார்.

''ஐயா, குடி போதில பண்ணிட்டிருப்பாய்யா வுட்டுடுங்கய்யா'' என்று அவரிடம் கரம் கூப்பி அழுதாள் நகோமியம்மா. ரெஜினா அமைதியாக நின்றிருந்தாள்.

''எப்டி விடுவேன் அவன? எம் மேலயே கை வெக்கிற அளவுக்கு உங்களுக்குலாம் தைரியம் வந்துடுச்சா? உங்கள எங்க வெக்கணுமோ அங்க வெச்சு இருக்கணும்'' என்று அவர் சத்தம் கூட்ட அங்கிருந்த போலிஸ், வளாகத்தினுள் கூச்சல் போடக் கூடாது என்று அவரை வெளியே போகச் சொன்னார். ரெஜினாவையும் நகோமியம்மாவையும் விசாரித்து அவர்களை உள்ளே அனுப்பினார்.

உள்ளே வந்தவர்களைப் பார்த்து சப் இன்ஸ்பெக்டர் ''யாருமா?'' என்றார்.

''சார் தோட்டத்துல வந்து கூட்னு போனீங்களே குண்சீல், அவங்க அம்மா சார்.''

''வாங்க உள்ள வாங்க.''

''இது யாரு?''

''அவங்க சம்சாரங் சார்.''

''ஏம்மா உம் புருஷனுக்கு இந்த வய்சுல எதுக்கு வேல இல்லாத வேல? அந்த பைத்திக்காரப் பையங் கூட சேந்துகினு அந்த பாஸ்டர அடிக்க ப்ளான் போட்டுகிறாங்க. ஏன் என்ன பிரச்சன?''

“சார் ரொம்ப வருஷமா குடிக்காம இர்ந்தாப்ல சார். குச்சிட்டா இந்தமாரிதாங் எதுனா ஊர் கொள்ள வாங்கினு வருவாப்ல சார். இந்த ஒரு வாட்டி மன்னிச்சு வுட்டுடுங்க சார்” என்றாள் ரெஜினா.

“தெபார் இந்தக் கதைலாம் இங்க சொல்லக் கூடாது. குடிச்சுட்டா தாய்க்கும் தாரத்துக்கும் கூடவா வித்தியாசம் தெரியாம போய்டும் ம்ம்ம் … போங்க அப்டி வெளியப்போய் ஓரமா போய் நில்லுங்க” என்றவர் “யோவ் எவ்ளோயா குடிச்ச அப்டி நீ?” என்று சிரித்துக் கொண்டே கேட்டார். குணசீலன் அமைதியாக இருந்தார்.

ஓரமாக நிற்பதற்கு இடம் பார்த்த நகோமியம்மா அப்படியே குணசீலனைப் பார்த்து “குண்சீல் டீ பிஸ்கெட்டு எதுனா வாங்கினு வர்ட்டா?” என்று கேட்டாள்.

“ஆங். ஆமா அப்டியே படுக்க பாய் தலகாணி இருந்தாலும் எத்துனு வந்து குடேன்” என்றார் அங்கிருந்த ஒரு போலிஸ்.

வழக்கறிஞரும் அவருடைய மூத்த மகனும் காவல் நிலைய வளாகத்தினுள் நுழைவதை இடிமுழக்கம் குழுவினர் வன்மம் தோய்ந்த பார்வையினால் வரவேற்றனர்.

அவர்களிருவரும் உள்ளே நுழைந்த கொஞ்ச நேரத்தில் இன்ஸ்பெக்டர் ரோந்துப் பணியை முடித்துக் கொண்டு காவல் நிலையம் நுழைந்தார். இடிமுழக்கம் உடன் ஒருவருடன் உள்ளே வந்தார். ரெஜினாவும் நகோமியம்மாவும் உள்ளே நுழைந்தார்கள்.

இன்ஸ்பெக்டர், “எங்க, அந்தப் பையனப் புடிச்சீங்களா?” என்று ஆமோஸைப் பற்றி விசாரித்தார்.

சப் இன்ஸ்பெக்டர் சொன்னார், “சார், நைட்டு அவனே ஸ்டேஷன்க்கு வருவான் பாருங்க.”

“ம்ம்ம்” என்றவரின் செய்கை இடிமுழக்கத்திற்கு ஒப்பவில்லை. “சார் அவந்தான் சார் மெயின். அவனப் புடிங்க” என்றார்.

“சார் வெயிட் பண்ணுங்க.”

“என்ன சார் வெயிட் பண்றது? இந்த பொறுக்கிங்க விட்டுருந்தா என்ன கொன்னு போட்டு இருப்பானுங்க” என்று

குணசீலனைப் பார்த்துக் குரலயுர்த்தினார். நியாயப்படி இடிமுழக்கம் வழக்கறிஞரையும் அவர் மகனையும் பார்த்துத்தான் இதைச் சொல்லியிருக்க வேண்டும். ஆனால் அவர் தன் கோபத்தை முழுக்க குணசீலனிடம் பிரயோகித்தார்.

“உன்ன விட மாட்டன்டா சபையவா கொளுத்தப் பாத்தீங்க” என்று அவர் திரும்பவும் குணசீலனைப் பார்த்து ஆள்காட்டி விரலால் எச்சரித்தபோது “ன்னா ரொம்ப ஓவராத்தான் சவுண்ட் குத்துனுகிறீங்க” என்று ரெஜினா இடைமறித்தாள்.

“இவரப் பத்திலாங் சொன்னா நாறிடுங் கத” என்றவளை வழக்கறிஞர் ஆர்வமுடன் பார்த்தார்.

“நானுங் அவ்ளோ நேரங் பாத்துனுகிறேங். உங் வய்சுன்னா, அவர் வய்சுன்னா? உங் இஷ்டத்துக்கு வாடா போடான்னு கூப்ட்னுகிற. சபையில நீங்க பண்ணாத அநியாய அக்குரமத்தயா எங் வீட்டுக்காரம் பண்ணிட்டாங்?”

“ரெஜினாமா வார்த்தையைப் பாத்துப் பேசு” என்றார் இடிமுழக்கத்துடன் வந்த ப்ரதர்.

“ஏய், யார கை நீட்டிப் பேசுற? அந்த ஆளுக்கு மாமா வேல பாக்கிற வேலலாங் வேற யார் கிட்டனா வெச்சுக்கோ.”

“ஏம்மா இங்கலாங் சத்தம் போட்டு பேசக் கூடாது வெளிய போ” என்றார் இன்ஸ்பெக்டர்.

“சார், இருங்க சார் அவங்க ஏதோ சொல்ல வர்றாங்க” என்றார் வழக்கறிஞர்.

இப்போது யாரிடம் சொல்ல வேண்டுமென தெளிவு கிடைத்ததையொட்டி வழக்கறிஞர் பக்கம் திரும்பி முறையிட்டாள்.

“சார் சபையில வர்ற பொண்ணுங்ககிட்ட கொஞ்ச நஞ்சமா சார் பண்ணாரு இவ்ரு. சண்டே க்ளாஸ்

எத்துனுருந்துச்சே அந்த ஜாய்ஸு பொண்ணு இவ்ராலதாங் சார் கொள்த்திகினு செத்துச்சு.''

''ஏ ரெஜினா அபாண்டமா பேசாத'' என்று இடிமுழக்கம் ரெஜினாவை நோக்கி வந்ததை வழக்கறிஞர் தடுத்து, ''இருங்க அவங்க சொல்லி முடிக்கட்டுங்.''

''சார் அந்தம்மா வாய்க்கு வந்தத சொல்லுது, சொல்லி முடிக்கட்டும்ன்னா என்ன அர்த்தம்?'' என்றார் இடிமுழக்கம்.

இன்னும் சத்தத்தை உயர்த்தி ரெஜினா பேசினாள் ''யார் நா வாய்க்கு வந்தத சொல்றனா ...'' என்று தன் இரு கைகளையும் மார்பில் ஒத்தி எடுத்து இடிமுழக்கதைப் பார்த்து நின்றவளை, ''ஏம்மா இப்டி திரும்பு நேரா பார்த்து சொல்லு'' என்று இன்ஸ்பெக்டர் அதட்டலாகச் சொன்னதற்கு இணங்கி அவர் பக்கம் திரும்பி முற்றிலும் வேறு குரலில் அழுவது போலச் சொன்னாள்: ''சார் அழகு பெத்த பொண்ணு சார் அது. இவ்ரால தான் பத்திகிச்சி. வாரவாரங் சபை முடிஞ்சதுக்கு அப்புறங்கூட அந்தப் பொண்ண வீட்டுக்கு அனுப்பாம காணிக்க காசு எண்ணனுங், சண்டேகிளாஸ உன்னுங் எப்டி எப்டிலாங் நடத்தணும்னு சொல்லித் தரேன்னு நாங்கள்லாங் வூட்டுக்கு போன அப்புறம்கூட அந்தப் பொண்ண இருக்கச் சொல்லி பழக்கங் வெச்சிகினாரு சார் இவ்ரு. ஆண்டவர் பொறந்த எடங் பெத்லகேமு, அப்புறங் ஆண்டவர் மலைப்பிரசங்கங் செஞ்ச எடத்தலாங் கூட்னு போய் சுத்தி காமிக்கிறேன்னு வரவங்க வரலாங் தலைக்கு எண்பதாயிரம்னு சபையில வருஷ வருஷாங் அறிவிப்பார் சார். சபை ஜனங்க அவ்ளோ அமவுண்ட் குத்து வர மாட்டாங். ஆனா, ஜாய்ஸு பொண்ண சும்மாவே கூட்னு போறேன்னு இவ்ரு சொன்னுதா அந்தப் பொண்ணு எங்கிட்ட அவ்ளோ சந்தோஷமா சொல்லிச்சு. ஆண்டவர் பொறந்த எடத்த பாக்கப் போறேங் எவ்ளோ மனமகிழ்ச்சியா இருக்குது தெரிமா ரெஜினாமானு சொல்லிச்சு சார்.''

''சார் ...'' என்று இடிமுழக்கம் குரல் கொடுத்ததும் இன்ஸ்பெக்டர், ''சார், நீங்க எல்லாம் கொஞ்ச வெளிய நில்லுங்க இவங்ககிட்ட பேசிட்டு கூப்பிடுறேன்'' என்றார்.

வழக்கறிஞர் வெளியே செல்வதற்குப் பிடிவாதமாக மறுத்தாலும், தன் கனிவான குரலால் இன்ஸ்பெக்டர் அவரை வழி அனுப்பினார்.

“சார், அந்தப் பொம்பள சொல்றது எல்லாங் பொய் சார்.”

“சார், நீங்க மொதல்ல வெளியபோய் நில்லுங்க நா கூப்புடறப்போ வாங்க … ஏம்மா உனக்கு வேற தனியா சொல்லணுமா? போமா, போய் அப்டி வெளிய நில்லு” என்றவரிடம் நகோமியம்மா பதில் பேசாமல் வெளியே போனாள்.

நகோமியம்மாவுக்கு ராமர் தோட்டத்தில் நடக்கும் எல்லாக் குற்றப் பின்னணிகளும், ஊர்க் கிசுகிசுப்புகளும் தெரியும் என்றாலும் ஜாய்ஸ் மரணத்தைப் பற்றி அவளுக்கு ஒன்றுந் தெரியாமல் போனதுகூடக் கவலையில்லை. வீட்டிலேயே ஒருத்தி இத்தனை விஷயங்களையும் தெரிந்துகொண்டு தன்னிடம் பகிராமல் இருந்ததை நகோமியம்மாவின் மனம் ஏற்க மறுத்தது.

ரெஜினாவும், எந்த விஷயம் என்றாலும் நகோமியம்மாவிடம் பகிர்ந்துகொள்வாள் என்றாலும் பாஸ்டர் இடிமுழக்கம் எபினேசர் செய்யும் தவறான காரியங்களைப் பற்றி மட்டும் நகோமியம்மவிடம் மறைத்துவந்தாள். நகோமியம்மாவிடம் சொன்னால் கடைத்தெருவுக்குப் போகிற வருகிற தன் கண்ணுக்குத் தட்டுப்படுகிற அனைவரிடமும் ஐந்து நிமிடத்திற்கு மேல் பேசினால் “இதுக்கு சொல்றியே இத கேளு” என்று கொளுத்திவிடுவாள் என்று பயம். இந்தப் பயத்திற்குப் பின்னணி இடிமுழக்கத்தின் பெயர் கெட்டுப் போய்விடும் என்பதால் அல்ல. சபையையும், சபையின் ஆத்துமாக்களையும் தன் கண்ணின் இமை போல காத்து நடத்தி வந்த பாஸ்டரய்யாவின் பெயரும் கெட்டுப் போகுமல்லவா. தன்னுடைய தாய்சபையில் எத்தனை பேரை கூட்டிக்கொண்டு வந்து ஞானஸ்நானம் எடுக்க வைத்திருக்கிறோம். பின்னர் அவர்கள் முகத்தில் நாமே எப்படி விழிப்பது என்று வருத்தப்பட்டுக்கொண்டிருந்த ரெஜினாவுக்கு தன் கணவனை ஒரு குற்றவாளி போல நடத்துவதைப் பார்த்த பிறகும், அதுவும் இடிமுழக்கம்

குணசீலனைப் பொறுக்கி என்று பலமுறை திட்டியதைப் பார்த்த பின்னரும் அவளால் சும்மா இருக்க முடியவில்லை.

“நீ சொல்லுமா.”

“சார், அந்த பொண்ணு எங்கிட்ட சொல்ற அப்பவே அவர நம்பாதமேனு நா சொன்னேங். அந்தப் பொண்ணு கேக்கல. அவரு பெத்லகேமுக்கு கூட்னு போறார்னு தெரிஞ்ச ஒடனே அந்தப் பொண்ணு இன்னும் இவரு சொல்றதெல்லாம் கேட்டு வயித்துல வாங்கினு வந்து ஒரு நாள் எங்கிட்ட அழையான அழ. அன்னிக்கு நைட்டே பத்திக்கினு ஒடம்புல நெருப்போட ரோட்ல எப்டி நின்னுச்சு தெரிமா அது. ஒரு கத்தல் இல்ல. ஈரக்கோணிய தூக்கினு வந்தவனுங்களகூட கிட்ட சேக்கல. சாவுனொன்னு அவ்ளோ வைராக்கியாங். காலேஜ் பட்சிந்த பொண்ணு சார் அது. அவங்க அப்பங் சென்ட்ரிங் வேல செஞ்சு இந்தப் பொண்ண எவ்ளோ கஷ்டப்பட்டு படிக்க வெச்சாங். இதுக்கு பின்னாடி ரெண்டு சின்னதுங். அவ அம்மாகாரி ‘ன்னா ரெஜினா நீ கூடந்து எம் பொண்ண வுட்டியே‘னு வந்து எங்கிட்ட அழும்போது எனுக்கே பத்திக்கணும் போல இருந்துச்சி சார்.”

“நீயேன் அப்பவே இதெல்லாம் ஸ்டேஷன்ல வந்து சொல்லல?”

“சார் அந்தப் பொண்ணு அவங்கம்மா ‘ரெஜினா விஷியம் உனுக்கு மட்டுந்தான தெரியுங். அப்டியே வெச்சுகோங். எம் பொண்ணு வூட்ல பிரச்சனைனு பத்திகினு செத்ததாவெங் இருக்கட்டுங்‘னு எங்கிட்ட வந்து அழயான அழ சார் நா இன்னா பண்றது?”

“இப்போ உன் வீட்டுகாரர் மேல கேஸ் குடுக்கிறான்னு மட்டும் வாய தொறக்கிரியா நீ?”

தன்னிடம் இதற்கு நியாயமான பதில் இல்லை என்றுணர்ந்த ரெஜினா போதகர் இடிமுழக்கம் எபினேசர் மீது இன்னுமொரு குற்றச்சாட்டை வைத்து தன் சுயநலத்தை இன்ஸ்பெக்டர் கண்டுகொள்ளாமல் இடிமுழக்கம் பக்கம் அவர் திரும்ப வேண்டுமென விரும்பிச் சொன்னாள்.

“சார், ரொம்ப நாளா சபையில இவ்ரு போக்கே செரில்ல சார். தோ இப்போகூட எங்க சபைல லேயாள்னு ஒரு பொண்ணு இருக்குது. நாலு வருஷமா அவங்க வீட்ல மாப்ள பாத்துனுகிறாங்கோ. அந்தப் பொண்ணு விருப்பப்பட்டாக்கூட இவ்ரு வுட மாட்றாரு. அவ அப்பா அம்மாவ கூட்னு வந்து ‘உங்க பொண்ணுக்கு இன்னும் மாலைப் பொருத்தம் கூடி வர்ல தேவ சித்தம் இருந்து இருந்தா அவரே எனுக்கே ஜெபத்துல காட்டிருப்பாரு. கொஞ்ச நாள் இருங்கோ இருங்கோ‘னு அவங்கள ஒருஒரு வாட்டியும் அனுப்பி வுட்டு அந்தப் பொண்ண கூட வெச்சிகினு சுத்தினுகிறாரு. தோ இப்போகூட அது டேஷன் வெளிய நின்னுகிது சார். கூப்ட்டு கேளுங்கோ.”

“ம்” என்றார் இன்ஸ்பெக்டர்.

நீண்ட நாட்களாக மனதில் சேர்த்து வைத்திருந்த குமுறல்களுக்கு ரெஜினா முடிவுரை வழங்கினாள்.

“எங்க பழைய பாஸ்டரய்யா இர்ர்ந்த வரிக்கும் சப நல்லா இர்ந்திச்சி சார். இவருதான் வந்து நாசம் பண்ணாரு.”

“இப்பவும் நீ போறியா அங்க?”

“ஆமா சார். ஆனா முன்ன மாரி இல்ல. எம் பையனுக்கு கொஞ்ச ஒடும்பு செரி இல்ல. இவருகிட்ட சொல்லி பெரிய பாஸ்டருங்கள வெச்சி ஜெபம் செய்றதுக்கு கொஞ்ச நாளா அப்போப்போ இவர பாக்க போறேங்.”

“ஏன் என்ன ஆச்சி உன் பையனுக்கு?”

“கொஞ்ச ஒடம்பு செரி இல்ல சார்.”

“ஏம்மா அதான் உடம்பு செரி இல்லன்னு சொல்ட்டியே. உடம்புக்கு என்ன?”

“எம் பையன் செநேகிதக்காரங் ஒருத்தங் செத்துப் போயி எம்புள்ள மேல ஏறிகினு ஒரே அமுக்களம் பண்ணினுகிறாங் சார்.”

“இப்போ உன் பையன் எங்க?”

“கூட வேல செய்ற பொண்ணு அதுக்கு தெரிஞ்ச ஒரு எடத்துல வெச்சி அவ்னுக்கு வைத்தியம் பாத்துனுகிது. ஆனா அங்கலாங் செரி ஆவாது சார். ஆண்டவர்தான் சார்

எம் புள்ளைய ...'' என்று புலம்பத் தொடங்கியவளை, ''செரி நீ வெளிய நில்லு'' என்றவர் ''தண்டபாணி அண்ணே, அந்த ஆள உள்ள வரச் சொல்லுங்க'' என்றார்.

''யார சார்?''

''அதான் அந்த பாஸ்டராமே அந்த ஆள.''

''ஒக்கே சார்'' என்று அவர் தொப்பியைச் சரி செய்துகொண்டு வெளியே சென்றார்.

ஜாய்ஸ் தற்கொலை விவகாரம் சிந்தாதிரி பேட்டை காவல் நிலையத்திற்கு தெரிந்து இன்ஸ்பெக்டர் முன்னிலையில் அது விசாரிக்கப்பட்ட போது அந்தப் பெண்ணின் தற்கொலை விவகாரம் முற்றிலும் அவளின் தனிப்பட்ட காரணம் என்பது போலச் சித்தரித்ததோடு இடிமுழக்கத்தின் பெயரை ஒருவர்கூட உச்சரிக்காமல் போன நாட்களை நினைவுகூர்ந்து எரிச்சலைடைந்த இன்ஸ்பெக்டர் சற்றுக் காட்டமாகவே தடித்த வார்த்தைகளைப் பயன்படுத்தி இடிமுழக்கத்தை விசாரிக்க ஆரம்பித்தார்.

காவல் நிலைய வளாகத்திலிருந்து வெளியே வந்த ரெஜினாவை வழக்கறிஞர் துருவினார். இன்ஸ்பெக்டரிடம் சொன்னதை தன்னிடமும் சொன்னால் மட்டுமே இடிமுழக்கதிற்கு தண்டனை வாங்கித்தர முடியும் என்றவரிடம் வாக்குமூலம் அளிப்பதற்கு முன் "அது சொல்றேங் சார். எங்க வீட்டுக்காரர உள்ள இர்ந்து கூட்னு வாங்க" என்றாள் ரெஜினா.

"ஏம்மா, அது இன்னா பிஸ்கோத்து மேட்ரு. நீ அந்த ஆளப் பத்தி உள்ள சொன்னியே அத முழுசா சொல்லு. இந்தா இப்டி வா" என்றார் வழக்கறிஞர். அவருக்கு அருகில் இருந்த நகோமியம்மா அதைக் கேட்க ஆர்வம் இல்லாதது போலவும் அதே சமயம் அங்கிருந்து நழுவ விரும்பாதவாறும் அழுத்தமாக வேறு பக்கம் பார்த்து நின்றிருந்தாள்.

விசாரணைக்குப் பிறகு இடிமுழக்கத்தின் மீது குற்றங்கள் இருப்பது இன்ஸ்பெக்டருக்கு உறுதியானது.

ரெஜினாவிடம் எல்லாத் தகவல்களையும் பெற்றுக் கொண்ட வழக்கறிஞர் தனக்குத் தெரிந்த நண்பர்களின் மூலமாக ஒரு காட்சி ஊடக நிலையத்திற்கு விஷயத்தைப் பற்ற வைத்தார்.

இடிமுழக்கத்தினால் பாதிக்கப்பட்ட பெண்களின் குடும்பங்களை ரெஜினாவின் துணையுடன் வழக்கறிஞர் நேரில் போய் சந்தித்து அவர்களின் முகம் மற்றும் பெயர்கள் வெளியே தெரியாதவாறு விஷயத்தைக்

கொண்டு செல்லலாம் என உறுதி அளித்ததன் பேரில் ஓரிரு தினங்களில் இடிமுழக்கம் எபினேசரின் பெயர் பிரபலமானது. அவர் செய்த காரியங்கள் வாய்ச் சொல்லாக ஒருவர் வாயிலிருந்து இன்னொருவர் வாய்க்குத் தாவித் தாவி ராமர் தோட்டத்திலும் சபை வட்டாரங்களிலும் பூதாகரப்படுத்தப்பட்டன. “இளம்பெண் ஜாய்ஸ் தற்கொலைக்கு கிறிஸ்தவப் போதகர் இடிமுழக்கம் எபினேசர்தான் காரணம் என்றும் சபைக்கு வரும் பெண்களிடம் அவர் பாலியல் துன்புறுத்தல் செய்ததாகவும் செய்திகள் வருகிற வேளையில் இங்கிருக்கும் ராமர் தோட்டம் பகுதிப் பெண்களிடமே கேட்போம்”

என்று தோட்டத்தில் கேமராவும், சிறிய மைக்கும் வைத்துக்கொண்டு கருத்துக் கேட்க வந்த ஊடக நிருபரிடம் நகோமியம்மா பேசினாள். போதகர் இடிமுழக்கம் எபினேசர் செய்த ஒவ்வொரு காரியத்தையும் நேரில் நின்று பார்த்ததுபோல நகோமியம்மா பேசியது ஊடக நிருபருக்குக் கொண்டாட்டமாக இருந்தது. அழுது கொண்டே பேசி முடித்த நகோமியம்மா கண்களைத் துடைத்துக்கொண்டு, “எப்பா இது டீவில எப்ப வருங்?” என்றாள்.

இடிமுழக்கம் கைது செய்யப்பட்ட பிறகு சிந்தாதிரிப்பேட்டையிலுள்ள ஒவ்வொரு சபை போதகர்களையும் காவல் நிலையத்திற்கு வரச் சொல்லி இன்ஸ்பெக்டர் விசாரணை நடத்தினார். அவர்களுக்குச் சில கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. மொத்தம் இருபத்தி ஆறு சபை போதகர்கள் வந்திருந்ததைப் பார்த்து ஒரு ஏரியாவில் இத்தனை சபைகளா என்று இன்ஸ்பெக்டர் துணுக்குற்றார்.

இவற்றுக்கெல்லாம் முதற்கண்ணாக விளங்கிய ‘இயேசு கிருபையின் சுவிசேஷ ஜெப வீடு’ சபையின் குடும்பத்தினர் இடிமுழக்கம் கைது செய்யப்பட்டு அவரால் ஏற்பட்ட விசாரிப்புகளாலும் அவமதிப்புகளாலும் சோர்ந்துபோய் மதுரைக்கே இடம் பெயர்ந்தனர். இடிமுழக்கமும் விடுதலையான பின்னர் ராமர் தோட்டத்திற்கு வராமல் அவரும் மதுரைக்கே சென்றார். சபை இருந்த கட்டிடத்தை அவர் விற்றுவிட

இருப்பதாகச் செய்தி பரவியது. அதே இடத்தில் இன்னொரு சபை நடத்துவதை மற்ற சபை போதகர்கள் விரும்பவில்லை அது தங்களுக்கு நன்மதிப்பைப் பெற்றுத் தராது என்று அமைதி காத்தனர். சபை பூட்டப்பட்டு மூன்று மாத காலத்திற்கும் மேல் அது முன்பிருந்த ஆரவாரத்திற்கு முற்றிலும் மாறாகப் பாழடைந்த மண்டபம்போல் நின்றிருந்தது.

பிரபல போதகர்களை அழைத்துவந்து ஜெபம் பண்ண முடியாத சூழலைத் தானே உருவாக்கி விட்டதால் மகனைக் காப்பகத்திலிருந்து அழைத்து வருவது நல்ல முடிவல்ல என்று உணர்ந்த அவனை அங்கேயே சிகிச்சை பெற்றுவர ஒத்துழைத்தாள் ரெஜினா.

மருத்துவர்களின் அனைத்து சோதனைகளிலும் வெற்றிகண்ட ரூபன் குணமாகிவிட்டானென்று அவனை அழைத்துப்போகச் சொல்லி உபாசனாவின் மூலம் ரெஜினாவுக்கு அழைப்பு வர, இவாஞ்சலின் உட்பட குடும்பமாக இரும்புலியூர் காப்பகத்திற்குச் சென்று அவனை ராமர் தோட்டத்திற்குக் கூட்டி வந்தார்கள்.

அவனுக்கு மனநிலை சரி இல்லாமல் இருந்ததாகவும் அது தற்போது சரி ஆகிவிட்டதெனவும் போன்ற தருணங்களை அவனுக்கு நினைவூட்டாமல் மிக இயல்பாக குடும்பத்தார் நடந்துகொண்டது அவனுக்கு ஆறுதலாக இருந்தாலும் அவர்களின் செயற்கைத்தனம் ஒரு கட்டத்தில் எரிச்சலாக இருந்தது. வீட்டுக்கு வந்த ஒரு வாரத்தில் அவன் வேலைக்குப் போக விரும்பினான். மருத்துவரின் சான்றிதழுடன் அவன் விஷால் அணியில் சேர்ந்து பணி செய்யத் தொடங்கியிருந்தான். அவன் இயல்பு வாழ்க்கை வாழ ஆரம்பித்ததும் நகோமியம்மா திரும்பவும் தான் ஆட்சிக்கு வந்ததுபோலத் தோட்டத்தில் நடமாடினாள். மாலை நேரத்தில் அவன் வீட்டில் இருக்கும் நேரம் பார்த்து பூபாலன், பூங்கொடி இருவரும் அவனைப் பார்த்துப் பேசிவிட்டுப் போனார்கள். யோசேப்பு ஐயப்பனுக்கு மாலை போட்டுக் கழற்றியதிலிருந்து திரும்பவும் அன்றாடக் குடிக்குப் பழக்கமாகி இருந்ததால் அவனுக்கு ரூபனைச் சந்திக்கத் தயக்கமாக இருந்தது. ரூபனே ஒருநாள் யோசேப்பை வழியில் சந்தித்து இயல்பாக உரையாடிய மகிழ்ச்சியைக்

கொண்டாடும் விதமாக ரூபனிடம் இருநூறு ரூபாய் வாங்கிக்கொண்டு கடை மூடுவதற்குள் ஓடினான்.

ரூபனின் மனப் பிறழ்வுக்கு சௌமியனை ஒவ்வொருவரும் காரணப்படுத்தி மறைமுகமாகவும் நேர்ப்பேச்சிலும் குறிப்பிடுவதைத் தவிர்க்க விரும்பி தான் நாவல் எழுதுவதற்காகத்தான் இம்மாதிரி காரியங்களில் ஈடுபட்டேன் என்று குடும்பத்தாரை நம்ப வைக்கும் தருணங்களை உருவாக்க முயற்சி செய்தான். அதில் முதல் கட்டமாகக் கிள்ளிவளவனை வீட்டிற்கு வரவழைத்துத் தான் எழுதப்போகும் நாவல் பற்றி மற்றவர்கள் முன்னிலையில் கலந்துரையாடினான். கிள்ளிவளவனின் தோற்றத்தைப் பார்த்த நகோமியம்மா "யார் இந்தாளு பலூனு விக்கிறவங் மாரிகிறானே" என்று ரெஜினாவிடம் குறைப்பட்டுக்கொண்டாள்.

ரூபன் இவாஞ்சலினுடன் அலைபேசியிலும் நேரிலும் உரையாடுகையில் தான் எழுதப்போகும் புத்தகத்தைப் பற்றி அதிகம் பேசிப்பேசித் தனக்கு மனப் பிறழ்வு என ஒன்று உண்டாகவில்லை எனவும் தானாகவே அதை உருவாக்கிக்கொண்டேன் எனவும் அவளிடம் சொல்ல முயற்சி செய்தான். அவனை அவள் அனுதாபமாகப் பார்த்தாள் எனினும் அதை வெளிக்காட்டிக்கொள்ளாமல் அவனின் செயல்களுக்கு ஊக்கம் கொடுத்தாள்.

இவாஞ்சலின் அம்மாவிற்கு அவள் காதலிப்பது தெரிந்ததும் அவள் அம்மா சிலேட்மேரி ஜாதி வேறுபாட்டை முன் வைத்துப் பிடிவாதமாக மறுத்தாள். இருவரும் எஸ்.சி.தான் என இவாஞ்சலின் சொல்லியும் சிலேட் மேரி கேட்கவில்லை. அவர்கள் பள்ளர்கள் எனவும் இவாஞ்சலின் திருமணம் செய்ய விரும்புபவன் பறையர் எனவும் தங்களைவிடத் தாழ்ந்த ஜாதி எனவும் சொல்லி சொந்தங்கள் இந்த திருமண பந்தத்தைப் புறக்கணிப்பார்கள் என்று அவள் இவாஞ்சலினிடம் சண்டை பிடித்தாள். குடும்பத்திற்காக இருவரும் செய்த தியாகங்களை மாறி மாறி சொல்லி அழுது கொண்டார்கள். ஆனால் இவாஞ்சலின் உறுதியாக இருந்தாள். ரூபனைத் திருமணம் செய்யச் சம்மதிக்கவில்லை என்றால் தேவிகுளம் பக்கமே தான் திரும்பப்போவதில்லை என்று சொல்லிப் பிறகு ஒரு

வாரம் அம்மாவிடமும் தங்கையிடமும் செல்போனில் பேசுவதை முற்றிலுமாக தவிர்த்தாள். பெண் கையை விட்டுப் போய்விடுவாளோ என்கிற பயத்தில் ஒப்புக்கொள்வதாகச் சொன்னாள் சிலேட்மேரி.

ரெஜினாவிடம் சிலேட்மேரி தன் மகளைப் பெண் பார்க்க வீட்டுக்கு வரச் சொல்லிப் பேசினாள். தன் வீட்டுக்காரரிடமும் இதைத் தெரிவிக்க வேண்டுமென விருப்பப்பட்ட ரெஜினா செல்போனை குணசீலனிடம் கொடுத்துப் பேசச் சொன்னாள். ரூபனும், இவாஞ்சலினும் இதைப் பார்த்து ரசித்தபடி நின்றிருந்தார்கள். குணசீலன் பேசிவிட்டு “எங்கம்மா கிட்ட ஒருவார்த்த சொல்லிடுங்க” என்று நகோமியம்மாவிடம் அலைபேசியைக் கொடுத்தார். நகோமியம்மா ஏதோ கோழிக்குஞ்சைக் கையில் வாங்குவது போல செல்போனை வாங்கிப் பேசி சிலேட்மேரி சொல்வதைக் கேட்டுக் குளிர்ந்து போனாள்.

ஒரு வெள்ளிக்கிழமையன்று இவாஞ்சலின், ரூபன், நகோமியம்மா, ரெஜினா, குணசீலன் ஐந்து பேரும் கோயம்பேட்டிற்கு வந்ததடைந்து அங்கிருந்து தேனி போகும் பேருந்தில் ஏறி, தேனியிலிருந்து மூணார் போகும் பேருந்தில் ஏறி, இவாஞ்சலின் வீட்டுக்குப் போகத் திட்டமிட்டு அதைச் செயல்படுத்தத் துவங்கினார்கள். பயணத் தலைவியாக இவாஞ்சலின் மற்றவர்களை வழிநடத்தினாள்.

விடியற்காலை மூன்று மணிக்கு வண்டி தேனி பேருந்து நிலையத்தில் நின்றதும் நகோமியம்மா மிகவும் சோர்வாகக் காணப்பட்டாள். தன் வாழ்நாளில் அவள் இவ்வளவு தூரம் எங்குமே பயணம் செய்ததில்லை. அவளுடைய உலகத்திலிருந்து வெகு தூரம் விலகி வந்துவிட்டதைப் போல உணர்ந்தாள். இரண்டு போர்வை அவள் மீது போர்த்தப்பட்டபோதும் கூட அவள் நடுங்கிக்கொண்டே இருந்தாள். இனி தன்னால் எங்குமே வர முடியாது எனச் சொல்லித் துயரப்பட்டவளுக்கு ஒரு கோப்பை தேநீர் வாங்கித் தந்ததும் தெம்பு வந்தததைப் போலக் காணப்பட்டு அங்கு போய்வந்துகொண்டிருந்த மனிதர்களைக் கேலி கிண்டல் செய்து பேசினாள்.

தேனியிலிருந்து மூணாறுக்குச் செல்லும் பேருந்தில் ஏறிய கொஞ்ச நேரத்திலேயே ஸ்தோத்திர பலி படித்துக்

கொண்டிருந்த ரெஜினாவுக்கு உடல் கிரக்கம் காண ஆரம்பித்தது. மகனுக்குப் பெண் பார்க்கப் போகிறோம் என்கிற குதூகலம் கோயம்பேட்டில் இருந்து கொஞ்சங் கொஞ்சமாக விலகி வண்டி போடிமெட்டில் தேநீர்க்காக நிறுத்தப்பட்டதும் முழுதும் வற்றிப்போய் எப்போது ஊருக்குத் திரும்பிப் போவோம் என்பது போலத் தலையில் கை வைத்து உட்கார்ந்திருந்தார் குணசீலன். போடிமெட்டுக் குளிரில் நகோமியம்மா ஒரு நடைபிணம் போலவே காணப்பட்டாள். அவள் பேசும்போது அவள் வாயிலிருந்தே புகை வருவதைக் கண்டு பயந்து போனவளை இவாஞ்சலின் ஆற்றுப்படுத்தி நகோமியம்மாவைக் கீழே இறங்கச் சொல்லிக் கூப்பிட்டாள். வர மறுத்து, 'இன்னுங் எவ்ளோ தூரங் எம்ம்மா உங்க வீட்டுக்குப் போகுணுங்' என்கிற கேள்வியை செய்கையால் கேட்டு இவாஞ்சலின் சொன்ன பதிலில் திருப்தியுறாமல் தன் பழைய நிலைக்குச் சென்றாள். போடிமெட்டிலிருந்து மூணார் நோக்கிச் சென்ற வண்டி கொண்டை ஊசி வளைவுகளில் திரும்பித் திரும்பி ஊர்ந்ததில் குடை ராட்டினத்தில் சுற்றிவிட்டு இறங்கியது போல உணர்ந்த நகோமியம்மா வாந்தியான வாந்தி எடுத்தாள்.

இவர்கள் இவ்வளவு அல்லலுறுவார்கள் எனத் தெரிந்திருந்தால் சென்னையிலிருந்து உடுமலைப்பேட்டை வழியாக மூணார் செல்லும் பேருந்தில் ஏறி இருக்கலாம் என்கிற எண்ணத்தை ரூபனிடம் சொல்லி வருத்தப்பட்டவளிடம் ரூபன் தன் கண்டனத்தைப் பதிவு செய்தான்.

போடிமெட்டிலிருந்து இரண்டு மணி நேரம் பேருந்து ஆடாத ஆட்டமெல்லாம் ஆடி ரூபன் குடும்பத்தாரைக் கலங்க வைத்து அவர்கள் இறங்க வேண்டிய லாக்காடு எஸ்டேட் பேருந்து நிலையத்தில் இறக்கிவிட்டது.

நகோமியம்மா மேல்மூச்சு வாங்க, "எம்மா உங்க வீடு எங்கதாங் இருக்குது?" என்றாள். அவளுக்கு மப்ளர் கட்டப்பட்டு காதில் பஞ்சு சொருகப்பட்டு எல்லா கதகதப்புக் காரியங்களும் செய்த பின்னரும் உடம்பு குளிரில் உறைந்து குரல் தேய்ந்துபோய் ஒலித்தது.

“அதோ அங்க பாருங்க” என்று தொலைதூரத்தில் இருக்கும் லைன்ஸ் வீடுகளைக் காட்டி “அங்கதான் பாட்டி” என்றாள். அவள் விரல் காட்டிய தூரம் வரைக்கும் நகோகியம்மாவால் பார்வையைச் செலுத்த முடியவில்லை.

குருசுமலை அடிவாரத்திற்கு எதிரே இருக்கும் தேவிகுளம் எஸ்டேட் நோக்கி அவர்கள் நடந்தார்கள். வரும் வழியில் விசாரிப்பவர்களிடம் முகத்தில் வெட்கம் துலங்க இவாஞ்சலின் சொல்லிச் சிரிக்க, அவர்கள் அனைவரையும் ஒரு விரோதியைப் பார்ப்பதுபோலப் பார்த்தாள் நகோமியம்மா. ரெஜினா ஸ்தோத்திரம் ஸ்தோத்திரம் என்று முணுமுணுத்துக்கொண்டே நடந்தாள். குணசீலன் ஏதோ வேற்று உலகத்திற்கு நுழைந்துவிட்டதைப் போல ஆச்சரியமும் அதிர்ச்சியும் கலந்த தோரணையில் மலையையும், தேயிலைக் காட்டையும் சுற்றிச் சுற்றிப் பார்த்து வந்தார்.

ஒருவழியாக லைன்ஸ் பகுதிக்கு வந்தவர்களை சிலேட் மேரி குடும்பம் வாசலில் நின்று வரவேற்றது. அவர்கள் உள்ளே நுழைந்ததும். ஒருவருக்கொருவர் ஸ்தோத்திரம் பரிமாறிக்கொண்டார்கள். இவாஞ்சலின் இருதரப்பையும் அறிமுகப்படுத்தினாள்.

தேநீர் வழங்கப்பட்டதும் ஒரு மிடறு குடித்துவிட்டு “ன்னாமா இவ்ளோ தண்ணியாகிதே” என்றாள் நகோமியம்மா.

பக்கத்துக்கு வீட்டிலிருந்து வந்த பெண்மணி நகோமியம்மாவிடம் சிரித்துக்கொண்டே சொன்னாள், “எங்களுக்கு பால்டீ போடத் தெரியாது பாட்டி. தேலத்தண்ணிதான்”

“அது இன்னவோ” என்று அலுத்துக்கொண்டவள் சுவரில் மாட்டப்பட்டிருந்த இவாஞ்சலின் அப்பா புகைப்படத்தைப் பார்த்து “இவ்ருதான் உங்க அப்பாவாமா?” என்றாள்.

“ஆமாங்க பாட்டி.”

“எப்டி செத்தாரு?” என்று குணசீலன் கேட்டார். முன்னரே காரணம் சொல்லித்தான் ரூபன் கூட்டி வந்திருந்தான்

எனினும் குணசீலன் அந்த இடத்தில் ஏதாவது பேசி, தான் கேட்ட கேள்விக்கு அவர்கள் வருத்தப்பட்டு பதில் சொல்வதன் மூலம் தனக்கு ஒரு முக்கியத்துவம் கிடைக்கும் என்று கேட்டார்.

சிலேட் மேரியின் நாத்தனார் குணசீலனிடம் சொன்னாள் “ஆன மிதிச்சி எறந்தாருங்க.”

“யானையா, எப்டி?” என்றாள் நகோமியம்மா.

“இங்க நீங்க பஸ்ல இருந்து எறங்கி இருப்பீங்கள்ல அங்க வனத்த சின்னப்பர்னு ஒரு கோவில் இருக்குங்க. அண்ணன் தினமும் காலையிலயும் சாயுங்காலமும் அந்தக் கோவிலுக்குப் போய் மெளுகுவதிட்டு ஏத்திட்டு வருவாங்க. ஒருநாள் சாயுங்காலம் வத்தி கொளுத்திட்டு திரும்பி நடந்து வரும்போது பாத்துருக்கு ஒரு வத்தி காத்துல அனஞ்சிப்போச்சி. செரி திரும்பப் போய் கொளுத்தலாமேனு கொளுத்திட்டு பின்னால திரும்பி இருக்கு ஆன நின்னுருக்கு. மெரண்டு போய் அண்ணன் அலறவும் ஆன தும்பிக்கைல அவர பிடிச்சி இழுத்து காலுக்கு அடியில கொண்டு போய்டுச்சுங்க” எனச் சொல்லி மூக்கை உறிஞ்சினாள்.

“இங்கரு விஜயா, நல்ல விஷயம் பேச வந்து இருக்கிறவங்கள என்ன இது. நம்ம அந்துமணிக்கு வாழ்க்கை அவ்ளோதான்னு இருக்கு விடு. வந்தவகவளுக்கு தண்ணி வெச்சுக் குடுங்க. குளிச்சு சாப்புட்டுடு கொஞ்ச நேரம் தூங்கட்டும் மத்த விவகாரம்லாம் பிறகு பேசிக்கலாம்” என்றார் இவாஞ்சலினின் பெரியப்பா.

“ஆங் நல்ல கதயாகிதே ... நீங்க சம்மதம் சொல்லாம நாங்க கை நெனிக்க மாட்டோங்” என்றாள் நகோமியம்மா.

எல்லாப் பேச்சுவார்த்தைகளும் நல்லபடியாக முடிந்து ஐந்து மாதத்தில் திருமணம் வைக்கலாம் என்று முடிவு செய்யப்பட்டது.

~

இயேசு கிருபையின் சுவிசேஷ ஜெப வீடு விற்பனைக்கு வருகிறது என்கிற செய்தி பாலுவுக்குத் தெரிந்ததும் அதை

வாங்க வேண்டுமென விருப்பப்பட்டான். ராமர் தோட்டத்தில் சிலருக்கு அந்த வீட்டை வாங்குவதற்கு இருந்த போட்டியில் பாலு வெற்றி பெறுவதற்கே வாய்ப்பு பிரகாசமாக இருந்தது. சிந்தாதிரிப்பேட்டையில் அவன் பிரபலம் என்பதால் ஊரின் சில முக்கியப் புள்ளிகள் அவனுக்கு ஆதரவாக இருந்து இடிமுழக்கத்திடம் பேசி முடித்துக் கொடுத்தார்கள்.

அந்த வீட்டை வாங்கும் அளவுக்கு பாலுவிடம் பணம் சேர்ந்த வழி மாசிலாவும், லாரன்ஸும் அவனுக்குக் காட்டிய பாதைக்கு நேரெதிரானதாகும். பாலு மத்திய அரசில் வேலை செய்தாலும் வேலை முடித்து வீட்டுக்குக்கூட வரமால் அவன் ‘பெட்டிங்’ ஆட ஆரம்பித்ததால் அவனிடம் லட்சக் கணக்கில் பணம் சேர்ந்திருந்தது. அதே நேரம் அவன் அதிகம் ஆசைப்படாதவனாகவும் இருந்து கவனமாக ‘பெட்டிங்’ ஆடிவந்தான். இந்த வீட்டை வாங்கி, தான் நீண்ட நாட்களாக நிறைவேற்ற வேண்டுமென ஆசைப்பட்டிருந்த கனவை நினைவாக்க வேண்டுமென ஆர்வமாக இருந்தான். இதற்கிடையில், அவனுக்கு பிலோமினாவைப் பிடித்துப் போக அவர்களுக்குள் காதல் வளரவும் ஆரம்பித்தது. லாரன்ஸ் இறப்புக்கு வந்தவன் காபி கொண்டுவரும்போது முதன்முறை அவளைப் பார்த்தபோதே அவள் மீது மையல் கொண்டு கல்யாணத் தீர்மானம் செய்து அதைத் தவணை முறையில் அவளிடம் வெளிப்படுத்தி வந்தான்.

வீடு வாங்குவதற்கு முன் திருமணத்தை உறுதி செய்துகொள்ளலாமென தன் அப்பாவைக் கூட்டிக் கொண்டு பூபாலன் வீட்டுக்கு சம்மதம் பேசப் போனான். பூபாலனுக்கு சந்தோஷமென்றால் சந்தோஷம். ஊரில் பிரபலமான கேரம் விளையாட்டு வீரன், மத்திய அரசு ஊழியன் தன் மகளைப் பெண் கேட்டு வந்திருப்பதை நினைத்துப் பூரித்துப்போனார். தன் மகளை சௌமியனுக்கு மணமுடிக்க நினைத்து, ரூபனுக்கு மணமுடிக்க நினைத்து, முடியாமல் ஏங்கிப் போன நாட்கள் எவ்வளவு நல்ல விதமான முடிவைத் தந்திருக்கின்றன என்றெண்ணி மகிழ்ந்தார்.

பாலு, இயேசு கிருபையின் சுவிசேஷ ஜெப வீட்டை வாங்கினான். பணம் வாங்குவதற்கு இடிமுழக்கம் சென்னை வந்தார் என்றாலும் சிந்தாதிரிப்பேட்டைக்கு அவர் வரவில்லை. பாலுவும் அவன் அப்பாவும் பணத்தை நேரில் கொண்டுபோய் தந்தார்கள்.

வீடு ரொம்பவும் பழுதடைந்து இருப்பதால் அதிலேயேத் தொடர்வது ஆபத்தானது என்று அதை இடிக்க உத்திரவிடப்பட்டது. சபை இடிக்கப்படுவதாகவே தோட்டத்துவாசிகள் எண்ணி வருத்தப்பட்டனர். ராமர் தோட்டத்தில் எத்தனை பேரை இரட்சிக்கச் செய்த சபை, எத்தனை பேர் நோய்களை சொஸ்தப்படுத்திய சபை, எவ்வளவோ ஊழியக்காரர்கள் வந்து பிரசங்கம் செய்த சபை, பாஸ்டரய்யா தன் உயிராக நினைத்து பேணிக் காத்துவந்த சபை இடிக்கப்பட்ட அன்றைய தினம் தாய்ச் சபை வாசிகளை சஞ்சலப்படுத்தியது.

இடிக்கப்பட்ட ஐந்து மாதங்களில் இரண்டு மாடிக் கட்டிடமாக அது கட்டப்பட்டது. தன் கனவை நிறைவேற்றிப் பார்க்க வேண்டுமென்கிற துடிப்பில் வேகவேகமாக அது எழுப்பப்பட வேண்டுமென அவன் விரும்பியதைப் போலவே வீடு கட்டி முடிக்கப்பட்டது. வீட்டின் முகப்பில் “மாசிலா இல்லம்” என்கிற பெயர் பொறிக்கப்பட்டு அதற்குத் தங்க நிறத்தில் வர்ணம் பூசப்பட்டிருந்தது.

புதுமனை புகுவிழா தினத்தன்று அந்தத் தெருவுக்கே நிழல் தரும் வகையில் பெரிய சாமியான பந்தல் போட்டு ஆயிரம் பேருக்கு அன்னதானம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. பாலுவின் அப்பாதான் கண்கலங்க அந்த அன்னதானத்தைத் துவக்கிவைத்தார்.

அவன் ஏற்கனவே திட்டமிட்டதுபோலவே அந்த வீடு கட்டப்பட்டிருந்தது. தரைத்தளத்தில் எந்த அறைகளும் இல்லாமல் விசாலமாக இருந்தது. அங்கு ராமர் தோட்டத்துப் பிள்ளைகளுக்கு இலவச இரவுப் பாடசாலை நடத்துவதாகத் திட்டம். ஏற்கனவே அம்பேத்கர் இரவுப் பாடசாலை நடந்துகொண்டிருந்த இடம் அதனுடைய உரிமையாளரால் தன் சொந்த உபயோகத்திற்காக எடுத்துக்கொள்ளப்பட்டதால் நான்காண்டுகளாக அங்கே நடைபெறமால் போயிருந்த

இரவுப் பாடசாலைக்குத் தன் வீட்டின் தரைத்தளத்தை இலவசமாக பாலு கொடுத்திருந்தான். மாதம் பத்துது ரூபாய், இருபது ரூபாய் என ஒவ்வொரு பிள்ளையிடமும் கட்டணம் வசூலிக்கப்பட்டு மின் கட்டணம், இன்ன பிற பராமரிப்புச் செலவுக்காக அது பயன்படுத்தப்பட்டது.

முதல் தளம் நான்கு சிறிய அறைகளாக வகுக்கப்பட்டு “போர்டு ரூம்” வைப்பதற்கான ஏற்பாடுகள் நடைபெற ஆரம்பித்தன. அதில் ஒரு அறை சிறுமிகள், பெண்கள் விளையாடுவதற்கு என்று திட்டமிடப்பட்டது.

எக்காரணத்தைக் கொண்டும் போர்ட் ரூமில் பெட்டிங் ஆடுவதற்கு அனுமதி இல்லை. குடித்துவிட்டு உள்ளே வருபவர்களுக்கு அனுமதி இல்லை. பாக்கு, மாவா போன்றவற்றை உள்ளே பயன்படுத்தக் கூடாது. ‘போர்டு காசு’ கொடுத்தால் மட்டும் போதும். என்கிற விதிமுறைகளுடன் அது கட்டப்பட்டது. மூன்று மாதத்திற்கு ஒருமுறை சுற்றுப் பகுதிகளைச் சேர்ந்த பிளேயர்களைத் தன் போர்டு ரூமுக்கு அழைத்து வந்து பாலுவே டோர்னமென்ட் நடத்த வேண்டிய திட்டமும் அவனுக்கு இருந்தது. தனக்குக் கிடைக்கூடிய உபரி நேரங்களில் விருப்பப்படும் பிள்ளைகளுக்கு ஆட்ட நுணுக்கத்தைச் சொல்லித்தரும் மனநிலையிலும் இருந்தான். தன் வீட்டில் அவன் நடத்தும் ‘போர்டு ரூம்‘க்கு கடுமையான விதிமுறைகளைப் பின்பற்ற வேண்டுமென விருப்பப்பட்டான். இதைத்தான் மாசிலா விரும்பினார். மாசிலாவின் ஒவ்வொரு கனவுத் திட்டத்தையும் நிறைவேற்றுவதற்கு அவருக்கு ஒவ்வாத வழியான ‘பெட்டிங்’ ஆடித்தான் சம்பாதித்தான் என்றாலும் இப்போது அவருடைய கனவு நினைவாகிக் கொண்டிருப்பதை ஒரு சாட்சியாக அவனே அதை பார்த்துக்கொண்டிருப்பது அவனுக்கு அத்தனை மகிழ்ச்சியாக இருந்தது.

இரண்டாவது தளம் அவன் சொந்த உபயோகத்திற்கெனக் கட்டப்பட்டது.

பாலுவின் அப்பா மொட்டை மாடியில் நின்று தனக்குக் கீழே இருக்கும் ராமர் தோட்டத்தை ஒரு பெருமிதத்துடன் பார்த்துப் புன்னகைத்தார். இனி இவர்கள் தன் சந்ததியை

தவுடாசோறு எனக் கூப்பிட மாட்டார்கள் என்கிற நம்பிக்கை அவருக்கு வலுவாகி அது அவர் கண்களில் நீர் சுரக்க வைத்தது.

மாசிலா இல்லத்தின் மூன்று தளங்களிலும் அதன் தேவைக்கு ஏற்ப உட்கட்டமைப்பு செய்து முடித்த பிறகு திறப்பு விழா ஏற்பாடு செய்திருந்தான் பாலு. அதன்படி தரைத்தளத்திலுள்ள அம்பேத்கர் இரவுப் பாடசாலையை முன்னாள் மாவட்ட ஆட்சியர் கிறிஸ்துதாஸ் காந்தி திறந்துவைத்தார். முதல் தளத்திலுள்ள போர்ட் ரூமை இரண்டு முறை கேரம் உலக சாம்பியன் பட்டம் வென்ற மரிய இருதயம் ஒரு ஸ்ட்ரோக் அடித்து துவக்கி வைத்தார். ராமர் தோட்டத்தில் கிருபையின் சுவிசேஷ வீடு இருந்த இடத்தில் 'மாசிலா இல்லம்' ஒரு கல்விக்கூடமாக, விளையாட்டுப் பயிற்சிக் களமாகப் பரிமளிக்க ஆரம்பித்தது.

~

நகோமியம்மாவுக்கு மூட்டு வலி அதிகமாகி அவளால் நடக்க முடியாத நிலையில் ரொம்பவும் சுகவீனப்பட்டுப் படுத்திருந்தாள். மதிய நேரம். வீட்டில் இவாஞ்சலினைத் தவிர யாருமில்லை. ரெஜினா புரசைவாக்கதிலுள்ள ஒரு சபைக்குச் செல்ல ஆரம்பித்து தன் ஆன்மிகப் பணியைச் செய்வதற்குச் சென்றிருந்தாள். ரூபன் வேலைக்குச் சென்றிருந்தான். பூபாலன் சிபாரிசு செய்ததன் பேரில் குணசீலனுக்கு ஒரு ஏ.டி.எம்.மில் காவலாளியாக வேலை கிடைத்திருந்தது. வேலைக்கு போக வேண்டாமென குணசீலனிடம் சொல்லியும் அவர் தன் கைச்செலவுக்கு யாரையும் எதிர்பார்க்கத் தயாராய் இல்லை என்று வேலைக்குப் போக ஆரம்பித்திருந்தார். இவாஞ்சலின் மூன்று மாத கர்ப்பிணியாக வீட்டில் இருந்து மேல்வேலைகளைச் செய்து நகோமியம்மாவிற்குத் தேநீர் போட்டுக் கொடுத்து, "போர் அடிக்குது பாட்டி எதுனா கத சொல்லுங்களேன்" என்றாள்.

நகோமியம்மா எழுந்து உட்காருவதற்கே சிரமப்பட்டு மூச்சைப் பிடித்து இவாஞ்சலினின் உதவியுடன் அமர்ந்து தேநீர்க் கோப்பையிலுள்ள தேநீரை ஊவென்று ஊதிக்

குடிக்கத் தொடங்கி ஒரு மிடறுச் சுவைத்த பின் “ன்னா கதமா” என்றாள் சோர்ந்த குரலில்.

“இல்ல ரெஜினா ஆன்ட்டி இருக்காங்கள்ல, அவங்க கூட மேரேஜ் ஆன புதுசுல எப்டி எப்டியோ ரியாக்ட் பண்ணாங்களாமே?” என்றாள்.

நகோமியம்மா தனக்கு எதிரே மாட்டப்பட்டிருந்த கிளியாம்பாளின் புகைப்படத்தைப் பார்த்து, இவாஞ்சலினை நோக்கி, “அதயேங் கேக்குற ...” என்று ராகம் போட ஆரம்பித்தாள்.

## வட்டார வழக்குச் சொற்கள்

துபாஷிகள் - மொழிபெயர்ப்பாளர்கள்

காருங்கே - கருங்குரங்கு

கூபம் - கிணறு

மாப்பிள்ளைச் சவரம் - மாப்பிளைச் சவரம் என்பது திருமணத்திற்கு முதல்நாளின்போது மணமகனின் பிறப்புறுப்பைச் சுற்றி உள்ள ோமங்களை மழித்தல்

நேப்பியர் பார்க் - மே தின பூங்கா

ஜிம்பினான் - திமிறினான்

மலாய் - பாலேடு

போச்சடிக்க - இந்தியில் பேசும் வசைச்சொல்

ஜப்று - தப்பித்தல்

கட்லீஸ் - கடலைமாவு உடன் மாட்டுக்கறியை சேர்த்து செய்கின்ற திண்பண்டம்.

ஜோத்தாலை - அகன்ற வாயுள்ள செம்பு

கவாப்பு - மாட்டுக் குடலில் செய்யப்படுகின்ற உணவு

விபிஎஸ் - Vaccational Bible school

ஆல்பொகடா பழம் - ஜுரம் வந்தால் வாய்க்கசப்பு நீங்கு வதற்காகச் சாப்பிடும் புளிப்புப் பழம்

கம்யூட்டர் சாம்பிராணி - கொசுவைப் போக்க பயன்படுத்தும் புகைக்கட்டி

கான்ச்சல் - அங்கலாய்ப்பு

போன்சட்டி - சாப்பாட்டுப் பாத்திரம்

பகோடா - சென்னை மாகாண கிழக்கிந்திய கம்பெனி வெளியிட்ட நாணயம்

சாப்ன - சாபம்

ஓல்வாங்கி - தமிழில் பேசும் வசைச்சொல்

ஜல்லாஸ்பித்திரி - ஜெனரல் ஆஸ்பிட்டல்

நாஸ்னம் - நாசம்

ஜிலோல் - வெறுமை

ஓரவத்தி - கணவன் உடன் பிறந்தவனின் மனைவி

மல்ச்சமா - மலினமாக

கசப்புத்தலை - சாவு நடந்த வீட்டார், இயல்பு வாழ்க்கைத் திரும்ப வேண்டும் என்பதற்காக அவர் இறந்த பதினாறு நாட்கள் கழித்து செய்யப்படும் சடங்கு. பதினேழாவது நாள், எண்ணெய் தேய்த்து தலைமுடி யினை கசக்கிக் குளித்து எல்லா வகையிலான அசைவங்களையும் சமைத்து சாப்பிடுபவர்.

கை டாக்கா - சுயமைதுனம் செய்து விடுதல்

வாய் டாக்கா - வாய்வழிப் புணர்ச்சி

பேக் அடிக்க - குதவழிப் புணர்ச்சி

டோபு அடிப்பவர்கள் - கெஞ்சா, இன்னபிற போதை மருந்து பயன்படுத்துவர்கள்

பவுசி - தகுதி

நம்ச்சல் - அரிப்பு

காஜி - அலைச்சல்

குதிருடும் - சிக்கிடும்

அருக்குசூத்தங் - அரக்கி அரக்கி நடப்பவரை கேலி செய்யும் சொல்

பொருத்தனை - காணிக்கை

